# செவ்வைச்சூடுவார் பாகவதம்
# பொருட்சுருக்கம்



ச. கருப்பையா

சாருமதி பதிப்பகம்

# செவ்வைச்சூடுவார் பாகவதம் பொருட்சுருக்கம்

ஆசிரியர் :

ச. கருப்பையா, எம்.ஏ:, எம்.ஃபில்.,
தமிழ்ப் பேராசிரியர்,
சேதுபதி அரசு கலைக்கல்லூரி,
இராமநாதபுரம்—623 502.

1988] [விலை ரூ. 30-00

நூல் : செவ்வைச்சூடுவார் பாகவதம் பொருட் சுருக்கம்

ஆசிரியர் : ச. கருப்பையா

பதிப்பு : முதற்பதிப்பு, ஜூலை, 1988

உரிமை : ஆசிரியர்க்கு

நூல் அளவு : டெம்மி ⅛

பிரதிகள் : 1000 (ஓராயிரம் மட்டும்)

வெளியீடு : சாருமதி பதிப்பகம்,
284/5, கீழத்தெரு,
பாலையம்பட்டி—626112,
காமராசர் மாவட்டம்.

விலை : ரூ 30-00

அச்சகம் : சர்மா சானடோரியம் அச்சகம்,
புதுக்கோட்டை—622 001.



இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானம் வழங்கிய நிதியுதவியுடன் வெளியிடப்பட்டுள்ளது.

— ஆசிரியர்

டாக்டர் கதிர். மகாதேவன்,
எம்.ஏ., எம் லிட். பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர் — பதிப்பாளர் — மதுரை காமராசர்
தமிழியல் துறை — பதிப்புத்துறை — பல்கலைக்கழகம்
மதுரை—625 021

# அணிந்துரை

வியாசமுனிவர், மகாபாரதத்தை வடமொழியில் இயற்றினார். மாபாரதத்தின் சிறப்பினை விளக்கத் தேவையில்லை! நூலின் தன்மையாலும், நுவல் பொருளின் சிறப்பாலும் மாபாரதம், இராமாயணத்தோடு ஒருங்குவைத்து எண்ணப்படுகிறது' என்றாலும், வியாச முனிவருக்கு மாபாரதத்தை எழுதியதால், முழு மன அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படவில்லை! நாரத முனிவருக்கு வியாசர்தம் மனநிலையை உரைத்தரர். இதற்கு நாரதர் கூறிய காரணம், பாகவதத்தைப் பற்றிய சிறப்பினை அறிய வழிவகை செய்கிறது. ''மகாபாரதம், கருமயோக நூலாக உள்ளது; பக்தி யோகம் அங்கு விதந்து ஓதப்பட வில்லை.எனவே,நாராயணனின் புகழ் பரவ, பக்தியோகத்தின் சிறப்பை உலகத்தார் உணர்ந்து உய்யப் பிறிதொரு நூல் இயற்றுக'' எனக் கூற, வியாசபகவான், பாகவதத்தை எழுதினார். அதன் பின்னர், வியாசமுனி, செவ்வினை முடித்த செம்மலாய் மனநிறைவும் மகிழ்ச்சியும் அடைந்தார் என்பர். இதனை உணர்ந்த செவ்வைச்சூடுவார் தாம் இயற்றிய பாகவதத்தில்,

'' கேடில் வேதமு மகங்கங் கெழுமிய தவமும்
நீடி யோகமுந் தானமு நிகழ்த்திய கதியும்
கூடு மாயையுந் தருமமுங் குலவிய வீடும்
நாடு ஞானமு நவிற்றுனா ராயண னாமால் ''

—பாகவதம், 24.

என்று பக்தியோகம், கருமயோகம், ஞானயோகம் என்ற திரிவேணி சங்கமாய்த் திகழும் பாகவதம் என்பதைக் குறிப்பின் காட்டுவர்.

பாரத நாட்டின் ஆன்மீகச் சிறப்பினை ஒருவர் அறிந்து கொள்ள வேண்டுமானால், அவர் பாகவதத்தைப் படிக்க வேண்டும்; பாரத மண்ணின் மைந்தர்தம் வரலாற்றினை இந் நூல் சீரிய வகையில் சித்திரிக்கிறது. அன்றியும் உலகப் பற்றினை விடுத்து இறைப்பற்றினைப்பற்றவும், நாராயணனின் திருவடியில் கலந்தும் கரைந்தும் அடைக்கலம்பெறும் உயர் நிலைக்கு அழைத்துச்செல்லவும் பாகவதம் வழிகாட்டுகிறது

இத்தகைய சீர்மைகள் நிரம்பிய வடமொழிப் புராணத்தை முதனூலாகக் கொண்டு, செவ்வைச்சூடுவார் பாகவதம் கற்றறிந்த புலவர்க்கு இன்ப அமுதாய் விளங்கும் செய்யுட்களால் இயன்றது. இன்றைநாளில் அச் செய்யுட்களைப் படித்து இன்புறுமாறு. அந்நூலின் பொருட் சுருக்கத்தைப் பேராசிரியர் ச. கறுப்பையா அவர்கள், உரைநடையில் இயற்றியுள்ளார். அவரே விரைவில் செவ்வைச்சூடுவார் சீர்பரவப் பிறிதொரு ஆய்வுநூலினை வெளியிடுவார் என்று எதிர்ப் பார்க்கலாம்.

எந்தப் பத்தி நூலாயினும் பொருளினை அறிந்து உணர்ந்தால்தான் இருமைப் பயனும் பெறலாம். இவ்வகையில் செவ்வைச்சூடுவார் பாகவதத்தின் பொருட் சுருக்கதைப் படித்து மூல நூலினைப் படித்த நற்பயனைப் பெறுவார்களாக

மதுரை, டாக்டர் கதிர். மகாதேவன்
1-7-'88

# முன்னுரை

மாபாரதம் இயற்றியவரும் நான்மறை வகுத்தவருமாகிய வியாசமுனிவர் மனவமைதிபெறும் நோக்கில் நாரதர் தூண்டப் பாகவதம் பாடியருளினார் என்பர். இறையருளைப் பெறுதற் பொருட்டு ஞானம், கருமம், பக்தி ஆகிய மூன்று மார்க்கங்களும் பாரதத்து ஆன்மீகச் சான்றோரால் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளன. அம்மூவகை வழியுள்ளும் சாமானியரும் கைக் கொள்ளத் தக்கதெனப் பக்திமார்க்கம் பரிந்துரைக்கப் பட்டுள்ளது.

தமிழகத்தில் பல்லவராட்சிக் காலத்தில் பக்தியியக்கம் தோன்றியதன் விளைவாகச் சைவமும், வைணவமும் தழைத்த தோடு தமிழுக்கு வளம்சேர்க்கும் கொடையாகத் தேவாரமும், திருவாசகமும், திவ்வியப்பிரபந்தமும் கிடைத்தன. வியாசர் பாடிய பாகவதம் பொதுவாகத் திருமாலின் திருஅவதாரச் சிறப்புக்களையும், சிறப்பாகக் கண்ணனின் திருவிளையாடல் களாகிய அருளிச்செயல்களையும், விளக்கிச் செல்கின்றது. பக்திமார்க்கம் ஒன்றையே கடைப்பிடித்துப் பரந்தாமன் அருளுக்குப் பாத்திரரானோருள் தருமன், பார்த்தன், பிரகலாதன், அசாமிளன், அம்பரீடன், குசேலன், உத்தவன், கோவியர், பரிட்சித்து, விதுரன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். வைதாருக்கும் வரமளித்து வைகுந்தப்பதவி தந்தான் வரதன். கம்சன், பவுண்டரன், சராசந்தன், சிசுபாலன் முதலானோர் கண்ணனைத் திட்டிக் கடைத்தேறியவர்கள்.

வியாசபாகவதத்தின் சிறப்புக்களை ஓதியுணர்ந்த செவ்வைச்சூடுவார் (கி. பி. 16-ஆம் நூற்) அதனைத் தழுவித் தமிழில் பாகவதம் பாடினார். சுமார் ஐயாயிரம் பாடல்களைக் கொண்ட பாகவதம் உ. வே. சாமிநாதையரால் குறிப்புரைகளு டன் முப்பதாண்டுகட்கு முன் பதிப்பிக்கப்பெற்று வெளியா யிற்று. பக்திச் சிறப்பும், இலக்கியத்தரமும் வாய்த்த சூடுவார்தம் பாகவதம் உரிய அங்கீகாரத்தையும், வரவேற்பையும் பெறா தது தமிழர் செய்த தவக்குறையேயாம்.

செவ்வைச் சூடுவார்தம் பாகவதத்தைத் தமிழ் அன்பர்களும் ஆத்திகப் பெருமக்களும் கற்றுப் பயன் மிகப் பெறுதல் வேண்டும். அதற்கு இப் 'பொருட் சுருக்கம்' தூண்டுதலாக அமையுமாயின் என் முயற்சி பயனுடைத்தாகும். எல்லோரும் படித்து இறையருள் பெறவேண்டுமென்னும் நோக்கத்திற்காகவே இந்நூல் எளிய நடையில் ஆக்கப்பட்டுள்ளது.

இந்நூல் வெளியிடுதற்குப் பொருளுதவி புரிந்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு என்றும் கடப்பாடு உடையவனாவேன். இந்நூல் எழுதுமாறு என்னைப் பணிகொண்டு, நூலுக்கு அணிந்துரையும் வழங்கிய பேராசிரியர் கதிர் மகாதேவன் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். நூலினை அழகுற அச்சிட்டுத் தந்த புதுகோட்டை சர்மா அச்சகத்தாருக்கும் நன்றி.

தமிழ்கூறும் நல்லுலகம் என் கன்னி முயற்சியைப் பாராட்டி வரவேற்குமென நம்புகிறேன்.

இராமநாதபுரம், — ச. கறுப்பையா
2–7–'88.

# உள்ளுறை

பக்கம்

**முதற்கந்தம் ;-**



**இரண்டாம் கந்தம் :-**



**மூன்றாம் கந்தம் :-**



**நான்காம் கந்தம் :-**

**ஐந்தாம் கந்தம் ::**



**ஆறாம் கந்தம் :-**



**ஏழாம் கந்தம் :-**



**எட்டாம் கந்தம் :-**

ஒன்பதாம் கந்தம் :-



பத்தாம் கந்தம் :-

**பதினோராம் கந்தம்:-**



**பன்னிரண்டாம் கந்தம் :-**

# செவ்வைச் சூடுவார் பாகவதம் பொருட் சுருக்கம்

## முதற் கந்தம்

### அத்தியாயம்-1.

**மாயவன் அம்சாவதாரம்:-**

செவ்வைச் சூடுவார் முதல் அத்தியாயத்தில் திருமாலின் 22 அவதாரங்களைக் குறிப்பிடுகிறார். மாயையால் உலகெலாம் படைத்திட விரும்பி அண்டமாய் விளங்கிய விராட்டு என்னும் புருடனாய் அவதரித்தார் திருமால். எஞ்சிய இருபத்தொரு அவதாரங்களைச் சூதமா முனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குக் கூறலானார். ஆதி வராகமாய் இருநிலமெடுத்தான். மறை சொல் நாரதனாய்ப் பாஞ்சராத்திரம் எனும் வைணவ ஆகமங்களுள் ஒன்றனை வகுத்தான். நரர், நாராயணர் எனும் இரு முனிவர்களாய்த் தவம் விரித்தான். தன் தாய் தேவஹூதிக்குத் தத்துவம் உரைத்த கபிலனாய் அவதரித்தான். தத்தாத்திரையனாய் அவதரித்து அத்திரி முனிவர்க்கு மகனாகிய அலர்க்கனுக்கும், பிரகலாதனுக்கும் ஆன்வீக்ஷிகி என்ற தத்துவ நூலை உரைத்தான். மகப்புருடனாய் அவதரித்துச் சுவாயம்பு மனுவந்தரத்தை அடைந்து காப்பாற்றினான். நாபிக்கு மேரு தேவியினிடத்துப் பிறந்த இடபனாய் அவதரித்து வீடுற்றான். மீனுரு எடுத்து மன்வந்தரப் பிரளயத்தினின்றும் வைவச்சுதன் என்னும் மனுவைத் தப்புவித்தான். அமரரும் அசுரரும் அமுது கடைதற்கு ஏதுவாகக் கமடமாய் அவதரித்தான். மருத்துவத் துறையிற் சிறந்த ஆற்றலுடைய தன்வந்திரி பகவானாய் அவதரித்தான். ஒப்பற்ற மோகினி வடிவெடுத்துப் புத்த முதத்தை இமையவர்க்கு ஈந்தான். நரசிங்கமூர்த்தியாய்

அவதரித்து இரணியன் எனும் கூற்றுவன் நெஞ்சம் கிழித்தான், வாமனனாய் அவதரித்து மாவலியிடம்மூவடி மண் இரந்தான், பரசுராமனாய்த் தோன்றி மூவேழ் தலைமுறை அரசர் மாமுடி துணித்தான், வியாச முனிவராய் அவதரித்து வேதம் நான்கென வகுத்தான், இராமனாய் அவதரித்து இராவணனைத் துணிசெய்தான். வசுதேவரின் மனைவியராகிய உரோகிணி, தேவகி என்பார்க்கு முறையே பலராமனாகவும், கண்ணனாக வும் தோன்றி நிலப் பெண்ணின் பொறை தீர்த்தான். கீகட தேயத்தில் புத்தனாய் அவதரித்தான். கலியுக முடிவில் கல்கி அவதாரமெடுத்துப் பகைவரைத் துணித்து நல்லறம் நிலை நிறுத்துவான் இனி. மாயவன் எடுத்த அவதாரங்கள் இவ்வாறு இருபத்திரண்டாகும். கருதிப் பார்க்கின், மால் எடுத்த அவதாரங்கள் கடல் மணலினும் மிகுதி என்பர்.

## 2) நாரதர் தோற்றம்:-

வெண்டாமரை மலரில் வீற்றிருக்கும் கலைமகளின் வட மொழிப் பெயர் பெற்ற ஆற்றின் அதாவது சரசுவதி ஆற்றின் கரையை அடைந்தார் வியாச முனிவர். 'உலகோர் உள்ளம் தெளியப் பல புராணம் உரைத்தேன்; பாரதம் பகர்ந்தேன். மறைகள் நான்கினையும் வகுத்துரைத்தேன்; இருப்பினும் ஏனோ என்னுள்ளம் தெளிவடையவில்லை. திருமாலினது கதையை, இதுகாறும் விரித்துரைக்கவில்லை. இனிமேல் அப் பணிதனை மேற்கொள்ள வேண்டும்' என வியாசர் சிந்தித் திருந்த வேளை நாரதர் அங்கு எழுந்தார். 'ஆரிருள் நெஞ்சம் தெளிவிக்க வல்லது மாயவன் கதை ஒன்றே. ஆகவே மால் கதையினை விளங்க வகுப்பாயாக. மானச ஏரியில் மருவிய அன்னம் காக்கை சேரும் கானகக் குளத்தை நாடுமோ? கார்மேக வண்ணன் தன் கதை நிகழ்த்திடக் கேட்போர் அறிவு மிக்கவராகிப் பிறிதொன்றையும் நாடார். திருமால் கதை ஒன்றே பிறவிப்பிணி போக்கும் ஆற்றலது. முன்னம் மால் கதை கேட்டதனால் என் பிறவி நோய் நீங்கிற்று. நீயும் அக் கதையைக் கேட்பாயாக' என நாரதர் வியாச முனிவர்க்குத் தம் கதை கூறலானார்.

அந்தணன் ஒருவனுக்கு அடிமைப் பணிபுரியும் பெண் ஒருத்தியின் வயிற்றில் பிறந்து நான் வளர்ந்து வரும் காலத்தில் கார்ப்பருவத்தில் ஆசைவேர் அறுத்த துறவிகள்

அவ்வந்தணன் மனையடைந்து சாதுர்மாச விரதம் நடத்தினர். அத்துறவிகளுக்கு ஏவலனாய்ப் பணி செய்ய அந்தணன் என்னைப் பணித்தான். அவர்களுக்குப் பணி செய்து அவர்கள் உண்டு எஞ்சிய உணவினை உண்டு வர, அவர் களோடு இருந்ததனால் பாவந்தொலைந்து உள்ளம் துலங்கி யது. சங்கும் சக்கரமும் தாங்கிய தாமரைக் கண்ணினான் சரித்திரத்தை அவர்கள் கூறக் கேட்ட எனக்குத் திருமால்பால் அன்பு கனிய அறிவோடு திகழ்ந்தேன். அரவந்தீண்டியதால் என் தாய் இறக்கவே இமயச் சாரல் வழி நடந்தேன். திருமாலைக் காணும் வேட்கையுடன் அங்குத் தவம் செய்தேன், 'இப்பிறப்பில் விழியெதிர் காண்கிலை' என அசரீரி கூறிற்று. வினையால் தோன்றிய அவ்வுடலம் வீழ்ந்தபின், கற்ப மொன்று ஒழிய நித்திரை கொள்ளும் அயனிடத்துச் சென்றேன்,

கருங்கடல் முகட்டில் உறங்கும் அவ்வுறக்கம் விட்டுப் பிரமன் விழித்தான். விழித்து நான்கு மறைகளை ஆராய்ந்து வரும் ஆற்றல்சால் அங்கிரா, மரீசி முதலிய ஏழு முனிவர் களைப் படைத்தான். அப்போது பிரமனிடத்து நானும் தோன்றினேன். விளக்கொளிக்கு ஒழியாத, வெண்மதிக்கு அகலாத, கதிரவற்கு ஏகாத உள்ளத்து இருளினைப் போக்கும் மாயவன் புகழ்பாடும் தொன்னூல் உரைப்பாயாக' எனக்கூறி நாரதர் அகன்றார்.

நாரதர் சென்றபின் நான்மறைக் கிழவனாகிய வியாச முனிவர் அமுதச் சொற்களால் நாகணையான்தன் தாள் பரவிப் பழமறை போலும் பாகவதம் என்னும் நூலினைப் புனைந்து, ஆசை வேரறுத்த முழுதுணர்ந்த தம் மகன் சுக முனிவர் தம் செவிகளில் நிறைத்தார்.

### 3. தன்மபுத்திரன் அரசியலடைந்தது

தந்தை வியாச முனிவரிடம் கேட்ட பாகவதக் கதையினைத் தாம் கேட்டவாறே விசயனின் பெயரன் பரிக்ஷித்துவிற்குக் கூறினார் சுக முனிவர் என்று சூதபுராணிகர் சொன்னார். சுக முனிவர் தம் இயல்பாவது யாதினும் பற்றில்லாதவர்; தவத்தைப் பொருளாக உடையவர்; அவர்பிச்சை ஏற்பதற்குப் போகும் போது ஒரு மனையில் பசு ஒருபீர் கறக்குங்காலந்தான் நிற்பார்;

ஒரு சமயம் பித்தர், ஊமையர் போல ஆடை எதுவுமின்றி ஆற்றோரம் நடந்து சென்றார். வியாசர் பின் தொடர்ந்தார்; ஆற்றில் ஆடையின்றி நீராடிக் கொண்டிருந்த தெய்வமகளிர் சுக முனிவரைக் கண்டும் துகிலெடுத்து உடுத்தாராய் நீராடினர். ஆயின், பின்னால் வந்த வியாச முனிவரைக் கண்டதும் கரைக்கு ஓடிச் சென்று நாணத்துடன் ஆடைகளை எடுத்து உடுத்திக் கொண்டனர். அரம்பை மாதரை நோக்கி வியாசர் அதற்குக் காரணம் கூறக் கேட்டார். 'ஆடவர் இவர், மகளிர் இவர் என்ற வேறுபாடு காணல் நினக்குண்டு; பீடுசால் முனிவர் சுகருக்கு அவ்வேறுபாடு கிடையாது; யாவும் கடந்த பற்றற்ற அறிவர் அவர்' என்று விடையிறுத்தார் அத்தெய்வ மகளிர். 'எவ்விடத்தில் சுகர் பரிக்ஷித்தைக் கண்டார்; சுகரிடம் பரிக்ஷித்து கேட்டதென்ன' என்று சௌனகாதி முனிவர்கள் வினவ, சூதர் தொடர்ந்து சொல்லானார்.

சமீக முனிவரின் மகனான சிருங்கி முனிவர் செத்த பாம்பைத் தம் தந்தையின் கழுத்திலிட்டு அவமதித்த பரிக்ஷித்து அப்பாம்பினால் தீண்டப்பட்டு உயர் துறக்கக் கடவது என்று சபித்தார். அதனால் யாவும் வெறுத்து பரிக்ஷித்து கங்கை யாறடைந்தார். அங்கு அவனைக் கண்டு சுகமுனிவர் பாகவதம் உரைத்தார் என்று சூதர் கூறினார். உடலொடும் உலகை வெறுத்த பரிக்ஷித்து அரசனின் கதையை விளங்கக் கூறுமாறு சௌனகாதி முனிவர்கள் சூதரை வேண்டினார்; சூதர் தொடர்ந்தார்.

குருகுலத்தரசர்களாகிய பாண்டவரும் துரியோதனாதியரும் தம்முள் போரிட்டுப் பலர் மாண்டனர். துரியோதனன் வீமனால் கொல்லப்பட்டவுடன், பரித்தாமா (அசுவத்தாமா) தூங்கிக் கொண்டிருந்த குழந்தைகளாகிய உபபாண்டவர் ஐவரைக் கொன்றான். குழந்தைகளை இழந்த திரௌபதி அழுதாள். உடனே, தனஞ்சயன் கண்ணனோடு சென்று பரித்தாமாவைப் போரிட்டு வென்று, அவனைப் பிணித்துத் திரௌபதி முன்னர் நிறுத்தினான். அவனைக் கண்ட பாஞ்சாலிதன் மஞ்சன் விசயனை நோக்கி, 'உனக்கு உலகமே வியக்க வில்வித்தை கற்பித்த துரோணாசாரியர் தம் மகனைக் கொல்ல வேண்டாம். என் புதல்வரை இழந்து தவிக்கின்றேன்

நான். அத்துயரை இவனை ஈன்ற கிருபி (துரோணரின் மனைவி)யும் துய்க்க வேண்டாம்' என்று கூறினாள். அது கேட்ட கண்ணன், 'மறையவர் கொடிய பிழை செய்தாலும் அவர் தம் அருஞ்சிகை போக்கி இருநிதி பறித்து ஊர்வழித் துரத்தலே, அவரைக் கொன்றதற்குச் சமம்' என்றான். அருச்சுனனும் அவ்வாறே அசுவத்தாமனின் மணியுடன் சிகையை ஈர்ந்து கொண்டான். பின்னர், மாயவன் தன்னோடு பாண்டவர் போரில் உயிர்நீத்த புதல்வர்களுக்கும் மற்றவர்க் கும் ஈமக்கடன் இயற்றினர். மணியிழந்த அசுவத்தாமன், பாண்டவர் ஐவரையும்அழிக்கும் கருத்துடன்அயன்படையேவ அது கண்ட பார்த்தசராதி தன் ஆழிப்படையால் அதனை ஒடச் செய்தான். அசுவத் தாமன் விடுத்த அப்படைக்கலம் சினங் கொண்டு எழுந்து அபிமன்யு மனைவி உத்தரையின் திரு வயிற்றுக்கருவினை வளைத்துத் தீயுமிழ்ந்தது. பிரமாஸ்திரத் தால் உத்தரை சுழன்று மயங்கிச் சோர்ந்துபரமனைச் சரண் அடைந்தாள். கமலக் கண்ணன் அவளைக் காத்தருளினான். இவ்வாறு பாண்டவரைப் பரமன் காத்த வகையெலாம் எளிதிற் சொல்ல இயலுமோ? தருமனோடு சுக முனிவர் வரஅம்புப் படுக்கையில் கிடந்த கங்கை மைந்தனைக் (பீஷ்மர்) காண எழுந்தான் கண்ணபிரான். தன்னைக் காணவந்த கருட வாகனனாம் கண்ணனை நோக்கிக் கங்கை மைந்தன் கூறு வான்: 'போரில் படைக்கலம் ஏந்தமாட்டேன் எனத் துரியனுக்கு அளித்த சபதத்தையும் கூட என்பொருட்டு மீறினாய். அந்தக் கண்ணனைப் படைக்கலம் எடுப்பிக்கச் செய்யாமல் விடேன்' என நான் கூறிய சபதமொழி பழுதுறா வண்ணம் ஆழிப்படையேந்தி அன்பர்க்கு எளியையானாய் நீ. நான்முகன் வழுத்தியும் காணக் கிட்டாத நீ, தருமன் செய்த ராசசூய யாகத்தில் முதற் பூசை ஏற்றருளினாய். சூதாட்ட மாகிய தீவளர்த்துத் துரியோதனன் முதலிய அரசரைக் கொன்று பூ பாரம் குறைத்தாய். போர்க்களத்தில் நின்று கொண்டு, தமரைக் கொல்லத் துணியேன் என்ற விசயனுக்கு அறிவு புகட்டினாய். நான் உடல் ஒழிக்கும் இன்று நின் கோலம் காட்டினாய். பிறவிக்கடல் கடந்தேன்யான்'. பின், கங்கை மைந்தன் திருநாடு எழுந்தான்.

கண்ணன் பின்னர்த் தருமனை அரசனாக அரியணை ஏற்றினான். தருமன் அறவழியில் அரசாட்சி புரிந்தான்.

## 4. கண்ணபிரான் துவரையடைந்தது :-

பாண்டவர் வேண்டுகோளுக்கிணங்க, கண்ணன், பாண்டவர், அபிமன்யுவின் மனைவி உத்தரை, பார்த்தன் மனைவி சுபத்திரை, திரௌபதி முதலியவரோடும் சில திங்கள் அத்தினபுரத்தில் தங்கினான். தங்களை விட்டுக் கண்ணன் பிரிய உள்ளான் என்பதறிந்து உள்ளம் உருகும் வேளை, கண்ணன் அத்தினபுரம் விட்டுப் புறப்பட்டான். பார்த்தன் சிவிகை பற்ற,உத்தவனும் சாத்தகியும் சாமரம் மாறி மாறிவீச, அரசவையோர் பின் தொடரக், கண்ணன் வீதிவழி ஏகினான். தேரில் சென்ற கண்ணனைக் காண வானவரும் மொய்த்தனர் விண்ணில், கண்ணன் அழகினைக் காண இன்னும் ஆயிரம் கண் வேண்டுமென இந்திரன் விளம்பினான். தேவர்களோ எனில்,'கண்ணன் செவ்வி காண நம் வேந்தன் இந்திரன் போல் விழியாயிரம் பெற்றோமில்லையே' என ஏங்கினர்.

அத்தினபுரத்து மகளிர் கண்ணனைக் கண்டதால் காமன் அம்புபாய்ந்து துன்பமுற்றனர். தருமனின் தானை வெள்ளமும் பின்தொடர அத்தினபுரத்தை விட்டுப்புறப்பட்டான் கண்ணன். பாஞ்சால நாடு, யமுனை நாடு, சிந்து நாடு முதலிய நாடுகளின் அரசர்கள் எதிர்கொள்ளக் கண்ணன் யது வம்சத்தவர் ஆண்ட ஆனர்த்தமென்னும் தேசத்தைச் சென்றடைந்தான். துவாரகை நண்ணியவுடன் கண்ணன் சங்கம் முழங்கினான். அரசுரிமையுடைய கண்ணன் வந்தான் என மகிழ்ந்து வெள்ளமென யாதவர் எதிர் சென்றனர்.

நான்மறையாளர் வாழ்த்தொலிக்க, முடியரசர் வணங்க, பிரத்தியும்நன் உள்ளிட்ட புதல்வர்கள் படைகளோடும் இறைஞ்சி நிற்க, திருமகள் உறையும் மார்பனாகிய கண்ணன் துவாரகை நகர் உள்ளே புகுந்தான். மாடங்கள் தோறும் வைகிய மாதர் கண்ணனை மனம், மொழி, மெய் ஆகிய மூன்றாலும் தழுவிக் கொண்டனர். கண்ணன் துவாரகை நகர மக்களுடைய தகுதிக்கு ஏற்பத் தொழுதும்,தழுவியும்,தடக்கை தொட்டும், முறுவலித்தும், பார்த்தும், மொழிந்தும், மகிழ்ச்சி பொங்கச் சிறப்புச் செய்தான். தன் பெற்றோரைத் தொழுதான் கண்ணன். கார்மேகம் கண்ட மயில்களின் கூட்டம் போலக் கண்ணனைக் கண்டவுடன் அவன் தேவியர் அவனை மொய்த்தனர்.

திருமகளின் அம்சமாகிய உருக்குமினி எனும் நீலக் கடலிலும், பூமிதேவியின் அம்சமாகிய சத்தியபாமை எனும் மலையிலும் மாயவன் விண்ணெனத் திகழ்ந்து வீற்றிருந்தான்.

5. பரிட்சித்தின் தோற்றம்:-

சௌனகாதி முனிவர்கள் சூதரை நோக்கிக் 'கொடியவன் பரித்தாமா விடுத்த அயன்படை உத்தரை வயிற்றில் வளரும் குழந்தையைக் கொன்றிடாவாறு மாயவன் காத்தனன் என்று கூறினீர்கள். கண்ணன் காத்ததும், பரீட்சித்து பிறந்து, கண்ணன் கதை கேட்ட தன்மையும் விளங்கக் கூற வேண்டு' மெனக் கேட்க, சூதர் சொல்லலானார்.

உத்தரை வயிற்றுள் வளரும் குழவிமேல் ஊழித் தீ போலும் அயன்படை தாக்காதவாறு, சக்கரதாரியாம் கண்ணன் பெருவிரல் அளவில் உருவெடுத்துக் காத்தான். பத்துத் திங்கள் சென்றபின் உத்தரை மகவொன்று பெற்றாள். தவுமியன் எனும் முனிவர் குழந்தை பிறந்த பொழுது. செய்யப்படும் சாதநல்வினை என்னும் வைதிகச் சடங்கினைச் செய்தார். காவலனாம் தருமன் அந்தணர்க்குப் பொன்மாரி பொழிந்தான்.

கொடைத்திறத்தில் இவன் சிபியை ஒப்பான். இகழ்தல் இல்லாத அன்பில் பிரகலாதனை ஒப்பான்; மெய்ம்மையால், இவன் இராமனைநிகர்ப்பான்;வில்லாற்றலில் இவன் விசயனை ஒப்பான்; பொறுமையால் இவன் பார்மகள் ஒப்பான்; காட்சியால் இந்திரனையும் கனகம் ஈட்டுதலில் குபேரனையும் ஒப்பான்; தவத்தால் விசுவாமித்திரரை ஒப்பான். அழகால் மன்மதனையும், இருபொழுதும் திகழ்தலில் இளமதி ஒப்பான் இவன்;யாகம் செய்தலில் சகுந்தலையிடம் துஷ்யந்தனுக்குப் பிறந்த பரதனை ஒப்பான் இவன்; கலிபுருடனைக் கடிந்து பரந்துபட்ட நிலவுலகை இனிது அரசாட்சி செய்தபின், கங்கை யாற்றில் சாந்த மாதவரோடு இருக்கும் போது பாம்பினால் தீண்டப்பட்டு உடலை விடுத்துப் பரமபதம் அடைவான் என்று தவுமியன் முதலிய முனிவர் பரிட்சித்திற்குச் சாதகம் கணித்துத் தருமனிடத்து வழங்கினர்.

தீயுமிழும் இந்தச்சினப்படை அடாது நம்மைக் காத்தவன் யாரென்று கருவிருந்த போது கண்ணனைப் பார்த்ததால்

பரீட்சித்து என்றும், விஷ்ணுவால் கொடுக்கப்பட்டமையால் விண்டுராதன் என்றும் நற்பெயர் இடப் பெற்றான் பரிட்சித்து.

தருமனின் மணித்துடையிலும், வீமனின் தோளிலும், பார்த்தனின் மார்பிலும் குறுகுறு நடந்து கோமகனாம் பரிட்சித்து வளர்ந்தான். கலைகளைக் கற்றுணர்ந்த அறிவால் பரிட்சித்து, கண்ணனே பரம்பொருள் என்றுணர்ந்த தத்ததுவ ஞானியான சகாதேவனை ஒப்பான். குதிரை செலுத்துவதில் நகுலனையும், வாட்போர் செய்தலில் தந்தை அபிமன்யுவை யும், வில்லாற்றலில் பார்த்தனையும், கொடைத்திறத்தில் கர்ணனையும் ஒப்பான் பரிட்சித்து. மேலும் வலிமையால் வீமனையும், அளியால் தருமனையும், அழகால் மன்மதனை யும் ஒப்பான் பரிட்சித்து. பரிட்சித்தின் அழகைக் கண்டு கண்டு தருக்கினான் தருமன். பின்பு தருமன் அசவமேதயாகம் மூன்று ஆற்றினான். வேள்விக்கு யாதொரு இடையூறும் நேராமற் காத்த கண்ணன், பின் விசயனோடு துவாரகை அடைந்தான்.

**6) தன்மன் முதலானோர் வீடு பெறல்:-**

தன்மன் அறநெறி தழுவி ஆட்சிபுரியும் நாளில் துறை பல படிந்த விதுரர் வந்து சேர்ந்தார். தன்மன் விதுரரிடம் 'மாயவனும் யாதவரும் நலமோ' என வினவ, தன்மன் உள்ளம் வருந்துவானெனக் கருதி யாதவர் இறந்த செய்தியைச் சொல்லவில்லை. 'வீமன் தரும் சோற்றினையுண்டு இன்னும் உடலம் போற்றுவது அழகோ' எனக் கூறி விழி இல் மன்னனாம் திருதராஷ்டிரனைக் காந்தாரியுடன் தவம் இயற்ற வனத்திடை போகச் செய்தார் விதுரர். பெரிய தந்தையாம் திருதராஷ்டிரர் எங்குச் சென்றாரோ என வருந்தினான் தன்மன். 'நிலையிலாச் செல்வத்தை நினைந்து தன்மன் தம் மைந்தரைக் கொன்றுவிட்டான் என்று உள்ளம் நைந்து என்னை விட்டு நீங்கிச் சென்று கங்கையாற்றில் விழுந்திறந் தாரோ' எனத் திருதராஷ்டிரரின் தேர்ப்பாகனைத் தன்மன் வினவினான். ''யான் காணவில்லை'' எனத் தேர்ப்பாகன் கூறினான். அவ்வமயம் அங்கு நாரதர் தோன்றி 'மூக்கில் கயிறு கோக்கப்பட்ட காளை உடையவன் கைவழிச் செல்லல் போல, பரம்பொருளின் இச்சைப்படி உயிர்கள் இயங்கும் எனில் யாருக்கு யார் பற்றுக்கோடு; நீ வருந்தாதே;

கண்ணிலானாகிய திருதராஷ்டிரன் தன் மனைவி காந்தாரி யோடு விதுரன் உய்த்திட மாதவம் இயற்ற இமயமலை சார்ந் துளான்;நீ அங்குச் சென்றாலும் அவனைக் காணவியலாது; இன்னும் ஐந்து நாட்களுக்குள் காட்டுத்தீ மெய்சுட அவன் உயிர் நீத்துப் பரம்பதம் அடைவான்' எனக் கூறினான்.

நாட்டில் தோன்றியுள்ள சில தீ நிமித்தங்களை வீமனிடம் எடுத்துக் கூறிக் கலங்கினான் தன்மன். கண்ணனைக் காணச் சென்ற விசயன் ஏழு திங்கள் கழித்தும் திரும்பவில்லையே என வருந்தினான். அப்போது அங்குப் பார்த்தன் வந்தான். பார்த்தனை நோக்கித் தன்மன் 'சூரசேனன், வசுதேவரின் தம்பியர், தேவியர், வசுதேவர், பலராமர், கண்ணன் ஆகிய 'யாவரும் நலமாயுள்ளனரா' என வினவினான்.விசுவாமித்திரர் இட்ட சாபத்தின் விளைவால் யாதவர் தம்முள் ஒருவர்க் கொருவர் இகலி மாண்ட செய்தியைச் சொன்னான் பார்த்தன். கண்ணன் தேவிமார் பதினாறாயிரம் பேர்களையும் வேடுவர் கைக்கொண்டனர்.என் வில், கணை,வீரம் வலி,விசயம் எல்லா வற்றையும் கைக்கொண்டு, எனக்கும் தன் உருவத்தைக் காட்டாது கண்ணன் மறைத்துக் கொண்டான்'என விசயன் நடந்ததை மேலும் விவரித்தான். அதுகேட்டுமெய்யுணர்வால் தன்மன் உள்ளம் தெளிந்தான். உடனே தன்மன் அபிமன் யுவின் மகன் பரீட்சித்திற்குப் பட்டம்சூட்டினான்.வடமதுரை, அரசாட்சியை அநுருத்தன் மகன் வச்சிரனிடம் ஒப்படைத் தான் தன்மன்.

விரிந்த சடையனாய், மரவுரிதரித்துப் பேசாதவனாய், உணவை நீக்கித் தன்மன், கடல் போலும் தானையர் பக்கம், சூழ்வதும் பொருட்படுத்தாது வடக்கு நோக்கிச் சென்றனன். பீமன் முதலிய தம்பியரும் திரௌபதியும் தன்மனுடன் ஏகினர். பாண்டவர் ஐவரும், பாஞ்சாலியும், குந்திதேவியும் திருமாலின் திருவடியில் ஒன்றினர்.

ஆணிமாண்டவிய முனிவர்தம் சாபத்தால் தருமதேவனின் கூறாகப் பிறவி எடுத்த விதுரரும் மெய்யொழித்துப் பரமபதம் எய்தினார்.

சூதமா முனிவர் பின் விண்டுராதன் என்னும் பரிட்சத்தின் திறம் இயம்பலானார்.

**7 பரிட்சித்து கலி கடிதல்:-**

பரிட்சித்து, உத்தரன் மகள் இராவதி என்பவளை மணந்தான், சனமேசயன், சுருதசேனன், உக்கிரசேனன், பீமசேனன் எனும் நால்வரை மக்களாய்ப் பெற்றான். பரிட்சித்து புரவி வேள்வி (அகவமேதயாகம்) மூன்றை இயற்றினான். தனக்கே உரிய பச்சைக்குதிரைகளேறிச் சிங்கக்கொடியுயர்த்திச் சதுரங்கப்படைகளுடன் வடபுலம் வெற்றிகொள்ள எழுந்தான் பரிட்சித்து. பாரதம், கிம்புருடம், அரிவருடம், கேதுமாலம் இளானிரத வருடம், இரமியக் வருடம், இரண்மய வருடம், உத்தரகுரு, பத்திராச்சுவம் முதலிய பல நாடுகளையும் வென்றான். பரிட்சித்து பாண்டவர் தம் திறனைப் பற்றித் திக்கில் உள்ளவரெல்லாம் புகழ்ந்திசைக்கும் இசையைக் கேட்டு மகிழ்ந்தனன். அரசர்களை வணங்கச் செய்து திறைபெற்றுக் களித்தான் பரிட்சித்து.

வெற்றி வீரனாய் இமயவரம்பையும் கடந்து வரும் காலத்தே, சரசுவதி நதிக்கு வடதிசையில் உள்ள குருக்கேத்திரத்தினில் (குருக்ஷேத்திரம்) ஆதிசேடன் எனும் பாம்பு தாங்கிய பூமித்தாய் தன் வளப்பமெனும் சிறப்பு நீங்கிப் பசு வடிவத்தில் அழுது கொண்டிருந்தாள், சத்தியம், தவம், சீலம், கருணை ஆகிய நான்கு கால்களுடைய காளை யுருவத்தில் உள்ள தரும தேவதை ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொன்று குறையக் கடைசியில் ஒற்றைக் காலுடன் நின்றது. கருங்கழல் அணிந்த கால்களையுடைய கலிபுருடன் தன் நெடுங்கதையினால் (தண்டாயுதம்) பால் நிறவடிவில் பாரில் ஒற்றைக் காலூன்றி நின்ற விடையினைப் புடைத்தான், பின்னவராய வேளாளர் அரசர்களாகி நம்மை ஆள்வர் என்று கருதியோ, அந்தணர் வேள்விகள் இயற்றிலர்; மேகம் மழைத்துளிகளைப் பொழிய மாட்டா என நினைந்தோ, தவம், சீலம், கருணை ஆகிய மூன்று கால்கள் அகன்றன என எண்ணியோ, கோபமுடைய கடுங்கலி உதைக்கும் என்று சிந்தித்தோ நெட்டுயிர்த்து நீ அழுவது' என தருமதேவதையாகிய விடை பூமியாகிய பசுவினைக் கேட்டது. பூமியாகிய பசு பின் வருமாறு கூறிற்று;

'கண்ணன் பொருந்தப் பெற்றதால் பொன்னுலகும் எனக்கு ஈடாகாது என மகிழ்ச்சியுற்றேன். சக்கரவர்த்திகள் கண்ணபிரான் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளியமையால்

அடிமலர் என்னைவிட்டு அகன்று போயது என்றாள் பூமி. சொல்லப்பட்ட வலிமைகளும், அகப்புறப் பொறிகளடக்கும் பண்புகளும், புனிதமும், ஞானமும், தெளிவும், செல்வமும், சிறந்த திருமால் இந்த உலகை விட்டு அகன்றான். தஞ்சமும் கருணையும், தவமும், சாந்தமும், வஞ்சமில் மேன்மையும், வனப்பும், நற்குணம் யாவும் பொருந்திய அஞ்சன வண்ணக் கண்ணன் இவ்வுலகினை விட்டுச் சென்றான். உனக்கு மூன்று கால்கள் அற்றுப் போயின, நமக்கு அருள்பாலிக்காமல் கண்ணன் அகன்று போனான். வெஞ்சினக் கலி நம்மைத் துன்புறுத்துவான்' எனப் பூமித்தாயாகிய பசு, தருமதேவதை யாகிய காளையிடம் கூறிற்று. அந்த இடத்திற்குப் பரிட்சித்து வந்து பொருந்தினான். பரிட்சித்து, பசுவை நோக்கி 'நீ ஏன் அழுகின்றாய்' என்றும், விடையைப் பார்த்து 'நினக்குத் தாள் மூன்று ஒழிந்தது எதனால்' என்றும் வினவ, விடை பதில் கூறிற்றுப் பின்வருமாறு: ஈசனால் இவ்வினைகள் நிகழ்ந்தன என்பர் சிலர். சிலர் வினைப் பயன் என்பர்; கோள்களால் விளைந்தன என்பர் வேறு சிலர், மனத்தால் விளைந்தன என்பர் அறிவோர்.

பூமிப்பாரம் குறைத்த கண்ணன் நிலவுலகைவிட்டுப் போயினன் எனப் பூமித்தாயாம் பசு விளம்பியது. இப்போது பாம்புபோற் சீறிக் கலிபுருடன் வருத்துகின்றான் என்றது பசு. பரிட்சித்து உடனே வாளை உருவினான். கலிபுருடன் பரிட்சித்தின் காலில் வீழுந்தான். தான் பிறந்த குருகுலத்திற் கேற்ற நல்லொழுக்க முறையின்படி பரிட்சித்து, தன்னைத் தஞ்சமடைந்த கொடிய கலிபுருடனைக் கொல்லாதுவிட்டான். 'என்னுடைய காவல் உள்ள இடத்தில் வராதே' எனக் கூறினான்,பரிட்சித்து;'வையமெல்லாம் நின் காப்பில் உள்ளது; ஆகவே எங்கு உறைவது', எனக் கேட்டான் கலி. 'சூதில் பொய்யும். உயிர் கோறலில் துணியும், பானத்தில் மதமும், மாதரில் காமமும், பொன்னில் வயிரமுமாகி இருப்பாய் நீ; போதி' யென்று பரிட்சித்து கூற, கலி வணங்கிப் போனான். தருமதேவதையாகிய விடை இழந்த கால்களை மீண்டும் பெற்றது. உலகில் மீண்டும் வளம் சேர்ந்தது. வஞ்சகக் கலி நீங்கவே, தீமை யாவும் மாய்ந்தன. அந்தணர் வேள்வி இயற்றினர். அமரர் ஆர்த்தனர், நிலமகள் மகிழ்ந்தாள்.

கலியினால் உண்டாகிய இருளைப் போக்கிப்பரிட்சித்து அத்தினபுரமடைந்தான். இக்கதை கேட்போர், உலகில்

நற்புதல்வர், கல்வி, இருநிதி, புகழ், செல்வம் யாவும் பொருந்தி வாழ்ந்து, பின்னர்த் திருமகள்கேள்வன் திருவடி சேர்வர்.

## 8 பரிட்சித்துச் சாபமேற்றல்

பரிட்சித்து அரசன் வேட்டையாடச் சென்றதைச் சவுன காதி முனிவர்களுக்கு விவரித்தார் சூதர்.

சிங்கக் கூட்டத்துடன் போராட அச்சிங்கங்களின் தலைமை வாய்ந்த வீரர் கூட்டம் புடைசூழப் பரிட்சித்து காட்டிற்குப் புறப்பட்டான். சிங்கம், புலி, யானை முதலிய பல கொடிய விலங்குகளை வேட்டையாடினான். வேட்டையாடினமையால் இளைத்த பரிடசித்து நீர் உண்ணும் விருப்பத்தால் 'உண்ணும் நீர் தருக, உண்ணும் நீர் தருக' என முனிவரிடம் கேட்டான் பரிட்சித்து. தன் ஆசிரமம் அடைந்து நீர் தருக எனப் பரிட்சித்து வேண்டியதை மாதவன் சமீகன் கேட்டிலன். தியானத்தில் முனிவர் இருந்தமையால் பரிட்சித்தின் குரல் முனிவர் செவியிற்படவில்லை. முனிவரின் நிலையுணராத பரிட்சித்து, 'நீரை வைத்துக்கொண்டே அந்தணன் பருகத்தரவில்லை' எனக் கருதினான். செல்வச் செருக்கால் மதிமயங்கிய பரிட்சித்து,அருகிற் கிடந்தசெத்தபாம்பொன்றை வில்லின் நுனியால் எடுத்துச் சமீக முனிவர் தம் கழுத்தில் போட்டான். பரிட்சித்து பர்ணசாலை விட்டுப் புறப்பட்டுச் செல்கையில் 'பழுத்த நான் மறையாளர் சமீகரின் தவத்தைக் கருதாது என்ன காரியம் செய்துவிட்டேன்' என எண்ணி யெண்ணிக் கழிவிரக்கம் கொண்டான்.

சமீக முனிவர்தம் மகன் சிருங்கி முனிவர் வந்தார். அங்குள்ள முனிபுத்திரர்கள், 'அரசன் ஓர் செத்த பாம்பினை நின் தந்தை தோளில் இட்டான்' என்று கூறினர். 'மன்னனின் நெறி மீறிய தன்மையைக் கண்ட இந்த நிலவுலகம், எனது மாதவம் திகழ்ந்திடவும் காண்பதாக' என வெஞ்சினம் கொண்டார் சிருங்கி முனிவர். 'என் தாதை தோளில் செத்த பாம்பை வீசிய வேந்தன் ஏழு நாட்களில் தக்ககன் என்னும் பாம்பினால் தீண்டப்பட்டு மாய்க' எனச் சாபமிட்டார். பின் தந்தையின் காலில் விழுந்து அழுதார். விழுந்தெழுந்த சமீகர் விளைந்தது யாதென வினவ, நடந்தன அனைத்தும் விவரித்தார் சிருங்கி. நடுவுநிலை தவறாது ஆட்சிபுரியும் பரிட்சித்து

அரசனைச் சபிக்கும் அளவுக்குச் சினம் எவ்வாறு ஏற்பட்டது' என மகனிடம் கூறிச் சமீகர் மறுகினார். 'பரிட்சித்து அரசனைச் சபிக்க வில்லை நீ, கலிபுருடனுக்கு அரசு நல்கினாய்; தருமத்தின் வேரறுத்தாய்; நிலையான பழி விளைவிக்கும் செயலைச் செய்துவிட்டாய் மன்னவன் செய்த சிறுபிழைக்காகச் சிறுவன் நீ கொடிய சாபம் கொடுத்திட்டாய் நின் பிழையினைக் கண்ணன் பொறுத்தல் கடன்' என்றார். 'சீதரனைத் தொழுவார், பிறர் தம்மை நிந்தித்தாலும், உதைத்தாலும் சினம் கொள்ளார்'எனப் பலப்பல கூறி நொந்தார்.

தம்மகன் சிருங்கி சினத்தால் சபித்த செய்தியைப் பரிட்சித்திடம் கூறுமாறு ஒருவனை ஏவினார், சமீக முனிவர். அவன் மன்னனிடம் சென்று சிருங்கி முனிவர் சபித்துவிட்ட செய்தியை மெல்ல மெல்லக் கூறினான். 'கலைகளைக் கற்ற முனிவர் சிருங்கி, மேலும் நான் தீங்கிழைக்காதவாறு என்னைச் சபித்தார்' எனக் கூறினான் பரிட்சித்து; குற்றத்தையும் குணமாகக் கொண்டான், கொற்றவன். கங்கை யாறடைந்து கண்ணனைக் குறித்துத் தவமியற்றுவேன் எனத் தீர்மானித்தான் மன்னன். தன் மகன் சனமேசயனிடம் அரசாட்சியை ஒப்படைத்தான், கங்கைக்கரையடைந்து, தருப்பையில் வடக்கு நோக்கியிருந்தான்.

பரத்துவாசர், சவனர், பராசரர், கவுதமர், மேதை, அதிதி, அவுருவர், பிருகு, முற்கலர், நாரதர், வியாசர், காசிபர், அத்திரி, விசுவாமித்திரர், வசிட்டர், அங்கிரர், அகத்தியர் முதலிய முனிவர் அனைவரும் கங்கைக்கரை சேர்ந்தார். முனிவரை வணங்கினான் பரிசித்து. 'தங்களைக் கண்டதால் உய்ந்தேன்' எனப் பரிட்சித்து உரையாடிக் கொண்டிருந்த வேளையில், சுகமுனிவர் அங்கு எழுந்தார். அவரைக் கண்டு மகிழ்ந்தான் பரிசித்து, சாபத்தால் முகம் வாடியிருந்தானிலன். 'உன்னைக் காணக் கிடைத்தது கண்ணன் செய்த கருணைச் செயலாகும். என்னை நீ வந்தடைந்ததால் நான் வினையை வென்றுவிட்டேன்' எனச் சுக முனிவரைப் போற்றி வணங்கினான்.

'இறப்பு வந்தபோது என்ன நினைத்தல் வேண்டும்; எதைக் கேட்டல் வேண்டும், எதைக் கூறல் வேண்டும்; தருமநெறி வல்ல தாங்கள் கூறி அருளுதல் வேண்டு'மெனக் சுகரிடம் பணிந்து கேட்டான் பரிட்சித்து.

'பரிட்சித்துடன் இருந்த பரத்துவரசர் முதலிய முனிவர்கள் மகிழப் பணிந்த வேந்தன் பரிட்சித்துக்குச் சுகன் கூறியன யாவை' எனச் சவுகனாதியர் சூதரை வினவ அவர் கூறலானார்.



# இரண்டாம் கந்தம்

## 1. மாயவன் நிலையுரைத்தல் :-

தம்மிடம் அறிவுரை கேட்ட பரீட்சித்திற்குச் சுக முனிவர்; 'துளவமாலை யணிந்த கண்ணனின் திருவுருவினை நெஞ்சிற் பதித்து, அன்னப்பறவை வடிவமெடுத்து நான்முகனுக்கு வேதங்களை உபதேசம் செய்த திருமாலின் சரிதையைச் செவிமடுத்து அவன் நாமங்கள் ஆயிரத்தை ஓதுவர் பழ வினைப் பற்று நீக்கி உய்வர்' எனக் கூறினார். மேலும்' 'திருமாலினை இரண்டு நாழிகைப் பொழுதாவது உணர்ந்து வழிபட்டால் வலிய வினையாகிய இருள் நீங்கும். கட்டு வாங்கன் என்னும் ராஜரிஷி தேவர்களால் தனது ஆயுளின் அளவை அறிந்து, ஆவி பிரிதற்கு இருநாழிகைப் பொழுது இருந்தபோது, திருமாலை வந்தித்து வீடு பெற்றான், உனக்கோ இன்னும் ஏழு நாள்கள் உள்ளன. அந்த ஏழு நாள்களில் நீ பெறக்கூடாத பொருளுமுண்டோ? மனத்தினைக் கடந்து,சொல்லுக்கு எட்டாத மாண்புடையதாகிய,மறைகளும் இத்தன்மையது என்று இன்னமும் தெரிந்து கொள்ள இயலாது அரியதாக, மாயமலமாய் நின்ற தனிப்பெருஞ் சுடரை நினைக்குமாறு உனக்குக் கூறுவேன் யான்' எனக்கூறி சுகர் விவரிக்கலானார். விராட்சுவரூபனான மாயவனுடைய உறுப்புகளை விவரித்தார்.பதினான்கு உலகு உருவமாய்நின்ற திருமாலைச் சிலர் நினைந்திருப்பர், பீதாம்பரதாரியாய், சங்கு சக்கரம், கதை, கமலப்பூ ஆகியன தாங்கும் நான்கு கைகளுடன், திருமகள் தங்கும் மார்பனாய், திங்கள் போலும் முகமும் உடைய புயல்வண்ணனாகச்சிலர் திருமாலை நினைந்திருப்பர். சிலர் கடும் தவம் இயற்றித் திருமாலை அடைய முயல்வர். சிலர் அம் முயற்சியில் வெற்றி பெற்றுப் பரந்தாமன் திருவடியடைவர். அட்டாங்க யோகம் இயற்றியப் பரம் பொருளை அடைய முயல்வர் வேறு சிலர், யாவும் பரம் பொருளின் உடைமை என அறிந்து, தன்னை நினைந்து ஆன்ம விசாரம் செய்பவன் பரமனை நினைந்தவனாவான். சிவனை வழிபட்டால், பார்வதி அந்தப் பக்தர்களுக்கு வித்தை

யருளும் இன்பம் நல்குவாள்; திருமகள் பெரும் பொருளைத் தருவாள். ஏழு மருத்து கணங்கள வழிபட்டால் வலிமை தருவர். வருணன் தம்மை வழுத்தியவர்க்குப் புகழ் வழங்கு வான். பிதிர்களோ எனில் வீரம் நல்குவர்; இயக்கர் காத் தருளுவர். மதி காமத்தையும்,பூமி உடலையும், புரவித்தேவர் ஆயுளையும், வசுக்கள் தனத்தையும் தருவர். தேவர்கள் துறக்க உலகடைய உதவுவர். திருமாலோ எனில் வீடு பேற்றின்பம் வழங்குதலுடன், வேண்டுவார் விழைந்ததையும் நல்குவான்.

சுற்றத்தார், தந்தை, தாய் முதலான யாவரும் ஒருவன்தன் நாளில் கழிவது கண்டும் காணார் போல வாழ்வர், வஞ்சமிலா உள்ளத்துடன் பரம் பொருளைச் சிந்தைசெய்யார். துன்ப மாகிய வித்து விளையக் காரணமாவர்: ஆதிசேடன் தாங்கிக் கொண்டுள்ள பூமியாகிய படுக்கையுண்டு; அகங்கையாகிய தலையுண்டு; உடுத்த மரவுரியும் உண்டு; ஆசை என்னும் பிறவி வேரினை அறுத்தோர்க்கு இவ்வுலகில் இல்லாப் பொருளுமுளதோ? திருமகள் கேள்வன், ஒற்றை ஆணைச் சக்கரமுடையோனாகிய திருமாலை உள்ளத்தில் உணர் கின்றிலர். உணர்ந்தால் அவரும் தேவர் போல அமுதம் பெறுவர். அரசனே! திருமாலினைக் கண்ட போதே ஆசை வேரறுத்தாய், உனக்குக் கிட்டாத பொருளும் உண்டோ'எனக் கூறினார் சுக முனிவர்.

**2) சௌனகாதியர் அன்பின் நிலையுரைத்தல்:-**

கொடிய கூற்றுவன் இறந்தொழிந்தான் எனக் கருதினர் போலும்.பாண்டவர் அறத்துடன் செங்கோலோச்சி நிலவுலகம் காக்கப் பகவானை அறிவிலா மக்கள்மறந்துவிட்டனர்.வீணே பொழுதைக் கழிக்கின்றார்கள். மழைத்துளி இன்மையால் வற்றிய மரமும் தளிர்சகும்படி குன்றமும் உருகும்படி குழலிசைக்கும் கண்ணபிரான்தன் அழகைக்காணாத கண்கள் வறுங்கண்களன்றோ? நான்கு காததூரம் மணம்வீசும் தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் கேள்வன் திருமாலின் பாதத்தில் சூட்டப்பெற்ற துளவத்தை 'மோந்து மோந்து உயிர்ப்பு அடையாத ஒருவன், செத்த பின்னர் உயிர்ப்பது எண்ணினால் கொல்லன் உலைமூக்கு உயிர்ப்பது போலாகும். குவலயாபீடம் எனும் யானையை அழித்தவனாகிய

கண்ணனை வணங்காத கைகள் செயலற்ற கைகளே. காலிங்கன் எனும் நச்சரவினைக் கொன்ற திருமாலின் நாமத்தைப் பாடாத நாவும் பயனற்றன. வேதங்களின் முடிபொருளாக விளங்கும், திருமாலை வணங்காத்தலை, தலையெனச் சொல்லத்தக்கவையல்ல; நெடியோனின் சரிதம் கேட்டுக் கனியாத உள்ளம் கல்லோ, இரும்போ அறிகிலோம். கோவர்த்தன மலையெடுத்துக் கோவலரை அன்று காத்த கண்ணன்தன் கோயில் செல்லாக் கால்கள் மரக்கால்களே. மால் சரிதம் கேளாச் செவி நச்சுப் பாம்புறையும் புற்றின் துவாரமாம். 'நாரதர் உள்ளிட்ட மாதவ முனிவர்கள் அவையில் அரசன் பரீட்சித்து உளங்கனிந்து கேட்ப, அவனுக்குச் சுக முனிவர் உரைத்தவற்றையெல்லாம் கூறுக' எனச் சௌனகாதி முனிவர்கள் வேண்டச் சூதர் தொடர்ந்தார்.

## 3) சுக முனி தத்துவம் உரைத்தல்:-

'உலகம் தோன்றிய வரலாற்றை உரைத்திட வேண்டு' மெனப் பரீட்சித்து கேட்கச் சுக முனிவர் உரைக்கலுற்றார். "யாழ்வல்ல நாரதர் நான்முகனை நோக்கி, 'எவ்வாறு உலகையெல்லாம் படைத்தாய்' என வினவினார். 'முதல்வனாம் முகுந்தன் என்னை நோக்கி 'உலகினைப் படைத்திடுவாய்' என ஆணையிட்டான். அதன்படி நான் உலகினைப் படைத்தேன்'. தொல்கதையாம் பாகவதத்தைத் திருமால் அயனுக்குச் சொன்னார்; அயன் நாரதர்க்குரைத்தான்; நாரதர் வியாசர்க்குரைத்தார்; வியாசர் தம் மகன் சுகருக்குக் கூறினார். அதை நான் உனக்குக் கூறுவே"னென்று சுகர் பரிட்சித்திடம் இயம்பினார்.

விளங்கும் மேலான ஒளியாகி, ஞானமயமாகி நீலமேகம் போல் விளங்கும் திருமால் பார்க்க மூலப்பிரகிருதி எனும் மாயை உண்டாகும்; மாயையிலிருந்து மகத்தத்துவம் தோன்றும்; அதனின்றும் சத்துவ, ராஜஸ, தாமச என்னும் மூன்று குணங்கள் தழுவும் அகங்காரம் தோன்றும்; தாமத அகங்காரத்தினின்று ஒலி எழும்; ஒலியிலிருந்து வான் தோன்றும்; வானிலிருந்து ஸ்பரிசம் (ஊறு) தோன்றும்; ஸ்பரிசத்தின்றும் காற்றும், காற்றிலிருந்து நிலவொளியும், நிலவொளியிலிருந்து

நெருப்பும் தோன்றும். நெருப்பிலிருந்து சுவையும். சுவையிலிருந்து புனலும். புனலிலிருந்து நாற்றமும், நாற்றத்தினின்று நிலந்தோன்றும். ஞானேந்திரியங்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகப் பத்தெனும் இந்தியங்கள் தோன்றும். இவை ராசத அகங்காரத்தில் தோன்றின. சத்துவகுணத்து அகங்காரத்தில் மனந்தன்னொடு அதிட்டான தெய்வம் உண்டாகும். கதிரவன், வருணன், அசுவினி தேவர், அக்கினி, இந்திரன், உபேந்திரன், யமன், பிரமன், திங்கள் என்போர் மேற்கூறிய பத்து இந்தியங்களையும் இடமாகக் கொண்ட அதிட்டான தெய்வமாவர். சொல்லப்பட்ட தத்துவக்கூட்டத்து அண்டம் தோன்றும் அந்த அண்டத்தில் சொல்லுதற்குரிய, எப்பொருளும் தாமாகிய நிகரில்லாத, விராட்புருடன் எனும் திருமாலின் முதல் அவதாரம் தோன்றும்.

உலகு பாதமாகவும், விசும்பு தலையாகவும், பருதி கண்ணாகவும், வேதம் சொல்லாகவும், திங்கள் மனமாகவும், திசை செவியாகவும், சொல்லப்பட்ட பேருலகம் அனைத்தும் ஓர் உருவமாக விராட்புருடன் அவதரித்தான் எனக் கூறுவர். ஆவுதி, பசு, நெய், ஆகவனீயம் முதலான முத்தீ முதலியன யாவும் விராட் புருடனேயாம்.

பிரளய காலத்தில் நீலநிறக் கடலுள் வீழ்ந்துவிட்ட நிலத்தைத் தூக்கியெடுத்து நிலைநிறுத்தச் செய்வதற்காகத் திருமால் வராகமாக அவதரித்தார்.

நான்முகன், சுவாயம்பு மனு, நாரதர், துருவன், வீடணன், சடாயு, சௌபரி, திரௌபதி முதலிய கன்னியர் என்றிவ்வாறு திருமாலின் பதமடைய அன்பு செய்தார் எண்ணிலராவர்.

திருமாலின் உந்தித் தாமரையில் பிரமன் தோன்றினான். உலகினைப் படைக்கும் விதம் அறியாது இருந்தபோது 'தவஞ்செய்க' என அசரீரி எழுந்தது. ஆயிரம் தேவ வருடம் அயன் நற்றவம் புரிந்தான். தவத்தை மெச்சித் திருமால் வைகுந்தம் காட்டி நான்முகனுக்குக் காட்சி தந்தார். கண்களில் நீர் மல்க நான்முகன் திருமாலைப் பணிந்து வேண்ட, பரம் பொருளும் வரமளித்தார். நான்முகன் உலகைப் படைத்தான். மண்ணுக்கும் விண்ணுக்குமாக உயர்ந்த நெடியோன் திருமால் நாராயணன் என்னும் பெயருடன் திருப்பாற்கடலில்

அமைந்தார். ஒரு முதண்ட வடிவாய் விராட்டென்னும் உருவம் தோன்றியது. பின் காற்று முதலாயின எல்லாம் நிலவின. மைத்திரேயன் உரைக்க விதுரன் கேட்டனன் எனச் சுகர் எடுத்துரைத்தார். இவ்வாறு சூதர் கூறியவுடன் சௌனகாதி முனிவர்கள் 'உத்தவனிடத்தில் கேட்டவாறு அன்று, பரிட்சித்துக்குச் சுகமுனிவர் கூறியதை எமக்கும் இயம்புக'ெனச் சூதர் தொடர்ந்தார்.



# மூன்றாம் கந்தம்

## 1. உத்தவர் விதுரனுக்குக் கண்ணன் சரித்திரம் உரைத்தல்:-

"வித்தகன் விதுரன் அத்தினாபுரம் நீங்கக் காரணமென்ன, எப்பொழுது, நீங்கினான் எவ்விடத்து இருந்து கேட்டான் இனிது கூறல் வேண்டுமெ"னப்பரிட்சித்து கூறச் சுக முனிவர் வகுத்துரைத்தார்.

பாஞ்சாலியின் துகிலுரித்து மானபங்கப்படுத்திய துரியோதனன்பால் வைத்திருக்கும் அன்பை விடுமாறு திருதராஷ்டிரனிடம் விதுரன் கூறினான். விதுரன் தந்தையிடம் கூறியதைக் கேட்ட துரியன், 'வெள்ளாட்டியின் மகனாகப் பிறந்த நீ, உறுதிப் பொருளுரைக்காது போவாய்' என முழங்கினான். துரியன் இவ்வாறு கூறக்கேட்ட விதுரன், அறவழிச் செல்லும் இயல்புடைய விதுரன் தன் வில்லை ஒடித்து எறிந்தான். புகழோடும் ஆட்சி செய்து தருமன் வாழ்கின்ற வேளை, விதுரன் துவாரகை முதலிய தலங்களுக்குச் சென்று, பின்னர் யமுனை நதியடைந்தான். அங்கு உத்தவனைக் கண்டு, 'யாதவர் நலமாயுள்ளனரா, கண்ணனின் நிலை என்ன' என்று கேட்க, உத்தவன் மனம் வருந்திக் கூறலுற்றான்.

திருமால் கண்ணனாக அவதரித்ததும் கஞ்சன் அஞ்சினான். கண்ணன் கம்சன் ஏவிய பூதனை என்னும் அரக்கிக்கு அருள் புரிந்ததும், சகடம் உதைத்ததும், மருதிற உரலையுருட்டிச் சென்றதும், கோகுலத்தில் கன்று மேய்த்ததும், வத்தாசுரன் என்னும் அசுரனால் கலியுகுத்ததும், கொக்கு வடிவாய் வந்த பகாசுரன் வாய் கிழித்ததும், மலைப்பாம்பின் வடிவெடுத்து வந்த அகாசுரனை வதைத்ததும், பிரமன் பசுக் கன்றுகளுடன் இடைச்சிறாரை மறைத்தபோது ஆயர் மைந்தர்களாயும், கன்றாயும் நிறைந்து நின்றதும், தன் முயற்சியில் தோற்ற பிரமன் ஏத்த மகிழ்ந்த வண்ணமும், கழுதை வடிவில் வந்த தேனுகாசுரனைப் பனையின் மீது எறிந்து கொன்றதும், பசுக்களை மேய்த்ததும், காளியன் எனும் நச்சுப் பாம்பின்மீது

நடித்ததும், தாவா நலம் எனும் காட்டுத்தீயை வெண்ணெய் போல எடுத்துண்டதும், பட்ட மரமும் தளிர்க்க வேய்ங்குழல் இசைத்ததும், கோவியர் பூந்துகில் கொண்டதும் முனிவர் தம் மாதரளித்த உணவினை உண்டதும், கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்துக் கோகுலத்தைக் காத்ததும், வேய்ங்குழல் இசைத்து ஆயர் மாதரைக் கூடிய கோலமும், சுவபல்கனுக்கும் காந்தினி என்பவளுக்கும் பிறந்த அக்குரூரனைக் கண்ணன் பால் விட்டதும், கண்ணன் மதுரை சென்று, அங்குக் கஞ்சனுடைய தனுர்யாக சாலையையடைந்து வில்லை முறித்ததும், கஞ்சனுடைய பட்டத்துயானை குவலயா பீடத்தைக் கொன்றதும், சாணூரன், முஷ்டிகன் எனும் மல்லர்கள் ஆர்ப்பரித்து வந்தக்கால் அவர்களை வீழ்த்தியதும், கஞ்சனைக் கொன்றதும் வசுதேவர் தேவகி ஆகிய தன் பெற்றோரை வணங்கி, 'என்னால் மிகவும் துன்புற்றீர்கள்; பொறுத்துக் கொள்ளுங்கள்' எனக் கூறியதும் உத்தவன் விதுரனுக்கு எடுத்துக் கூறினான். உத்தவன் தொடர்ந்து கூறினான். உக்கிரசேனனுக்குக் கண்ணன் அரசாட்சி அளித்ததும், கர்க்க முனிவரால் முப்புரிநூல் பெற்றதும் சாந்தீவினி முனிவரிடம் சார்ந்து கண்ணன் கல்வி பயின்றதும், குரு மகிழ்ந்திட அவர்தம் இறந்த குழந்தையை மீட்டுத்தந்ததும், வருந்தும் தாய் தந்தையாகிய யசோதை நந்தகோபர்க்கு ஆறுதல் கூறும்படியும், கோவியர்க்கு ஆறுதல் கூறும்படியும் தன்னை (உத்தவனான) விடுத்ததும், கண்ணிலான் (திருதராஷ்டிரன்) ஐவரை மக்கள் போல் கருதி மகிழ்வுடன் உள்ளானா என அறியக் கண்ணன் அக்குரூரனை அனுப்பியதும், கண்ணபிரான் ஜராசந்தனுக்குப் பயந்து வடமதுரையில் இருந்த சுற்றத்தார்களைத் துவரை சேர்த்ததும், முக்குறும்பு அறுத்த முசுகுந்தனுக்குப் பதம் அளித்ததும், கமலையை (ருக்மணி) மணந்ததும், அவள்பால் பிரத்யும்னனைப் பெற்றதும், ஜாம்பவதி, சத்தியபாமை, காளிந்தி, மித்திரவிந்தை, சத்தியை, பத்திரை, இலக்கணை ஆகிய ஏழு பாவையரை மணந்ததும், நரகாசுரனைக் கொன்றதும், பாரிசாதத்தைத் (தேவதாரு) பார்மிசைப் பதித்ததும், பதினாறாயிரம் ஆண் உருக்கொண்டு, பதினாறாயிரம் மாதரை மணந்ததும், ஒவ்வொரு கோபியும் ஈரைந்து தனயரைப் பெற்றதும், ருக்மணி (சாருமதி) பெண்ணொருத்தியை மகளாகப் பெற்றதும், பிரத்தியும்நனுக்கு மணம் புரிவித்ததும், மகாபலியின் மூத்த மகனான வாணாசுரனின் கையை ஈர்ந்ததும்,

நிருகனுக்கு அருளியதும், மகாபலியின் நான்காம் பிள்ளை பவுண்டரனைக் கொன்றதும், நாரதர் காண பதினாறாயிரம் உருக்கொண்டு பதினாறாயிரம் கோவியர் வீட்டிலும் நிலவிய வண்ணமும், சிசுபாலனை வதைத்தும், குசேலன், எனும் அந்தணனுக்கு நிதியமளித்ததும், சமந்த பஞ்சகம் எனும் தலம் சென்றதும், கஞ்சன் கொடுமையால் இறந்த மைந்தர் ஐவரைத் தேவகிக்கு வருவித்தளித்ததும், தங்கை சுபத்திரையைப் பார்த்தனுக்கு மணம் முடித்ததும், சுருதி தேவன், சனகன் ஆகிய அன்பர்க்காக மிதிலை சென்றதும், துரியனின் பதினெட்டு அக்குரோணி சேனையை அழிக்கும்கும்படி பார்த்தன் உள்ளிட்ட பாண்டவர்க்கு உதவியதும், தீய நிமித்தம் அகற்றும் பொருட்டு யாதவரைப்பிரபாதம் எனும் புண்ணியத்தலம் உய்த்ததும், முனிவர்தம் சாபத்தால் (விசுவாமித்திரர், அனிதர் கண்வர்) வாட்கோரை கைக்கொண்டு பொருது யாதவர் மாண்டதும் கூறி உத்தவன் அழுதான்; பதைபதைத்தான்; மனந்தெளிந்த உத்தவன் பின்னும் சில பேசினான்.

கடலில் தோன்றும் நிலவின் பிம்பத்தை யாதோவொரு பிராணியென மீன்கள் கருதுமாறு போல, யாதவர்கள் நெடியோனாம் திருமாலை மனிதனாக நினைத்தனரேயன்றி அடிதொழ அறிந்திலர். இடக்கால் மீது வலக்கால் வைத்து அரசமரத்தடியில் ஆழியான் அமர்ந்தான். மித்திரைக்கும் குசீலவனுக்கும் பிறந்த மைத்திரேயன் என்பானும் நானும் (உத்தவன்)பரிவுடன் அங்குச் சென்றோம். என்னை நோக்கிக் கண்ணன், ‘கருதிய பிறப்பு என்பதொன்றில்லை. முன்னம் நீ விரும்பிய வண்ணம் இப்பிறப்பெடுத்தாய்; நீ கேட்டபடியே முத்தி தந்தனன்; யான் நினக்குக் கூறிய தத்துவத்தைக் குற்றமற்ற முனிவர்க்குக் கூறியபின் வா’ எனக் கூறிக் கண்ணன் தன் அடிச் சோதிக்கு எழுந்தருளினான். கண்ணன் கதையினைக் கேட்டு உள்ளம் தெளிந்த விதுரன், கண்ணன் நினக்கு உரைத்த தத்துவங்களைக் கூற வேண்டுமென உத்தவனை வேண்டினான். கண்ணன் மைத்திரேயனை நோக்கிச் ‘சூழ்ச்சிசால் விதுரனுக்குத் தத்துவங்கள் சொல்லுவாயாக’ எனக் கூறிப் போனான். கண்ணன் அரசின் மூலத்து இருந்த காலத்தில் மைத்திரேயன் விதுரனுக்குத் தத்துவங்கள் உரைத்தான் எனச் சுதர் கூறினார்.

## 2. மைத்திரேயர் விதுரற்குத் தத்துவம் உரைத்தல் :-

"முனிவர் சாபமடைந்து யாதவர் தம்முள் இகலிப் பொன்னுலகு அடைந்தார் என்று கூறினீர்கள். அவ்வாறாயின் அச்சாபத்தை உத்தவன் அடையாது எங்ஙனம் நிலைபெற்றான்" எனப் பரிட்சித்து வினவச் சுகர் தொடர்ந்தார்.

கண்ணபிரான் யாதவர்க்கு உண்டான சாபத்தை உத்தவனுக்கு மட்டும் மாற்றி அவனை, 'உலகுக்குத் தத்துவம் சாற்றுதி' எனக் கூறினமையால் அவன் சாபத்தினின்றும் உய்ந்து வெதரி (பதரி) காசிரமத்தில் இருந்தான். யமுனையாற்றில் படிந்து, மாதவர் பலர் வைகும் கங்கையாற்றை மைத்திரேயன் சென்றடைந்தான். விதுரன் அவனிடம் சென்றான். முனிவனை வணங்கி விதுரன், 'முதுலகு தோன்றிய வண்ணம் உரைத்தல் வேண்டுமென' விண்ணப்பித்தான். மைத்திரேயன் 'மாதவன் மதலையாகிய நீ அறியாத துறையும் உண்டோ' எனக் கூறி உரைக்கலானான்:

மறைகள் என்பன தெளிவுற அறிந்து சொல்லுதற்கரிதாய் உள்ளன. ஆனந்த மயமாய் உள்ள திருமாலின் கட்கடை சிறிது பிறழ, மாயையிலிருந்து திருமாலின் அம்சமாகிய விராட் புருடன் அவதரித்தான். விராட்புருடன் தன்னுள் ஒப்பற்ற சக்தியை வைத்தான். உருவந்தோறும் நற்சீவன் என்று உரைப்பவன் இப்புருடன், புருடன் மாயையினின்று மகத் தத்துவத்தையும், மகத்தத்துவத்திலிருந்து அகங்கார தத்துவத்தையும் தோற்றுவித்தான். அகங்காரத்தினின்று முக்குணம் நிகழ்த்திடப்படும் தாமசம் தழுவும் அகங்காரத்தில் தன்மாத்திரை ஐந்து உறைந்தன. தன்மாத்திரை (சப்தம் முதலிய) ஐந்தொடு பூதம் ஐந்தும் உதித்தன. இராசத அகங்காரத்தில் இந்திரியம் பத்தும் உதித்தன.

மகத்தத்துவம், அகங்காரம், தன்மாத்திரைகள் ஐந்து, ஐந்து பூதங்கள், இந்திரியம் பத்து, மனம் ஆகிய இருபத்து மூன்றும் இயற்றும் செயலற்றவைகளாய்த் திருமாலைச் சரணமடைந்தன. மாயவன் அவற்றை ஒன்றாக்கப் பிறந்தது பேரண்டம். ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சாசக்தி என்பவைகளுடன் திருமால் விராட் எனும் புருடனாய்ப் பொலிந்தான்.

விராட்புருடனுடைய உடலில் தசநாடிகளும், பிராணவாயு முதலிய வாயு பத்தும் முறைமையுடன் முளைத்தன. கண்ணில் கதிரவனும் நாவில் வருணனும், செவியில் வாயும், நாசியில் அசுவினி தேவர்களும், வாயில் அக்கினியும், கையில் இந்திர னும், கோசத்தில் பிரமனும், அடியில் உபேந்திரனும், குதத்தில் யமனும் ஆக துன்பம் செய்கின்ற புலன்கள் பத்தும், குணங் களும், அதிட்டான தெய்வமும் விராட் புருடனுக்கு உதித்தன.

இதயத்தில் மனத்துடன் சந்திரன் உதித்தரன், யான் எனும் அகங்காரத்துடன் ருத்திரனும் உதித்தான். விராட்புருடனுடைய புத்தியில் ஞானத்துடன் பிரமனும், சித்தத்திற் சிறந்த வியாழனும் தோன்றினர். சீவனைப் பிராணவாயு அடைந்து, தொழிற்படும் புலன்களுடன் அமைந்தது. முகத்தில் அந்தணரும், தோளில் மன்னரும், வணிகர் துடையிலும், வேளாளர் காலினும் தோன்றினர். இவ்வாறு, நால்வகை வருணத்தார்களும் பார்மிசை அவரவர் கருமம் ஆற்றினால் திருமால் பெரிதும் மகிழ்ந்து அவர் விரும்பியன நல்குவான். தலையாகிய சுவர்க்க லோகத்தில் சத்துவ குணத்தால் தேவர்கள் வந்தார். காலாகிய நிலவுலகில் ராசத குணத்தால் நரர் (மனிதர்) வந்து அமைந்தனர். நாபியாகிய அந்தர் லோகத்தில் தாமச குணத்தால் பூதம், வேதாளங்கள், பேய்க்கணம் முதலியன அமைந்தன. விராட் புருடனின் தன்மையை நூறாண்டுகளில் கூட நுவலுதற்கரியது என்று மைத்திரேயன் கூறினான். விதுரன் முனிவனிடம், 'குணமிலாத மாயையால் தன்னுருக் குணத்துடன் தொழிலுற்றான் என்றாய் அதனை விளக்கமாகக் கூறுக' என்றான். மைத்திரேயன் 'மாயை சேர் வினைகள் ஒன்றும் விமலுனுக்கு இல்லை, பரம னுக்கு உருக்குணம் இல்லை' என்றான். "உந்தித் தாமரையில் அயன் தோன்றி உலகினைப் படைத்ததும், பந்தம் நீங்கு காலத்தின் பகுதியும் மாயவன் வந்து காத்ததும், சுரராதியர் தோற்றமும், மரீசி முதலிய பதின்மர் வந்து படைத்த பகுதியும் பிரமன் அளித்த மனுவின் சிறப்பும், அவர்தம் மரபும் மாயை யும் நித்திய ஞானத்தையும் முனிவராகிய தாங்கள் மொழிதல் வேண்டுமென" விதுரன் விண்ணப்பிக்க, மைத்திரேயன் விளம்பலுற்றான்.

**3. மலரவன் தோற்றம் உரைத்தல் :-**

"நில்வுலகம், விசும்பு, பாதலம் ஆகிய மூன்றுலகங்களை யும் ஆராய்ந்த பாகவதத்தின் தன்மை கேட்பாயாக" என

மைத்திரேயன் விதுரனுக்குரைத்தான் ஊழியின் முடிவில் உலகமெல்லாம் உருக, ஆதிசேடன் தாமும் பாதாள உலகமடைந்து பாகவதத்தைச் சனகன்முதலிய முனிவர்களுக்குச்சொன்னான். சனகாதிமுனிவர் புலத்தியமுனிவருக்கு உரைத்தனர். புலத்தியன் பராசரனுக்கு உரைத்தான். பராசரன் எனக்குப் (மைத்திரேயனுக்கு)பாகவதத்தைச் சொன்னான். உனக்கு நான் கூறுவேன். பாற்கடலில் பாம்பணையில் உறங்கும் திருமாலின் உந்தித் தடாகத்தில் தாமரை மலரொன்று பூத்தது. அத்தாமரையில் பிரமன் உதித்தான். தாமரையில் தோன்றிய பிரமன், 'எங்கிருக்கின்றேன், எங்கு வந்தேன்' என நான்கு திசைகளையும் நோக்கியமையால், நான்கு முகங்கள் உண்டாயின. எங்கு வந்தேன் எனத் தாமரை மலரின் தொளையுள் சென்று தன் எட்டுக் கண்களாலும் தேடினன். பலகால் தேடியும் ஒன்றும் காணவில்லை. தவம் இருந்தான்; ஆதிசேடனாகிய பாம்பணையில் கிடந்த திருமாலைத் தன் மலர்க் கண்களால் கண்டான் பிரமன். கொண்டல் வண்ணனைப் பிரமன் கைம்மலர் கூப்பிப் பரவிப் பணிந்தான். பிரமனை நோக்கித் திருமறு மார்பன் 'பதினான்கு உலகங்களையும் தவம் புரிந்து படைப்பாயாக' எனக் கூறி மறைந்தான். வளியையும் புனலையும் பருகித் தவமியற்றிப் பிரமன் பதினான்கு உலகினையும் படைத்தான். சொல்லப்பட்ட மகத் தத்துவம், பஞ்சபூதம் இந்திரியங்களின் அதிட்டான தேவர்கள், அஞ்ஞானம், விலங்கு, நரர் தேவர்கள் ஆகிய பத்தையும் படைத்தான். மான், அகங்காரம், இந்தியங்கள், இந்தியத் தேவர், தமோகுண, சம்பந்தமான அவிச்சை ஐந்து பூதம் ஆகிய அறுவகைப் படைப்பும் பிராகிருதம் எனப்படும். செடி கொடிகள் பிரமனின் ஏழாம் படைப்பாம். இரு குளம்புடைய பசு முதலிய ஒரு குளம்புடைய ஒட்டகம், குதிரை முதலிய, ஐந்து நகம் பெறும் அரி, நரி, கரி, பறவை முதலியன சுறா முதலிய விலங்குகள் பிரமனின் எட்டாம் படைப்பாம்; நரர்கள் பிரமனின் ஒன்பதாம் படைப்பு; சனகனாதியர் நரர் பொற்பும்தேவர் பொற்பும்ஒருங்கே பெற்றவர். இவ்வொன்தாம் படைப்பைப் பிராகிருத வைகிருத சிரிஷ்டி (இயற்கையின் வேறுபட்ட படைப்பு) என்பர். சத்துவ குணத்தால் தேவர்கள் பிதிரர், அசுரர், சித்தர், சாரணர், கந்திருவர்கள், இயக்கர், பூதகணங்கள், கின்னரர், முதலானோர் பிரமனின் பத்தாம் படைப்பாம். ஏழு முதல் பத்தீறாக உள்ள நால்வகைப் படைப்பும் வைகிருத சிருஷ்டி என்பர். படைப்பினை

விளக்கிடின் இவை முன், அவை பின் என்றறிய முடியாமல் நீர்ச்சுழி போல் மாறுபடும் இயல்பினது.

'இங்ஙனம் படைக்கப்பட்டனவற்றை அழிக்கக் காரணமாயிருந்த காலத்தை நினக்கு விளக்கிக் கூறுவேன்' என மைத்திரேயன் விதுரனிடம் இயம்பினான்.

**4. காலம் உரைத்தல் :-**

காலமாகிய பொருளுக்குப் பொருந்தும் எழில் உண்மையால், கருதும் உடலாகப் பரமாணுவைக் கற்பித்திடலாம். பரமாணு இரண்டு சேர்ந்தால் காலத்தின் தூலமாகிய உருவம் ஓரணு என்பர். மூன்றணுக்கள் சேர்ந்தால், சாளரத்தின் ஊடே பாயும் கதிரொளி போல விளங்கும் திரிசரேணு எனப் பெயர் பெறும். திரிசரேணு மூன்று சேர்ந்தால் ஒரு துடியாகும். மூன்று துடி சேரின் ஒரு வேதமாம். மூன்று வேதம் சேர்ந்திடின் ஒரு லவமாகும். மூன்றுலவம் சேரின் ஒரு நிமிடம்; மூன்று நிமிடம் சேரின் ஒரு கணம். ஐந்து கணம் கொண்டது ஒரு காட்டை; பதினைந்து காட்டை கொண்டது ஒரு லகு. பதினைந்து லகு சேரின் ஒரு நாழிகையாகும். உலகத்தோர் அறிய கடிகை (நாழிகை) யை விளக்குவேன். ஐந்து குன்றிமணிப் பொன் எடை கொண்டது ஒரு மாடம். நான்கு மாடத்தின் அளவுள்ள பொன்னை நான்கு விரலளவு நீளமுள்ள கம்பியாக்கி, அக் கம்பியால், ஆறு தொடிசேர் செம்பால் ஆழி அமையும்படி அமைக்கப்பட்ட கிண்ணத்தின் அடியில் துவாரம் செய்து, அக் கிண்ணத்தில் நீரை நிறைத்து, அத் தொளையின் வழி நீர் செல்லும் காலம் ஒரு கடிகை (நாழிகை)யாகும் என்பர். இரு நாழிகை சேர்ந்தால் ஒரு முகூர்த்த நேரம். பதினைந்து முகூர்த்தம் சேர்ந்தால் ஒரு பொழுதாம். இரு பொழுது சேரின் ஒரு நாளாம். பதினைந்து நாள் சேர்ந்தால் ஒரு பக்கம் இரு பக்கம் சேர்ந்தால் ஒரு திங்கள். இரு திங்கள் சேர்ந்தால் ஒரு பருவம். மூன்று பருவம் இணைந்தால் ஓர் அயனம் என்பர். அயனம் இரண்டு சேர்ந்தால் மானிடருக்குப் பொருந்தும் ஒரு வருடமாம். அவ்வருடம் சூரியனை அளவாகக்கொண்டது, சந்திரனை அளவாகக் கொண்டது, விண்மீன்களை அளவாகக் கொண்டது பிரகஸ்பதி தோன்றும் வருடம் என நான்கு வகைப்படும். ஒவ்வோர் அளவும் முன்னதில் முப்பது நாள் குறைவானது. மானிடர்க்கு ஆயுள் நூறு வருடம் என்பர்.

பிதரர்களுக்கு ஒரு மாதம் ஒரு நாளாகும். அமரர்க்கு ஒரு வருடம் ஒரு நாளாகும். ஊழி நான்கின் அளவு தேவவருடத்தில் பன்னிரண்டாயிரம். முதலூழிக் காலம் அதாவது கிருதயுகம் நாலாயிரம் தேவ வருடமும் இரண்டாம் ஊழியாகிய திரேதா யுகம் மூவாயிரம் தேவ வருடமும், மூன்றாம் ஊழியாகிய துவா பரயுகம் ஈராயிரம் தேவ வருடமும், நான்காம் ஊழியாகிய கடுங்கலியுகத்தின் அளவு ஓராயிரம் தேவ வருடமும் ஆகும் என்பர். முறையே முதலூழி முதலிய நான்கிற்கும் உள்ள யுக சந்தியின் அளவு எண்ணூறு, அறுநூறு, நானூறு, இருநூறு தேவ வருடங்களாகும். நால்வகை ஊழி ஆயிரம் நடக்கின் பிரமனுக்கு ஒரு பகலாகும். பகல் முடிவுறும் போது பதினான்கு மனுக்களும் இந்திரர்களும் கழிவர். மண்ணுலகம், அந்தர் லோகம், சுவர்க்க லோகம் ஆகிய மூவுலகும் தீப்பட வாசுதேவ வியூகர்கள் நால்வருள் ஒருவராகிய சேடன் (சங்காஷணர்) முகத்தில் அழல் பரக்கும்; அத்தழலால் தவலோகத்தவர் சனலோகம் சார்வர்; நூறு வருடம் கழிந்திடின் நான்முகன் இறப்பான்; பரார்த்தம் இரண்டைத் திருமாலுக்கு ஓர் இமை யென உரைப்பர். அது உபசார உரையாம்.

பிரமன் படைப்பவை மேலும் உணர்த்துவேன் கேட்பா யாக என விதுரனுக்கு மைத்திரேயன் உரைத்தான்.

## 5. சனகாதியர் தோற்றம் உரைத்தல்.

பிரமன் மாற்றுதற்கு அரியனவாகிய தாமிச்சிரம், அந்ததாமிச் சிரம், மோகம், மாமோகம், தமம் என்னும் அஞ்ஞானத்தின் கூறுபாடுகள் ஐந்தினையும் படைத்தான். இவற்றைப் படைத்தது எதற்காக என்று தன் அறிவினை எண்ணிப் பிரமன் பரந்தாமனைப் போற்றி நினைந்தான். அப்போது பிரமன் மனத்தில் சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் ஆகிய நால்வர் எழுந்தனர். நால்வரை நோக்கி நான்முகன் 'நீவிர் படைக்க' என்று கூற, உலகப்பற்று நீங்கிய உள்ளத்த ராகிய சனகாதியர் அதை விரும்பவில்லை. படைக்க எனப் பணிக்கச் சனகாதியர் படைக்காது போகவே பிரமன் சின முற்றான். அவன் புருவத்திடை நீலலோகிதன் தோன்றினான் 'என்பெயர்யாது, யான் உறையும் இடமெது' என நீலலோ கிதன் பிரமனை வினவ, 'நின் பெயர் உருத்திரன், வான்வளி, வெங்கனல், புனல், துறவு மேற்கொள்ளுமிடம், பிராணன்

ஆகியன நீயுறையும் இடங்கள் ஆகும்,' உமை முதலான பல் பெண்டிரைச் சேர்ந்து, பவன் முதலாகப் பல நாமம் பெற்றுப் படைத்தல் தொழிலைச் செய்வாயாக' என்றான் பிரமன். உருத்திர கணத்தை நீலலோகிதன் படைக்க, பிரமன் 'இவை உலகினை அழித்திடும், இப்படைப்பு தவிர்த்திடுக' என உரைக்க,நீலலோகிதன்படைக்கும் தொழிலைக் கைவிட்டான். அத்திரி, மரீசி, அங்கிரா, வசிட்டன், புலத்தியன், புலகன், பிருகு, நாரதன்; கிருது, தக்கன் ஆகிய முனிவர்கள் முறையே பிரமனின் கண், சித்தம், நெஞ்சு, உயிர்ப்பு, செவி, நாக்கு, குறங்கு, வதனம், பெருவிரல், தலை ஆகிய உறுப்புக்களில் இருந்து உதித்தனர்.

பிரமனின் நிழலில் சுருத்தமன் என்னும் மாதவன் தோன்றினான், வலப்பக்க மூலையில் தருமமும், முதுகினிற் பாவமும், மனத்திற் காமமும், புருவத்திற் சீற்றமும், கீழ் இதழில் உலோபமும் வந்துதித்தன.

நான்முகனின் நான்கு முகங்களிலும் நான்மறை பிறந்தன. எழுத்து, செஞ்சொல், இயல், ஏழிசை, எண், நூல்கள், பாடல் சான்ற தொழுகுலப்பான்மை, வேள்வி ஒழுக்கம், வழக்கு, தண்டம் என யாவும் பிறந்தன.

கற்பகத் தருவின் நிழலில் வாழும்தேவரைப் படைத்தான் பிரமன், புலன்களடச்கிய முனிவரைப் படைத்தான். 'இப் படைப்பு பெருகுதற்கு வழி என்ன' என்று பிரமன் கருதியிருந்தான். அப்போது பிரமனின் ஒரு கூற்றில் சதரூபையும் மற்றொரு கூற்றில் சுவாயம்பு மனுவும் பிறந்தனர். சுவாயம்பு மனுவை நோக்கிப் பிரமன், 'இவளைப் புணர்ந்து இங்கு உலகத்தைப் போற்றுவாயாக' எனக் கூறினான். பிரமன் ஆணைப்படி சுவாயம்பு மனு சதரூபையை மணந்தான்.

சுவாயம்பு மனுவுக்கும் சத்ரூபைக்கும் பிரிய விரதன், உத்தானபாதன் என்ற இரு புதல்வரும், ஆஹூதி, தேவஹூதி; பிரசூதி என்ற மூன்று பெண்களும் பிறந்தனர். சுவாயம்பு மனு ஆஹூதி என்ற செல்வியை ருசி என்ற முனிவருக்கும், தேவஹூதி என்ற செல்வியைக் கருத்தம முனிவருக்கும், பிரசூதியைத் தக்கன் என்ற முனிவருக்கும் மணம் முடித்தான். ருசி முதலிய மூவர் மரபினால் உலகம் நிறைந்தது "இனிக்கடவுள்

வீழ்ந்த பூமியைத் திருமால் வராகமாய்த் தோன்றி எடுத்த கதையைத் தென்னந்திசைக்கொரு மன்னவ, விதுர, நினக்குக் கூறுவேன்'' என மைத்திரேயன் தொடர்ந்தான்,

## 6, ஆதிவராக நிலையுரைத்தல்,

சுவாயம்புமனு பிரமனை நோக்கி, 'புவி புரத்தி என்று கூறினை, உலகமெல்லாம் பொங்கிக் கரையாகிய அரணைக் கடந்து கடலுள் கலந்ததே' என்றான். ஓதிமம் உயர்த்திய பிரமன் மாயனை உன்னினான். திருமகள் உறை மார்பனாகிய திருமால், தம் மூக்கிலிருந்து அங்குஷ்டமளவு வடிவெடுத்துக் கடலில் குதித்தான். கடலில் வராகம் விழுந்ததால் தம் மேனியில் கடல் நீர் தெறிக்கத் தேவர் மகிழ்ந்தார். கடலுள் மூழ்கிய உலகினை, ஏனம் தன் நீண்ட மருப்பில் ஏந்தி நிமிர்ந்தது. காசிப முனிவருக்குத் திதியிடம் பிறந்தவனாகிய பொற் கண்ணனான இரணியாக்ஷன்,'புவிஎன்னுடையது.நீகவராதே' என்று உரைபல பேசி ஏனத்தை எதிர்த்தான். பெரிய மலை போலப் பணைத்து, கடுங்கதை தாங்கி பொற்கண்ணில் தீயெழப் பொற்கண்ணன் 'நீ எங்கும் ஒளிக்காதே, நில்' என ஏனத்திடம் கூறினான். அண்டகோளம் விண்டதோ எனத் தேவர் அலற, கூற்றம் எனப் புடைத்த பொற்கண்ணனின் தண்டத்தை வராகம் பறித்தது. மலைப்பாம்பு போல் சீறி அந்த அவுணன் கொடிய சூலமொன்றை எறிந்தான். ஆழிப் படையால் சூலம் துணிக்கப்பட்டது. பாம்பணை மீதும் ஆலிலை மீதும் வாழ்கின்ற இறைவன் திருமாலாம் ஏனம் மலை மீது வீழ்ந்த இடிபோல, பொற்கண்ணன் தலைமீதும் முகத்திலும் அடிக்கத் தளர்ந்தான். பொற்கண்ணன் குருதி மழை, கல்மழை, மண்மழை பெய்தும் சூலமேந்திய ஆடையற்ற அசுரப்பெண்டிர் வெகுண்டு எதிர்க்கவும் இவ்வாறு பல மாயைகள் செய்தான். சூரியன் முன் மின்மினி போல் விளங் கினான் அவுணன், ஆதி ஏனத்தை நோக்கி நான்முகன் 'இவனுடன் இன்னும் என்ன விளையாட்டு, உடன் மாய்த் திடுக, கதிரவன் மறைந்தால் இவ்வசுரனுக்கு வலிமை மிகும்' எனக் கூறினான். அதை ஏற்று ஏனம் தன் மருப்பினால் பொற்கண்ணனை மாய்த்தது எழுதாக்கிளவியாம் வேத வித்தகரும் விரும்பும் வேள்வியின் உருவ வெண்கேழல் கோட்டில் ஏந்திய நிலவுலகத்தை ஆதிசேடனின் தலையில் வைத்தது. மைத்திரேயன் இவ்வாறு கூறியதும் விதுரன், 'கனகக்

கண்ணன் யார், கண்ணனோடு இகலியதேன், விளக்கமாய்க் கூறுக' என வேண்ட, மைத்திரேயன் விளம்பலுற்றான்.

மாலைப்போதில் திதி என்பாள் காமுற்றுக் கணவன் காசிப முனிவனிடம் 'கலவியிற் களிப்போம்' என்றாள். திதியை நோக்கி முனிவன், 'சிவபெருமான் பேய்க்கணத்தோடும் உலா வரும் காலம் இது; கலவி இப்போது வேண்டாம்' என்றான், காமம் மீக்க திதி பின்னும் வற்புறுத்தவே, முனிவன் அவளொடு கலந்து காமநோய் தீர்த்தான். மதிமயங்கி, மாலைப் போதில் மணாளனைக் கூடிய மடந்தை திதியைப் பொறுத்தருளுமாறு சதியாம் உமை சிவபெருமானிடம் வேண்டினாள் (திதியும் சதியும் தக்கனின் பெண்கள்).

'தவமியற்றுதற்குரிய மாலைப் போதில் கூடியதால் திருமாலுக்குப் பகையாகிமாயும் மைந்தரைப் பெறுவாய்' என்று காசிபன் கூற, திதி வருந்தினாள்; மேலும் காசிபன் 'நீ பெற்ற மைந்தனின் மகன் திருமாலுக்கு அன்பனாகி மறைநெறி ஒழுகுவான் மயங்காதே' என்று திதியிடம் கூறினான், திதியின் வயிற்றிடைக் கருப்பம் வளர்ந்தது, பிள்ளை பெற்றால் மேகவண்ணன் கொன்றொழிப்பானே' எனக்கருதித் திதி நூறாண்டுகள் கருப்பந் தாங்கினாள். அதனால் விசும்பு இருண்டன, ஏழுலகும் இருண்டன, திசைகளும் இருண்டன. விண்ணில் இருட் படலம் படர்ந்தது. அமரர் நான்முகனை அடைந்தார். திதிவயிற்றுக் கருப்பத்தால் யாது விளையுமோ என அஞ்சிக் கேட்ட அமரரை நோக்கி அயன்நிகழ்ந்தன நினைந்து கூறலானான். திருமாலின் திருவடித் தாமரை வணங்குதற் பொருட்டுச் சனகாதி முனிவர் எழுந்து வைகுந்தம் சென்றடைந்தார். அங்கு ஏற்கனவே மனைவியரோடும் வைகுந்தம் அடைந்தவர் திருமாலின் சரிதத்தினை அமுது ஒழுகுமாறு செப்பியிருந்ததைச் செவிமடுத்தனர் சனகாதியர், சரிதத்தைக் கேட்டு, கிளி, புறா, சக்கரவாகப்புள், பூவை முதலியன நெருங்குதலைக் கண்டு களித்தார். எப்பொழுதும் ஐந்து வயதுடையராய்த் திகம்பரராகி நான்மறை உருவெடுத்தன்னவர் மாயன் கதைகள் புகல்வது கேட்டு மகிழ்ந்து திருமால் உறையுட் கோயில்வாயில் நண்ணினர். ஆறுவாயில்களைக் கடந்து திருமகள் மார்பன் அமர்ந்துள்ள இடத்தை நெருங்கியதும் வாயில் காப்போர்களாகிய சயவிசயர்கள் 'நில்லுங்கள், நில்லுங்கள்' என்று கூறினர். திருமாலைத் தொழ விடாமற்

தடுத்த சய விசயர்களைச் சனகாதியர் 'கண்ணனை வெறுக்கும் பிறவி மூன்று எய்துக' எனச் சபித்தனர். தடுத்த அவ்வாயில் காப்போர், சபித்தது கேட்டு 'அறிவின்றிச் செய்த பிழை பொறுத்தருள வேண்டும்' என்றனர் கமலக் கண்ணன் அங்குத் தோன்றினான் மெய்ம்மயிர்சிலிர்ப்ப, மகிழ்ச்சி எய்திக்கைதொழுது இறைஞ்சினர் முனிவர். வழுத்திய முனிவரை நோக்கித் திருமால், 'இவ்வாயிலோரைச் சபித்தது நன்று, அடிமையானோர் செய்த பிழை. தலைவனாகிய நான் செய்த பிழை போலாகும்' என்றான் நாயகன் மொழிந்தது கேட்ட முனிவர் மகிழ்ந்து 'அடியவர்களின் உள்ளம் நெகிழ உரைத்தும் பார்த்தும் நீ காக்கும்திறன் சொல்லுதற்கு எளிதன்று' எனக் கூறி, மாயனை வணங்கினார் அது கேட்டு மாயன் கனிவுடன் முனிவரை நோக்கிப் புது நகை புரிந்தான், சனகாதி முனிவர் மாயனின் பொன்னடி தொழுது போற்றிப் போயினர், பின் புராதனனாம் திருமால் வாயில் காவலரை நோக்கி 'இம் முனிவர் வழங்கிய சாபம் மட்டுமின்றி, முன்னர் இலக்குமி வரும், பொழுதும் நீங்கள் தடுத்தமையின், அவள் தந்த சாபமும் உண்டு, சாபத்தின்படியே தோற்றுக' எனக் கூறினான். சயவிசயர் அவனியில் வீழ்ந்து, திதி வயிற்றில் அமர்ந்தனர். 'திருமால் அவரை அழிப்பார், கவலை கொள்ளற்க' என்று பிரமன் புகல அமரர் சென்றார்,

திதியின் கருப்பத்தில் நூறாண்டுகள் வைகியபின், சய விசயர் இமையவர் அஞ்ச இரட்டைச்சேயாய்த் தோன்றினர். அச்சம் விளைவிக்கும் நஞ்சுபோன்று அவர் பிறந்த வேளை அறம் தாழ்ந்தது, மறம் தலையெடுத்தது. மண் அதிர்ந்தது; இரணியன், இரணியாக்கன் என்று பெயர் படைத்து மும்மதக் களிறடக்கும் சிங்கக் குட்டி போல், வலிமையுடன் விளங்கினர். இந்திரவில்லினை யொடித்தும், கூற்றுவனின் வெங்கதை வீசியும் பல் படை பயின்றார். இந்திரனின் புரவி உச்சைச்ரவம் என்னும் குதிரை யேறியும், திசைக்களிறுகளின் எருத்தம் ஏறியும், தேர் கடாவியும் வளர்ந்தார். நடந்தால் நிலத்தின் முதுகுநெளியும் அண்ட கோளம் உடைந்திடும். புயங்கள் திசைகளை நெருக்கின. விழிக்கடை சிந்தும் தீத்திரள் கற்பகக் காட்டைக் கருக்குவ. தேவர்களும் அஞ்சவந்தெழுந்த வடவைத் தீ போன்று திகழ்ந்தனர்,

கனகன் இன்றியே தானையோடு, அமரரோடு பொருத இரணியாக்கன் எழுந்தான். இந்திரன் முதலிய தேவர் எதிர்த்துப் போரிட்டார். இந்திரன் தன் வச்சிரப் படையினை எறிந்து விட்டு ஓடினான். வாயு, அக்கினி, யமன், நிருதி ஆகியோரை வென்ற இரணியாக்கன் வருணனைப் போருக்கழைத்தான். அஞ்சிய வருணன் இரணியாக்கனை நோக்கி, 'நின்னொடு போர் செய்யத் தக்கவன் திருமாலே' என்றான். நாரதன் அங்குத் தோன்றி, 'கடலுள் வீழ்ந்த நிலம் கவர்ந்து மாயவன் களிறு போல் விளங்குகின்றான். கொடும் போர் செய்ய விரும்பினால் நடப்பாயாக' என்றான். திருமாலுடன் பொருதிய இரணியாக்கன் களத்திற் பட்டான். இரணியாக்கனைக் கொன்ற ஏனமாகிய திருமால் வைகுந்தம் அடைந்தான். ஆதிவ ராகத்து அருங்கதை ஓதினோர்கள் பாரில் தாம் விழைந்தன பெற்றுத் திருமாலின் அடிச்சோதி அடைவர்' என்றான் மைத்திரேயன். விதுரன் அது கேட்டு, 'மேலும் பிரமனின் படைப்பெல்லாம் கூறுதி' என வேண்ட, மாதவன் தொடர்ந்தான்.

## 7. தேவர் முதலியோர் பிறப்பு உரைத்தல் :-

தாமிச்சரம், அந்ததாமிசரம், தமஸ், மோகம், மகாமோகம் என்ற ஐந்து அவிச்சையின் பிறந்தவர்கள் எழுந்து நான்முகனைத் தடுத்து வருத்த, 'என்னை நீர் புரத்திர்' என்று எடுத்துப் பிரமனால் வழங்கிடப்பட்டோர் குருதி வாட்படையுடைய இராக்கதரானார்; 'என்னைவிழுங்காதீர்' என்று பிரமனால் மொழிந்திடப் பட்டோர் கொடுந்திறல் இயக்கரானார். படைத்தல்செய்யும் பிரமன் இரவுருபமான தமத்தனு உடம்பை விடுக்க, அதனை இயக்கர் இருப்பிடமாகக் கொண்டார். அயனின் முகத்தில் சுரர் தோன்றினர். பின் பகல் வடிவான உடம்பை நீக்கினான். காந்தியாகிய உடம்பைத் தேவர்கள் இருப்பிடமாகக் கொண்டனர். பிரமனின் இடுப்பிற்குக் கீழ்ப் பக்கத்திலிருந்து அசுரர்கள் தோன்றினர். அவ்வசுரர் காமத்தால் வேட்கை மீதூர அயனைத் தொடர்ந்தனர். திருமாலைச் சரணடைந்து பிரமன் 'யான் செய்யத் தக்கது யாதெனப்' பணிந்தான். திருமால் பிரமனிடம் 'சந்தியாகிய உடலை விட்டொழிக்க' என்றான். அசுரர் மருள பிரமனால் விடப்பட்ட சந்திவேளை, சந்தியா தேவியாகியது; அவளை யடைந்து அசுரர் காமநோய் தீர்க்குமாறு அலமந்தார்.

பிரமனின் காந்தியில் கந்திருவர் தோன்றினர். பிரமனின் அழகிலிருந்து ஏந்தெழில் அரம்பையர் தோன்றினர். பிரமன் காந்தியை விட்டான். அது நிலாவாயிற்று. அந்நிலவை விச்சுவாவசுவை வேந்தனாக உடைய கந்தருவர்கள் இருப்பிடமாகக் கொண்டனர். பிரமன் சோம்பிலில் விடுத்த கொட்டாவியால் பேயும்பூதமும் தோன்றின. அவை ஆசையை ஆடையாக் கொண்டு அதாவது நிர்வாணமாய் நடந்தன. அச் சோம்பலாகிய உடம்பினைப் பிரமன் விடுப்ப, அது சோம்பு என்ற பெயருடன் நித்திரையின் வடிவாக விளங்கியது. பேய் களும் பூதங்களும் அதனை இருப்பிடமாகக் கொண்டன. பிரமன் திரோதன சக்தியால் (மறைந்து இயற்றல்) படைக்கச் சாத்தியர், பிதிரர், விஞ்சையர், சித்தர் ஆகியோர் தோன்றினர். பிரமன்விட்ட அந்தர்த்தான சக்தியை அவர்கள் இருப்பிடமாக நண்ணினர்.

பிரமன் நீரில் தன் பிரதிபிம்பத்தைப் பார்க்க, அதிலிருந்து கின்னரரும், கிம்புருடரும் தோன்றினர். அவர் பிரமனின் சாயையினை இடமாகக் கொண்டார். கின்னரரும் கிம்புருடரும் அழகொடும் ஏழிசைவல்லாராகவும் இரட்டையராய்த் திகழ்ந்தனர். பிரமனின் சினத்திற்பிறந்த பாம்புகள் வெஞ்சினத்தையே வாழிடமாகக் கொண்டன.

தன்னால் படைக்கப்பட்டவைகளை மனத்தில் நினைந்து பிரமன் இருந்த வேளை படைக்கப்பட்டன எல்லாம் பிரமனை புகழ நான்முகன் மனத்தில் மனுக்கள் தோன்றினர். அம்மனுக் களுக்குப் பிரமன் தவம், யோகம், விஞ்சை, விருத்தி என்பவற்றை யாக்கையாக உடைய பிரமன், தனது உடலில் அமிசத்தையே யாக்கையாக நல்கினான். இவ்வாறு மைத்தி ரேயன் விதுரனுக்கு இயம்பினான் என்று சுக முனிவர் பரிட்சித் திடம் கூற, அவன் 'மைத்திரேயன் விதுரனுக்குக் கூறுயன வற்றை இன்னும் பொருந்துமாறு கூறுக' என்றான். சுக முனிவன் கூறலானான்.

## 8. கருத்தமன் மணம் புணர்ந்து கபிலரைப் பெறல்

கருத்தம முனிவன் சுவாயம்புமனுவின் மகளாகிய தேவ ஹூதியை மணந்து பெற்ற பிள்ளைகள் பற்றி இயம்புமாறு

விதுரன் வேண்ட மைத்திரேயன் மொழிந்தான். திருமாலைத் தொழுது கருத்தமன் இல்லறம் சிறப்புற நடத்தும் ஒரு மாதினை அடையச் சரசுவதி ஆற்றங்கரையடைந்து 1000 வருடம் தவம் இருந்தான். கருத்தமன் முன் திருமால் தோன்றி மனுவின் மகளாகிய தேவஹூதியை நாளை நீ மணப்பாய்' என்று அருளினான். மேலும் திருமால், 'தேவஹூதியின் வயிற்றில் 'யாம் வந்து தோன்றுவம்' என்று கூறிச் சென்றான். கருத்தமன் மனுவின் சோலையடைந்தான். நாரதன் மூலம் முன்னரே கருத்தமனின் நற்குணங்களை அறிந்த சுவாயம்புமனு தன் மகள் தேவஹூதியை மணம் முடித்துக்கொடுத்தான். சுவாயம்புவின் மனைவி சதரூபை தன்மகளுக்குப் பொன்னாரம் முதலிய சீர்கள் தந்தாள். கருத்தமனும் தன் மகளும் தங்குதற்கு மனு சதரூபையுடன் பிரஹித்மதி என்னும் நன்னகர் அடைந்தான்.

கருத்தமன் தேவஹூதியிடத்து முயக்கம் விரும்பாதவனாய்த் தவம் மேற்கொண்டான். அவன் நுகர்ந்தன தானும் நுகர்ந்து தேவஹூதியும் நோற்றாள். தேவஹூதியின் நல்லொழுக்கங் கண்டு வியந்த கருத்தமன் அவளை, நோக்கி 'நீ விழைவது யாதென விளம்புக, தருவேன் என்றான். 'மகவைப்பெறும் காதலுடையேன்' என்றாள் மாது. தானும் தேவஹூதியும் சேருதற்குச் சிறப்பானதொரு விமானம் செய்து, மனைவியின் மனம் மகிழ்வுறக் கலந்தான். மானத வாவி நந்தவனம் எய்தித் தேவஹூதி தேவ மாதரொடும் கலந்து விளையாடினாள்.

பல நாட்கள் கருத்தமன் வனிதை தோள்நலம் துய்த்தான். மாதர் ஒன்பதின்மர் பிறந்தார். கருத்தமன் மீண்டும் வனம் புகுந்து தவமியற்ற நினைத்தான், அதையறிந்த தேவஹூதி, 'வளர்ந்த பெண்களுக்கு மணம் முடித்து வைப்பார் யார்' என்றாள். 'வருந்தாதே, நின் வயிற்றில் திருமால் தோன்றிக் காப்பாற்றுவான்' எனக் கூறி மீண்டும் அவளைக் கூடினான். மகவொன்று தோன்றியது. பெற்றவர் மகிழ அம் மகவிற்குக் கபிலன் என்று பெயர் சூட்டினான் பிரமன். 'மரீசி முதலிய மாதவர்க்கு நின் புதல்வியரை வழங்கிடுக' எனப் பிரமன் கூறினான், மரீசிக்குக் கலையையும், அத்தரிக்கு அநசூயை தனையும் அருந்ததியை வகிட்டனுக்கும், சிரத்தையை அங்கிரா எனும் முனிவனுக்கும், உறலிப்பூ என்பாளைப் புலத்தியனுக்கும், கதி என்பவளைப் புலகனுக்கும், கிரியையைக் கிருதுவுக்

கும், கியாதியைப் பிருகுவுக்கும், சாந்தியை அதர்வண் முனி வனுக்கும் கருத்தமன் மணம் முடித்துக் கொடுத்தான்.

கருத்தமன் தன் மைந்தன் கபிலனை வணங்கிப் போற்றி 'உனக்கு அன்பராயினார் தம் மனத்தில் குறித்ததல்லது ஒருருவம் நினக்கில்லை. உமிழ்ந்த நூலை உண்ணும் சிலந்தி போன்று, உலகு யாவற்றையும் உந்திக் கமலத்திடைக் காட்டி உண்ணுகிறாய். மும்மூர்த்திகளின் உருவத்தையும் நீயே கொண்டு, ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்கிறாய்' என்று புகழ்ந்தான். தந்தையாம் கருத்தமனை விளித்துக் கபிலன் 'உலகில் மலிந்துள்ள பொய்ம் மதங்களால் உண்டான துன்பக் கடலுள் ஆழ்ந்தோர்தமைச் சாங்கி யோகமெனும் ஓடத்தால் வீடுபேறு எனும் கரையேற்றும் நோக்குடன் நான் இங்கு உதித்துள்ளேன். தாய் தேவஹூதி நன்னெறி அடையச் செய்வேன். நீயும் என் உருவை மனத்தில் நாடி வீடடைக' எனச் சொன்னான். கருத்தமன் கபிலனின் பாதந்தொழுதபின், இல்லறம் துறந்து தவம் இயற்றி முத்தி யடைந்தான். அன்னை தேவஹூதியும் கபிலனை வணங்கி, முடிவில்லா வீடுபேறடையுமாறு புகல வேண்டினாள்.

கபிலன் தாயை நோக்கி, 'கதிரவன் கண்டு விலகும் இருள் போல வினை நீங்க விளையும் முத்தி; கலை பயின்று உயிர் களுக்கருள் செய்யும் அறிஞர்பால் சேருதல் முத்தியடையத் தக்க நன்னெறி என்பர். ஈசனும் உயிர்களும் வேறெனக் கருதும் சாங்கிய மதத்தினர்க்கும், ஈசனுக்கும் உயிருக்கும் பேதமில்லை எனும் யோக மதத்தினர்க்கும் முத்திகிட்டும். தந்தை, தாய், தமையன், தான் என்றும், மைந்தர்கள் என்றும் பொன்னாற் செய்த பல அணிகலன்கள் போன்று விளங்கு வேன். என் உருவை மனத்தில் நாடியவன் மண்ணில் செல்வங்கள் துய்த்துக் கூற்றுவனுக்கஞ்சாது என் மலரடி மருவுவான். கூற்றம் கொள்வதும், மழை பெய்வதும், சூரிய சந்திரர்கள் எறிப்பதும், காற்றசைவதும், கடல் நிற்பதும், தீ சுடுவதும் யாவும் என் ஆணையாலாம்.

என்னையே மனத்தில் வைத்தால் வல்வினை கெடும்; மாறுபாடில்லா முத்தி வந்தெய்தும்' என்றான் கபிலன், அன்னை தேவஹூதி தனக்குத் தத்துவம் இயம்பல் வேண்டு மென விரும்ப, திருமாலின் அவதாரமான கபிலன் சொல்லலா னான்.

## 9) கபிலர் தத்துவம் உரைத்தல்:

ஒலி முதல் ஐந்தும், பூதம் ஐந்தும், இந்தியங்கள் பத்தும், மனம், புத்தி சித்தம், அகங்காரமாகிய நான்கு மனமும் காலம் ஆகத் தத்துவங்கள் இருபத்தைந்தாம். மகத் தத்துவத்திலிருந்து இராசத, சத்துவ, தாமத அகங்காரங்கள் தோன்றின. இராசதத் தில் இந்தியங்கள் பத்தும், புத்தியும், பிராணனும் உதித்தன. சத்துவ அகங்காரத்தில் மனம் உதித்தது. பிரத்தியும் நன், அநிருத்தன், சங்கருடணன், வாசுதேவன் ஆகிய நால்வரும் மனம் முதலிய நான்கிற்கும் உபாசனைத் தெய்வங்களாவர். மனத்திற்குக் கதிரோனும், புத்திக்கு இந்திரனும், அகங்காரத் திற்கு உருத்திரனும், சித்தத்திற்குப் பிரகஸ்பதியும் அதிட்டான தேவர்களாவர். அகங்காரம் பெற்ற ஒலியில் செவியும் வானும் பிறந்தன. ஊற்றிலிருந்து காற்றும் உடம்பும் தோன்றின. காற்றிலிருந்து உருவம் பிறந்தது. உருவிற் கனலும் கண்ணும் உதித்தன. கனலினின்றும் சுவையும், சுவையிலிருந்து புனலும் நாவும், புனலிலிருந்து நாற்றமும், நாற்றத்திலிருந்து நிலமும் மூக்கும் தோன்றின. ஒலியை வானும், ஊற்றைக் காற்றும், உருவைத் தீயும், சுவையை நீரும், மணத்தை மண்ணும் பொருந்திக் குணமெனத் திகழும். கண் முதலிய பத்திற்கும் முறையே கதிரவன் முதலிய பதின்மரும் அதிட்டான தேவர் களாவர்.

பரம்பொருள் அருளிய தத்துவங்கள் பொன்னுருவமாகி அண்டமாகியது. அண்டத்துள் பகவான் உருவமாகிய விராட்டுருவம் உதித்து வளர்ந்தது. சீவன் சித்தத்தோடு சேர்த லும் விராட்டு எழுந்தது. தத்துவங்கள் இல்லாமல் நிற்பதை உயிர் என்பர். விராட் புருடனுக்கு மாயைக்கலப்பினால் உண்டாயினவே குணமும் வினையும்; உண்மையில் அவனுக் குக் குணமோ வினையோ இல்லை நீரின் அசைவைச் சந்திர பிம்பத்திலேற்றி அது அசைவதாகக் கூறுதல் போல, கரணத் தாலுற்ற வினையினை உயிர் மேலேற்றிக் கூறுவர். விராட் புருடனின் உடல் கனவு போன்றது. சாவிக்கிரம், சுவப்னம், சுஷீப்தி என்ற மூன்றவத்தையுள்ளும் அவன் திகழ்வான். அறிவில் தேர்ந்தவன் முத்தியடைவான்.

உரைத்தன கேட்ட அன்னை தேவஹூதி; 'மாயையோடு கலந்த ஆன்மாவை அறிந்து கொள்வது எப்படி? மாயை எத் தன்மையால் நீங்கும்' எனவினவினாள். கபிலன் தொடர்ந்தான்

'தவமியற்றித் திருமாலின் அமிசமாகிய என் புகழ் கேட்பின் பக்தியோகம் மூலம் அறிவு கிட்டிடும். அறிவு தடை நீக்கும். மாயை விலக உண்மை புலப்படும். வினைதீர்க்க விரும்பு வோன், சாங்கிய நூலைச் சொல்லல் வேண்டும். விளைந்தன ஏற்று உயிர்க்கெலாம் இரங்கல் வேண்டும். காட்டில் தவமி யற்ற வேண்டும். என் உருவை மனத்திற் கருத வேண்டும். யோகத்திற் சிறப்பின் குற்றமற்ற கடவுளை அறியலாம். உலகின் மனிதன் பிறந்து ஆசையால் அலைப்புண்டு வாழ்ந்து முதுமையெய்தி கூற்றுவன் வந்தெய்த, மீட்டும் பிறக்கின்றான்.

பனித்துளி வடிவில் பெண்ணின் கருவில் வீரியம் தங்கும்; ஐந்து நாளில் நீரில் தோன்றும் கொப்புளம் போல வளர்ந்து, ஒரு திங்களில் தலை தோன்றிடும்; திங்கள் இரண்டினில் செங்கையும் கால்களும் பொருந்தும். மூன்று திங்களில் மயிர், நகங்கள் பொருந்திக் கண், செவி, மூக்கும் தோன்றும், நாலாந் திங்களில் பலவகைத் தாதுக்களும் வாய்க்கும், ஐந்தாம் திங்களில் பசி தோன்றும். ஆறாம் திங்களில் பஞ்சு போலும் பையுள் அகப்படும். ஏழாம் திங்களில் அறிவு சிறந்தெழும். தாயருந்துவன கொண்டு தளிர்க்கும். பத்தாம் திங்களில் சென்னி கீழாக்கிடப் பிறக்கும் குழவி: அக்காலத்துத்தாய் எய்தும் துன்பத்தைச் சொல்லுதல் இயலாது.

மகவு வளர்ந்து காளைப்பருவம் எய்திக் காமுற்று மாதராம் பாழுங்கிணற்றில் வீழ்வான் உலகம் நகைக்க; பிரமன் தான் படைத்த பெண்ணை இச்சித்தான் எனில் மாதர் வேட்கையை மறுப்பார் யாரே! பாற்கடலுற் தோன்றிய பாம்பின் விடமும் தோற்கும்படிக் கொலையைச் சூழ்ந்து குழையும் மாதரின் விளையாட்டு விலங்கினைப் போலக்குலவி முப்படைந்து இறப்பான். திருமாலின் திருவடியில் மனம் வைத்தால் இடர் தீரும்;சுவர்க்க நாடும் கற்பம் ஒன்று கழியக் கழிந்திடும்;பிரமன் உலகமும் நில்லாது. நிற்பது நெடியோன் பதமே.

காதலை விட்டு அபேதமாய்க் கருதி ஏதம் நீங்கினர் முத்தி எய்துவர். ஆவி வேறெனப் பேதம் அடைந்திடும் சனகாதியர் அயனுலகு அடைந்து இவண் மீட்டும் உதிப்பர். ஞானமாம் உண்மை உணராதார் நிரயம் உறும் தொழில் நலமுடையது என நயப்பர். திருமாலை நினைந்து தவஞ்செய்வாயாக' எனத் தன் அன்னை தேவஹூதியிடம் கூறினான் கபிலன்.

அன்னை கபிலனைப்போற்றினாள். 'நீ முழு முதற் பொருளாம் திருமால்; உன்னைத் தனயன் என்றுரைத்தல் தகாது. எல்லா உலகமும் உன் வயிற்றில் ஒரு பால் இருக்க, நீ என் வயிற்று தித்தாய், பிரளய காலத்து ஆலிலை மேலமர்ந்து மலர்க்கையால் காலைப் பவளவாய் வைத்துக் குலவும் குழவி நீ என் குழவி யன்றோ! உலகுக்கெல்லாம் முன்னம் நீ முளைத்தாய். ஆக்கல், காத்தல், அழித்தல் யாவும் நினக்கு விளையாட்டு. கருணைக் கடலாம் நின்னை அறிந்தார் யாரே' எனத் துதித் தாள் தேவஹூதி, யாவும் நீத்து நதிக் கரை நண்ணிக் கபிலன் மீதுள்ள காதல் ஒன்றைமட்டும் கொண்டு தேவஹூதி மரவுரி தரித்துத் தவமியற்றித் திருமால் பதம் அடைந்தாள், அவளது யாக்கை திருநதி ஆயிற்று. கபிலன் வடதிசையில் கடல் இடம் கொடுக்க வீற்றிருக்கின்றான்.

---

# நான்காம் கந்தம்

**1) மரீசி முதலியோர் படைப்புரைத்தல் :-**

கருத்தமனின் பெண்மக்களை மணந்தோர்தம் மரபம், ருசி என்பவனின் மரபும், தக்கனின் மரபும் கூறல் வேண்டுமென்று விதுரன் கேட்க, மைத்திரேயன் கூறலானான். பிரமன் படைத்த மரீசி முனிவர்க்கும் கலை என்பாளுக்கும் காசிப முனிவன் பிறந்தான். கலைக்குப் பூரணவான் என்பானும் பிறந்தான். பூரணவான் விரசனையும், விச்சுவகை என்ற பெண்ணையும் பெற்றான், அத்திரியை மணந்த அநசூயை திங்களையும், தாத்திரேயனையும், துருவாசனையும் ஈன்றான். திங்கள், தாத்திரேயன், துருவாசன் ஆகியோர் முறையே பிரமன், திருமால், சிவன் ஆகியோரின் அவதாரமாவர். 'மும்மூர்த்திகள் அத்திரிக்கு மக்களாகப் பிறந்தேன்' என விதுரன் கேட்க, மைத்திரேயன் தொடர்ந்தான்.

அத்திரி மக்கட்பேறு வேண்டிக் குன்றையடைந்து தவம் செய்தான். மும்மூர்த்திகள் அவன் முன் தோன்றினார். 'பிரமனைக் கருதி நான் தவமியற்ற நீவிர் மூவரும் காட்சி தந்தேன்' என அத்திரி வினவ, 'யாம் மூவரும் ஒருவரே; யாம் உனக்குப்புதல்வராகத் தோன்றுவோம் 'என்று இயம்பினர். அதனால் மூவரும் அத்திரிக்கு மக்களாய்த் தோன்றினர் என்றான் மைத்திரேயன்.

சிரத்தை என்பாள் அங்கிராவுக்கு வியாழனோடு ராகை, சிநீவாலி, குஹூ, அநுமதி ஆகிய நால்வரைப் பெற்றாள். புலத்தியனை மணந்த அவிபுக்கு என்பாள் அகத்திய முனிவனைப் பெற்றாள், பின்னுமொரு பிறப்பில் புலத்தியன் விச்சிரவா என்ற முனிவனைப் பெற்றான். விச்சிரவா என்பான் குபேரனைப் பெற்றான். பின்னர் நானிலம் அஞ்ச இராவணன் முதலியோரைப் பெற்றான். புலகனை மணந்த கதியென்பாள் கன்ம சிரேட்டன், சஹிஷ்ணு, வரீயான் என்ற மூவரைப் பயந்தாள். பிருகுவை மறைந்த கியாதி, தாதா, விதாதா என்பாரையும் திருமகளையும் ஈன்றான். தாதா, விதாதா

இருவரும் முறையே யாதி, நியதி (மேருவின் மக்கள்) என்பாரை மணந்தனர். யாதியை மணந்த தாதாவின் புதல்வன் மிருகண்டு முனிவனாவான். மிருகண்டுவின் மகன் மார்க்கண்டனாவன். விதாதாவை அணைந்த நியதிக்குப் பிராணன் என்பான் பிறந்தான். அப்பிராணன் என்பான் மறைச்சிரசைப் பெற்றான். கிருதுவை மணந்த கிரியையின் வயிற்றில் அருந்தவ வாலகில்லியர் அறுபதினாயிரவர் பிறந்தார். வசிட்டனை மணந்த அருந்ததி சித்திரகேது, முதலிய எழுவரைப் பெற்றாள். அதர்வணனை மணந்த சாந்தி என்பாள் தசீசி முதலிய மூவரை ஈன்றாள்.

சுவாயம்புவின் மகள் ஆஹூதி என்பாள் ருசியினை மணந்து வேள்வியம்புருடனையும் (யக்ஞபுருடன்) தக்கிணை என்ற அணங்கையும் பெற்றாள். மனு ருசிக்கு ஆஹூதியை மணம் செய்து கொடுத்தபோது 'இவளுக்குப், புத்திரன் பிறந்தால் என்னிடம் கொடுத்திடல் வேண்டும்' என அவரிடம் வாக்குறுதி பெற்றபடி மனு வேள்வியம் புருடனைக் கொண்டு சென்றான். திருமகள் அம்சமாகிய தக்கிணை என்பாள் திருமாலாம் வேள்வியம் புருடனைத் தழுவிப் பன்னிருவரைப் பெற்றாள். அப்பன்னிருவரும் 'தூக்ஷிதர்' என்னும் தேவராகக் கருதப்படுவர். அப்பன்னிருவரும் மனுவினிடத்தில் தோன்றியவராவர். பிரயவிரதன், உத்தான பாதன் இருவரும் பூபாலராயினர். மனுவின் காலத்துத் தோன்றியவர் மரீசி முதலிய எழுவர். வேள்வியம்புருடன் சுரபதியாவன், சுவாயம்புமனு முதலிய அறுவரும் மாயனே. தக்கனை மேவிய பசூதி பதினாறு மக்களைப் பெற்றாள். அவருள் பதின்மூவரை அறத்திற்கும், ஒருத்தியை அழற்கடவுளுக்கும், ஒருத்தியைத் தென்புலத்தவர்க்கும், எஞ்சியவளைச் சிவனுக்கும் கொடுத்தான்.

அறக்கடவுளைச் சேர்ந்த 'சிரத்தை என்பாள் சுதனையும், மயித்திரி என்பாள் பசாதனையும், தயை என்பாள் அபயனையும் ஈன்றனர். சாந்தி சுகனையும், துட்டி என்பாள் சந்தோடனையும், புட்டி என்பாள் மயனையும், கிரியை என்பாள் யோகத்தினையும் பெற்றனர். உன்னதி என்பாள் தருப்பனையும், புத்தி என்பாள் அருத்தனையும், மேதை மிருத்தியையும், திதிக்கை கேமனையும் பெற்றனர். இரீ ஈன்பாள கல்வியைப் பெற்றாள்; மூர்த்தி என்பாள் நரனோடு

நாராயணனை உயிர்த்தாள். நர, நாராயணர் தோன்றவே தீயன நீங்கின; தேவர் மகிழ்ந்தார், நரன் அருச்சுனனாகவும், நாராயணன் கண்ணானகவும் உதித்தனர்.

அழற்கடவுளை மணந்த சுவாகா என்னும் பெண்ணிற்குப் பாவகன், பலமானன், சுசி என்னும் மூவர் பிறந்தனர். அவர் ஒவ்வொருவரும் மூவைந்து குழவி பெற்றனர். தென்புலத்தாரை மணந்த சுதை மேனை, வைதாரிணி என்ற பெண்களை ஈன்றாள்.

**2) தக்கன் வேள்வியழித்தல் :-**

தக்கன் மகள் சதிதேவியை மணந்த சிவன் மேல் தக்கன் தணியாத சீற்றம் கொண்டான். 'மருமகன் என்னும் முறையைத் தீர்ந்து தக்கன் சிவன்மீது சினங்கொள்ளக் காரணம் யாதென' விதுரன் வினவ, மைத்திரேயன் கூறலானான். ஒன்பது பிரமர் களும் தேவர் குழுமத் திருமாலை வழுத்தி வேள்வியியற்றினர். வேள்விக் களத்திற்குத் தக்கன் வந்தபோது பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் எழுந்தனர். சிவபெருமான் எழுந்திருக்க வில்லை. சிவன் செயலைப் பார்த்துத் தக்கன் கோபித்தான். 'என் மகள் சதிதேவியை மணந்த சிவன் செயல் நன்று நன்று' எனக் கூறி நகைத்தான் தக்கன், 'இமையோர் இயற்றும் வேள்வியில் உனக்கு அவிர்ப்பாகம் இல்லாதொழிக' எனச் சபிக்கவும் செய்தான் தக்கன். உடனே நந்தி, 'மறையந்தணர் வேள்வி புரிவித்து இரந்து ஞானம் ஒழிக' எனச் சபித்தான். அந்தணரை நந்தி சபித்தமையால் சினந்துபிருகு முனிவர் பாசு பதரைச் சபித்தான், இந்நிலையில், மாதுறைபாகன் சிவனும், பிரமனும், இந்திரனும் வானோரும் தத்தம் பதியை அடைந்தனர்

பிரமன், எல்லாப் பிரமருக்கும் தலைவனாகத் தக்கனுக்கு முடிசூட்டினான். சிவனை யழைக்காமல் மறையோர் யாகம் செய்யத் தொடங்கினர், சூரியர் பன்னிருவர், சந்திரன், இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலர்களும் ஈண்டினர். முறையற்ற வேள்வி முடியாதெனக் கொண்டு பிரமனும் திருமாலும் வந்திலர். அரம்பையர் வேள்விக்குச் செல்லுதலைக் கண்ட உமா தேவி தன் கணவன் சிவனைப் போற்றி 'நாமும் செல்வோம்' என்றாள். தேவ சபையில் தக்கன் நிந்தித்ததைச் சிவன் நினைவூட்டினான். 'கர்வத்தால் தக்கன் நம்மை அழைக்க

வில்லை. நாம் அங்கே சென்றாலும் நம்மை அவன் இகழ் வான்' என்றான் சிவன். 'அழைக்காவிடினும், நான் அங்குச் சென்று அன்னை பசூதியையும் சகோதரிகளையும் கண்டு வருவேன்' எனச் சதி கூறினாள். அவ்விடம் போகாதே என்று கூறினாலும் இறப்பாள் எனக்கருதிச் சிவன் வாளா இருந்தான்.

பூதகணங்களும் தோழியரும் சூழ சதி புறப்பட்டாள். வேள்விச் சாலை சென்றடைந்தாள். சகோதரியர் இருவரும் சதிதேவியைத் தழுவினர். அன்னை பசூதியைக் கண்டு மகிழ்ந் தாள் சதி. தன் கணவனுக்குரிய அவிர்ப்பாகத்தை நீக்கி மறைக் கூற்றினால் தக்கன் செய்கின்ற வேள்வி கண்டு சினந் தாள் சதிதேவி. 'என் கணவன் சிவபெருமானின் தேவை அறிந்திலை போலும்' என்று சதி தக்கனிடம் கூறினாள். 'யான் நின்னில் தோன்றிய உடலை விரும்பவில்லை' என யோகாக்கினியால் மெய்சுட மின்னல் போல் தோன்றினாள் சதி அது கண்டு பூத கணங்கள் சூலத்தைச் சுழற்றிப் போர் விளைத்தன. பிருகு முனிவன் ஓமம் ஒன்றை ஆற்றலும், 'ரிபு' எனும் பூதம் தோன்றிப் பூதகணங்களுடன் போர் செய்தது. பூதத்தாற் சிவகணங்கள் தோல்வியுற்றதைக் கண்ட நாரதன் செய்தியைச் சிவனிடம் போய்க் கூறினான் கேட்ட சிவன் தன் நெடுஞ்சடை ஒன்றைப் பிடுங்கி நிலத்திலடித்தான். அதிலிருந்து தோன்றிய வீரபத்திரன் அடியேனுக்கிடும் பணி யாதெனப் பணிந்தான். 'வரம்பு கடந்து செய்த தக்கனது யாகத்தை அழித்து, கூடிய தேவரை மோதித் தக்கனது தலையை வெட்டிடு' என்றான் சிவபிரான்.

வீரபத்திரன் மிக்க சினத்துடன் தக்கன் வேள்விக் கள மடைந்தான். வீரபத்திரன் வரவால் என்ன விளையுமோ என்றஞ்சி அமரர் சிதறியோடினர் வேள்வி இயற்றும் மறை வல்லோர் ஆட்டைக் கொல்வது போன்று, வீரபத்திரன் தக்கனைக் கொன்று தலையைத்திருகி வேள்வித்தீயில் எறிந் தான். பலராமன் கலிங்க வேந்தனின் பல்லையுடைத்தது போன்று வேள்வியில் தோன்றிய 'பூஷா' வென்னும் சூரியனின் பற்களை யுகுத்தான் கண்டன்; (கண்டீசர்) சிவகணத்துள் ஒருவனாகிய மணிமான் பிருகு முனிவனின் முக மயிர் பறிக்க, பருதியென்னும் சூரியனின் கண்களைப் பறித்தான் நந்தி; வீரபத்திரன் கண்கள் சிந்திய சினத்தீக்கு ஆற்றாமல் வருணன்

கடல் சேர்ந்தான்; இந்திரன் கற்பகக் காட்டுள் ஒளிந்தான்; தேவர் யாவரும் பிரம்மலோகத்தையடைய அவரை நோக்கிப் பிரமன் கூறுவான் 'வலிமை மிகு சிவபிரானைப் பகைத்தல் தகாது சிவனுக்குத் தக்கன் அவிர்ப்பாகம் கொடுக்காதபோது, அதை உண்ண நீவிர் இருந்தது பேதமையன்றோ! சிவனைச் சரணடையுங்கள்!' என்றான் பிரமன். தேவர் புடைசூழப் பிரமன் கைலாயம் எய்தினான்.

கைலாயத்தோற்றத்தையும் சிவபிரானின் உருவப் பொலி வையும் சூடுவார் சிறப்பாகச் சித்திரிக்கின்றார். அமரர் சிவனைப்பணிந்து காக்குமாறு வேண்டினர். அவர்தம் வேண்டு கோளுக்கு இணங்கச் சிவன் வேள்விப் போரில், உறுப்புக் களை இழந்த தேவர்க்கு அவற்றை மீட்டும் நல்கினான். ஆட்டுத் தலையுடன் மீட்டும் உயிர்த்த தக்கன் சிவனை வழுத்தித் திருமாலை நெஞ்சிற் கருதி முறைப்படி யாகம் செய்ய எண்ணினான். முறைப்படி செய்யப்பட்ட அவ்வேள்விக்குத் திருமால் எழுந்தருளினான். தக்கனும் பிரமனும் அவனை வணங்கினர். தேவர் யாவரும் மாயனைத் தொழுது நிற்க, மாயன் தக்கன் வேள்வியைக் குறைவற முடித்தான். சிவன் பார்வதியை மணந்தான். சிவனது வீரியத்திற்கு ஆற்றாத அக்கினி, அதனைச் சரவணப் பொய்கையில் உய்க்க, அங்கு முருகன் உதித்தான். கார்த்திகைப் பெண்டிர் அறுவரால் வளர்க்கப்பட்டான் முருகன். முருகன் அசுரரை அழித்துத் தேவ சேனாபதியாக விளங்கினான். பிரமனது முதுகில் பாவம் பிறந்தது. பாவன் பொய்யாகிய பெண்ணை மணந்து இடம் பத்தையும் மாயையையும் பெற்றான். லோபத்திற்கும் நிந்தனைக்கும் கோபமும் கொலையும் பிறந்தன. கோபத்திற் கும் கொலைக்கும் தீய மொழியும் கலியும் பிறந்தன. கலிக்கும் தீய சொல்லுக்கும் மரணமும் பயமும் தோன்றின. மரணத்துக் கும் பயத்துக்கும் யாதனை (யமன் தரும் துன்பம்) யுடன் நரகம் வந்தது.

'இன்னும் தோற்றம் கூறின்வீரியும், ஆகவே முத்தான பாதன் மரபு புகல்வேன் விதுர' என்றான் மைத்திரேயன். அக்கதையைப் பரிட்சித்துக்குச் சுகன் கூறினான் என்று சூதர் நைமிசவாசிகளான முனிவர்களுக்கு உணர்த்தினார்.

3) துருவன் பதம் பெறல்:

உத்தானபாதன் என்பான் சுநீதி, சுருதி எனும் மங்கையரை மணந்தான். சுநீதிக்குத் துருவனும், சுருதிக்கு உத்தமனும் தோன்றினர். மன்னன் உத்தானபாதன் துடையில் உத்தமன் ஏறி அமர்ந்நான்; சுநீதி வயிற்றுதித்த துருவன் தானும் தந்தையின் துடையில் ஏறக் கருதி அருகில் வந்தான். அப்போது சுருதி 'புதல்வ,நீ இளவரசனல்லன்; மாற்றவள் வயிற்றுதித்தாய்; தவமில்லாது மாற்றவள் வயிற்றில் பிறந்துவிட்டு மன்னன், குறங்கில் ஏறக் கருதினுல் அது பேதைமையன்றோ' என்றாள். 'மன்னன் குறங்கில் ஏற விரும்பின்,திருமாலைக் குறித்துத் தவம் புரிந்து என் வயிற்றில் பிறப்பாயாக' என்று பின்னும் கூறினாள்' சுருதி. அவள் சொற் கேட்ட துருவன் மன்னன் முகம் பார்த்தான். தந்தை முகத்தில் அருளில்லை. துருவன் சுருதி சொல்லைப் பொறாதவனாய்க் கண்ணீர் மல்க, சினத்தால் இதழ் துடிப்ப, அன்னை சுநீதிபால் போய் நின்றான்.

'வருந்துதல் ஏன்' என மைந்தனை வினவினாள் சுநீதி. நிகழ்ந்ததைக் கண்டோர் கூறச் சுநீதி வருந்திக் கண்ணீர் வடித்து, 'நல்வினையில்லா என் வயிற்றிற் பிறந்தோய், வருந்தாதே. திருமால் காப்பாற்றுவான்' என்றாள். மேலும் சுநீதி, 'வழுத்தினர் விழைந்த நல்கும் நேமியானை நினைத்துத் தவமியற்றி எய்தரிய பதம் பெறுக; கலங்காதே' என்றாள். அன்னை சொற்களால் தெளிவுற்ற துருவன் கானகஞ் சேர்ந்து தவஞ்செய்யப்புறப்பட்டான். துருவன் நடந்தபோது நாரதன் எதிர்ப்பட்டுச் சிறுவனின் தலையில் கைசார்த்திக் கூறலானான்.

நாரதன் துருவனிடம், 'ஐந்து வயதுகூட நிரம்பாத சிறுவன் நீ. தவம் எவ்வாறு செய்வாய்? மாதவத்தோரும் இன்னமும் தெளிவாகக் காணமாட்டாத திருமாலை நீ எங்குக் காண்பாய்; கொடிய விலங்குகள் உறையும் கானகம் செல்வது சிறப்பன்று. செல்வத்தால் தாழ்ந்தவர்களைக் காணும்போது நம் பேறு பெரிதென நிமிரல் வேண்டும்; ஊழால் செல்வத்தால் உயர்ந் தோரைக் கானில் நாம் இனி வாழமாட்டோமெனத் துணிதல் மாண்பன்று' என்று உரைத்தான்.

துருவன் நாரதனிடம் 'முனிவ, தாங்கள் சொல்வது விழுமியதே; எனினும் இன்று என் மனதுக்கு உகப்பாயில்லை.

என் செய்வது?' மிக உயர்ந்த பதவியை அடைய விரும்பு கின்றேன். அதற்கு என்ன செய்ய?' என நாரதனை வினவினான், நாரதனும் தாய் கூறியவாறே தவத்தை முடிப்பாயாக என்று பின்வரும் அறிவுரையும் கூறினான். 'மதுரையருகில் மதுவனம் ஒன்றுளது. யமுனையாற்றில் நீராடிப் பரமனைத் தியானித்துத் தவமியற்றுக' என்றுகூறி ஆறிரண்டெழுத்து (துவாதசாக்ஷர) மந்திரமும் துருவன் செவி யில் உபதேசித்தான். திருமால் மந்திரம் கேட்டுத் தெளிந்த துருவன் மலரடி சிவப்ப மெல்ல மெல்லக் கானகம் படர்ந்தான். 'காட்டிற்குத் தவமியற்றச் சிறுவன் செல்ல அதைப் பார்த்தும் வாளா இருக்கின்றேன்' என உத்தான்பாதன் வருந்தினான். அவ்வேளை நாரதன் அங்குச் சென்று 'மன்னவா, கவலை வேண்டாம்; கண்ணன் காப்பான்; மைந்தன் தவமியற்றி வரம் பெற்று மீள்வான்' எனக்கூறி நாரதன் அகன்றான். மன்னன் மனத்துள் வருந்தினான்.

கானகம் நண்ணிக் கடுந்தவம் செய்யலானான் துருவன். மூன்று நாள் கழியக் கனி மட்டும் நுகர்ந்தான்; ஆறு நாள் கழியச் சருகுமட்டும் தின்றான்; ஒன்பது நாள் விட்டு நீர் மட்டும் உண்டான்; பன்னிரண்டு நாள் ஒழிந்து காற்றுமட்டும் பருகினான். இவ்வாறு நான்கு திங்கள் கழிந்தன. ஐந்தாம் மாதம் துருவன் ஒன்றும் அருந்திலன். மூச்சடக்கித் தன் பாதத் தின் ஒரு விரலூன்றித் திருமாலைக் கருதித் தவம் புரிந்தான். துருவன் நெஞ்சில் திருமால் சென்று பொருந்துதலால் ஒருவிரல் ஊன்றி நிற்பினும் இருநிலம் பொறுக்கலாற்றாது, கடலில் பட்ட தெப்பம் போல அலைந்தது துருவனது நெஞ்சில் திருமால் அமர்ந்ததால் துருவனின் தவக்கனல் பொறுக்காமல் நிலம் வெதும்பிற்று. அவ்விடத்துத் துருவன் மூச்சடக்கியதால், தேவரும் மூச்சுவிட வலியற்று மயங்கினர். அமரர் கண்ணனைச் சரண்புகுந்தார். திருமால் அவரை நோக்கித் 'துருவன் தவ மியற்றுதலால் மூச்சு விட்டிலன்; அதனால் உமக்கும் மூச்சு முட்டியது; உம்மைக் காப்பாற்றுவோம்' என்று கூறிக் கருடன் மீதேறிப் புறப்பட்டான்.

எதிரே நிற்கவும் தன்னைத் துருவன் காணாதிருக்கவே திருமால், துருவனது உள்ளத்தே விளங்கிய உருவத்தை விலக் கவும், துருவன் கண்விழித்தான். திருமாலின் திருவுருவினைக்

கண்ணாற் கண்ட துருவன் உருகினான்; உவந்தான். திருமாலைத் துதித்து வணங்கினான். திருமால் துருவனின் தலையை அருளுடன் தடவினான். பரமன் தன் தலையில் அன்புடன் தடவியதால் நாவன்மை மிக்கு உண்டாகப் பெற்ற துருவன் திருமாலைப் பலபடப்புகழ்ந்து போற்றினான். நகைபூத்த திருமால் துருவனைப் பார்த்து 'உயர்பதம் உனக்கே தத்தேன் பெறுக. இருபத்தாறாயிரம் ஆண்டு ஆட்சி புரிந்து துருவ' நீ பதம் பெறுவாயெ'னக் கூறிப் பரமன் அகன்றான். 'உயர் பதவியடைய நோற்பாய்' என் வயிற்றுதிப்பாய்' எனச் சுருதி கூறிய உரை நெஞ்சுசுடத்துருவன் திருமாலையே நேரிற் கண்டும் முத்தி கேட்டிலமால் என்று எண்ணி வருந்தி நகர் சார்ந்தான். துருவன் வருகிறான் என அறிந்த உத்தானபரதன் நகரை அழகுபடுத்திப் பரிவாரங்களுடன் அவனை எதிர் கொண்டான் உத்தான பரதன் துருவனைஉச்சி மோந்தான். சுருதியும் திருமால் அருளால் துருவன் மீது அன்பு கொண்டாள் தாய் சுநீதியைத் துருவன் வணங்க, அவள் அவனை வாரி யணைத்து முகமலர்ந்தாள். சகோதரன் உத்தமனும் பொற் கையால் தழுவினான். மன்ன குமரன் துருவன் நகரடைந்தான்.

காளைப் பருவம் அடைந்த துருவனுக்குப் பட்டம் சூட்டித் தவம் மேற்கொண்டான் உத்தான பாதன். சிறப்புற ஆட்சி நடாத்திய துருவன், சிம்சுமாரன் என்ற பிரமனின் மகள் பூமியை மணந்து கற்பன், வற்சரன் என்ற புதல்வர்களையும், இளையை மணந்து உற்கலன் என்ற புதல்வனையும் பெற்றான். உத்தமனை இயக்கர் கொன்றனர். அவன்தாய் சுருதி நெருப்பின் கண் இறந்தாள். 'அரக்கரைத் கொன்றொழிப் பேன்' எனப்புறப்பட்டான் துருவன். துருவன் மாயன்வாளி சிந்தினான். சிங்கம் போல் துருவன் அரக்கர்தமை அழிப்பது கண்டு சுவாயம்புமனு துருவனிடம்' இனிப்போர் செய்யற்க இன்பதுன்பங்களுக்குக் காரணம் இன்னது இன்னதென்று பலர் பலவாறு கூறுவர். யாவும் ஊழினால் வந்த விளைவு. உத்தமனை ஓர் அரக்கன் கொன்றதற்காக, எல்லா அரக்கர் களையும் கொல்லல் தகாது' என்றான். துருவன் அமர்விட்டு மனுவை வணங்க மனு அதன்றாள். குபேரன் அங்குத் தோன்றி அரக்கர் கொலை செய்திலர்; அது முன்வினைப் பயனாம், முனியற்க; வேண்டும், வரம்கேள் தருகிறேன்' என்றான். 'திருமால் அருளே வேண்டுமெ'னத் துருவன் வேண்ட, அதனையே தந்து அகன்றான் குபேரன்.

பின் துருவன் திருமாலைத் தொழுது பல வேள்வி இயற்றி இருபத்தாறாயிரமாண்டு ஆட்சி புரிந்தான். முதற்புதல்வனாம் உற்கலனுக்குப் பட்டம் சூட்டிவிட்டுத் துருவன் விசாலை (பதரிகாச்சிரமம்) நண்ணித் தவம்புரிந்தான் திருமாலை உண்ணி திருமாலின் அருள் பெற்ற சுதந்த, நந்தர் எனும் நித்திய சூரிகள் விமானம் கொண்டு குறுகினர். 'மாயனுடைய உயர்பதத்தை அடைய வருக' என அவர் வணங்கிக் கூறத் துருவன் விமானம் மீது இவர்ந்தான். துருவன் அப்போது தாய் சுநீதியை நினைத் தலை உணர்ந்த சுநந்த நந்தர் 'விமானத்தில் நின் அன்னையும் ஊர்தல் காண்க' என்றார். தேவர் வாழ்த்தத் துருவன் வைகுண்டம் எய்தினான். உற்கலனும் திருமால் மீது கொண்ட பக்தியால் அரசபோகத்தைத் துறக்கவே, வற்சரன் அரசபதவி ஏற்றான். துருவன் கதை கேட்டோர் இருமையின்பமும் எய்துவர் என்று விதுரனுக்கு மைத்திரேயன் கூறினான் என்று சுக முனி பரீட்சித்து வியக்க விளம்பினான்.

## 4. பிருது மன்னன் கதை உரைத்தல் :-

'திருமாலின் அம்சமாம் பிருதுவின் கதையினை நினக்கு ரைப்பேன்' என விதுரனிடம் மைத்திரேயன் கூறலானான். வற்சரன் சேட்டை யெனும் பெண்ணை மணந்து ஆறு மக்களைப் பெற்றான். அவருள் புட்பாருணன் என்பான் பிரபை, தோடை என்னும் இருவரை மணந்து காதலின்பம் நுகர்ந்தான். பிரபை என்பாருக்குக் காலை முதலிய மூவரும் தோடை என்பாளுக்குப் பிரதோடன், நிசி, வியுட்டி என்ற மூவரும் பிறந்தனர். வியுட்டி என்பான் சர்வதேஜஸ் எனும் மனுவைப் பெற்றான். அவன் மகன் சாக்ஷீஸ் எனும் மனுவாவான். சாக்ஷீஸ் என்பான் புரு, குச்சர் முதலிய பன்னிருவரைப் பெற்றான். அவருள் உன்முகன் அரசன் ஆனான். உன்முகன் மைந்தர் அறுவர். அவருள் அங்கன் அரசாட்சி பெற்றான். ஆதிமனு சுவாயம்புவின் தலைமுறையில் பத்தாம் மனுவாகிய அங்கன் சுநீதியை வேட்டனன். துருவன் வழி வந்த அங்கன் வேள்வி செய்ய, அந்தணர் அவியைக் கையில் ஏற்றிலர். காரணம் வினவினான் அங்கன். 'பிள்ளைப் பேறற்றவர் பெய்யும் அவியை வானவர் ஏற்கார். ஆகவே குழவி பிறந்திடத் திருமாலைப் போற்றி யாகம் செய்க' என்றனர் அந்தணர். வேள்வியில் படைத்த பாலன்னமருந்திய சுநீதை அங்கனுக்கு வேனன் என்பவனைப் பெற்றான்.

வேனன் வளர்ந்து கலை பல ஓதி உணர்வு குறைந்தான், வேத நீதி ஒழுக்கம் விடுத்தான்; அறம் பிழைத்தான். அன்னை சுநீதை யமனின் மகளாதலால் வேனன் அத்தன்மையன் ஆனான். அறநெறிப்படு மகனைப் பெறவில்லையே என வருந்திய அங்கன் கானகம் புகுந்தான். வேனன் நிதிச் செருக்கு மிக்கவன் ஆயினன். 'வேள்வி செய்யாதொழிக' என அந்தணரைக் கடிந்து பேசிப் பாவத்தினின்று நீங்காதவன் ஆனான் வேனன். வேள்வி செய்தால் வேந்தர் உயர்வர் என்பார்க்கு 'வேனன்' வேந்தனைப் போற்றாது தெய்வத்தைப் போற்றுதல், மகளிர் கணவனை,விடுத்துச் சோரர் பால் நேயம் வைப்பதற்கு ஒப்பாகும்' என்றனன். 'நானே திருமால்; என்னை யல்லால் தெய்வம் பிறிதில்லை, என்னைப் பரவுமின்' என்றான். அமைச்சர் கூற்றையும் ஒதுக்கித் தீ நெறிப்பட்ட வேனனை அந்தணார் சீற்றத்தீயிற் செகுத்தனர். தாய் சுநீதை வேனன் உடம்பினை எண்ணெய்பெய்த தோணியில் இட்டாள் அரசன் இறந்தவுடன் சிற்றரசர் ஆங்காங்கு தலையெடுத்தனர், நிலம் வளம் கரந்தது, கள்ளர் கொள்ளையிட்டார்.

அந்தணர் இறந்த வேனனின் உடலைக் கடைந்தனர். வேனன் காலில் நிஷீத என்பானும், இடக்கையில் அர்ச்சிஸ் என்னும் இலக்குமியின் அமிசமான பெண்ணும், வலக்கையில் பிருது என்பானும் உதித்தனர். கணியன் பிருதுவைத் திருமாலின் அம்சன் என்றான். பிருதுவிற்கு அருச்சியைமணம் புரிவித்தனர் குபேரன் பிருதுவிற்கு அரியணை வழங்கினான். இந்திரன் திருமுடி வழங்கினான், வருணன் வெண்குடையளித்தான்,வாயு கவரி வீசினான். முத்தாரம் ஈந்தாள் கலைமகள்; திருமகள் நிதியளித்தாள். பார்மகள் பாதுகை வழங்கினள். கடலரசன் சங்களித்தான். குன்றும் நதியும் நிதிகள் அளித்தன. பிரமன் கவசமளித்தான், திருமால் சக்கரமீந்தான், சிவபிரான் வாள் தந்தான். மலைமகள் கேடயம் கொடுத்தாள், யமன் கதாயுதம் தந்தான். மாதவர் வாழ்த்து வழங்கினர். அக்கினி வில் தந்தான். கதிரவன் கணைகள் ஈந்தான், சந்திரன் பரி தந்தான், மயன் தேர் தந்தான், மாதவர் பிருதுவிற்கு முடி சூட்டி அரியணை ஏற்றினர். தேவர், முனிவர் யாவரும் வாழ்த்தினர். பிருது வாழ்த்தியோர் மகிழத் துகிலும் நிதிக்குவையும் வழங்கினான்.

நாட்டில் பசியும் பட்டினியும்மலிய மக்கட் கூட்டம் மன்னன் பிருதுவை யணுகிக் 'காப்பாற்றுக' என்று வேண்ட,

பிருதுவில்லையெடுத்தான், சிலை எடுத்தது கண்ட ஆறுருக் கொண்ட நிலமடந்தை அஞ்சி ஓடினாள். அவள் ஓடிய திசையெலாம் ஓடினன் பிருது. வாடி நின்ற நிலமகள் பிருதுவை வணங்கி 'என்னைக் கொல்லாதே, மகளிர் வருத்திய பழி ஏற்காதே' என்னைக் காப்பாற்று' என்றாள். பிருது 'ஆண்கள் பேடிகள் மகளிர் யாவராயினும் உயிர்கட்குத் துயர்விளைவிக்க எண்ணின், அவரைக் கொல்லுதல் அரசநீதியே' என்றான்.' 'என்னைக் கொல்லாது காக்க,நான் நின் நாட்டிற்கு வளங்கள், சுரப்பேன்'என்றாள் நிலமடந்தை.பிருது' நின்னையான்கொல்ல மாட்டேன். அஞ்சற்க, பல்வளமும் கொடுத்தல் வேண்டு'மென பிருது' கூற, நிலமகள் சொல்லுவாள், 'முன்னம் ஏனமாகி வந்தென்னை எடுத்து அருந்துயர் போக்கிய கண்ணனின் அம்சம் நீ; நின் அருளுக்கு எல்லை யார் உரைக்கவல்லார்,' அறம் தழைக்க அரசிலாமையால் வளம் கரந்தேன். கன்றினால் கறந்து கொள்' என்று கூறி நிலமடந்தை பல வளங்களும் நல்கினாள். பிருது மன்னன் இப்பூமியினைச் செப்பஞ் செய்தமையால் பூமிக்குப் பிருதிவி என்ற பெயர் ஏற்பட்டது.

பிருதுவை மணந்த அருச்சி என்பாள் விஜிதாச்வன், தூம்ரசேனன், அரியக்ஷஸ், திரவினன், விருகன் என்னும் ஐந்து புதல்வரைப் பெற்றாள். அசுவமேதயாகம் உட்படத் தொண்ணூற்றொன்பது யாகங்கள் முற்றுவித்தான் பிருது. நூறாம் வேள்வி இயற்ற நின்றபோது பொறுக்கலாற்றாத இந்திரன் பிருதுவின் யாகக் குதிரையைக் கவர்ந்து போனான். 'களவு போன குதிரையை நீ விரைவில் மீட்பாய்' என அத்திரி முனிவர் பிருதுவிடம் கூறினார். பிருதுவின் மகன் விஜிதாச்வன் இந்திரனைச் சிவபிரான் எனத் தவறாகக் கருதிக் கணை தொடுக்கவில்லை. 'இவன் இந்திரனாவான், விஜிதாச்சவனே நின் வில்லைவளைத்து அம்பெய்க'என்றார் அத்திரி. புரவியை விடுத்து இந்திரன் அந்தரதத்தில் மறைந்து நின்றான். விரைவில் இந்திரனிடமிருந்து புரவியை மீட்டு வந்ததால் இளவரசனுக்கு முனிவர் விசிதாச்சுவன்' எனப் பெயர் சூட்டினார். இந்திரன் மீட்டும் குதிரையைக் கவர்ந்து சென்றான். 'இந்திரனைக் கொல்வேன்' என்று பிருது சீறினான். 'வேள்வியில் கொலை செய்தலாகாது; வேள்வித் தீயில் நெய் பெய்து அவனைக் கொல்வோம்' எனக் கூறினர் முனிவர். அப்போது பிரமன்

அங்குத் தோன்றி, 'இந்திரன் திருமாலின் அம்சமன்றோ, அவனைக் கொல்லுதல்தகாது, இந்நூறாம் வேள்வியால் வரும் பயன் கருதி மன்னவனே! நீ அவ் வேள்வி செய்யவில்லை, ஆகவே அந்த வேள்வியை மட்டும் இயற்றாமல் இருப்பாய், நீ விழைவது வீட்டின்பமே' என்று கூறினான். அத்துடன் பிருது இந்திரனுடன் ஏற்பட்ட பகை நீக்கினான். அப்போது திருமால் அங்குத் தோன்றி 'இந்திரன் செய்தவை பொறுத்தல் வேண்டும், மன்னவா, நீ சினந்தால், பிறகு யாரே அருள வல்லார்' என்றான்.

பிருது 'விழைவது தருவேன் வேந்தே' என்று கூறிய திருமாலைப் பணிந்து வாழ்த்தி, 'நின்னை நேரிற்கண்டும், வீடு பேற்றின்பம் விடுத்து அழியும் பொருள் வேறு அறிவினர் வேண்டுவாரோ; குற்றமற்ற இறைவா, நின் சரிதம் கேட்கச் செவிபல அருள வேண்டும்' என்றான் பிருது மன்னன், மன்னனின் பக்தி கண்ட பரமன் அகன்றான். பிருது பிரம்மா வர்த்தம் எனும் தன் நகர் திரும்பினான். பிருது, பின்னர்ச் சத்திரவேள்வி முடித்து அவையினரை நோக்கி 'அறஞ்செய் வாரைக் காத்தலும் மறஞ் செய்வாரைக் கடிதலும் காவலர்க்குக் கருமம் என்பர், மனு குலத்தில் வந்தோருள் வேனன் தவிர்த்து அனைத்தரசரும் குற்றமில்லாது அரச கருமம் இயற்றி இருமை யின்பமும் துய்த்தனர். திருமால் அடி போற்றி நீங்களும் உங்களது கடமையாற்றி அறம் முதலான நான்கு உறுதிப் பொருள் பெறுவீராக. இப்புவி காவல் யானும் நீங்காமல் ஆற்றித் திருமால் பதம் பெறுவேன்; தேவரும் மறையோரைப் போற்றின்திருமாலும் மகிழ்வான் எனில், மறையோர் பெருமை சொல்லுதற்கரியது' என்றான். அது கேட்ட அவையோர், 'புதல்வன் பிரகலாதனால் இரணியன் பழி நீங்கி விளங்கியது போல உன்னால் வேனன் குற்றம் நீங்கிச் சிறப்புற்றான். எழிலுடைய மகனைப் பெற்றோர் சிறப்பர் எனும் மொழி மெய்தான், திருமால் பக்தனான நீ அரசனாகியதால் நாங்கள் அன்பும் இன்பமும் எய்தினோம், நீடு நீ வாழ்க' என வாழ்த்தினார்.

அப்போது பிருதுவின் அவைக்குச் சனகாதி நால்வர் எழுந்தருளப் பிருது அவர்களைப் போற்றி வணங்கிப் 'பிறவிக் கடல் நீந்தும் வழி கூறுக' என வேண்டினான். அவர்கள் 'பொறிகளையடக்கித்தன்னை உணர்க;திருமாலின் பதமடைய

ஏது உயிர்கட்கு அன்பு செய்வதே. திருமாலின் இணையடி பற்றியன்றிப் பிறவிக்கடல் நீந்தல் அரிது' என பிருதுவைத் தெளிவித்தகன்றார்.

பிருது பின், தன் மகனுக்குப் பட்டம் சூட்டிவிட்டு மனை யாளொடும் தவமியற்றிடக் கானகஞ் சென்றான். கடுந்தவ மாற்றிக் கண்ணன் பதம் அடைந்தான். அவன் தேவி அருச்சி கணவனது உடலைத் தீயில் கொளுத்தித் தானும் எரி மூழ்கி வீடு பெற்றாள்.

பிருவின் கதை கேட்போர் மறையவராயின் விழைந்தன பெறுவர்; அரசராயின் ஏழ்புவியும் ஆள்வர். வணிகராயின் வளர் செல்வம் அடைவர்; வேளாளர் கேட்கின் உத்தமராவர்' என்று விதுரனிடம் கூறினான் மைத்திரேயன்.

குருகலத்துதித்த பரிட்சித்து என்று சுகமுனிவன் பேசினான் என நைமிசாரனிய முனிவர் உவக்க உரைத்தான் சூத முனிவன்.

## 5. பிராசீனபரிசி ஆவிர்த்தானன் கதையுரைத்தல் :-

'பிருதுவின் மைந்தர் ஐவருள் ஒருவனான விசிதாச்சுவன் பெற்ற மகன் அவிர்த்தானன் ஆனான். அவிர்த்தானன் பெற்ற மகன் பிராசீன பரிசி ஆவான். அளவற்ற வேள்விகள் இயற்றிய பிராசீனபரிசியின் கதை கேட்பாயாக விதுர' என்று மைத்தி ரேயன் விளம்பலானான். (பரியைவென்றவன்)விசிதாச்சுவன் அரசப்பொறுப்பைத் தன் தம்பியர் நால்வருக்கு மளித்தான்.பரி கவர்ந்தோடிய இந்திரனோடு மறைந்துநின்று போர் செய்தவன் அந்தர்த்தானன் என்று பெயர்பெற்றான்.அவன் சிகண்டிதனை மணந்து பாலுகன், பவமாலன், சுசி என்ற மூவர் அக்கினி தேவராகப் பிறந்து அக்கினிக்கே இரையானார். அந்தர்த் தானன் மீண்டும் நபச்சுவதியை மணந்து அவிர்த்தானன் என்ற மகனைப் பெற்றான். அவிர்த்தானன் மக்கள் அறுவருள் ஒருவனான ஆவிர்த்தானன் கணக்கற்ற வேள்வி ஆற்றினான். ஆவிர்த்தானன் பாரெல்லாம் தருப்பையைக் கிழக்கு முகமாகப் பரப்பியமையால் 'பிராசீனபரிசி' (பிராசீனம்–கிழக்கு, பர்ஹி– தருப்பை) எனப் பெயர் பெற்றான்.

ஆவிர்த்தானன் சமுத்திரராசன் மகள் சதத்ருதி என்பாளை மணந்து புதல்வர் பதின்மரைப் பயந்தான். மைந்தர் பதின்மரும் கண்ணனை வழுத்தி, ருத்திரன் ஓதிய கீதை கேட்டு உயர்வன மடைந்தார். புதல்வர் கானகம் அடையவும், மேலும் பல வேள்விகள் செய்த ஆவிர்த்தானனிடம் நாரதன் வந்தான், நாரதன் அரசனை நோக்கி 'நீ யாகத்தில் கொன்ற ஆடுகள் கோபத்துடன் விரைந்து தேவலோகம் செல்கையில், இரும்புக் கொம்பால் பாய்ந்து வயிற்றைப் பிளக்கும்; நின் வரவு நோக்கி அவை காத்திருக்கின்றன' எனச் சொல்லி நாரதன் புரஞ்சனன் சரிதம் உரைக்கலானான்.

ஒன்பது வாயில்களுடைய நகரில் புரஞ்சனன் என்ற ஓர் அரசன் இருந்தான். தோழனுடன் தேரேறி இமயச் சாரல் அடைந்து அங்கு அழகிய பெண் ஒருத்தியைக் கண்டான். ஐந்தலையரவு காவலாக, பத்து இந்திரியங்களாம் படைத்தலைவரொடும், விஷயங்களாகிய வயவரொடும் புரத்தில் நின்ற மாதை நோக்கிப் பலபடப்பாராட்டினான். மடந்தையும் மணம்மிகு மார்பைப் பொருந்தினன். விடுதலறியா விருப்பினன் ஆயினான். அம்மங்கை செய்வதையே அவனும் செய்தான். இவ்வண்ணமிருந்த புரஞ்சனன் விதிவலியால் வேட்டையாடச் சென்றதை ஆவர்த்தான மன்னவ, நினக்கு உரைப்பேன்' என நாரதன் தொடர்ந்தான்.

புரஞ்சனன் வேட்டையாடத் தேரேறிப் புறப்பட்டான். கொடிய விலங்குகளை வேட்டையாடிச்சோர்ந்தான். இல்லறத்தில் திளைத்த புரஞ்சனன் 1100 பிள்ளைகளையும் 110 பெண்களையும் பெற்றான் மேலும் மனைவியுடன் இன்பந்துய்த்துக் காலங் கழித்தான். புரஞ்சனன் புதல்வர்களுக்கும் பெண்களுக்கும் செய்ய வேண்டிய திருமணம் முதலியன முடித்து வேள்விகள் பலவும் இயற்றினான். புதல்வர் ஒவ்வொருவரும் நூறு நூறு பிள்ளைகளைப் பெற்றார். பெண்களும் குமரரைப் பெற்றார். புரஞ்சனன் இளமை நீங்கி முதுமை எய்தினான். கால கன்னியாகிய ஜரை அவனிடம் பொருந்தினாள். ஜரை கணவனைத் தேடி மூவுலகும் செல்ல, யாதிகாதலனாம் பூரு (யாயாதியின் புதல்வன்) தவிர யாவரும் விரும்பிலர். ஒருவரும் விரும்பாது போகவே 'என்னை நீதான் தழுவிடவேண்டுமென என்னைக் கேட்டாள் ஜரை என்றான் நாரதன் 'மகளிரைத் தீண்டேன் நான்' என்ற கூற, அவள்' ஓரிடத்தில் வைகாது

உலகெலாம் திரிக' என்றாள். பிறகு ஜரை பயத்திடம சென்றாள் கால வயனன் ஆகிய பயம்' நீ என்னுடன் பிறந் தாய். ஆகவே என் தம்பியர் சுரன் முதலியோரைத் தழுவ நான் ஏற்பாடு செய்குவன் செல்க' என்றான். அன்று முதல் அருஞ்சுரன், தாபன். பிணி ஆகியோருடன் ஜரை உவந்து இருந்தாள். புரஞ்சனன் தன் நகரம் ஜரையின் இருப்பிடமாம்.

சண்டவேகன் 360 வயவருடன் சென்று புரஞ்சனனுடன் போர்விளைத்தான். புரமழிந்து புரஞ்சனன் அழியுங்காலத்துக் காதலியை நினைந்து வருந்தினான். புரட்சினன் இறந்தான். புரத்தை விட்டுப் பொன்னுலகடைத்தான். புரஞ்சனன் யாகம் இயற்றியபோது கொல்லப்பட்ட ஆடுகள் எல்லாம் புரஞ்சனன் பொன்னாடு புகுந்த போது. தம் இரும்பாலாகிய கொம்பால் அவன் வயிற்றிற் குத்திக்கிழித்தன. சாகுந்தறு வாயில் புரஞ்சனன் தன் மனைவியைக் கருதியதால், விண்ணுலகு நீங்கி மண்ணுலகில் விதர்ப்பரசனுக்கு மகளாகப் பிறந்தான். அவளை மலயத்துவச பாண்டியன் மணந்தான் பாண்டியனுக்கு ஏழு மைந்தரும் ஒரு மாதும் பிறந்தார். த்ருதவிரதை ஆகிய அப்பெண்ணை அகத்தியன் மணந்து இத்துமவாகன் என்ற முனிவனைப் பயந்தாள். அரசாட்சியை மகனிடம் கொடுத்து விட்டு மலையத்துவசன் பொதியமலை யில் தவஞ்செய்தான் தேவியுடன், பாண்டியன் முத்தி எய்த அவனுடன்எரிமூழ்கப் போக மனைவியிடம் முனிவன் ஒருவன் கூறுவான்: 'மானச ஏரியில் அன்று அன்னமாய் இருந்தேன். இன்று இவ்வுடல் பெற்றேன், நீ உடம்பு அல்லை' என்று கூற, மலையத்துவ பாண்டியன் மனைவி அவ்வுடலை விட்டு நீங்கி எல்லையற்ற வீடு எய்தினாள்' என்று கூறினான் நாரதன். பிராசீனபரிசி நாரதனிடம் உரையாடல் தெளிந் திலன்' என்று கூற, நாரதன் விளக்கிக் கூறலானான்.

'புரஞ்சனனது வரலாற்றின் தத்துவமாவது, ஒன்பது வாயில் புரம் என்பது யாக்கை என அறிக, புரஞ்சனன் என்னப்பட்டவன் மாயையாகிய மாதை மணந்த புருடனே; தோழன் என்றது மனத்தை, ஐந்தலை யரவம் என்றது உயிரை; வயவர் என்றது விஷயங்களை: பதின்மர் என்றது பத்து இந்திரியங்களை; இரு சகடம் என்றது புண்ணியபாவங் களை, பரி ஐந்தென்றது ஞான இந்திரியங்கள் ஐந்தை, ஆனி ஐந்தென்றது வாயுக்கள் ஐந்தை. கொடி மூன்றென்றது

முக்குணத்தை, ஓர் அச்சென்றது மூலப் பிரகிருதியை. ஏழு ஆவரணம் என்றது ஸ்ப்த தாதுக்களை, பாகனென்றது புத்தியை, தேர் என்றது ஆக்கையை. காடு என்றது பூமியை' இரண்டு அம்பென்றது விருப்பு வெறுப்பை, வேட்டைமாக்கள் என்றது உரை முதலிய ஐந்தை, கால கன்னி என்றது சரையை; சண்டவேகன் காலமாம், இருண்ட மேனியுடைய மனைவியர் என்றது 360 இரவுகளை, வீரர் என்றது பகல் களை, வேந்தே! போக இச்சையாற் செய்யும் கருமம் விடுத்திடல் வேண்டும். காட்டில் தன்னை அகப்படுத்தும் வேடன் முழக்கும் இசையினால் மயங்கி அகப்படும் அசுணமா என்னும் விலங்கினைப் போல் சுவர்க்க போகத்தில் ஆசையைப் பெருக்குகின்றான் ஆகவே, சுவர்க்க போக இச்சையுமாகாது.

உடல் சம்பந்தமின்றி ஞானம்பெற நினைக்கின் இலிங்க உடலை மாய்க்க வேண்டும். ஞானம் வருங் காலத்தில் அந்த உடல் உணர்ச்சியில்லாமையால் நீங்கும். வேள்வி செய்தலை விரும்பாதே. திருமால், பாதம் போற்றி உயர் வீட்டின்பம், பெறுவாயாக' என்று நாதரன் கூறி அகன்றான்.

ஆவர்த்தானன் யாவையும் நீக்கிக் கண்ணனை நினைந்து தவமியற்றிப் பரமபதமடைந்தான். ஆவிர்த்தானன் சரிதம் கேட்போர் நினைத்தவை பெறுவர் என்று மைத்திரேயன் விதுரனுக்குக் கூறினான்.

### 6. பிரசேத சாக்கியர் பதின்மர் கதையுரைத்தல்:

திருமாலை வழுத்திச் சிவபிரான் கூறிய கீதை கேட்டு விருப்புடன் தவமியற்றும் பிராசீனபரிசியின் புதல்வர்கள் பிரசேதசாக்கியர் பதிமன்ரின் கதை விளம்புக என்று வேண்டிய விதுரனுக்கு மைத்திரேயன் கூறினான். பிரசேத சாக்கியர் திருமாலை நினைந்து பதினாயிரம் வருடம் தவம் புரிந்தனர், அவர் முன்னர்த் திருமால் தோன்றினான். பதின் மரும் பரமனைத் தொழுதனர். 'வேண்டும் வரம் கேளுங்கள்' என்றான் துளவோன். கற்பக மரம் கண்ட வண்டு பிறிதொரு மரம் நாடுமோ; வள்ளலைக் காண்பதே வரம்' என்றார். பதின்மர். மகிழ்வுற்ற மால், 'பிரமலோசை எனும்' தேவமகள் நிலவுலகம் வந்து தவமியற்றிய கண்டு எனும் முனிவரைப் புல்லி மாரிடை என்ற பெண்ணை ஈன்றாள். அக்குழந்தையை

மரநிழலில் வைத்துவிட்டு வானுலகடைந்தாள். மரங்கள் வழங்க அப்பெண் மாரிடையை நீங்கள் மணந்து கொள்க, ஒரு புதல்வனைப் பெற்று உலகு புரத்தல் வேண்டும். பத்து லட்சம் ஆண்டுகள் அப்பெண்ணுடன் வாழ்ந்து ஆட்சி நடாத்தி வீடெய்துக' என்றான். திருமாலைப் பணிந்து பதின் மரும் நகரடைந்தார்.

வழியில் எங்கும் காடாய் மரங்கள் இருக்கக் கண்டு காற்றையும் நெருப்பையும் விடுத்தார். மரங்கள் எரியத் தொடங்கின; அப்போது பிரமன் அங்குத் தோன்றி 'மரங் களைச் சுடாதீர்; மரங்கள் வழங்க இப் பெண் மாரிடையை மணந்து கொள்ளுங்கள்' என்றான். பதின்மரும் மாரிடையை மணந்தார்.

பதின்மரும் மாரிடையுடன் இன்பந்துய்த்து மகிழ்ந்தார். திருமால் கூறியாங்குத் தேவ வருடத்தில் ஒரு லட்சம் வருடம் தரணியாண்டனர். சாக்குடன் எனும் நான்காம் மனு காலத் தில் விதியால் இறந்த தக்கன் பிரசேதசாக்கியருக்கு மகனாய்த் தோன்றினான். தக்கனுக்கு முடி சூட்டிய பின் பதின்மரும் தவம் மேற்கொள்ளப் போயினர் 'சிலகாலம் இல்லறத்தில் இருந்ததால் அறிவெல்லாம் அழியப் பெற்றோம். விரைவில் முத்தியடைய வழி கூறுக' என நாரதனை வேண்டினர் பிரசேத சாக்கியர். நாரதன் பதின்மரிடம், 'திருமாலை வணங் கார்தமை இருகால் விலங்கென்று கூறுவர்; வேரிற்பெய்த நீர் மரம் முழுவதும் தழைக்குமாறு திருமாலைப் போற்ற உலக மெல்லாம் உவக்கும். உலகம் மாலிடத்தே தோன்றி அவனிடத்திலேயே மறையும், கதிரோனாற் பெய்த மழைநீர் அக்கதிரோனால் மீட்டும் நாசமாவது போல், உலகமும் கருணயுடையமாலால் தோன்றி மாலால் அழிவுறும். ஆகவே பரமன் புகழ் பாடுங்கள். சூடுங்கள் அவன் தாமரைப்பாதம், நாடுங்கள் நாகணையானை' என்ற கூறிப்போனான். பதின் மரும் அவ்வாறே மாதவம் பல புரிந்து மாதவன் பதமடைந் தார்' என்று மைத்திரேயன் கூறினான். விதுரன் விரைந்து அத்தினாபுரம் சென்று திருதராஷ்டிரனைக் கானகம் செல்லு மாறு கூறினான் என்று சுகமுனி உரைத்தான்.

பிரசேத காக்கியர்பதின்மர் கதை கேட்போர் நலம்பல் நுகர்ந்து முத்தி எய்துவர். உத்தானபாதன் மரபினை இது காறும் கூறினேன். அவன் தமையனான பிரயவிரதனுடைய கதையை நினக்குரைப்பேன்பரிச்சித்து என்றான் சுகன். 'நான்முகன் தொழுத மால் கதையை நாளும் கருத்தில் நாடுவீர் முனிவரீர்' எனச் சூதமாமுனி சொல்லத் தொடங்கினான்.



# ஐந்தாம் கந்தம்

## 1) பிரியவிரதன் மரபுரைத்தல் :-

'பிரியவிரதன் உலகைப் பாதுகாத்த தன்மை யாது? அரசனாயிருந்தும் அரியின் பதமெய்தியதெப்படி கூறுக' எனப்பரிட்சித்து கேட்கச் சுக முனிவன் கூறுவான்.

பிரயவிரதன் கந்தமாதன மலையடைந்து தவம் செய்தான். இமையவர் விமானம் எண்ணிலமிடைய பிரமனின் விமானம் மலைப்புறத்துத் தங்கியது. பிரியவிரதன் பிரமனைப்போற்றி வழிபட்டான். பிரமன், 'நிலவுலகைக் காக்கின்ற நீ கடும்தவம் புரியக் காரணம் என்ன? காமம் முதலிய அறுவகைப் பகை தனை அடக்கார், கானகம் அடையினும் மாயையின் வலை யினைக் கடவார். சொன்ன பகைதனை அடக்கி, அறிந்தோர் மண்ணகம் காத்து இல்லறம் வைகினும் மாயைதனை மருவார்; ஆற்றும் கடமைகளைக் கனவாகக் கண்டு நிலம்புரக்க' என்றான். பிரமன் பணித்தபடி தந்தையருளிய மணிமுடி சூட்டிப்பார் காத்தான்.

விச்சுவகருமன் என்னும் பிரமன் தன் தேர்ச் சக்கரத்தால் உலகினை ஏழு கடல்களாயும் அவற்றின் இடைநிலம் ஏழு தீவுகளாயும் ஆக்கினான். பிரியவிரதன், விச்சுவகருமனின் மகளைமணந்து ஆக்கினீத்திரன் முதலிய புதல்வர் பதின்மரைப் பெற்றான்; அவருள் மூவர் அழல் போலும் காமத்தை யடக்கிடும் தவத்தவர் ஆயினர். பிரியவிரதன் நாவர், இறவி, இலவு, கிரௌஞ்சம்,குசை, தேக்கு,புட்கரம் ஆகிய ஏழு தீவுகளையும் ஏழு மைந்தரும் உவப்பத்தந்தான்.

பிரியவரதன் தன் மகள் ஊர்ஜஸ்வதியைச் சுக்கிரனுக்கு மணம் முடித்துக் கொடுத்தான். சுக்கிரனுக்குத் தெய்வயானை என்றபெண் பிறந்தாள்.தெய்வயானையை யயாதி மணந்தான்.

பிரியவரதன் மற்றொரு மாதைக் கூடி உத்தமன், தாமதன் ரைவதன் என மூவரைப் பெற்றான். பிரியவரதன் 110 ஆண்டுகள் உலகைப் புரந்து மீண்டும் கானகம் அடைந்தான்.

பிரியவரதனின் மூத்த மகன் ஆக்கினீத்திரன் என்பான் மகப் பேறு வேண்டி இமயச்சாரலில் தவமிருந்தான். பிரமன் நாவலந்தீ வின் அரசன் செய்யும் தவத்தை அறிந்தான். தன் அவையில் பாடிய பூருவசித்தி என்பாளை நோக்கிப் பிரமன் 'தீவினானுக்கு மாலை சூட்டு' என்று பணித்தான். அவ்வாறே அவளும், அவன் முன் எய்திட அவள் அழகில் மயங்கி ஆக்கினீத்திரன் பூருவசித்தியைத் தழுவினான். பூருவசித்தி நாபி முதலிய ஒன் பதின்மரை ஈன்றாள். நாபி, கிம்புருடன், கேது, மாலன், இளா, விரதன், பத்திராச்சுவன், இரம்மிகன், குரு என்பன அவர்தம் பெயர்களாம். ஆக்கினீத்திரன் நாவலந்தீவை ஒன்பது வருடமாக்கி அவர்களுக்களித்தான். நாவலந்தீவில் தன் மனைவி பூருவசித்தியுடன் ஆக்கினீத்திரன் பத்துக்கோடி யாண்டு இன்பந்துய்த்தான். பின்னர் வானுல கடைந்தான்.

நாபி முதலிய ஒன்பது பேரும் மேருவின் பெண்களாகிய மேருத்தேவி முதலிய ஒன்பது பேரை மணந்தனர். நாபி திருமாலை எண்ணித் தவமியற்றித் திருமாலைப் போலும் மைந்தனைப் பெற வரம் கோரினான். வேத முதல்வனாம் திருமாலும் 'யாமே வந்து நின் மகனாகத் தோற்றுதும்' என்றான். நாபியின் மனைவி மேருத்தேவி வயிற்றில் திருமாலே தோற்றம் செய்தான். நாபியின் மகன் இடபன் என்பான். இடபன் இந்திரன் மகள் சயந்தியை மணந்தான் நாபி தவம் செய்யும் பொருட்டுக் கானகம் எய்தினான். இடபனுக்கு மைந்தர் நூற்றுவர் பிறந்தார். நூறு புதல்வருள் ஒன்பதின்மர் துறவு பூண்டார்; எண்பத்தொரு குமாரர் வேதியராய்ச் சென்றார். பரதன் என்னும் மைந்தன் ஏனைய அரசகுமரரோடு அரசு செய்தான். இடபன் முத்தியடைந்தான்.

'பரதன் என்பான் டரதகண்டம் எனத் தன் பெயர் பெற்ற இப்பூமியைக் காத்துப் பஞ்சசனி என்பாளை மணந்து சுமதி முதலிய மைந்தர் ஐவரைப் பெற்றான். மைந்தர் ஐவரும் அவனி காத்தனர். பரதன் பரமனுக்கு அன்பு பூண்டு தவமி யற்ற மலைச்சாரல் அடைந்தான்' என்று பரிட்சித்து மன்ன னிடம் கூறினான் சுகமுனிவன்.

**2. பரதன் சரித்திரம் உரைத்தல் :-**

**'தன்னை அடியார் எவ்வண்ணம் தியானம் செய்கின்றாரோ அவ்வுருவத்துடன் காட்சிதரும் புலக முனிவரது' 'ஹரிக்ஷேத்ரம்**

என்ற ஆசிரமத்தையடைந்தான் பரதன். அவ்வாறு பரதன் தவமியற்றும் நாளில் அங்கு நடந்தன கூறுவேன்' எனச் சுக முனிவர் கூறலானார்.

ஒருநாள் பரதன் கண்டகி என்ற ஆற்றில் நீராடச் சென்றன். களிற்றைத் தேடி யலையும் சிங்கத்தின் கர்ச்சனை கேட்ட மான்கன்று அஞ்சி அங்கு வந்துற்றது. நீராடி முடித்த பரதன் அம் மான்கன்றை எடுத்துச் சென்று வளர்த்தான். அறுகம் புல்லை அதற்கு உணவாகக் கொடுத்துப் போற்றி னான், பரதன். நீரருந்த அக்கன்று பொய்கைத்துறை செல்லி னும், புலி கவர்ந்துபோய்விடக் கூடும் என அஞ்சிப் பொன் மான் பின்னெழுந்த இராகவன் போன்று அக்கன்றின் பின்னால் செல்வான் பரதன். சோலையுள் மான் சென்று மறைந்தால் அது எங்குற்றதோ எனத் தேடுவான்; பளிங்குப் பாறை முகட்டில் ஏறி மான் தூங்கினால் பரதன் பரிவுடன் பார்த்து நிற்பான். திருமாலை வழிபடும் போதும் மானையே நினைந்திருப்பான். இன்னவாறு ஒழுகிப் பரதன் இறக்கும் போதும் மான் மேல் நினைவாக இருந்தானாகையால் அடுத்த பிறவியில் மானாகப் பிறந்தான்.

மானாகப் பிறந்தும், முற்பிறவி காரணத்தால் அறிவிற் குறையாததாக விளங்கி அம்மான் சில நாளில் இறந்து அங்கிரா எனும் முனிவர் வழியில் தோன்றலுற்றான் பரதன். முழுவறிவும் கைவரப்பெற்றவன் ஆகையால் பரதன் எழுதா முன்னூல் (வேதம்)கற்றிலன்;மனத்தில் யாதும் பற்றிலன்;வருந்தி ஒன்றும் பெற்றிலன்; யாதும் பேசிலன். அக்குலத்து முதிய வேதியர் பரதனைப் பார்த்து 'மறை நவிலாத நீ, பழனத்தைக் காத்தல் செய்' என்றார், அவ்வாறு பரதன் ஒழுகும் நாளில் பாலைக் கடவுளாம் காளிக்குப் பலியிட ஒருவன் கிடைத்தானென மகிழ்ந்த வேட்டுவர் பரதனைப்பற்றிச் சென்று அவன் மேனியிற் சந்தனம் பூசி மாலை அணிவித்தனர். பரதனைப் பலி கொடுப்பான் வேண்டித் துர்க்கை முன் வேடர் கொண்டு செல்ல, அது கண்டு சினந்த காளி வேடரது சென்னியை வாளால் துணித்து வீழ்த்தினாள். சான்றோர்க்கு இறுதி எண்ணும் தீயோர் வாழ்தல் உண்டோ?

சிந்து, சௌவீரதேசவரசன் ரகுகணன் பல்லக்கில் ஏறிக் கபிலரைக் காணச் சென்றான். பரதனைச் சிவிகை சுமக்கு

மாறு செய்தனர். பரதன் பல்லக்குச் சுமக்கையில் ரகுகணன் பரதனைப் பார்த்து 'உடல் இளைத்தாயோ' என வினவினான். பரதன் ரகுகணனைப் பார்த்து 'இளைத்தல், பெருத்தல் உடம்பின் குணங்கள்; உயிருக்கும் அவை உண்டோ' என்றான். அதுகேட்ட வேந்தன் பதறிக் கீழிறங்கிப் 'பொறுத்தருள வேண்டும்; யாக்கை எய்தும் துன்பமெலாம் உயிர்க்கும் உண்டு என்று யானும் கருதுகிறேன்; தாங்கள் யார்? அறியாது செய்த பிழை பொறுத்து அறிவுரை பகரவேண்டும்' என்றான்.

அப்பொழுது பரதன் அங்கு ரகுகணனுக்கு மறைகளை யெல்லாம் தெளிவுற விளக்கினான். 'இவ்வுலகப் பொருள் யாவும் நிலையற்றன. மனத்திற்குண்டான தாபம் உயிர்க்கிலை. முக்குணத்தொடு மனம் விளங்குவரையும் பிறவி நீங்காது. சான்றோரைச் சாரின் வீடுபேறடையலாம்; அறிவிலார்கூட்டுறவால் பிறவிப்பிணி நீங்காது உடலினைத் தானென உரைத்தல் பேதமை; வினைகளால் பிறவிக்கடல் நீந்த முடியாது; அவ்வாறு கருதுவது குருடன் ஒருவன் புலி முதலியன மிகுந்த காட்டைக் கடக்கக் கருதுவது போலாம்; அறிவில்லார்விடய இன்பமே நாட்டமுற்று நலிவர்; பொன்னை விழைந்து வாடுவார் செயல் குளிரைப் போக்க நரியின் வாயைத் தீயென்று சார்வாரது செயல் போன்றது. இலவு காத்த கிளிபோல அறிவிலார் உலுத்தர்தம் கடைத்தலை யடைந்து வருந்துவர். மாலினது இணைப்பதம் நினைக்கிலார் பிறவிக்கடல் கடக்கல் அரிது; சேய், தாய், காதலி, தாதை, அரசன் போன்ற பேர்கள் யாவும் மாயையாம். உலகப் பொறுப்புடைய நீ குறும்புகள் கடிந்து ஞானமாம் உலகைக் கொள்வாயாக' என்ற பரதன் அறிவுரை கேட்ட வேந்தன் ரகுகணன் சென்று திருமால் பதம் நாடி வினை நீங்கி வீடு பெற்றான்.

பரதன் மகனும் சான்றோனுமாகிய சுமதி என்பவன் பெற்ற சேய் 'தேவதாசித் என்போன். தேவதாசித் பெற்ற மகன் பேர் தேவத்தியும்மனன். தேவத்தியும் மனன் என்பான் பரமேட்டி என்பவனை மகனாய்ப் பெற்றான். பரமேட்டிக்குப் பிரதிகன் மைந்தனாய்ப் பிறந்தான். பிரதிகன் என்பான் பிரதிகத்தாவைப் பெற்றான். பிரதிகத்தாவின் புதல்வன் பூமனாவன். பூமன் பெற்ற பிள்ளை கீதன் என்பான். கீதன் மரபில் கயன் உதித்தான். தரணி சிறப்புற ஆட்சி செய்த கயனின் பெருமை சொல்லுதலரிது.

கயனின் புதல்வன் சித்திரரதன் ஆவன். அவனுக்குச் சம்மிராட்டு என்பான் தோன்றினான். சம்மிராட்டுவின் மகன் மரீசி; மரீசி என்பான் விந்துமான் என்பானைப் பெற்றான். விந்துமான் புதல்வன் மது; மதுவின் மகன் வீரவிரதன். வீரவிரதன் என்பான் மன்னியுவை ஈன்றான். மன்னியுவின் மகன் புவன். புவன் மகன் துவட்டா துவட்டாவின் மகன் விரசன், விரசன் என்ற வேந்தன் புதல்வரைப் பெற்று மனுவின் மரபை விளக்கமுறச் செய்தான்.

பரதன் கதை கேட்போர் பதம் எய்துவர் என்று பரீட்சித்து விடம் புகன்றான் சுகமுனி.

3) நாவலந்தீவின் வளனுரைத்தல்:-

'பதினான்கு உலகம் பற்றியும் கூறுக' எனப் பரீட்சித்து வேண்டச் சுகமுனி தொடர்ந்தான்.

கீழைக்கடல் முதல் மேலைக் கடல் வரை ஒரு லட்சம் யோசனை தூரம்; வடகடல் முதலாகத் தென்கடல் வரையும் ஒரு லட்சம் யோசனை; கடல் சூழ்ந்த வட்டமாக ஒன்பது கண்டம் அமைந்தன. நடுவில் மேரு அமைய நாவலந்தீவு உள்ளது.

மேருவிற்குத் தென்பால் நிடதம், ஏமகடம், இமயம் எனும் மூன்று மலைகள் உள்ளன. மேருவின் வடக்கே நீலம், சுவேதம், சிருங்கி எனும் மூன்று மலைகள் உள்ளன. ஆறு மலைகளுக்குமிடையில் 2000 யோசனை தூர இடைவெளி. மாலிய வான், கந்தமாதனம் எனும் இரு மலைகளும் தென் வடக்காக நிடதத்தையும், நீலத்தையும் முட்டிக் கிடக்கும்.

பாரத பூமியின் அமைப்பைப் பல பாடல்கள் விளக்குகின்றன. மேருவில் உள்ள எண்பதிகளில் பிரமன், சிவன், திருமால், இந்திரன், திசைப்பாலர் முதலியோர் உறைகின்றனர். கங்கையாறு மாலியவான் மலையில் தோன்றி மேருவில் வந்து நீலம் சுவேதம், சிருங்கி எனும் மலைகளை ஊடறுத்து, இமயத்தைக் கீண்டு அளகநத்தை எனும் பெயர் பெற்றுக் குண கடலிற் கலக்கும். கங்கையில் மூழ்குவார், பிதிர்க் கடன் இயற்றுவார், பல சிறப்புக்கள் எய்துவர்.

இளாவிரத வருடத்தில் உமை சிவனுடன் வாழ்ந்த போது, ஆடவர் அவ்வழி அணுகின் தையலர் ஆகும்படி உமை வழங்கிய சாபம் ஒன்றுண்டு. அதையும் கூறுவேன் எனத் தொடர்ந்தான் சுதன்.

பத்திராச்சுவத்தில் மாயன் அயக்கிரீவன் எனும் பெயரொடு உறைந்தான். கேது மாலத்தில் காமதேவன் என்று ஏத்திட உறைவான். மால், இரம்மிக வருடத்தில் இரம்மிகன் முதலி யோர் பரவ, மீனமாய் விளங்குவன். திருமால் ஆமையின் வடிவங்கொண்டு இரண்மய வடிவத்தில் இருப்பான். உத்தர குருவில் மால் வராக மூர்த்தியாய் உறைவான். மால் அரிவருடத் தில் நரசிங்கமாய் இருப்பான். கிம்புருடத்தினில் மாயன் இராமனாய் இருப்பான். மால் பாரத வருடத்தில் நாரதனுக்கு அருள நரநாராயணராய் இருப்பான்.

பாரத வருடம் பாவத்தால் நரகிலும், அறத்தால் விண்ணி லும், அறிவால் வீட்டிலும் புகுத்தும் கருமபூமி ஆகும்.

சத்துவகுணத்துடன் வினையாற்றுவார் பொன்னுலகடை வார்; இராசத குணத்துடன் ஆற்றுவார் மானிடராய்ப் பிறப்பர்; தாமத கருமத்தார் நரகம் எய்துவர். வினைப்பயன் விழையார் வீடு அடைவர். தேவர்களும் பாரத வருடத்தில் பிறப்பதை விரும்புவர் எனில் பாரத பூமியின் பெருமையைக் கூற ஒல்லுமோ?

போகம் பல துய்த்துப் பலகற்பகாலம் விண்ணுலகில் வாழ்வதைவிட அற்ப ஆயுளையுடைய கரும பூமியிற் பிறந்து வீடு பேறு எய்துதல் சிறந்தது என்பது தேவர் கருத்தாம். நிலவுலகிற் பிறக்கும் வினையற்றிலம் எனத் தேவர் இரங்குவர். இவ்வாறு நாவலந்தீவின் வளத்தைச் சுகமுனிவன் எடுத்துரை தான் எனச் சூதமுனி நைமிசவனத்து முனிவரிடம் உரைத் தான்.

4) ஏழு தீவொடு கடலின் அளவுரைத்தல்

புரட்சித்து அரசனுக்குச் சுக முனிவன் ஏழு தீவுகளையும் சூழ்ந்த கடல்களையும் விளக்கலானான்,

சம்புத் தீவினைச் சுற்றி கிரமணகம், பாஞ்சசன்னியம், இலங்கை முதலான தீவுகள் சார்ந்துள்ளன. சம்புந்தீவை விட இரு மடங்கு பெரியதாய்ப் பிலக்கமாம் தீவு உவர்க்கடலைச் சூழ்ந்து கிடக்கின்றது. பிலக்கத்தீவைக் கருப்பஞ்சாற்றுக்கடல் அதே அளவினதாய்ச் சூழும். கருப்பஞ்சாற்றுக்கடலைச் சான்மலித்தீவு வளையும். சான்மலித்தீவை மதுக்கடல் வளையும்; குசத்தீவு மதுக்கடலைச் சூழ்ந்திடும். குசத்தீவை நெய்க் கடல் வளையும். நெய்கடலைக் கிரவுஞ்சத்தீவு சூழும். கிரவுஞ்சத்தீவைப் பாற்கடலுடுக்கும். சாகத்தீவு பாற்கடலை வளைந்திடும். சீதவாரியைப் பிலக்கத்தீவு வளைந்திடும்.

பிலக்கம். சான்மனி, குசத்தீவு, கிரவுஞ்சம், சாகம் ஆகிய ஐந்து தீவுகளில் வாழ்வோர் வெவ்வேறு பெயர் பெறுவர். பிரீயவிரதன் தேரை ஏழு முறை செலுத்தி ஏழு தீவாகப் பிரித்துத் தன் ஐந்து மைந்தருக்கும் நல்கினான். அவ்வைந்து மைந்தருக்கும் எவ்வேழ் மைந்தர் தோன்றினர். அவ்வேழு தீவுகட்கும் வரம்பாக ஏழு மலைகளும் ஏழு நதிகளுடன் இருக்கும்.

பிலக்கத்தீவுளோர் கதிரோனையும், சான்மலித்தீவார் திங்களையும், குசத்தீவார் அழல் இறையையும், கிரவுஞ்சத் தீவார் வருணனையும், சாகத் தீவுளோர் வாயுவையும் வணங்குவர்.

சாகத்தீவைத் தயிர்க்கடல் சூழும். புட்கரத்தீவு தயிர்க் கடலைச் சூழ்ந்திருக்கும். சாகத்தீவுக்கு வீதிகோத்திரன் என்பான் அரசனரவான். அவன் மக்கள் ரமணகன்,தாதகன் என்ற இருவராவர். புட்கரத்தீவைத் தண்ணீர்க்கடல் சூழ்ந் திடும். சுத்தோதகக் கடலைப் (தண்ணீர்க்கடல்) பொன்னுல கம் சூழும். பொன்னுலகுக்கும் அப்பால் கூறுவேன் எனச் சுகமுனி தொடர்ந்தான்.

தேவர் வாழும் பொன்னுலகை வளைந்து மூன்று உலகுக்கும் மதில் போன்று உலோகாலோகம்(சக்கரவாளகிரி) உள்ள தென்பர். சக்கரவாளகிரிக்கு வெளியே உள்ள இட மெல்லாம் இருளாக இருக்கும்.

சக்கரவாளகிரியைக் கரியநீர்க்கடல் சூழும். கருநீர்க் கடலை இருட் கூட்டம் வளையும். இருட் கூட்டத்தை

அண்டச்சுவர் சூழும். அண்டச்சுவரதனைப் பதின்மடங்காகித் தெளிநீர் சூழும். தெளிநீர் அழல் சூழும். அழலை வளி சூழும்; வளியை வான் சூழும்; வானை அகங்காரம் சூழும்; கதிரோனிற் பல அண்டங்களும் பதிந்திருக்கும் திருமால் மலருள் மணம்போல் எங்கும் நிறைவான். 'அடுத்துச் சூரியன் பற்றியுரைப்பேன் கேள் மன்னவா' எனச் சுகமுனி தொடர்வான்.

## 5 சூரிய மண்டலம் உரைத்தல்

பாரின் அளவாய் உள்ளது வானம். வானம் ஒரு பாதி பூமி ஒரு பாதி ஆக இருபாதியும் சேர்க்கப்பட்டது அண்டம். அண்டத்து நடுவே கதிரவன் சூழவரும். சூரியன் மேருமலையை வலமாகச் சுற்றிவரும். அப்பால் சூரிய மண்டலமும் அதன் கீழ் இராகு மண்டிலமும் உளதென்பர். இராகு என்பான் முற்பகை காரணமாய் மதி, இரவி தம்மை உவாக்கள் சேருங் காலத்து மறைத்து, மாயன் ஆழிஏவக்கண்டதும் அகலும்.

இராகு மண்டிலத்துக்குப் பதினாயிரம் யோசனைக்குக் கீழ், சித்தர், இயக்கர், பிரேதம், கூளி முதலியன சேரும் இடங்களாம். மத்தி, மேல்செல்லல், கீழிறங்கல் ஆகிய முக்கதி செய் கதிரோன் கிரகத்தோடு நாள்களுக்குச் சுடரை வழங்கும்.

கதிரோனின் கதிர்த்திரளில் சிலகதிர் மேல்நோக்கச் சில கீழ்நோக்கி நிலவுலகிற்கு மழை, பனியுண்டாக்கும், ஐப்பசியிலும் சித்திரையிலும் பகலும் இரவும் நாழிகைகளால் ஒத்திருக்கும்; வைகாசி முதலிய ஐந்து மாதங்களில் இரவில் நாழிகை குன்றிப் பகலில் விரிந்திருக்கும்; கார்த்திகை முதல் ஐந்து மாதங்களிலும் பகற்போதில் நாழிகை குறைந்தும், இரவில் நாழிகை மிகுந்துமிருக்கும். தை மாதம் முதலாக (6 மாதம்) கதிரோன் செலவு வடதிசை அயனம் (உத்தராயனம்) எனவும், ஆடி மாதம் முதலாக ஆறு திங்கள் தென்திசை அயனம் (தக்ஷிணாயனம்) எனவும் பெயர் பெறும்.

கீழ்த்திசையில் இந்திரன் வைகும் தேவதானி நகரம் உளது. தெற்கில் யமனின் நகரமாகிய சம்யமனி உள்ளது. மேற்கில் வருணன் நகரமாம் நிம்முலோசன மேவும். வடதிசையில் குபேரனின் (தனதன்) விபாவரி நகருளது. சுடரவன் ஒன்றில்

உதிப்ப, மற்ற நகரம் மூன்றிலும் சொல்லிய முறைப்படி நிசி, மாலை, உச்சி ஆகும். கதிரவன் ஒரு நகரிலிருந்து பிறிதொரு நகர்உறின் இரு கோடியே முப்பத்தேழு லக்ஷத்து எழுபத்தையாயிரம் யோசனை தூரம் கடப்பான் பதினைந்து நாழிகைப் போதில்.

வெய்யோன் மலைமிசை வளைத்து ஒருநாளில் யோசனை செல்வான். மேரு எனும் சிலை நிழலைப் பரப்ப, வெய்யவனது உதயங்காணும் நகர்க்கு நேராக மாலை வந்து உறுதலாகும். பருதி மறைவதில்லை.

ஈராறு ஆரமாகி இயன்ற, ஆண்டு உருவமான தினகரனது தேருக்கு நாபி (குடத்தின் துளை) மூன்று, ஆறு நேமி, ஓர்ஆழி, சந்தசு ஏழும் ஏழு குதிரைகள், ஒற்றையாழி என்பது துருவச் சக்கரமாம், வான்மீது சுழலும் சுடரோனின் தேர்க்குப் பாகனாகிய அருணன் நாடோறும் சூரியனுக்கு எதிர் முகமாகச் செல்லும். அவன் தேர் மீதேறி வாலகில்லியர் எனும் பெரு விரலவுள்ள முனிவர் கதிரவனை வாழ்த்துவர்.

பிரமன் மரபில் வந்த புலத்தியன் முதலிய முனிவர் திங்கள் தோறும் மறையோதிடத் தேவர் குலம் சார்ந்த கிராமனியர் வடந்தொட்டீர்ப்பர். வாசுகி முதலானோர் திங்களுக்கு ஒருவராகக் கதிரோன் தேரைத் தாங்குவர்; அரக்கர் தேர் முன் திரியக்கந்திருவர் அமுத கீதம் இசைப்பர்.

மேருவை வலங்கொண்டு ஏகும் கதிரவன் திருமுன் அரம்பையர் ஆடிப்பாடுவர்.

பிரமனும் மாயனும், முக்கண்ணனும் வெய்யவனாம் எனக் கூறும் நூல்கள், பரிட்சித்து 'கதிரவன் இராசியிலுறுவதெவ்வாறு' என வினவ முனிவன் சுகன் கூறுவான்.

குயமகன் வலமாக வளைந்த சக்கரத்தில் இடமாக வரும் எறும்பு போல உலவிய நற்கதிக்கோள்கள் ஏழும் ராசியில் எதிருற்று மேவும். கதிரவன், சுக்கிரன், புதன் ஆகிய மூவரும் மாதம் ஒன்றில் ஒரு ராசியில் தங்குவர். திங்கள் ராசியில் இரண்டே கால் நாளில் பொருந்தும். அங்காரகன் ஒன்றரை

மாதம் ராசியில் சேர்வான்; வியாழன் ஒவ்வொரு ராசியிலும் ஒரு வருடகாலம் மருவும்; சனி ஒவ்வொரு ராசியிலும் இரண்டரை யாண்டு தங்கும்; இ ர ா கு வு ம் கேதுவும் ஒன்றரையாண்டு பொருந்தும். சேய் (அங்காரகம்) முதலிய ஐந்து கோள்களும் கதிரவன் அருகிற்சேரின் அத்தமனப் பெயர் பெற்று உறைந் திடும். கதிரவன் அகன்றால் அவ் அத்தனமனப்பேர் நீங்கும்.

செவ்வாய் முதலிய ஐந்து கிரகங்களும் விரைவு, சமம், மந்தம் எனும் முக்கதியொடுவக்கிரகதியை அடையும். புதன், சுக்கிரன் இரண்டும் வெய்யோனுக்கு அருகிற்சென்றதும் வக்கிர கதியடையும் வியாழனும் சனியும் செவ்வாயும் சூரியன் மருவும் இராசிக்கு முன் ஆக ஐந்தென வருமிடத்தில் சூரியன் சென்ற டையின் வக்கிர கதி அடையும்; ஒன்பதாமிடத்தில் வக்கிர கிரகம் தன் வக்கிர கதியை நீக்கி விடும். வளர்பிறை தேய்பிறை என்ற இரு பக்கங்களில்(பக்ஷம்)பிதிர்களுக்கு இராப்பகலாக்கிச் சொன்ன திங்கள்தோறும் பிதிர்க்கணத்திற்கும் தேவர்க்கும் அமுதம் அளிக்க உயிர் ஓம்பும் திங்கள்.

சுக்கிரன் மழைதந்து விளைவுண்டாக்கும்; புதன் காற்றை யுண்டாக்கும்; சனி பழி தழைக்கச் செய்யும்; அந்தணர்க்குத் தீமை செய்யும், பி ர க ஸ் ப தி சூரியனைச் சூழ வந்து மறை யோர்க்கு மங்களம் தரும்.

சுகமுனிவன் அடுத்து மேலுலகு பற்றியவிவரம் பரிட்சித்து வுக்குக் கூறுகின்றான்.

## 6. மேலுலகு உரைத்தல் :-

வெய்யோன் மண்டலத்திற்கு மேல் இலக்கம் (லட்சம்) யோசனை தூரத்தில் சந்திரன் உறையும்; சந்திரமண்டலம் அடுத்து விண்மீன் மண்டலம் உள்ளது.விண்மீன் மண்டலத்தி லிருந்து இரண்டு இலக்கம் யோசனை தூரத்தில் சுக்கிர மண்டலமும் அதன்மேல் புதன் மண்டலமும் உள்ளது. புதன் ம ண் ட ல த் தி ன் மேல் இரண்டிலக்கம் யோசனை தூரத்தில் செவ்வாய் மண்டலமுளது. அதன்மேல் பிரகஸ்பதி மண்டலம் உள்ளது.

பிரகஸ்பதியினது மண்டலத்திற்கு மேல் இரண்டிலக்கம் யோசனை கடந்து சனி மண்டலமும், சனி மண்டலத்திற்கு

மேல் வடக்காக ஏழ்முனிவர் மண்டலமும் உள்ளன. ஏழ்முனிவர் மண்டலத்தின் மேல் பதினொரு இலக்கம் யோசனை அளவில் விண்மண்டலம் விளங்கும். அதன்மேல் பதின்மூன்று இலக்கம் யோசனை கடந்து துருவமண்டலமுளது. துருவமண்டலத்தை விண்டு பதமெனக் கூறுவர். சொல்லப்பட்ட கிரகங்கள் யாவும் வாயுவாகிய கயிற்றால்கட்டப்பட்டு முதலைவடிவாக வளைந்து விளங்கும். அதன் உச்சியில் துருவன் விளங்குவான். முதலை வடிவான சக்கரத்தின் உறுப்புக்களில் நட்சத்திரங்கள் முதல் ஏழ் முனிவர் ஈறாக உள்ளோர் உறைவர். உலகின் மேல் திகழும் கதிரோன் மண்டலத்தளவும் புவர் லோகம் என்பர். அதன்மேல் சுவலோகம் உளது. துருவன் பதத்தின்மேல் மகா லோகமும் அதன்மேல் சனலோகமும், சனலோகத்தின் மேல் தவலோகமும் உள்ளன. தவலோகத்தின் மேல் பிரமன் வதியும் சத்தியலோகமுளது. மேற்சொன்ன உலகம் அனைத்தையும் திருமால் உருவமெனக் கருதுவர். 'அரசே, கீழுலகு ஏழினையும் அடுத்துக் கூறுகிறேன்' என்றான் சுக முனிவன்.

## 7. கீழுலகு உரைத்தல் :

நிலவுலகின்கீழ் அதலம், விதலம், தலாதலம், மகாதலம், ரசாதலம், பாதலம் ஆகிய ஏழுலகம் உண்டு. சொல்லப்பட்ட உலகங்கள் ஏழும் கீழ் கீழாகப் பதினாயிரம் யோசனை தூரம் இடைவெளியில் அமைந்துள்ளன. பொழிலும் புள்ளும் ஆங்கும் உண்டு; ஆயின்பகலென்றும் இரவென்றுமில்லை. பெரிய வாயினையுடைய பாம்புகளின் மணிகள் இருளை யழிக்கும். தம்தம் மகளிரொடு தானவர், அரக்கர், நாகர் ஆகியோர் அவ்வேழுலகினும் உறைவர். விதல நாட்டுக்கு ஈசன் சிவன்; ஆங்குப் பொன்னாறு ஓடும். அதன் கரையின் மீது, காய்ந்த சேறும் பொன்னாகும்படி அவ்வாறு ஓடும்.

மனு முதலானோர் அழிந்தாலும், அழியாப்புகழொடு மாவலி என்பான் சுதலலோகத்தில் திருமாலின் வாயில் காப்போனாக உள்ளான்.

ஆயிரந்தலையுடைய வாசுகி முதலான நாகர்வாழும் பாதல லோகத்தின் கீழ் பல யோசனை தூரத்திற்கப்பால் ஆதிசேடன் உள்ளான். யுகமுடிவில் யாவற்றையும் விடத்திரளாம் தீயான் அழித்து நிற்றலால் சேடன் (வீஞ்சியவன்) என்ற பெயர்

பெற்றான். ஊழிக் காலத்தில் உலக முழுவதும் அழிக்கும் உருத்திரன் போன்று விளங்கும் ஆதிசேடன் தன் படங்களின் மீது உலகை ஓர் அணுவெனத் தாங்கியுள்ளான். பரீட்சித்து, 'தீ போலும் நரகம் பற்றிக் கூறுக'என வேண்டச் சுகமுனிவன் சாற்றலானான்;

8. நரக இயல்புரைத்தல் :-

மறவழியிற் சென்றோர் துன்புறும் நரகமானது இந் நிலவுலகின் கீழ்த் தென்புலத்தில் உள்ளது. தாமிஸ்ரம் முதலான இருபத்தெட்டுப் பழிபடைத்த நரகங்களுக்கும் தலைமையானது நரகமே.

வஞ்சமற்ற பிறருடைய பொருள் கவர்ந்தார் காலனின் ஏவலாளர் தள்ளப் புகலிடமற்ற தாமிச்சிரம் என்ற நரகினை அடைவர். மைந்தர், மனைவி முதலானோர் துன்புறச் செய்தவர், நாவில் நீரின்றி வருந்தும்படி அந்த தாமிச்சுரம் எய்துவர். பிற உயிர்கள் வாடி வருத்தமுற்று மாழ்கச் செய்தோர் கோடி காலம் உள்ளம் கொதித்து அழுதபடி ஓடி அலமந்து துன்புற ரவுரவ நரகத்தை நண்ணுவர்.

நம்பினோர், தந்தை. அந்தணர், பசு ஆகியோர் துன்புறும்படிச் செய்தோர் கும்பிபாக நரகம் குடிகொள்வர். மறைநெறி விட்டோர், யமதூதரால் கோபிக்கப்பட்டுக் கருப்பந்தண்டுபோல் அறுக்கப்பட்டு அசிபத்திரவனம் என்ற நரகில் வீழ்வர். சிந்தித்துப் பழியைச் சொல்லிப் புத்தியில் துன்பம் ஊட்டியோர் குருடராகிக் கொசு வருத்த அந்தகூபம் எனும் நரகில் ஆழ்வர். பேதைப் பெண்டிரும் ஆடவரும் செல்வச் செருக்கால் பிற ஆடவரையும் பெண்டிரையும் காமுற்றுச் சேர்வரேல் உருக்காலாகிய தூணைத் தழுவும் தப்தோர்மி எனும் நரகடைவர்.

தூய்மை முதலியன அற்றவர், தருமத்தின் ஆணை தள்ளியோர் வைதரவி எனும் நரகம் புகுவர். பக்தியின்றி வஞ்சனை ஒழுக்கத்தால் ஆடு பலி கொடுத்து யாகம் இறற்றியோர் முத்தியின்றி மூச்சு நீங்கப்பெற்றுப் பிராண ரோதம் என்ற நரகடைவர். சொல்லத்தகாத பொய் கூறிக் கள் அருந்திய கசடர் வாயதனில் உருக்கப்பட்ட இரும்பை ஊற்றப்பெற்று அயப்பானம் என்னும் நரகில் சார்வர்.

'அன்னமிடுக' என்று இரந்தோரை விழிகொண்டு சுட்டோர், கோடிப் பருந்து பறித்துண்ணப் பார்வையிழந்து வருந்தி நிலைபெற்ற நரகத்திடைத் துன்புறுவர். நெடும்பகை காரணமாக மனைக்குத் தீயிட்டோர், கணக்கற்ற நாயால் கடிக்கப்பட்டுக் காயமுற்றுக் காரமேயாதனம் எனும் நரகம் எய்துவர். காதலால் தாயத்தார் மடவாரைத்தழுவியோர், இறந்து மாயத்தூதர் வீரியச் சேற்றைப் புகட்ட உண்டு நரகடைவர். ஆசையால் மற்றொருவனின் மணி திருடியோரும் மறையோர்கட்குத்தீமை செய்தோரும் சூகரமுகம் எனும் நரகினையடைவர்.

நரபலி விரும்பிச் செய்தோர். வஞ்சனை செய்வோர் ஆவீசிமதி எனும் நரகினை எய்துவர். தன்னைத்தான் புகழ்வோர் சாரகருத்தமம் எனும் நரகினை அடைவர் துன்பத்தால் கோபத்துடன் வந்தோர்தமை நெருக்கி வருத்துவோர் மிக்க மாரவுரவ நரகம் அடைவர். இரந்தோர் தமக்கு ஈயாதார் கீடபோசன நரகிற் போவார். பாம்பு முதலான விலங்கு பறவைகளைத் துன்புறுத்தியோர் தந்தசூகம் என்ற நரகம் அடைவர்.

குற்றமற்றவரைக் கொன்றோர் சூலப்ரோதம் என்ற நரகடைவர். கொடுத்தால் உள்ள செல்வம் குறைந்திடுமென உதவாத உலுத்தர் சூசிமுகமென்ற நரகில் அழுந்துவர்.

புண்ணியம் செய்தவர் விண்ணிலுள்ள மிச்சத்தை அருந்த மண்ணிற் பிறத்தல் போலப் பாவஞ் செய்தோர் நரகம் எய்தி, மிச்சத்தைத் துய்க்க நிலத்தில் மீட்டும் பிறப்பர்.

எண்டிசை முதலிய யாவும் திருமாலினது தூல உருவமே, அரசே! அவ்வாறு அறியின் வீடு கிட்டும்.



# ஆறாம் கந்தம்

## 1) அசாமிளன் கதையுரைத்தல் :-

பதினான்குலகும், அச்சம் பொருந்திய நரகத்தியல்பும் கூறக்கேட்ட பரிட்சித்து, 'வினைவயப்பட்டோர் வீழ்வுறா வகையுண்டோ?' எனக் கேட்கச் சுக முனிவன் கூறுவான். 'நரகத்திடைச் சேர்வோர் மாயனின் தாள்தனில் நாள்மலர் தூவி வழிபட்டு அவன்தன் ஆயிரம் பேர்களுள் ஒன்றையாவது கூறி வணங்காமதிகேடரே. வினைப்பயன் நீக்க விழைவார் யாகமியற்றினும், அரிநாமம் கூறாவிடில் நன்மை எய்தார். அக்கினி காரியங்களால் தீவினைப்பயன் விலகும் என்றல் பொருந்தாது. திருமாலின் பெயரோதும் நாமகீர்த்தனமே தீவினை நீக்கி நலம் செய்யும்.

பஞ்சபூதங்களாய் விளங்கும் நேமியானின் ஓராயிரம் நாமங்களுள் ஒன்றனை ஒரு கால் ஓதினாலும் போதும், நரகத்தில் வீழார் அவர், கன்னியாகுச்சம் என அழைக்கப்படும் நகரத்திலுள்ள அசாமிளன் என்பான் ஒருநாள் 'நாராயணா' என்று சொன்னதாற் பாவந்தொலைந்து துன்பம் நீங்கிய பான்மையை நினக்குக் கூறுவேன், கேள்' எனச் சுகமுனிவன் பரிட்சித்திடம் பகரலானான்.

மறைநூல் ஓதும் அந்தணன் அசாமிளன் என்னும் ஒருவன் இருந்தான். தந்தை பணிக்க, இறைவழிபாட்டிற்குக் கனியும் மலரும் சோலையிலிருந்து எடுத்துச் சென்றான் அசாமிளன். வழியில் வேளாளப் பெண்ணொருத்தி கள்ளையுண்டு நின்றாள். அசாமிளன் அவளிடத்து மயங்கினான். தந்தையையும் மனைவியையும் மறந்தான்; காம வயப்பட்டான். அவளைக் கூடி ஒழுக்கத்திலிருந்து இழிந்தான். அசாமிளனுக்குப் புதல்வர் ஒன்பதின்மர் பிறந்தார். அசாமிளன் அப்பெண்ணுடன் இன்பமாக எண்பத்தெட்டு வருடம் வாழ்ந்தான். தன் புதல்வருள் ஒருவனுக்கு நாராயணன் எனப் பெயரிட்டான். வேர்த்து, நடுங்கிச் சோர்ந்து சாகுந்தறுவாயில் ஒரே ஒரு தடவை தன் மைந்தனை 'நாராயணா' என அழைத்தான். எமனது தூதர்

வந்தார்; காலபாசத்தை வீசினர்; திருமாலன்பர் அங்குத் தோன்றிப் பாசத்தை அறுத்து யம தூதரைப் பார்த்து, 'பக்தி செய்தாவது, பகை கொண்டாவது, நாராயணன் பெயரை ஒரு முறை கூறினால் அவன் செய்த தொகுதியான பாவங்களும் தொலையும்; நாராயணா எனும் நாலெழுத்து பாதகத்தை மாற்றிக் குறையையும் தீர்க்கும். ஒரு மனிதன் தன் வாழ்நாளில் எப்பொழுதேனும் ஒரு முறை நாலெழுத்தைக் கூறினாற் போதும், மால் பதம் உறுதி. அசாமிளன் தன் மகனை அழைக்கும் முகமாக நாலெழுத்தைக் கூறினான். ஆகவே அவன் தீதெலாம் ஒழிந்தான். நீவிர் இதை நும் தலைவனிடம் போய் எடுத்துக் கூறுவீர்' என்று அறம் உரைத்தனர்.

யம படர் தலைவனிடம் சென்று நிகழ்ந்தன கூற, மறலி அவர்களை நோக்கி, 'பகவன் பெயரை ஒருகால் அசாமிளன் ஓதியதால் அவன் உம்மால் பற்றுதற்குரியன் அல்லன். திருமாலைச் சிந்தை செய்து வழிபாடு செய்யும் தொண்டர் எம் இறைவராவர்; திருமாலின் திருப்பாதம் அடையப் பெறாதவர்க்கு உரியது எம் ஆணை என்பதை அறிவீராக' என்று கூறினான். மேலும் அவரிடம், 'பரம, திருமகள் கணவ, கண்ணா, மணி வண்ணா என்பவர் அருகில் செல்லாதீர்' என்றான் இயமன்.

அசாமிளன் 'கொடிய வினை புரிந்த எனக்குத் திருமாலின் ஒரு பெயர் உதவியது எனில் மாலின் நாமகீர்த்தனை யல்லால் வருகதி இல்லை' என்றான். பிறகு அசாமிளன் திருமால் பெயரே பேசி அவன் திருவுருவே கருதித் தன்னை யடக்கி அடியா ரோடும் கூடி வைகுந்தமடைந்தான்.

'அரசே, அசாமிளனின் கதையை அகத்தியர் எனக்குக் கூறினார்; அதை நான் நினக்குரைத்தேன். இக்கதை கேட்டோர் நவின்றோர், பாவம் நீங்கிப் பதம் எய்துவர்' என்று சுக முனிவன் கூறினான்.

**2. தக்கன் படைப்புரைத்தல் :-**

பரிட்சித்துமன்னன், 'ஆதியாம் மனுவாகிய சுவாயம்புமனு காலத்து அண்டர் அவுணர் படைப்பைக் கூறினாய்; இன்னும் நான்மறையின் இயல்பால் கூறுக' என சுகமுனி தொடர்ந்தான். பிரசேதசாக்கியர் பதின்மருக்கும் மாரிடை வயிற்றுத்தோன்றிய

தக்கன் தனயரைப் பெற வேண்டித் தவமியற்ற விந்தியமலைச் சாரல் அடைந்தான். அங்குள்ள அகமருடனைஎனும் வாவியில் முழுகித் திருமாலை நினைந்து தவமிருந்தான். அப்போது நாரதன் முதலியோர் தொழ,கருடன் மீதூர்ந்து திருமால் காட்சி நல்கினான். தக்கன் திருமாலைப் போற்றி வணங்கி அருளுமாறு வேண்டத் திருமால் கூறினான். 'நின் தவத்தால் மகிழ்ந்தேன். பஞ்சனன் மகள் அசிக்கினி என்பாளை மணந்து நீ படைப்பாயாக' எனக் கூறித் திருமால் அகன்றான். தக்கனும் அவ்வாறே அவளை மணந்து பதினாயிரம் மைந்தரைப் பெற்றான். தக்கன் அவர்களைப் பார்த்துப் 'படைப்பீர்களாக' என்றான். அம்மைந்தரும் நாராயண சரசுஎனும் பொய்கையின் திருமாலை நினைந்து தவமியற்றினர். நாரதன் உபதேசிக்க அம்மைந்தர் 'படைப்பீர்' என்ற தம் தாதை சொல் வெறுத்து நடந்தனர். நடந்தது கேட்ட தக்கன் பின்னும் பதினாயிரம் மகவீன்று 'படைப்பீர்' என்றுரைத்தான். அவரும் அவ்வாவி சென்று தவமியற்றிய காலை நாரதன் அறிவு கொளுத்த அவரும் புறம் போயினர். நடந்தது கேட்ட தக்கன் நாரதனை நண்ணி 'காமம், நுகர்ந்தன்றித் துறவறம் சேருமோ? உனதறிவு நன்று' என இகழ்ந்து, தக்கன் சினந்து' நீ உலகில் ஓரிடத்து நிலைத்து நில்லாமல் உழன்று திரிவாயாயாக'எனச் சபித்தான்.

தக்கன் பின் அசிக்கினி நலம் துய்ந்து அறுபது பெண் மக்கள் பெற்றுப் பத்துப்பேரை அறக்கடவுளுக்கும், பதின்மூன்று பேரைக் காசிபனுக்கும், இருபத்தேழு பேரைச் சந்திரனுக்கும், பூத முனிவனுக்கு இருவரையும், அங்கிரா முனிவனுக்கு இருவரையும், கிருசாச்சுவன் என்பானுக்கு இருவரையும், தாக்கியாயனுக்கு (காசியபன்) நால்வரையும் மணம் முடித்துத் தந்தான்.

தக்கன் மகளிர் ஈன்ற பிள்ளைகளால் மூவுலகும் நிறைந்தன. தருமனை மணந்த பானு, வசு, மருத்துவதி, சாமி, விச்சுவை, முகூர்த்தை, சாத்தியை, இலம்பை, ககுபு, சங்கற்பை ஆகிய பதின்மருள், பானு என்பாள் தேவவிடபன், இந்திரகேசன் ஆகியோரைப் பெற்றாள்; வசு என்பாள் வசுக்களாம் துரோணன், பிராணன், துருவன், அருக்கன்,தோடன், அக்கினி வத்து, விபாவசு ஆகிய எண்மரை ஈன்றாள். இந்த எட்டுப் பேரும் பல புதல்வரை ஈன்றனர்.

விச்சுவை என்பாள் விச்சுவதேவரை ஈன்றாள். சாத்தியை சாத்தியரைப் பெற்றாள்; மருத்துவதி மருத்துவானையும், திருமாலின் அம்சமாகிய சயந்தனையும் ஈன்றாள்; முகூர்த்தை முகூர்த்தர் எனும் தேவகணங்களைப் பெற்றாள்; சாமி என்பாள் சுவர்க்கனையும், சங்கற்பை, சங்கற்பனையும் இலம்பை வித்யோதனையும் ககுபு சங்குடனையும் ஈன்றார்.

கார்த்திகை முதலான இருப்தேழு பெண்களை மணந்த சந்திரன் சிறுவரைப் பெறவில்லை. தக்கன் சாபத்தாற் கய நோய் பெற்றுப்பின் தவத்தால் வளரும் இயற்கையும் எய்தினான்.

பூதன் மணந்த பஞ்சதாமோதை, சுரூபை என்பாருள் முன்னவள் பூதங்களையும் பின்னவள் உருத்திரர்களையும் ஈன்றனர். அங்கிரா மனைவியராம் சுதை, சதி என்பாருள் சுதை என்பாள் பிதிரர்களைப் பெற்றாள்; சதி என்பாள் அதருவணரை ஈன்றாள்.

கிருசாச்சுவனை அருச்சித்து, திடலை என்பார் மணந்தார். அருச்சித்து என்பாள் தூம்பிரகேசனை ஈன்றாள்; திடவை என்பாள் வேதசிரசன் முதலான மூவரைப் பெற்றாள். காசியபனை மணந்த விநதை,கத்துரு, பதங்கி, யாமினி ஆகியோருள் விநதை என்பாள் அருணனோடு கருளனை ஈன்றாள்; கத்துரு உரகரைஉயிர்த்தாள்;பதங்கி பறைவைகள் முதலிய பயந்தாள். யாமினி விட்டிற்பூச்சி முதலிய தந்தாள்.

காசிபன் மணந்த பதின்மூவருள் சரமை என்பாள் கொடிய விலங்குகளைத் தந்தாள்; சுரபி பசு முதலான இரு குளம்புடைய விலங்குகளை ஈன்றாள்; தாம்பிரை என்பாள் பறவைத் தொகுதி தந்தாள்; முனி என்பாள் அரம்பையர் அளித்தாள்; திமி என்பாள் நீர்வாழ் உயிரினம் ஈன்றாள்; சுரசை யாது தானவரைப் பெற்றாள். தனு என்பாள் சம்பரன் விடபருவா முதலிய தானவர் அறுபத்தொருவரைத்தந்தாள். அதிதி என்பாள் விவச்சுவான். அரியமா, பூடா, துவட்டா, சவிதா, பகன், தாதா, விதாதா, மித்திரன், வருணன், சக்கரன், விக்கிரமன் ஆகிய ஆதித்தியர் பன்னிருவரை ஈன்றாள்; குரோதவதை என்பாள் பாம்புகளை ஈன்றாள்; அரிட்டை கிஞ்சையரைத்தந்தாள்; இளை என்பாள் மரங்கள், கொடி

மூத்லியன ஈன்றாள்; காட்டை என்பாள் இருகுளம்பல்லாத் விலங்குகளை ஈன்றாள்.

அதிதி வயிற்றிற் பிறந்த விவச்சுவான் என்பான் வைவச் சுதமனு, யமன், யமுனை ஆகியோரைப் பெற்று பின், சாயை என்பாளை மணந்து சனியையும் சாவன்னிய மனுவையும் தபதியையும் தந்தான். அரியமா என்பான் மானிடரை மகிழ்ந்தளித்தான்; புதல்வரைப் பெறாத பூடா என்பான் தக்கனியற்றும் வேள்வியடைந்து பல்விழந்த காரணத்தால் மாவே அருந்துவான். இவ்வாறு கூறிய சுக முனிவன் பின்னும் கூறுவான்.

### 3) இந்திரன் விச்சுவருபனைக் குருவாக் கொளல்:-

அசுர குலத்துத்தோன்றிய இரசனை என்பாளைத் துவட்டா என்பான் மணந்து விசுவருபன் என்பவனைப் பெற்றான். தேவர் தலைவனாம் இந்திரன் விசுவருபனைக் குருவாகக் கொண்டான். 'எவ்வாறு இந்திரன் விசுவருபனைக் குரவனாகக் கொண்டான் உரைப்பாயாக' எனப் பரிட்சித்து வேண்டச் சுகமுனி உரைக்கலுற்றான்.

தேவர் உலகில் இந்திரன் கற்பகத்தருவின் நிழலில் விஞ்சையர், இயக்கர், கின்னரர் முதலானோர் அடிதொழ வீற்றிருந்தான். அப்போது அங்குப் பிரகஸ்பதி வர, இந்திரன் எழுந்து மரியாதை செய்திலன். 'ஆயிரம் கண்களுடைய இந்திரனே செல்வச் செருக்கால் வந்தவரைக் கண்டிலன் எனில், மண்ணுலகிற் செல்வர் வந்தவரைக் காண்பாரோ? இவன் அரசிருப்பு இனிது' என்று பிரகஸ்பதி அகன்றான். தேவேந்திரன் குரவனை எள்ளினான் எனச் சுக்கிரன் தேவருடன் அமர் விளைவித்தான். போரில் தோற்ற இந்திரன் பிரமனைச் சரணடைந்தான். 'அந்தணனாகிய பிரகஸ்பதி அருள் பெறாததால் வந்தது இத்திறம்;துவட்டாவின் புதல்வன் விசுவருபன் நினக்குக் குரவனாகில் போரில் வெற்றி கிட்டும்' என்றான் பிரமன்.

இந்திரன் விசுவருபனிடம் சென்று 'இரவலனாக வந்துள்ளேன்; அருள் கொழித்திடும் குரவனாதல் வேண்டும் 'எனப் பணிந்து நின்றான். விசுவருபன், 'செல்வம் வந்துற்றால் மூடர்

அகம் மகிழ்வர். எனக்கு இந்தத் தேவகுரு பதவி வகிக்கத் தகுதியில்லை; உனது வேண்டுகோளை மறுக்க இயலவில்லை' என்று கூறித் தேவர்க்குக் குரவனாக இருக்கச் சம்மதித்திருந் தான்.

'ஆழியான் காக்க' என்ற நாராயண கவசத்தை விசுவ ரூபன் உபதேசிக்க, இந்திரன் குரவன் உரைத்த கவயம் தாங்கி அவுணரைத் தாக்கி வென்றான். இவ்வாறு சுகமுனி கூறியதும் பரிட்சித்து, 'மகபதிக்கு விசுவரூபன் உரைத்த நாராயண கவயத்தை விளக்கமாகக் கூறுக' என வேண்டினான். சுக முனிவன் நாராயண கவயம் உரைக்கலானான்.

4) **நாராயண கவயம் உரைத்தல்:-**

நீரில் மூழ்கித் தூய்மையுற்று, இருதயம் முதலியன தொடுத லாகிய அங்க நியாசமும் விரல்களால் கைகளைத் தொடுத லாகிய கரநியாசமும் செவ்வையாகச் செய்து, திருமாலின் மலர்ப்பாதம் சிந்தை செய்து இந்திரனுக்கு விசுவரூபன் மால் கவயத்தைக் கூறியவாறு சுகமுனி கூறலுற்றான்:

திருமகளுறையும் மார்பன், அம்பு, ஆழி, சங்கு, வில் தரித்த வெண் கரமும் கருடனின் தோளிற் பதித்த பாதமும் ஆக வலந்தர முன் வந்து எங்கும் எப்பொழுதும் திருமால் கருணை யினாற் காப்பானாக. மீனுருவம் எடுத்த திருமால் காக்க; நில மிசை வாமனனாகத் தோன்றி நிலமளந்த மால் விசும்பிற் காக்க.

நரசிங்கமாகி இரணியனை மாய்த்த திருமால் காக்க. வராக மாகத் தோற்றரவு செய்த திருமால் செல்லும் வழிகளெல்லாம் காக்க; உற்றவர் பற்றெலாம் ஒழித்து நரநாராயணர் காக்க.

தசரதன் மதலையாகத் தோன்றிய இராமன் இலக்குவ னோடும் சொல்லும் பொழுதெல்லாம் வெற்றிவந்து எய்துமாறு காக்க; பரசுராமனாய்த் தோன்றிய பரமன் விரைந்து காக்க. மந்திரம் கூறும் வழித்தத்தாத்திரையர் காக்க; இடபனாய்த் தோன்றிய மால் குளிர்காலத்தும் தாபகாலத்தும் காக்க.

கபிலனாய்த் தோன்றிய திருமால் அன்பொடும் இரு வினைக் கட்டறுத்து இனிது காக்க; சனற்குமரனாகிய திருமால்

ம்ன்மதன் தருதுயர் போக்கிக் காக்க. அயக்கிரிவனை யழிக்க அயக்கிரீவனாய்த் தோன்றி அறம் நிறுவிய திருமால் காக்க.

பாரதப் போரில் விசயன் துதிக்க அருள்பாலித்த நாரதனாம் திருமால் காக்க. ஆமையாய்த் தோற்றரவு செய்த திருமால் நரகில் வீழ்ந்து துன்புறாவண்ணம் அருளிற் காக்க; தன்வந்திரி யாக விழைந்த மால் காக்க.

வேள்வியம்புருடனாகிய திருமால் கூற்றுவன் வருத்தாத படிக் காக்க. கோபம் வந்துற்ற வேளை பலராமன் காக்க. வியாசனாகவும் பௌத்தனாகவும் தோன்றிய திருமால் காக்க. கற்கியாகத் தோற்றரவு செய்து கலிபுருடனது தீமையகற்ற உள்ள திருமால் காக்க. கேசவனாகிய திருமால் காக்கபகற் போதின் முதல் கூற்றில்; பகலின் இரண்டாம் பகுதியில் கோவிந்தன் காக்க; மூன்றாம் பகுதியில் நாராயணன் நயந்து காக்க; நான்காம் கூற்றில் சக்கரபாணியாம் திருமால் காக்க; ஐந்தாம் கூற்றில் மதுசூதனன் காக்க; ஆறாம் பகுதியில் மாதவன் காக்க. இந்திரியங்களுக்கு அரசனாகிய திருமால் காக்க.

பத்மநாபன் நடுநிசியிற் காக்க, நள்ளிரவின் பிற்பகுதியில் மறுமாம்பனாகிய (ஸ்ரீவத்சன்) திருமால் காக்க. வைகறைப் போதில் சனார்த்தனன் காக்க. சந்திப் பொழுதுகளில் தாமோதரன் காக்க.

காட்டில் கதிரவன் சிறு தூறுகளைப் பொசுக்குமாறு படைக் கலன்களுக்கு அரசாகிய ஆழி பகை நாசம் செய்து காக்க; திருமாலின் கூர்வாள் காக்க; திருமாலின் கதை (தடி) காக்க; திருமாலின் வெண்சங்கம் காக்க; திருமாலைப் பரிக்கும் கருடன் காக்க; நரசிங்கம் காக்க; மாயவன் பெயர், உருவம், வாகன மாகிய கருடன், வாளி முதலிய ஐம்படைகள், சேனைத் தலைவனாம் தூயவன் (விஷ்வக்சேனர்) யாவும் உயிர், புத்தி, சொல், மனம் உடலொடு பொருந்திய இந்திரியங்கள் யாவற் றையும் விருப்பொடு காக்க.

'திருமால் வடிவாக விளங்கும் இக்கவயம்தன்னை விருப் பொடும் தாங்குவாயேல் அமரர் தலைவ! நீ பகைவரை விரை வில் வெல்வாய்' என்று இந்திரனிடம் விசுவரூபன் உரைத்தான்

உரைத்தான். பரீட்சித்து மன்னவா! கௌசிகன் என்ற மறையோன் இக்கவயம் தாங்கி ஆக்கை விடுத்து வீடெய் தினான்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த கவயம் இயம்புவோர் கேட் போர் யாவராயினும் வினைப்பயன் ஒழித்து வேண்டுவன எய்தித் திருமால் பதம் அடைவர்.

'குரவனாகிய விசுவரூபனை, இந்திரன் வணங்கிப் பகை முடித்து அரசு செய்தான்' என்று கூறிய சுகமுனிவன் மேலும் தொடர்ந்தான்,

5) விச்சுவரூப விருத்திரர்களைப் கொல்லல் :-

தேவர்தம் குரவனான விசுவரூபன் அசுரர்தம் மருமகன் ஆதலால் அவர் இசையுற அவியைக் கரந்து நல்கி வைகினான் ஒரு சமயம் இந்திரன் யாகம் இயற்றியபோது விசுவரூபன் யாக உணவாம் அவியை மறைத்தெடுத்து அவுணர்க்கு வழங் கினான்; அது கண்டு சினந்த இந்திரன் விசுவரூபனை வெட்டி னான். விசுவரூபனது சோமம் அருந்திய தலை கபிஞ்சலப் பறவையாகவும், மது அருந்திய தலை கலவிங்கப்பறவை யாகவும், அன்னமருந்திய தலை தித்திரப்பறவையாகவும் ஆக முத்தலைப் பறவையாய் மிக்க தூரத்திற்போய் விழ்ந்தன. அந்தணனாம் விசுவரூபனைக் கொன்ற பாவத்தை இந்திரன் திருமாலைத் தொழுது போக்கினான். அப்பாவமானது மண்ணில் உவராயும், ஆற்றிடை நுரையாயும், மரத்திடைப் பிசினாயும், மாதரிடைப் பூப்பாகவும் மாறின. இந்திரன், சூல் கொண்ட மகளிர் கணவரைச் சேரவும் நிலத்தில் ஏற்பட்ட குழி தூரவும், வெட்டப்பட்ட மரம் தளிர்க்கவும், புனல் பெருகவும் வரமீந்தான்.

தன் மகன் விசுவரூபனை இந்திரன் கழுத்தை வெட்டிக் கொன்றான் எனக்கேட்ட துவட்டா, இந்திரனாகிய பகை வனைக் கொல்க என அழலில் நெய்பெய்தான். அந்நெருப்பில் விருத்திராசுரன் என்பான் தோன்றினன். அவனைக் கண்டு அஞ்சிய அமரர்கோன் திருமால் மலரடிகளை ஏத்தினான். 'ததீசி என்ற முனிவரது எலும்பை வச்சிரப்படையாக்கி அமர் விளைத்து வெல்க' என்றான் திருமால், ததீசி முனிவரை

யடைந்து இந்திரன் தான் விரும்பி வந்ததைக் கூற, 'நெருப்பிற் பட்டு அழியப்போகும் இவ்வெலும்பு இந்திரனால் விரும்பப் பட்டது சீரிது! பெற்றுக்கொள்க' எனத் தந்து உயிர்நீத்துத் திருமால் பதமெய்தினான் ததீசி. இந்திரன் விசுவகர்மாவைக் கொண்டு அதை வச்சிரப்படையாக்கினான்.

பின் இந்திரன் வச்சிரப்படையுடன் அவுணருடன் சமர் விளைத்து விருத்திராசுரனின் வலக்கரத்தை வச்சிரபடையால் துணித்தான். ஒரு கையுடன் விருத்திராசுரன் இந்திரனுடன் போர் செய்தான். இந்திரன் விருத்திராசுரன்தன் இடக்கரத்தையும் வச்சிரப்படையால் வெட்டி வீழ்த்தினான். விருத்திராசுரன் இந்திரனை வேழத்தொடும் எடுத்து விழுங்கவே இந்திரன் அசுரனது ஒரு புடையைப் பிளந்து வெளிப்போந்தான், 'தலையைத் துணித்துவா' எனக் கூறி வச்சிரப்படையை இந்திரன் ஏவ, ஒருவருடத்தில் அவன் தலையை அறுத்தது படை. அசுரன் ஒளியாகித் திருமால் பதமடைந்தான். இடர் தொலைந்தது எனத் தேவர் பூமாரி பொழிந்தார். இந்திரன் மகிழ்ந்தான் இலன்.

6. விருத்திரகத்தியை இந்திரன் போக்கியது:-

'யாவரும் மகிழ்ந்திருக்க இந்திரன் மட்டும் மகிழாது இருந்ததேன்' என பரீட்சித்து வினவ, சுகமுனிவன் கூறலுற்றான். 'விருத்திராசுரனைக் கொன்று அறம் காத்திடுக' எனத் தேவமுனிவர் சொல்ல இந்திரன் 'முன்பு விசுவரூபனைக் கொன்று அப்பழி தொடரத் துன்பமுற்றேன். மேலும் பழி சேர்க்க விரும்பவில்லை' என்றான். முனிவர்கள், 'கண்ணன் மேல் அன்பால் பரிவேள்வி செய்யின் மிக்க பாதகம் செய்யின் தவிரும்;ஆகவே விருத்திகாசுரனை வதைப்பதால் உண்டாகும் பழிதீர்ப்பதற்கு அரிதன்று' என்றனர். இந்திரனும் விருத்திகாசுரனை மாய்த்தான். அப்பாவம் சண்டாளப் பெண் உருவாய் இந்திரனைத் தொடர்ந்தது. மானச ஏரியிற் சென்று இந்திரன் ஆயிரமாண்டுகள் ஒளிந்திருந்தான்.

அந்த ஆயிரம் வருடமும் அமரர் நாட்டைக் காத்து இந்திராணி மேற்காமுற்ற நகுடன் என்ற வேந்தன் ஏழு முனிவர் சபாத்தாற் பாம்பாகித்தரையில் வீழ்ந்தான். ஏரியில் ஒளிந்திருந்த இந்திரனை அழைத்துவந்து மறையோர் திருமால்

கருதிப் பரிமகம் இயற்றுவித்தனர். விருத்திராசுரனை வதைத்த பழி திருமாலைப் பரவியதால் நீங்கிற்று.

பரீட்சித்து 'குன்றில் வீழ் அசனியேறு போல எறியும் வச்சிரப்படையால் மாயும் விருத்திராசுரன் மெய் உணர்ந்தது எவ்வாறு?' எனக் கேட்கச் சுக முனி தொடர்ந்தான்.

## 7 சித்திரகேதுவின் கதையுரைத்தல்

சிறந்த அரசனாகிய சித்திரகேது பதினாயிரம் மனைவியருடன் கூடி இன்புற்றும் பிள்ளைப்பேறின்றித் துயர் அடைந்தான். அங்கிரா முனிவர் சித்திர சேதுவை அடைந்து அவன் துயர்க்காரணம் வினவி, 'மைந்தன் தோன்றுவான் கவலற்க' என்றான். சித்திரகேது வேள்வியியற்றலும் அவன் மனைவிக்கு மகவு ஒன்று பிறந்தது. பரிசுகள் பல நல்கி இன்புற்றான் சித்திரகேது. மகவு பெறா மற்ற மனைவியர் பொறமை காரணமாகத் தொட்டிலிற் தூங்கிய குழந்தைக்கு நஞ்சூட்டிக் கொன்றனர். மகனை இழந்த தாயும் சித்திரகேதுவும் பெருந்துன்பமுற்றார். அங்கிரா முனிவனிடம் சென்று புலம்பினான் சித்திரகேது. அவன் திருமாலின் மாயையே என்று பகர்ந்தான். அப்போது நாரதன் அங்குத் தோன்றி மகன் உடலை விட்டுப் பிரிந்த உயிரை நோக்கி 'மீண்டும் சேயின் உடலினை அடைவாயாக' என்றான். அப்போது அவ்வுயிர் நாரதனை விளித்துப் 'பொன்னால் ஆகிய ஓர் அணிகலன் மறுபடியும் பொன்னாக மாறுதல் போலத் தந்தை தனயன் என மாறி மாறிப் பிறப்பர் அச்சுதன் தான் ஒன்றே நிலையானதென்று அறியாதார். விட்ட உடல் மீளவும் மேவுகில்லேன். அரசனுக்கு அறம் உரைப்பாயாக' என்று கூறி உயிர் அகன்றது. நாரதன் வாசுதேவனைத் தொழுதற்கேற்ற மந்திரம் மன்னவனுக்கு உபதேசித்தருளினான்.

'மந்திரம் உரைக்கின், ஏழு நாளில் ஆதிசேடன் அருள் பெறுவாய்' என்று நாரதன் சித்திரகேதுவிடம் கூறினான். அனந்தன் அங்கு எழுந்தருளச் சித்திரகேது அவனைப் போற்றினான். ஆதிசேடன், 'வித்தியாதரர்களுக்கெல்லாம் வேந்தன் என உறைவாயாக' என அருளினான். வானத்தில் வெள்ளிமலைக் காவல் பூண்ட சித்திரகேது, சிவன் சனகாதி முனிவர்க்கு ஞானம் உணர்த்தியதைக் கண்டு நகையாட,

உமையாள் சித்திரகேதுவை 'அவுணனாக' எனச் சபித்தாள்; அவுணனாகப் பிறந்த சித்திரகேது இந்திரனின் வச்சிரப் படையால் வதைப்புண்டு வீட்டின்பம் எய்தினான்.

சித்திரகேதுவின் கதை இயம்பியோரும் எழுதியோரும் சுகம்பல துய்த்து வீடெய்துவர்.

8. மருத்துக்கள் முதலியோர் பிறப்புரைத்தல் :-

'அதிதிதன் மைந்தராம் விவஸ்வான் முதலியோர் மரபு சொன்னோம், மற்றவர் மரபும் கூறுவாம்' எனச் சுகமுனிவன் தொடர்ந்தான்.

சவிதா என்பான் சோமம், பசு, அக்னிகோத்திரம், சாதுர் மாஸ்யம் என்ற முகங்களை ஈன்றான். பகன் என்பான் பிணாவோடு மகிமனை ஈன்றான். தாதா என்பான் குகு முதலிய நால்வரை மணந்தான். விதாதா அக்கினி முதலி யோரைப் பெற்றான்.

மித்திரனும் வருணனும் உருப்பசி பொருட்டால் கும்பத்தில் வசிட்டனையும் அகத்தியனையும் ஈன்றனர். வருணன் மீண்டும் சரிடி என்பாளைக் கூடிப் பிருதிவையும் வான்மீகியையும் ஈன்றான். மித்திரன் அரிட்டாவோடு பிப்பலனை ஈன்றான். இந்திரன் புலோமனசயைக் கூடிச் சயந்தன் முதலிய மூவரைப் பெற்றான். திதி என்பாள் காசிபனைக் கூடி இரணியன், இரணியாக்கன் என்ற இருவரைப் பெற்றாள். இரணியன் என்பான் பிரகலாதன், அநுகலாதன், சங்கலாதன், கலாதன் ஆகிய நான்கு புதல்வரோடு ஒரு மகளையும் ஈன்றான். இரணியன் மகளாகிய சிங்கிகை என்பாள் இராகுவைப் பெற்றாள். சங்கலாதன் கதியை மணந்து பஞ்சசனனைத் தந்தாள். கலாதன் என்பான் அகத்தியனின் அதிதியாகி வாதாபியையும் இல்வலனையும் ஈன்றான். அங்கலாதன் மகிடனையும் பாட்களனையும் பெற்றான். பிரகலாதன் விரும்பி விரோசனனைப் பெற்றான். விரோசனனுக்கு மாவலி பிறந்தான். மாவலி வாணாசுரனனை ஈன்றான்.

திதீ என்பாள் மீட்டும் காசிபனைக்கூடி நாற்பத்தொன்பது மருத்துவர்களை ஈன்றாள். இவ்வாறு சுகன் மொழிந்தவுடன் பரிட்சித்து 'திதி ஈன்ற மருத்துவர்கள் எவ்வாறு, இந்திரனுடன்

இணங்கி வீற்றிருந்தார், விளக்குக' என்றான். சுகமுனி தொடர்ந்தான்.

வரம்பெற்ற மைந்தர்களாகிய இரணியன் பொற்கண்ணன் இருவரும் திருமாலால் இந்திரனுக்காகக் கொல்லப்பட்டவுடன் திதி மனம்நொந்து, இந்திரனைக் கொல்லும் மகன் பெறுதல் வேண்டிக் கணவனாம் காசிபன் மனம் மகிழுமாறு நடந்து கொண்டாள். மகிழ்ந்த காசிபன் திதியிடம் 'நீ விழைந்தது யாது?' என வினவ அவள் 'இந்திரனைக் கொல்லும் மகனைத் தருக' என்றாள். காசிபன் 'வெங்கொலை விரும்பினாய்; அடங்காத மனம் செல்லும் போக்கை யாரே அளந்தறிய முடியும்? மாதர் சினந்தாராயின் கொழுநராயினும், புதல்வரா யினும், உடன்பிறந்த துணைவராயினும் சிறிதும் கூசாமற் கொன்று விடுவர்' என்று வருந்திக் கூறிய காசிபன் திதிக்கு ஒரு வரமளித்தான். 'பெண்ணே நீ சினம் நீங்கி, அகால நித்திரை நீக்கிப் புனிதையாகிப் புஞ்சவனம் எனும் விரதமாற்றினால், நீ விரும்பும் மகவினைப் பெறுவாய்'என்றான். திதி விரதமிருப்பது அறிந்து அவளுக்குப் பணிவிடை செய்வது போல் பாவனை செய்து, காட்டில் விலங்கை மாய்க்க வேட்டுவன் இருந்தாற் போல இந்திரன் கருப்பத்தைக் கொல்லக் காலங்கருதி இருந்தான்.

ஒருநாள் மாலைப் போதில் திதி தூங்கினாள். திதியின் வயிற்றில் மாயையால் சோதி வச்சிரத்தோடு நெருங்கி வளரும் கருவை ஏழு கூறுகளாகச் சிதைத்தான். அக்கூறுகள் அழ, இந்திரன் அந்த ஒவ்வொரு கூறினையும் ஏழு கூறாக வெட்டி னான். மாயனது அருளினால் மாயாத அக்கூறுகள் 'ஏன் எங்களை வருத்துகிறாய்' என இந்திரனைக் கேட்க, அவன் வெளிவந்தான்.பரிட்சித்துமன்னவா!நின்னைக்கருவிற் காத்தது போல விரதமேற்றுக் கண்ணனைப் பரசியதால் அவன் அம் மைந்தர் அழியாமற் காத்தனன் என்றான். கருவில் இருந்த போது இந்திரனால் ஏற்றுண்டு அழுதபோது இந்திரன் 'அழாதே' என்று கூறியதால் 'மருத்' எனும் பெயர் பெற்றனர் அம் மைந்தர். துயில் நீங்கிய திதியிடம் நிகழ்ந்தன கூறியகன்றான் இந்திரன்.

இந்திரன் விரும்பும் தம்பியரென அம்மருத்துவர் வானோகிச் சோமபானம் உண்ணும் உம்பராகி இருந்தார் என்று சுக முனிவன் கூறினான்.

## 9 புஞ்சவண விரதமுறைத்தல்

மார்கழித் திங்களில் சந்திரன் வளர்ந்தெழில் தயங்க வரும் பக்கத்தின் (சுக்கில பக்ஷத்தினது) பிரதமை முதல் திருமாலை ஏத்தி, ஒருவருடம் முழுவதும் இடைவிடாமல் முகுந்தன் உருவைக் கருதி ஷோட சோபசாரங்களையும் இயற்றிப் பன்னிரு திங்கள் முடியும் நாளில் பாலடிசிலை அரிமந்திரம் செப்பிப் பன்னிரண்டு ஆவுதி அழலில் பெய்தபின் மறை யோருக்கு உணவை அருத்தி, உணவருந்திய அந்தணர் ஆசி நல்கியபின் எஞ்சியதை ஓர் அந்தணத் தம்பதி 'புதல்வரைப் பெற ஆவுதி சேடத்தை நீர் அருந்துதீர்'எனத் தர அதை நுகர்ந் தோர் அமுதமொழியுடைய மைந்தரை மகவாகப் பெறுவர்.

இவ்விரதத்தைக் கன்னியர் செய்தால் உலகில் அவர் நற் கணவனை அடைவர்; இறந்திடும் மகப்பெறு மடவார் இயற்றிடின் இறவா மகவு பெறுவர். இவ் விரதத்தைக் கைம் பெண்டிர், கலன் கழிமகளிர் இயற்றிடின் மறுபிறப்பில் அழகிய கொழுநன் பெற்று இன்புறுவர். விருப்புடன் கேட்டோர் வேண்டியாங்கு எய்துவர்.

# ஏழாம் கந்தம்

## 1. சிசுபாலன் வீடு பேறுரைத்தல்:-

'திருமால் அவுணரை அழித்ததால் தேவர்களுக்கு என்ன நன்மை ஏற்பட்டது? அசுரர்க்கு என்ன தீங்கு ஏற்பட்டது? விளங்கக் கூறுக' எனப் பரிட்சித்து வேண்டச் சுகன் கூறலானான். திருமால் உலகைப் படைக்கும் போது இராசதத்தான் போன்றும், காக்கும் போது சத்துவத்தான் போன்றும், எல்லாவற்றையும் அழிக்கும் போது தாமதத்தான் போன்றும் தோன்றுவன். சத்தாய்ச் சித்தாய்ச் சுத்தமாய்ச் சுகமாய்த் தோன்றி நாமம், உருவம், குணம் ஏதுமின்றி வினையற்றவனாய் வீற்றிருப்பான் திருமால். சத்துவகுணம் மேலோங்குமிடத்து அவுணர் தேய்வர்; தேவர் வெல்வர். தாமத குணம் மேலோங்குமிடத்து அமரர் மங்குவர்; அவுணர் வெல்வார். மாயையினால் உண்டாக்கப்பட்ட போரால் தேவரும் அசுரரும் வருத்தப்படுவார்; ஆனால், தாயும் சேயும் ஆகும் தனி முதலாம் திருமாலுக்கு உற்ற துன்பமொன்றுண்டோ? இராசசூய யாகம் செய்தக்கால் தருமன் நாரதனிடம் கேட்டதைக் கூறுவேன் பரிட்சித்து மன்னவா! கேட்பாயாக' என்றான் சுகமுனி.

'பிறக்கும் பொழுதே மாயனைப் பழித்த சிசுபாலன் திருமாலின் பதமடைந்தது எவ்வாறு?' எனத் தருமன் வினவ நாரதன் விடைபகர்ந்தான். புகழ்தலும் பழித்தலும் உடலுக்கன்றி வேறு பொருட்கும் உண்டோ? சத்துவம், இராசதம், தாமசம் எனப்படும் குணங்கள் மூன்றும் ஒன்றாகிச் சித்தாகிச் சத்தாய் நின்ற திருமாலுக்கில்லை. 'யான் எனது' என்பார் அறியாமையால் கூறுவர். திருமாலின் வாயில்காப்பார் சயனும் விசயனும் சனகாதி முனிவராற் சாபமெய்திக் கனகனாகவும் (இரணியனாகவும்) பொற்கண்ணனாகவும் (இரணியாக்கன்) பிறப்பெடுத்தார். மீட்டும் இராவணனாகவும், கும்பகருணனாகவும் தோற்றம் செய்தார். இருவரையும் திருமால் அழித்ததை மார்க்கண்டனால் அறிவாய் வேந்தே (தரும) என்றான்

நாரதன். மீட்டும் அவர் சிசுபாலனும், தந்தவக்கிரனுமாக இவ்வுலகிற் தோன்றினர். புழுவென உடன்ற சிசுபாலன் திருமாலையே நினைந்து பதமடைந்தான். ஆசையால், அச்சத்தால், வஞ்ச நெஞ்சத்தால், வெறுப்பால், விருப்பால் எவ்வாறாகிலும் புனிதனாம் திருமாலை நினைக்கின் அவர் முத்தி எய்துவர். கோபியர் காமத்தாலேயே முற்றுணர்ந்து முத்தியடைந்தார்.

கஞ்சன் அச்சத்தால் கண்ணனை நினைந்து வீடெய்தினான். நின்போல்வார் (தருமன்) நட்பால் பதமுற்றார். சிசுபாலன் முதலானோர் வெறுப்பால் திருமாலை நினைந்து முத்தியடைந்தார். மறை தெரிந்தோர் திருமாலை விரும்பும் திறத்தினால் வீடு பெற்றார். முத்தொழில் குணங்களால் நடத்தும் முதல்வனாம் திருமாலுக்கு விருப்புமில்லை வெறுப்புமில்லை.

இவ்வாறு நாரதன் கூற, 'திருமால் கனகனைப்( இரணியன்) போரில் கொன்ற தன்மையை விவரித்துக் கூறுக' எனத் தருமன் வேண்ட நாரதன் விளக்கலுற்றான்.

## 2) இரணியனைக் கொல்லல்:-

இரணியாக்கனைத் திருமால் வராகமாகிக் கொன்றான் எனக்கேட்ட இரணியன் சூழ இருந்தோரை நோக்கி ஊழித் தீ கட்கடை உமிழ உரைத்தான். 'குற்றமற்ற மாயன் உயிர்களைச் சமமாகக் கருதாமல் தேவர்களுடன் சேர்ந்து கொண்டதால் ஈனமதி படைத்தான். திருமால் உயிரை வதைப்பேன். நீவிர் தனித்தனி சென்று நிலவுலகில் அறம் அழித்து அந்தணரைப் பொன்றச் செய்மின்; அவ்வாறு செய்யின் திருமாலின் வலிமை கெடும்; தேவரின் பலமும் குறையும்' என்றான் இரணியன். அதுகேட்ட சம்பரன் முதலானோர் நிலவுலகம் சென்று வேள்வியழித்து மனைகளை எரியூட்டித் தேவர் உலகினும் சென்று தேவரைத் துன்புறுத்தினர். சிலர் பெரிய நகரங்களையும், சிலர் கோபுரங்களையும், சிலர் மகளிரையும், சிலர் ஆக்களையும் அழித்தார். அந்தணரை வதைத்துத் துளவம் உள்ளிட்ட தருக்களைச் சாய்த்து நீர்நிலைகளின் கரையுடைத்து அசுரர் மறங்கள் இயற்றினர். இரணியன் தன் தம்பி இரணியாக்கன்தன் மனைவியையும் புதல்வரையும்

தாயையும் வசப்படுத்தி உரைக்கலுற்றான். 'உண்மைப் பொருளுக்கு வினையும் செயலும் இல்லை; வருந்தற்க' எனத் தாயாம் திதிக்கு ஆறுதல் கூறி மேலும் ஒரு கதை இயம்ப லானான் இரணியன்:

சுயக்ஞன் என்பான் உசிரதேயத்தின் அரசனாக இருந் தான். அவன் பகைவராற் கொல்லப்பட்டான். அப்போது அவன் தன் மனைவியும் புதல்வரும் கதறியழுதனர். யமன் குழந்தையாகி வந்து அழுதவர் தம் துயர்த்துடைப்பான் வேண்டிப் பரம்பொருளின் தன்மை எடுத்தியம்பத் திதி துயர் தீர்ந்தாள். இரணியன் அழியா உடல் வேண்டி மந்தார மலை யடைந்து தவமியற்றினான். ஐம்பொறி அடக்கித் தவமியற்றிய கனகன் உச்சி பிளப்ப மண்டிய புகைப்படலம் வானவர் ஆற்றாது பிரமனைச் சென்று அடைந்து 'தவஞ்செய்வன் வேட்டன உதவுக' என்றார். பிரமனும் கனகன் முன்தோன்றி அவன் விரும்பிய வரம் நல்கினான்.

பிரமன் படைத்த பொருள்களால் இறவான்; வானுலகிலும் மண்ணுலகின் அகத்திலும் புறத்திலும் துஞ்சான்; இரவிலோ பகலிலோ மாயான்; கனல் உமிழ் படையினாற் பொன்றான். இவ்வாறு இரணியன் பிரமனிடம் பெற்ற வரத்தை என்னென்று கூற என்றான் நாரதன். வரமளித்த பிரமன் அகன்றான். இரணியன் தன் நகரம் எய்திட மறையோர் வேள்வியியற்றிடப் பொலிந்தான். வேதம் சொல்லும் போது முன்னும் பின்னும் அரிஓம் என்று கூறும் பழம் வழக்கத்தை மாற்றித் தன் பெயரினையே கூறுமாறும் தன்னையே துதிக்குமாறும் பணித் தான் கனகன். பிரமன், விண்டு, உருத்திரன் ஆகிய மூவரும் இவனே இறைவனென்று குறிப்பறிந்து ஒழுகும் தன்மையர் ஆயினர். பதினான்கு உலகினையும் புரந்தான் கனகன். இவ்வாறு அவுணன் இரணியன் அரசாண்ட நாளில் திருமாலை வழுத்தி நின்றார் வானவர். அப்போது ஆகாயவாணி (அசரீரி) தோன்றி, 'சில நாட்களில் கனகன் சிறுவனை வைது சீறுவான்; அப்போது திருமால் தோன்றி அவுணனை மாய்ப்பன்; நீவிர் கவலற்க' என்றது.

'கனகன் பெற்றெடுத்த புதல்வர் நால்வருள் பிரகலாதனின் திறங்கள் கூறுவன் கேட்பீராக' என நாரதன் தொடர்ந்தான். பிரகலாதன் என்பான், 'பச்சைமால் புகழ் ஒரு சமயம் பாடும்

நல்ல காருந்வை ஒருழி நாடும்; துழாயைச் சூடும்; அன்பு முற்றி அழும்; மண்ணில், வானில், மற்றுமுள்ள உலகில் மன்னிவாழ் உயிர் உடம்பில் திருமகள் மேவிய கண்ணனாகவே காணும்; திருமாலின் பத்தன் ஆயினான்; உண்ணும் போதும், ஏகும் போதும், உரைக்கும் போது, நீராடும் போதும் மாயவன் பெயரையே ஓதும்; மெய்ப்பொருள் சீதரன் என்னும் எட்டெழுத்து மந்திரத்தைக் கூறிக் குறைவின்றிப் பெருமை பெற்றவர் பிரகலாதனைக் காட்டிலும் ஒருவருமிலர்.

இரணியன் தன் மகன் பிரகலாதனைச் சுக்கிராசாரியரின் மைந்தரிடம் கல்வி கற்க ஏற்பாடு செய்தான். இரணியன் ஒரு நாள் பிரகலாதனை அழைத்து 'வெள்ளி மைந்தர் பால் கற்ற தென்ன கூறுக' என்றான். அதற்குப் பிரகலாதன், 'திருமகள் கேள்வன், பாற்கடலில் பாம்பணை துயிலும் பரமன், கார் வண்ணன், பைந்துழாய் மார்பன், தாமரைக் கண்ணனாம் திருமால் என்று கூறுதலே யான் கற்றது' என்றான். இவ்வாறு பிரகலாதன் விடை பகர்ந்ததும்' என்னுடைய இளவலாம் பொற்கண்ணனைக் கொன்றவனது பெயரைக் கூறுவித்தனர், நன்று நன்று' என நகைத்தான். வெள்ளி மைந்தர் அஞ்சியவராய், 'அரசே, யாங்கள் இவ்வுரை கற்பிக்கவில்லை; நின் பிள்ளை இங்ஙனம் பிதற்றுகிறான்' என்றனர். 'அவனுக்கு அறம் அறிவுறுத்துக' என இரணியன் வெள்ளி மைந்தரிடம் சொல்ல அவ்வாறே அவர் ஓதிய முப்பாலும் பிரகலாதன் ஓதவில்லை.

இரணியன் தன் மைந்தனுக்குச் சீராட்டித்துடைமேல் இருத்தி 'அறம் நன்றாக அறிந்தனையா?' என்று மீண்டும் கேட்டான். பிரகலாதன் 'கருதிப் பார்க்கின் நன்கறிதல் என்பது திருமாலை அறிதல் அன்றோ' என்றான். இரணியன் உடனே சினமுற்றான். ஏவலரை நோக்கி 'வேலால் இவன் மார்பைப் பிளந்திடுக' என்றான். அவ்வாறே ஏவலர் எறிந்த வேல் பிரகலாதன் மார்பில் பூவெனப் பொலிந்தது. வீரர் வீசிய அனைத்துப் படைக்கலன்களும் பயனற்றுப் போகவே இரணியன் பெரிய பாம்புகள் எட்டும் திசையானைகளும் இவனுடன் போரிடட்டும்' என்று உரக்கக் கூறினான்.

பாம்புகள் எட்டும் திருமால் அன்பனாம் பிரகலாதனைக் கொல்லக் கவ்வின. அவை தம் வாயினின்றும் அமிழ்தினை

உருத்தன. திசைக்களிறுகள் பிரகலாதனைக் கொல்லும் பொருட்டுச் சினத்துடன் பாய, அவற்றின் கோடுகள் இற்றுச் சிதறின. பின்னும் இரணியனின் வீரர்கள் பிரகலாதனை மலையொடு பிணித்துக் கடலில் எறிய, அப்பிரகலாதன் கடலில் கல்லொடும் மிதந்தான். ஒரு வகையாலும் பிரகலா தனைக் கொல்ல வியலாது என்ற உணர்ந்த கனகன் மீட்டும் 'அறிதி' என வெள்ளி மைந்தரிடம் விடுத்தான்.

அப்போது பிரகலாதன் சுக்கிரன் இல்லாத சமயத்து மைந் தருக்குக் கூறலானான். 'அல்லவை ஆசிரியர் கூறினும் கேட்க லாகாது. நல்லவற்றை யார் கூறினும் கேட்டல் வேண்டும்; நாரதன் கூறிய மெய்ந்நூல் உமக்குக் கூறுவன்' என்றான் பிரகலாதன். அவ்வமயம் சுக்கிர மைந்தர் 'நீயும் யாமும் சேர்ந்தே இருந்தோம். அவ்வாறிருக்க நாரதன் எமக்குத் தெரியாமல் மெய் உரைத்தது எவ்வாறு' என வினவப் பிரகலாதன் 'என் தாதை வேள்வியியற்றச்சென்றபோது தேவர் இங்கு வந்து அவுணரைக் கொன்று என் தாயையும் சிறைப் படுத்தினர். அப்போது இந்திரன் 'இவள் கருவுயிர்த்தபின் அம்மகவினைக் கொன்றபின் இவளைச் சிறைவீடு செய்வன்' என்றான். நாரதன் 'இவள் வயிற்றில் வளர்வான் கொல்லத் தக்கோன் அல்லன், திருமால் அன்பன் அவன்' என்று கூறி அவன் என் தாய்க்கு மெய்ந்நூல் செப்பினான். வயிற்றில் இருந்தவண்ணம் நாரதனிடம் கேட்ட மெய்ப்பொருளினை உரைப்பேன்' என அவுணச் சிறார்க்குக் கூறினான், பிரகலாதன்.

காகம் முதலிய உயிர்கள் ஐம்புலன் நுகர்ச்சியில் ஈடுபட்டுப் போகம் துய்க்கும். பெரியோர் வாழ்நாள் முழுவதும் மால் பதம் சிந்தித்து வாழ்வர், உலகிற் பிறந்த மாந்தர் பாதி நாள் உறக்கத்திற் கழிப்பர்; எஞ்சிய நாளில் மனைவி மக்கள் என்று காலங்கழிப்பர். திருமாலை ஒரு சிறு போதும் கருதலர். ஊர்வன நீர்வாழ்வன, பறவை, விலங்கு, தாவரம், மானிடம், தேவர் ஆகிய 'ஏழ் வகைப் பிறவி'களும் தொலைத்து மானிடராய் இவ் வுலகிற் தோன்றியபின்னும் மால் நினைந்து வீடு அடையார். நூல் பல கற்றும் பரம்பொருளை அறியார். பிறர் பொருள் நச்சுவர்; பொன்மீது உலகோர் கொள்ளும் ஆசையை யார் போக்க வல்லார்? நூல் பல கற்றும் மாதர் இன்பத்தே மயங்கித் திரிவர். மெய்ப்பொருளாம் மாயனுக்கு மறைதல், வெளிவருதல்

ஓங்கி வளர்தல்,வளர்ச்சியின் முடிவடைதல்,தேய ஆரம்பித்தல் முற்றும் தேய்ந்திடல் என்னும் ஆறு விகாரங்களும் இல்லை என அறிவதே மெய்யறிவாம். அறிவால் மெய்ப்பொருள் உணர்தல் வேண்டும். மாயன் பதத்தை நினைப்பார் வீடெய்து வர். தேவர், அவுணர், மகளிர், பறவை, நரர் முதலிய யாவ ராயினும் மாயனிடத்து அன்பராகில் வீடடைதல் உண்மையாம். எப்பொருளிலும் மாயன் உறைகின்றான்.

'திருமால் பதம் சேர்மின்' எனப் பிரகலாதன் அவுணர் புதல்வர்க்குக் கூறினான். அவுணர் புதல்வர் அங்கேயே அறிவும் அன்பும் அடைந்தனர். 'நிகழ்ந்தன கனகனிடம் கூறுவோம்' என மறையோர் சென்றார்.பிரகலாதனின் செயல் கேட்ட கனகன் மிக்க சினம் கொண்டான். அவனை அழைத்துவரச் செய்து அவுணன் 'நீ அழிவாய்' என்றான். பிரகலாதன்'ஈறு இழைப்பேன் என்றாய்;திருமால்அடியார்க்குத் துன்பம் இயற்றுதல் கூற்றுவனுக்கும் இயலாது. மறைகளே சான்றாம்; தெளிவடைவாயாக' என்றான். அப்போது இரணியன் 'மாயன் உலகத்து உண்டு கொல்' என இடிபோல முழங்கினான். பிரகலாதன் 'அமலனாம் திருமால் கடலினும் உளன். வண்டு வீழும் மடலினும் உளன்;மலையினும்,உளன்; உடலில் உயிர் போன்று எல்லா உலகினும் உளன்' என்றான் பிரகலாதன். மைந்தனின் மாற்றம் கேட்டுச் சினந்த கனகன் தூணிடை அடித்தான். அப்போது அத்தூணிலிருந்து ஆளரி (நரசிங்கம்) முளைத்தது.

ஆளரியாய்த் தோன்றிய திருமாலின் உகிர்நுதியின், சிரிப்பின், நோக்கின் அவுணரெல்லாம் உயிர் தொலைந்து சாய்ந்தார். இரணியன் ஒரு கையில் வாளும் ஒரு கையில் கேடகமும் தாங்கிக் களிறு போன்று சினந்து ஆளரியின் முன்னர்ச் சேர்ந்தான். திருமால் இரணியனைப் பற்றியவுடன் கருடன் வாய்ப்பட்ட பாம்பு போன்று வருந்தினான். ஆளரி இரணியனைத் துடையிற் கிடத்திக் குடரைப்போழ்ந்து கண்ணி யாக வனைந்தது. ஆளரியின் வாயையும் உகிரையும், கையை யும், கொழுங்குடர் அணிந்த மார்பும் கண்ட அமரர் அஞ்சி விசும்பில் மொய்த்தார். மாயன்தோற்றம் கண்டு அயனும் அரனும் அஞ்சியவராய்க் திருமகளை விளித்து 'அருகில் நீ செல்க' என்றார். அவள் மாயன் தோற்றம் கண்டு நெருங்க அஞ்சினாள். அனைத்துக் தேவரும் ஆளரியாய் நின்ற

மாயனைத் தொழுதார். மாயன் தன் சினந்தவிர்ந்திடுதல் வேண்டுமென வேண்டினர்.

பிரகலாதன் திருமாலின் பாதம் பணிந்து பரவினான். சினந்தணிந்த மாயன் சிறுவனின் சிரசினை அன்பாகத் தடவி 'யாது விழைந்தாய்' என அருளினன். 'நின்னை வழிபடும் பேறுதான் வேண்டும்; பிறவிப் பிணி பின்னும் தொடருமோ என்றே அஞ்சுவல்; ஆளரியாய் நின்று நின்னைக் கண்டு அஞ்சவில்லை. சீற்றம் நீங்கி அருளுதல் வேண்டும்' எனப் பணிந்தான் பிரகலாதன். மாயன், 'உடற்போகம் நீ விரும்ப வில்லை எனினும் வேந்தனாகி இருந்தபின் எனது பாதம் எய்துக' என்றான். பிரகலாதன் 'பரம் பொருளே, நின்னை நிந்தை புரிந்த என் தாதைபாவம் ஒழிய அருள் செய்க' என்றான். திருமால்' உன்னைப் பிள்ளையாய்ப் பெற்றதனால் நின் குலத்து இருபத்தொரு மரபுளோரும் புனிதம் அடைந்தார். நின் தாதையும் புனிதனாவன்; அவனுக்குரிய ஈமவினை களை முடித்தான். பிரகலாதன் போற்றியதால் திருமால் சினஞ் தணியக் கண்ட அமரர் யாவரும் வந்து அடி தொழுதார். திரு மகள் தழுவத் திருமால் மறைந்தனன், திருமால் அருளால் பிரக லாதன் மகுடம் சூடி உலகைப் புரந்தனன். தேவரும் தத்தம் ஆட்சியிடம் அடைந்தார். இப்பிரகலாதன் கதை கூறிய வரும் கேட்டவரும் துன்பக் கடல் கடந்து இன்ப மெய்துவர்.

### 3. வருணாச்சிரமம் உரைத்தல் :-

'பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திரர் எனும் நான்கு வருணத்தையும், பிரம்மசரியம், கார்கத்தியம், வானப்பிரத்தம், சந்நியாசம் எனும் நான்கு ஆச்சிரமத் திறங்களும் கூறுக' எனத் தருமன் கேட்க, மால் எனக்குரைத்ததைக் கூறுகிறேன் என நாரதன் சொல்லலானான்.

மனத்தையடக்கல், இந்தியங்களை அடக்கல், காமம் விடுத்தல், அருள், மெய், அறம், குற்றமற்ற அறிவுடன் எக் குலத்தவர்க்கும் அன்பினராய்க் கண்ணனைக் கருதி அமர்தல் யாவர்க்கும் அறம் எனக் கூறுவர். வேதம் கற்றல், கற்பித்தல் வேள்வி இயற்றல், யாகம் விரும்புவோர் செய்ய அதைப் புரிவித்தல், ஈதல், ஏற்றல் என ஆறு தொழில் இயற்றுதற் குரியவர் அந்தணர். அருமறை ஓதல், மகம்புரிதல், மாநிலம்

புரத்தல், போர்ப்படை பயிலுதல், அஞ்சாமற் போரில் வெற்றி யடைதல் அன்பொடு வழங்கல் ஆகியன அரசர்க்குரிய அறங்கள்; மறை பயின்றிடல், மகம் புரிதல், வணிகம் உழவு செய்தல், பொருள்தருதல், ஆநிரை காத்தல், ஆகியன வணிகருக்கு அறமாம். மேற்சொன்ன பிராமணர், சத்திரியர், வைசியர் எனும் மூவருக்கும் பணி செய்தல் பின்னவராம் சூத்திரர்க்குக் கடனென்பர்.

வீட்டுவேலை குற்றமற இயற்றி, கொண்டவனைத் தெய்வ மாக வணங்கி, அவன் பணித்தவாறுபணிபுரிந்து, அக்கணவனது பெற்றோர்க்கும் ஏவல் செய்வது மடந்தையருக்கு அறமாகும். நால்வருணத்தாருள் அடங்காத ஏனைய அனுலோமர், பிரதி லோமர், சங்கரசாதியர் ஆகியோர்தம் குலத்திற்குரிய தொழில் செய்து வாழ்தல் எனக் கூறுவர். வித்து விதைத்தோர் பயிர் காத்தல் செய்திலரேல் பயனடையார்; அது போன்று தத்தமக் குரிய அறம் மறப்போர் துயரடைவர் பிரமசரியம் காப்பாருக்கு உபநயனத்துக்கு முன் ஒரு பிறப்பும், பின் ஒரு பிறப்பும் என்பர், அவர் ஒன்பது ஆண்டினுள் முப்புரி நூல் பூணல் வேண்டும். ஆசிரியனிடத்திலே தங்கி, பிச்சை ஏற்று, கற்பிக் கும் ஆசிரியன் 'இது அருந்துக' என்று கூறியவற்றை இரு பொழுது உண்டு எண்ணெய், தேன் முதலியன துய்க்காதிருத் தல் வேண்டும் சீலத்துடன் மான் தோலில் அமர்ந்து முஞ்சிப் புல்லாற் செய்த அரைஞாண் அணிந்து காலை மாலை கதிரவன், கனல், ஆசிரியன் மூவரையும் மறைகள் ஓதுவார் வணங்குதல் வேண்டும் பிரமசாரியர்க்கு அறன் மாதர் எழில் நினையாது பேசாது உறைதல். இல்லறத்தார் எண்ணெய் முதலிய நல்ல பொருட்கள் துய்த்தல் குற்றமன்று; மேலுமவர் கூடுதற்குரியவென விதிக்கப்பட்ட நாள்களில் மனைவியருடன் கூடுதல் உரியது என நூல்கள் பேசும். தேவர்கடன் வேள்வி யாலும் முனிவர்கடன் கேள்வியாலும் பிதிரர்கடன் புதல்வர்ப் பெறுதலாலும் நீக்கி இல்லறத்தார் பின் கானேகல் வேண்டும்.

மனைவியை மைந்தர்பால் விடுத்து வனம் ஏகலாம். மனைவியுடன் வனம்புகுவார் பர்ணசாலை அமைத்து அக்கினி வளர்த்து நன்கு ஓமம் ஆற்றுதல் வேண்டும். மனைவியை மைந்தர்பால் விடுத்துச் செல்வார் பர்ணசாலை நீத்துப்பனி வெயிலில் அமர்ந்து குகையில் உறைந்து நாள்களைக் கழிப்பர்.

அறிவு முதிரப்பெறின் பிரமசாரியாய்க் காடேகலாம். மீட்டும் வீட்டில் தங்குவதை விரும்பின் குற்றமாம்; உழவர் விளைத்த நெல் உண்டி அருந்தாமல், தாமாக மரத்திலிருந்து உதிர்ந்த சருகினையும் வைக்கோலிலிருந்து உதிர்ந்தநெல்லையும் இலையையும் உண்பார். தழைக்கும் மயிரையும் உகிரையும் தவிர்ந்திடார்; தேன், எண்ணெய், பூ முதலியன விலக்கிடுவர்.

துறவியர் அக்கினியை உள்ளத்திற் சேர்த்து, மனத்தையும் பூதத்தையும் அகங்காரத்தையும் மகத்தினில் இருத்தி, அம் மகத்தை மாயையில் புகுத்தி, மாயையை அறிவிற் போக்குவர். ஆசையும் மானமும் வைத்திலனாகி விளங்குவான் துறவி. ஒரு பதியில் ஒருநாள் தங்கி. முத்தண்டமும் கரகமும் சின்னமாய்த் தாங்கி உலகினை வரும் கனவு எனக் காணுவான். உபநிடதம் ஓதுவான்; இல்லறத்தார் செய்த நூற்கு உரை வரைந்திடான். வெறுப்படையான்; உடற்கு இனியன செய்யான்; என்று இந்த உடல் அழியுமென்றும் கருதான்; தங்க மடம் அமைக்க மாட்டான்; உயிர் வருந்தமாட்டான். ஊமையர் போலவும், பித்தர், மலைப்பாம்பு போலவும் திரிவான்; உலகு வேறு தான் வேறு என்று பேதமாய் நினைந்திடான். அறிவில் முதிர்ந்த மலைப்பாம்புகொல் என ஐயுறும்படி மறையவன் ஒருவன் துறவு பூண்டு சையமால் நெடுங்கிரி உறையும் கதை நினக்குக் கூறுவேன் எனத் தருமனிடம் நாரதன் கூறலானான்.

பிரகலாதன் மலைப்பாம்பு போன்ற மறையோனைச் சையமால் வரையிற் கண்டு 'தவமியற்றுகின்ற நீ உடல் பெருத்தவகை எவ்வாறு?' என்றான் முனிவன் 'பெருத்தல், இளைத்தல் என்பதெல்லாம் உடலுக்கன்றி உயிர்க்கல்ல' என்றான். அதுகேட்ட பிரகலாதன் நீயார்' என வினவ அம் முனிவன் 'உடலிற் காமமுற்றநான் பல பிறவியுற்றேன். மானுடனாய்ப் பிறந்தேன். காமம் விட்டவர், நலம் துய்ப்பர். உழைத்துச் சேர்த்த மிக்க சுவையுடைய தேனை இழக்கும் தேனீயும், உணவைத்தேடி எழாதனவாய்த் தமக்கு எதிர்ப் பட்டவைகளையே உணவாகக் கொள்ளும் மலைப்பாம்பும் எனக்குக் ஆசிரியராய் அமைந்தன' என்றான்; அது கேட்ட பிரகலாதன் பொருளைச் சேர்த்து வைத்தல் கூடாது; கிடைத்த வற்றையே உண்ணவேண்டும்', என்ற உண்மையுணர்ந்து அம்முனிவனை வணங்கி நகரம் சேர்ந்தான்.

## 4) இல்லறத்தோர் கதியுரைத்தல்:-

தன் நகரடைந்த பிரகலாதன் ஏழுலகத்தையும் மிக்க கிறப்புடன் ஆட்சி புரிந்தான் எனக் கூறினான் நாரதன். அறம் கேட்டதருமன், 'இல்லறத்திருந்து வருந்தும் என் போன்றவர் துயர் நீங்கிக் கதியடைய வழியிருப்பின் உரைப் பாயாக' என வேண்ட நாரதன் நவிலலானான்.

நித்திய நைமித்திய காரியங்களைப் பத்தியொடு பயன் கருதாது பரமன் மகிழும்படி செய்து, மாயன்சீர் பேசும் கதை கேட்கின் முத்தியடைய நெறிவேறில்லை. அக்கினியை வருத்தி, மறை பகர்ந்து இனிய உணவைத் தேவர், நரர், பூதம் தென்புலத்தார் முதலியோர்க்குத் தந்து குற்றமற்ற சுற்றமொடு வாழ்வார் திருமால் உலகடைவர். அக்கினியின் வாயில் அளித்தலைவிட அந்தணர்க்களிக்கின் மால் மகிழும்,பிதிருக்கள் குறித்து அமை (அமாவாசை) முதலாகத் தொண்ணூற்றாறி னொடும் நைமித்திக நாளிலும் உணவு ஈந்திடல் இயல்பாம். நைமித்திகதினம், நற்பாத்திரர்கள் வந்தெய்திய நாள்,கிரஹண நாள், பிறப்பு நாமகரணம் முதலாக மணவினை புரியும் நாள் களில் கங்கை முதலான நதியில், கயையில், சேதுவில், பொதியில் ஆகியவற்றில் அன்பொடும்வந்து நீர்க்கடனாற்றின் தென்புலத்தோர் பாதகம் தொலைத்து வீட்டடைவர்.

பிரமசாரி தனக்குரிய அறத்தைக் கடத்தல் தகாது. இல்ல றத்தார் அக்கினி கருமம் முதலியன ஒழித்தல் ஆகா. வனத் துறைவோர் மீண்டுமொரு வளப்பமான நாட்டைச் சென்று பொருந்துதல் தகாது;துறவிக்கு முப்பாலின் நேயம் வரலாகாது; நல்வினை தீவினையாம் உருளையும் ஐம்புலனாம் புரவிபூட்டி உரை முதலிய கன்மேந்திரியங்கள் வழிபோகும் உடலாகிய தேரில் உறைகின்ற உயிராம் அரசன் மதியாகிய பாகன் காமம் முதலிய பகைதனை அறிவாகிய வாளால் எறிந்து கடந்திடின் வீட்டுலகு அடைந்திடும். ஆசையாகிய கொடிய வழியில் உயிராகிய அரசன் திரிந்தால், வினையாகிய விலங்கு தடைப் படுத்தப்பிறவியாகிய பெருங்கடலுள் விழும்.

**இல்லறத்திலிருந்து கொண்டு நட்பும் பகையும் விட்டுச் செய்யும் கருமமே பிரமன் எனக்கண்டு வினைபுரிவோர் துறவி களடையும் விசும்பே சேர்குவர்.**

ஆடையினது உருவை அறியின் ஒரு நூல்தான் போலப் பொருந்திய தாங்கள் பிரமமெனு அறிதல் பாவாத்துவிதமாம். கருமம் பிரமம் எனக்காணல் கருமாத்துவிதம்; ஞானமெல்லாம் ஒன்றென அறிதல் ஞானாத்துவிதமாம் அரசே! மேற்சொன்ன மூவத்துவிதத்தைத் தெளிந்து வினைபுரிவோர் முனிவர் அடையும் கதியை எய்துவர். கந்திருவனாகிய யான் (நாரதன்) பிரஜாபதிகளது வேள்வியில் கந்தருவ மகளிர் தம்மொடும் செறிந்து யாழ் இசைத்துப்பாடினேன். கந்தருவ மகளிரொடும் கலந்து பாடியமையால் சூத்திரனாகச் சபித்தனர் பிரஜாபதிகள். பிறந்தேன் சூத்திரனாக; பின்னர்த் திருமால் புகழிசை கேட்டுப் பிரமனின் மகனாய்ப் பிறந்தேன். அரிய மறைகளும் முடிவு காணுதற்கரிய பேரொளியாம் மாயன் நின் மாமனாம் வசுதேவனுக்குக் குழந்தையாக உடன் பயிலப் பெற்றாய். ஒப்பற்ற தருமனே என்று கூறி நாரதன் அகன்றான் எனச் சுக முனிவன் பரிட்சித்திடம் கூறினான்.

---

# ஏட்டாம் கந்தம்

## 1. மனுக்களையுரைத்தல்

'நீதி முறை விளையாட முடிபுனைந்த மனுக்களது தன்மையையும், இறைவனாம் திருமாலின் விளையாடலையும் இயம்புக' எனப் பரிட்சித்து வேண்டச் சுகமுனிவன் வழங்கலாயினன். சுவாயம்புமனுவின் காலத்துத் திருமாலின் விளையாட்டெல்லாம் கூறினேன்; மற்ற மனுவின் காலத்தே முனிவர் விண்ணோர் இந்திரன் என்று மாயன் தோற்றியவிதத்தைக் கூறுவேன்.

இரண்டாம் மனுவாகிய சுவாரோசிடன் உலகைப் புரக்கும் நாளில், வேதசிரசு என்ற முனிவனை மணந்த துடிதை என்பாள் துடிதர் முதலியோரை ஈன்றாள். பரமன் விபு எனத் தோன்றினான். இரண்டாம் மந்வந்தரத்தில் அமரர் வேந்தன் உரோசனன் ஆவன். மூன்றாம் மனுவான உத்தமன் காலத்தில் சத்தியசித்து அமரர் வேந்தன் ஆயினன். சத்தியசேனன் எனும் பெயரோடு திருமால் பொருந்தித், தீயோரையழித்து உலகைக் காத்தான். வசிட்டர் முதலான ஏழு முனிவர் இருந்தனர்.

உத்தமன் இளையோனாகிய தாமதன் என்பான் நான்காம் மனுவாயினன். திரிசிகன் இந்திரனாக இருந்தான். வியோமர் முதலான ஏழு முனிவர் திரிந்தார். அரிமேதசன்தனை மணந்த ஆளரிணி என்பாள் வயிற்றில் திருமால் அரி எனத் தோன்றி நான்மறை அளித்தான். கஜேந்திரன் என்ற யானையின் துயர் அகற்றினான். இவ்வாறு கூறிய சுகமுனிவனைப் பார்த்துப் பரிட்சித்து' மால் கரிக்கு இடரகற்றிய பாங்கைக் கூறுக' என்றான்.

## 2 கசேந்திரன்

வெள்ளி, பொன், இரும்பு, எனக் கூறப்படும் திரிகூட மலையே மலைகளுக்கு எல்லாம் சிகரமாக உள்ளது. அம் மலையின் வளம் சொல்லுதற்கு எளியதன்று.பல வளங்களும்

நிறைந்தது அம்மலை. அங்குள்ள யானைகட்கெல்லாம் வேந்தெனக் கசேந்திரன் எனும் யானை ஒன்றிருந்து. மூங்கில் நிறைந்த திரிகூடமலைச் சாரலையடுத்த குளத்திற் சென்று நீராடியது கசேந்திரன். தாமரை மலரைப் பறித்து வீசி மற்ற யானைகளுடன் கசேந்திரன் விளையாடிக் கொண்டிருந்த வேளையில் கொடுஞ்சின முதலை ஒன்று கசேந்திரனின் காலைக் கவ்வியது. பிடிக்குலம் ஈர்த்தும் கசேந்திரனாம் களிறு கரையேற முடியவில்லை, பெண்யானைக் கூட்டமானது ஈர்க்கும் வலியற்றுச் சோர்ந்தன. இடங்கர் வேழத்தைத் தடத்திடையீர்க்க, வேழமானது இடங்கரைக் கரைக்கு ஈர்க்க, இவ்வாறான போராட்டம் ஓராண்டு நிகழ்ந்தது.

ஆற்றல் ஒய்ந்த வாரணமாகிய கசேந்திரன் உலகைப் படைத்துக் காத்தழித்தவனும் வேதத்தின் முடிவானவனுமாகிய திருமாலை விளித்து 'வந்து இப்பொழுதே காத்தல் வேண்டும்' என அழைத்தது. பிரமன், உருத்திரன் முதலானோர்' அழைக்கப் பட்ட தனிப்பெயர்ப் பொருள் யாம் அல்லேம்' என்று காக்க முனைந்திலர். காப்பவனாகிய திருமால் களிற்றின் முன் தோன்றினான். திருமால் சக்கரப்படையை எறிய, அப்படையால் உயிர்நீத்தது முதலை. சாபத்தால் முதலை உருவம் கொண்டிருந்த ஊகூ எனும் விஞ்சையன் தோன்றினான். இசை நூல் தேர்ந்த அவ்விஞ்சையன் திருமாலை வழிபட்டுத் தன் இடத்திற்குச் சென்று சேர்ந்தான். அகத்தியன் சாபம் தீர்ந்த களிறாக இருந்த கசேந்திரன் மாயன் வடிவு பெற்று (சாருப்பியம்) உய்ந்து உயர்ந்தது.

'அகத்தியன் இட்ட சாபத்தால் வைகுந்தத்தில் அரசன் ஒருவன் களிறாகிய கதை கூறுவன் கேட்பாயாக அரசே' எனச் சுக முனிவன் பரிட்சித்திற்குக் கூறலானான்.

இந்திரத்துய்மன் எனும் பாண்டியன் பொதிய மலையில் மாயனை வழிபட்டான். கடல்நீர் முழுவதையும் குடங்கையின் உண்ட, சதுர்மறை முனிவனாகிய அகத்தியன் அங்கு எழுந்தருளவும் பாண்டியன் எழுந்திலன். அது கண்டு சினந்த அகத்தியன் சபித்திடப் பாண்டியன் வேழமாகி மாயனது வீடுற்றான். இக்கதை கேட்போர், எழுதுவோர், இனிய தென்போர், காலையில் நவில்வோர், யாவரும் வீட்டின்பம் எய்துவர்,

'களிறு காத்த மாயன் கடலைக் கடந்து அமுதெடுத்த காதை கூறுவன் கேட்பாயாக வேந்தே' எனச் சுக முனிவன் தொடர்ந்தான்,

3) கடல் கடைதல்,

ரைவதகன் என்பான் ஐந்தாம் மனுவான காலத்து விபு என்பான் இந்திரனாக இருந்தான். பூதரயன், வேதசிருடன் முதலானோர் ஏழு முனிவராவர்.

திருமால் தவச்சுப்பிரான் என்பானுக்கும் விகுண்டை என்பானுக்கும் வைகுண்டன் என்ற பெயரோடு தோன்றித் திருமகள் வேண்ட வைகுண்டம் என்ற நகரைச் சமைத்தான்.

ஆறாம் மனு சாக்குசன் காலத்து மந்திரத்துய்மன் இந்திரனாக இருந்தான். விரகர் முதலியோர் ஏழ் முனிவராவர். திருமால் வயிராசனுக்குச் சம்பூதி வயிற்றில் அசிதன் என உதித்தான். துருவாச முனிவன் ஒருவன் விரைவில் அடைந்து இந்திரனுக்கு மாலையொன்று அளித்தான். ஆனால் இந்திரன் அதைச் சூடவில்லை. சினந்த முனிவன், 'திருமகளுக்கு இசை பயில்வாளாகிய வித்தியாதர' மங்கை நல்கிய இம்மாலையைச் சூடாமல் நீ இகழ்ந்த காரணத்தால் நீ பெற்றிருக்கும் எல்லையற்ற செல்வம் யாவும் இழக்கக் கடவாய்' எனச் சபித்தான். அப்போது கற்பகத்தரு முதலியன விரைவில் மறைந்தன; தேவர், அவுணருடன் ஏற்பட்ட போரில் தோல்வியுற்றுத் துயர் அடைந்தார். மலரவனிடம் சென்று தேவர் முறையிட்டார். பிரமன், தேவர்களிடம், 'மாயனை நினையின் வழி காட்டி விரும்பியன அளிப்பான்' எனக்கூறவே, தேவர்களும், திருமாலை வழிபட்டார். திருமால் தேவர்களை நோக்கிப் 'பாற்கடல் கடைய அவுணரோடு நட்புக்கொள்ளுங்கள்' என்றேவத் தேவரும் அவ்வாறே அவுணருடன் நட்புச் செய்தார்.

தேவர்கள் மந்தாரமலையை வேரோடு பறித்து அசுரரோடும் எழுந்தார். மந்தரமலை வீழ்ந்து தேவரும் அசுரரும் சோர்ந்தார். கருணை கூர்ந்து மால் அம்மலையை விரைவில் ஏந்திக் கருடன் ஊர்ந்து சென்றான். மலையைப் பாற்கடலில் நிறுவி வாசுகி எனும் பாம்பைக் கயிறாக்கித் திருமால் அமரரோடும் வாசுகியின் தலையைப் பற்றி நின்றான். அசுரர்கள்

'யாமோ வாலைப் பற்றுவது' என வெகுளத், திருமால் கனிந்து நோக்கவே, தேவர் வாலைப்பற்ற அசுரர் வாசுகியின் படத்தை யுடைய தலையைப் பற்றி நின்று பாற்கடலைக் கடைந்தனர்.

பாம்பின் கொடிய நஞ்சுள் மூழ்கி அசுரர் உடல் முழுதும் எரிந்து வீழ்ந்தார். அமரர் முறுவல் செய்தார். பாற்கடலின் வயிற்றில் கிடங்கெழுந்து கிழிய, மந்தர மலை அசைந்து கீழே வீழ்ந்தது, திருமால் பெரிய ஆமை வடிவெடுத்து அம்மலையைத் தாங்கினன்.

ஒரு கையால் மந்தாரமலையின் சிகரத்தின் மீது அமைத்து நிலைநிறுத்தி, மலர்க்கரங்கள் சில தீயுமிழும் வாயுடைய வாசுகியைப் பணிகொள்ளவைத்து, ஓராயிரம் தோளுடைய பிரான் திருமால் திருப்பாற்கடல் கடைந்த வியப்பை என்ன வென்று இயம்ப என்றான் சுகன்.

பாற்கடலின் வாய் அலறிப் பொங்க, வாசுகியை இழுத்து மிக்க வலியோடும் திருமால் கடையவே, கடலில் காளகூட மென்னும் நஞ்சு தோன்றியது. நஞ்சு எழுந்தவுடன் அஞ்சி ஓடிய அமரர் சிவபெருமானின் தாளில் வீழ்ந்து காக்க வேண்டினர். நஞ்சுண்ணத் தீர்மானித்த சிவன் பார்வதியை நோக்கி 'ஒருவர்க்கு ஒருவர் உதவி செய்யின், எல்லா உயிருள்ளும் தங்கும் திருமால் உள்ளம் உவந்து அருள் பாலிப் பான், தேவர் அஞ்சும் நஞ்சினை நான் உண்பேன்' எனக்கூறி விரைந்தான். காளகூட நஞ்சு சிவபெருமானின் கழுத்திற் தங்கி ஒளிவிட்டது. அது எப்படி இருந்தது எனில்' கொடிய வரும் பெரியோரைச் சேரின் குற்றம் நீங்கி நலம் பெற்றுய்வர்' எனக் கூறவும் வேண்டுமோ? சிவன் அந்த நஞ்சினை அருந்திய வேளையில் சிந்திய சில விடத்தைத்தேள், அரவம் முதலியன நுகர்ந்தன. மீட்டும் கடலைக் கடைந்தபோது காமதேனுவும் உச்சைச் சிரவமெனும் பரியும் தோன்றின. பின் கற்பகத்தரு தோன்றியது. பின் சங்கநிதி பதுமநிதி தோன்றின. அவற்றிற்குப் பின் பாற்கடலில் அரம்பையர் உதித்தனர். பின் திருமகள் தோன்றினாள்.

இந்திரன் தவிசு தர, அதிகன் புனல் நல்க, வாசனைப் பொருட்களைப் பூமிமடந்தை உய்க்க, ஐந்து புனித ஆன் பால் முதலியன அளிப்ப, முனிவர் திருமகளை நீராட்டினர்.

அரம்பையர் நடனமாடினர், வருணன் வைசயந்தி எனும் மாலையும்,அயன் அணிகலனும்,கலைமகள் முத்து மாலையும் நாகர் நெற்றிச் சுடிகையும் குண்டலமும் ஈந்தனர், நீலமாலை கையேந்தித் திருமகள் கணவனை நோக்கினள்.

துருவாசர் முதலிய முனிவர் வெகுளி சார்வார்; சனகனாதியர் பேதஞானம் முன்னுவர். மார்க்கண்டர் முதலிய தவத்தோர் இறவாவிடினும் ஐம்புலன் அடக்கிலர்;ஈசன் இடுகாட்டெலும்பு சூடித் திரிவன், திருமால் ஒருவனே குணங்களின் வைப்பு ஆவன். அவன் விரும்பாவிடினும் யானே அவனுடன் கலப்பேன் எனக் கருதிய திருமகள் திருமாலுக்கு மாலை சூட்டினள்.

பின்னும் பாற்கடலைக் கடைய வாருணி தோன்றினாள். அவளை வானோர் சேர்ந்தனர். தன்வந்திரி எனும் முனிவன் ஏந்த அமுதம் தோன்றிற்று. தேவருடன் இகலி அவுணர் அவ்வமுதத்தைப் பறித்தார். தேவர் அஞ்சி மாயனை அடைய, மாயன் அமுதைத் தன் வசமாக்கி மறைந்தான்.

திருமால், மோகினி என்ற பெண் உருவமெடுத்தான். அவுணர் தங்குமிடம் சென்று நடந்தாள் மோகினி. அவள் அழகு கண்டு அவுணர் அயர்ந்தார். அவள் பாதம் பணிந்து அவுணர் 'அமுதம் எமக்கு நல்கிடுக' என அமுத கலசத்தைக் கொடுத்தார். அமுதம் அவள் வழங்கியபோது. 'அறிவில்லாத பெண் இவள் என்று பெரியீர் நீவிர் கருதுவது எவ்வாறு பொருந்தும்?' என்றாள் மோகினி. 'நீ கூறிய சொல் எம்குரு கூறியது போன்றது ஆகவே, நின் சொற்படி யாம் கேட்போம்' என்றார் அவுணர். மோகினி 'நீராடிவிட்டு இன்று உணவு அருந்தாதிருந்து நாளை உண்ணுங்கள்' என்றாள். அவ்வாறே தேவரும் அசுரரும் அன்றைய உணவை நீத்துப் புனல் படிந்தனர். திருமாலை வழுத்தித் தேவர் ஒரு பக்கலும்,அசுரர் ஒரு பக்கலும் அமர்ந்தார்.

அமுதம் தேவர் உண்ண மோகினி அளித்தாள். அவுணர் 'அமுதம் தாவென்று' அவளை வேண்டினர், மோகினி 'சொற்படி கேட்போம் என்ற உரை கடத்தல், நெறியோ' என்றாள்.'வெறுக்கும் இப்பெண்ணே அமுதம் என எண்ணிய அவுணர், அமுதம் அருந்தக் கிடைக்காமல் ஏக்கற்றார். தேவர்

அமுது உண்ணும் போது இராகு என்ற அவுணன் வஞ்சமாகக் கரந்து அமுதுண்டதால் கதிரோன் அது கண்டு வெட்ட அவுணன் இறந்தான். அந்த அவுணனுடைய தலை இராகு என்றும், உடல் கேது என்றும் பெயர்பெற்றுக் கோள்களுடன் சேர்ந்தன. பௌர்ணமி அமாவாசை ஆகிய இருவாவிலும் அவை திங்களையும் கதிரோனையும் சாரும்.

மாயனைக் கருதிய விண்ணவர் அமுதம் உண்டார். அவுணர் அண்ணலாம் மாலினை நினைக்காது ஆசை மட்டும் கொண்ட. காரணத்தால் கிடைத்தற்கரிய அமுதம் கிட்டியும் துய்க்கப் பெற்றிலர்; இது இயற்கையாம். திருமால்பின்னர்ப் பெண் உருவம் மாறித் தன்னுரு எய்தி வானில் கருடனில் ஊர்ந்துபோனான். 'அவுணர் அமரரோடு போர் செய்தனர். அந்தத் தேவர், அசுரர் போரை நினக்குக் கூறுவன் கேட்பாயாக' என்றான் சுகமுனிவன் பரிட்சித்திடம்.

## 4) தேவாசுரர் போர்செய்தல்:

பெண்ணுருவம் நீங்கி மால் செல்வது கண்ட மாவலி முதலிய அசுரர், 'தேவர்கள் தீங்கிழைத்தார், ஆகலின் அவரைக் கொல்வோம்' என எழுந்தார். ஆனை, சிங்கம், பருந்து, மான், ஆடு, திமிங்கலம், கோவேறு கழுதை, தேர், பரி, நரி, கழுகு, அன்னம், காளை, கரடி, புலி ஆகியவற்றின் மேல் அமர்ந்து மாவலி முதலிய அசுரர்கள் இந்த அண்டமே நெரிந்ததென முரசறைந்து வெள்ளானை ஊர்ந்த இந்திரனோடு பொருதார்.

தாருகாசுரன் சண்முகனொடும், சுக்கிரன் குபேரனோடும், போர் செய்தார். காலகேயரும் வசுக்களும் அமர் விளைத்தார். மாவலிமைந்தர் வாணன் முதலிய நூற்றுவர் கதிரவனுடன் போர் செய்தர். துவட்டாவுடன் சம்பான் சமர் செய்ய, இராகு என்பான் மதியொடு பொருதான். காலநேமி யெனுமசுரன் உபேந்திரனொடு போர் செய்தான். மகிடாசுரன் அக்கினியுடன் சண்டை செய்தான். விரோசனன் என்பான் விதாதாவுடன் பொருதான். மாலி, மாலியவான் முதலானோர் கடவுளரொடு பொருதார். கடலுடன் கடல் பொருதியது போன்று தேவரும் அவுணர்களும் போர் செய்தனர். அவுணர் பலரும் தோற்றார்; பலர் உயிர் துறந்தார். தேவருள் சிலரும் தோற்றார்,

இந்திரனொடு பொருத மாவலி மாயத்தால் பலவிதத்திலும் போர் செய்தான். அரக்கியரும் பல மாயைகள் புரிந்தனர். இதனால் வருந்திய தேவர் மாயனை நினைப்ப, மாயன் அங்குத் தோன்றினான். அவுணர் மாயன் வந்தது அறிந்திலர். காலநேமி என்பான் வேலினைக் கருடன் மீது எய்தான். நெடியோனாம் திருமால் அவ்வேலைப்பற்றி அதை அவ்வவுணன் மேல் எறியக் காலநேமி இறந்தான். காலநேமி இறந்தது கண்டு சினந்தமாலி, மாலியுவான் முதலானோர் திருமாலொடு பொருது மாய்ந்தனர்,

இந்திரனொடு பொருதிய வலனெனும் அசுரனும், நமுசியும் இறந்தனர். நாரதன் அங்குத்தோன்றிப் போரை விலக்கினான்.

சுக்கிரனின் மந்திரத்தால் போர்க்களத்தில் மாய்ந்த காலநேமி, நமுசி, முதயோர் உயிர் பெற்றார். திருமாலை வணங்கிய தேவர் தம் இருப்பிடம் சார்ந்தார்.

'அமுதம் பெற்ற தேவரோடு சினந்து அவுணர் இயற்றிய போரினை இதுகாறும் இயம்பினேன், இனி, உருத்திரன், மோகினி வடிவத்தைப் பரிவுடன் பார்த்த கதையை நினக்குக் கூறுவன் பரிட்சித்தே' எனச் சுக முனிவன் தொடர்ந்தான்.

5) **மோகினியுருக்காட்டியது.**

தேவருக்கும் அசுரர்க்கும் இடையிலேற்பட்ட போரில் அவுணர் மயங்கத் திருப்பாற் கடல் கடைந்த திருமால் பெண்ணுருவம் எடுத்த பான்மையைக் காணும்பொருட்டு உருத்திரன் பார்வதியொடும் திருமாலது இருக்கை சார்ந்தான். திருமாலிடம் உருத்திரன், 'கண்ணா, நீ கொண்ட பெண்ணுருவம் காண விழைந்தேன்' எனக்கூறினான் சிவன். தன்னைச் சார்ந்தோர் விழைந்தன நல்கும் திருமால் உருத்திரனின் பார்வையினின்றும் மறைந்தான். உருத்திரன் காண மாயன் பெண்ணுரு எடுத்து நின்றான். பொற்கொடி போல் விளங்கிய அப்பெண்ணின் செவ்வியை யாரே தெரிவிப்பார் என்றான் சுக முனிவன்.

மோகினி அன்னம்போல் நடைபயின்று அப்பால் ஏக, உருத்திரன் பின் தொடர்ந்தான். உமை நகுவாள் என்பதும் கருதானாய்ப் புன்னகை செய்யும் கங்கையையும் பொருட்

படுத்தானாய் உருத்திரன் மோகினியைத் தழுவச் சென்றான். மோகினி மின்னல் போல அவன் கையிலகப்படாதகன்றாள். தொல் முதலாகவும் தாயும் தந்தையுமாய்த் திகழும் திருமாலே அப்பெண் என்பதும் கருதாத உருத்திரன் கானல் நீரைப் புனலென மயங்கி ஓடும் மான் போன்று மோகினி பின் சென்றான். பழம்பகை தீர்த்துக் கொள்ள விரும்பிய காமன் சிவன்மீது மலரம்புகள் எய்தான். உருத்திரன் புலன்வழி ஒழுகினான்.

என்ன செய்திட்டோம் என வெட்கி அஞ்சிய உருத்திரன் வணங்கத் திருமால் ஆழியொடும் காட்சிதந்தான். கயிலை சேர்ந்த சிவன் பார்வதியிடம் 'மாலின் மாயைதனை யாரே கடக்க வல்லார்' எனக் கூறினான்.

உருத்திரன் விட்ட இந்திரியம் பொன்னாக மாறியது. இவ்வாறு உருத்திரனே காம மயக்கத்தால் உழன்றான் எனில், வேல்விழி மாதர் மீது மயக்கினை யாரே வெல்ல வல்லார்? என்று சுகமுனிவன் பரிட்சித்திடம் உரைத்தான்.

**6) வைவச்சுதனாதியர் உரைத்தல்:-**

'அழிவற்ற சுவாயம்புமனு முதலான ஆறு மனுக்களின் வரலாறு உரைத்தேன். மற்றுமுள்ள எட்டு மனுக்களின் வரலாற்றையும் நினக்குரைப்பேன்' எனச் சுகமுனிவன் பரிட்சித்திற்குக் கூறலானான்.

விவச்சுவான் மகன் வைவச்சுதன் என்பான் ஏழாம் மனுவாக ஆயினன். அவன் இக்குவாகு முதலிய பத்து மைந்தரைப் பெற்றான். புரந்திரன் என்பான் இந்திரனாக இருந்தான். சமதக்கினி, கவுதமன், காசிபன், கோசிகன், வசிட்டன், பரத்துவாசன், அத்திரி ஆகியோர் ஏழு முனிவராய் இருந்தார். இறையவனாம் திருமால் வாமனனாகச் சென்று மாவலியிடம் மூன்றடி மண் இரந்தான்.

வைவச்சுதன் என்பான் ஆட்சிக்காலத்தில் உருத்திரர், வசுக்கள், ஆதித்தியர், மருத்துவர், பரிப்பேர்த்தேவர் என்பார் வானவராக விளங்கினர். விவச்சுவான் என்பான் சாயையை மணந்து பெற்ற சாவன்னி என்பான் எட்டாம் மனுவானான். மாவலி என்பான் இந்திரனாவன். சுதபர்,

வீரசர், அமிருதப் பிரபர் முதலானோர் விண்ணவராக இருந்தனர், வியாதன், அசுவத்தாமன், கிருபன், பரசுராமன் முதலியோர் ஏழு முனிவராக இருந்தார். மாவலிக்கு வானுலக அரசு வழங்கிய திருமால் மண்ணுலகில் சாருவ பூமன் என்ற பெயரில் தோன்றினான். ஒன்பதாம் மனுவாகத் தக்கசாவன்னி விளங்கினான். அற்புதன் என்பான் இந்திரனாக இருந்தான். கர்க்கராதியர் தேவராவர். துதிமான் முதலியோர் முனிவர் ஆவர். அம்புதரை என்பாள் வயிற்றில் திருமால் இடபனாகத் தோன்றி உலகு காத்தான்.

பிரமசாவன்னி பத்தாம் மனுவானான். சம்பு, இந்திரன், விபுத்தர் முதலியோர் அமரர்; சயன் மூர்த்தி முதலோர் முனிவர். திருமால் இடவச்சேனனாய்த் தோன்றி உலகினுக் கருள் செய்தான்.

தருமசாவன்னி பதினொன்றாம் மனுவானான். விகங்கர் முதலோர் அமரர், அருணன் முதலோர் முனிவர்; வைதிருதன் இந்திரன் ஆவன். தரும சேதுவாகத் திருமால் தோன்றி உலகு புரந்தான்.

உருத்திரசாவன்னி பன்னிரண்டாம் மனுவானான். இருது தாமன் தேவர்கோன் ஆவன், அரிகன் முதலோர் அமரர், அருந்தவமூர்த்தி முதலோர் ஏழ் முனிவராவர்; சுதாமன் என்ற பெயருடன் திருமால் தோன்றி உலகிற்கு அருள் சுரந்தான்.

தேவ சாவன்னி பதின்மூன்றாம் மனுவானான். திவப்பதி இந்திரன், சுகன்மர் முதலோர் விண்ணவர்; சுதபனாதியர் ஏழ் முனிவர். மாயன் யோகவிபு எனத் தோன்றி உலகு அளித்தான்.

இந்திரசாவன்னி பதின்நான்காம் மனுவானான். பணித்திராதியர் விண்ணவர்; சுசி என்பான் இந்திரன்; சேரக்கின் முதலோர் ஏழ் முனிவர்; பரமன் பானுவாய்த் தோன்றி உலகு புரந்தான்.

ஆயிரம் சதுர் யுகத்தினில் மேவிய பதினான்கு மனுக்களும் அடங்கினால் அக்காலம் பிரமனுக்கு ஒரு பகல்; பகல் அளவிற்குப் பிரமனுக்கு இரவும் வந்து நீங்கியபின் மற்றைய நா [illegible] மாயன் இவ்வாறு வகுப்பான்.

தன்னிடம் தோன்றிய மாயையொடு பொருந்திப் பற்பல பெயரொடும் பற்பல உருவாய் மூக்குணத்தொடும் பயின்றவன் போன்று மாயனிருப்பினும், கொடிய அரவமாகிய இருள் கவியப்பின் சுடரிடும் கதிர் போன்று மனங்கடந்து விளங்கு வான்.

7 வாமனாவதார முரைத்தல் :-

பரிட்சித்து சுகமுனிவனிடம், 'மாயன் மூவடி மண் கொள்ளும் பொருட்டு வாமன உருவமெடுத்து அவுணன்பாற் சென்றானெனச் சுருங்க உரைத்தனை; அதனை விளங்க உரைப்பாயாக' எனவேண்டச்சுகமுனிவன் உரைக்கலுற்றான்.

மாவலி என்பான் உலகனைத்தும் வெல்லக் கருதிச் சுக்கிரனைக் கொண்டு வேள்வி முற்றுவித்துத்தேரும் வில்லும் கணையும் பெற்று,வேதவிற்பன்னர் ஆசி கூறப் பிரகலாதனின் பொன்னடி போற்றித் தேரேறிப்புடைசூழப் பொன்னுல கடைந்தான். அவுணர், தேவர்உலகினை வளைத்துக் கொண்டது கண்டஞ்சிய தேவர் இந்திரனொடும் சென்று பிரக ஸ்பதியிடம் தேவர்கள், 'தோற்ற அவுணர் இப்போது நம்பதி வளைத்தது யாது கருதி' என வினவத் தேவர்தம் குரு கூறலானான்.

தேவர் அசுரர்க்கிடையே நிகழ்ந்த போரில் அடைந்த தோல்வியால் ஏற்பட்ட துன்பம் நீங்குமாறு சுக்கிரன் வேள்வி யியற்றி வாளியும்,வில்லும், தேரும் பெற்றுத் தேவலோகத்தை அடைந்துள்ளான்' என்றான், பிரகஸ்பதி. ஆசானாகிய சுக் கிரனின் அருள்பெற்ற அவுணர் வெற்றி கொள்வது இயல்பாம். குருவைப் போற்றாநீவிர் துயரடைவீர். போர் வலிமை உமக்கு இல்லை. ஆகவே நீவிர் மறைந்து வாழ்தல் வேண்டும் சில காலம்; இவ்வாறு மறைந்து உறைவீராயின் செருக்கிய மாவலி யை மாயன் வதைத்து நும் வறுமை போக்குவன்' என்று பிரகஸ்பதி கூறலும், அவுணர் கண்டால் எங்கே தம்மைக் கொன்று விடுவரோ என்றஞ்சிய தேவர் மாற்றுருவம் கொண்டு மறைந்தார். தேவர் வேறு வேறாகச் சென்று மறையவும், மாவலி மூவுலகும் புரக்கும் காவலனாகி ஒரு நூறு புரவிவேள்வி செய்து புகழொடு திகழ்ந்தான்.

மைந்தரெல்லாம் பதியிழந்து வாடுதல் கண்டு நொந்த அதிதி தன் கணவன் காசிபனை வணங்கி 'என்மைந்தர் துயர் நீங்கிச் சிறப்புற வாழ அருள்க' என்றாள். அது கேட்ட முனிவன் 'மாயனை வழிபட்டால் உன்குறை தீரும்'என்றான். அதிதி 'மாலினை வழிபாடு செய்யும் வகையுரைக்க' என வேண்ட முனிவன் கூறலானான். 'அழிவிலா மகப் பெறுதல் குறித்து எனக்குப்பிரமன் உரைத்த பயோவிரதம் பற்றிக்கூறு வேன் கேட்பாயாக' எனத் தொடர்ந்தான், காசிபன்.

பங்குனித்திங்கள் வளர்பிறைப் பருவத்தில் அமாவாசைத் திதியில் வராக உருவமான மாயனது உருவத்தைப்பன்னிரண்டு திதியும், கருதப்படும் பதினாறுவகை உபசாரங்களுடனும் தொழுதால் மனத்திடர் தீரும். குறித்த திதி தோறும் பாலருந்திப் பரமனை வழுத்தி மகிழ்ந்து குரு எய்த, நிதியினை உலகினர்க் களித்து அறுசுவையுண்டி மறையோர் உண்ண வழங்கிடுக' என்றான்முனிவன். அதிதி அம்முறைப்படியே விரதம் நிகழ்த்தி னாள்.மாயன் அதிதி முன் தோன்றினான்.மாயனைப் போற்றி வணங்கித் தன் மனக்குறை கூறினாள் அதிதி. அது கேட்ட மாயன்' உன் குற்றம் நீங்குமாறு ஓர் அம்சத்தால் நான் தோற் றரவு செய்வேன்' எனக் கூறி அகன்றான்.

மாயன் தான் கூறியவண்ணமே அதிதியின் வயிற்றுக் கருவில் வந்தெய்தினன். புரட்டாசித் திங்கள் வளர்தருபக்கம் குணத்தொடும் சேர்திதி பன்னிரண்டின் நடுப்பகலில் வாமன னாகத் தோன்றினான். பிரகஸ்பதி தற்பரனாம் வாமனனுக்கு முப்புரிநூல் அணிவித்தான். ஏழ் முனிவர்களும் மாலுக்குத் தருப்பையைக் கொடுத்தார். பிரமன் கமண்டலமளித்தான், அதிதி தன் மகனுக்குக் கோவணமளித்தாள். பூமாதேவிமான் தோல் ஈந்தாள். தேவர் வெண்குடை வழங்கினர். சந்திரன் தண்டம் தந்தான். தாதை காசிபன் முஞ்சிப்புல்லாற் செய்த அரைஞாண் அணிந்தான். கதிரவன் காயத்ரீமந்திரம் உரைத் தான். குபேரன் பிச்சைப் பாத்திரமாகப் பொற்கலமீந்தான், பார்வதி அதிற் பிச்சையிட்டாள். இவ்வாறு வாமனனுக்கு இரண்டாம் பிறப்பாக உபநயனம் புரிந்தார்.

வஞ்சமாய்ப் பிறப்பெடுத்த மாலாகிய வாமனன் மாவலி இயற்றும் பருவேள்விக்கு எழுந்தான். யாகம் நடத்தப்பெறும் நருமதையாற்றுப் பூங்கரை நண்ணினான். 'சிற்றடி வாமனன்

கேள்விக்கு எழுந்தருளியது நான் முன் செய்த தவப்பயனாற் போலுமென்று கூறி மாவலி மகிழ்ந்தான். 'கருதிய ஊரும் பொருளும் பெறுவதற்கோ, விரும்பிய கன்னியினை மணத்தற்கோ, அன்னம் அருந்திடற்கோ, இங்கு வந்தது – விளங்கக் கூறின், நல்குவேன்' என மாவலி வாமனனை நோக்கிக் கூறினான். பின் மாவலி அதிதிக்குச் செய்ய வேண்டுவன எல்லாம் குறைவற÷ செய்து முடித்தபின் வாமனனை வணங்கி 'விரும்பியது விளம்பின் நல்குவன்' என்றான். சிறுவனாகிய திருமால் கூறலுற்றான்.

'வேள்வியியற்றும், வலிமைசால் வெள்ளியருளால் குறிப்பறிந்து கொடுக்கும் ஈகைப் பண்புடன் பிறப்பது நும்குலச் சிறப்பாகும். பிரகலாதனின் பெயரனாகப் பிறந்துள்ள நின் வலிமையை யாரே பகர வல்லார்? தேவர் வேண்ட ஆயுளை ஈந்த விரோசனன் மைந்தனாகப் பிறந்த நின் ஈகைப் பண்பை யாரே அளக்கவல்லார்? எம் காலினால் மருவும் மூன்றடி மண் தருவாயாக' என்றான் வாமனன். 'அந்தண, மூன்றடி மண் தருக என வேண்டுதல் ஏன்?' என்றான் மாவலி.

பிள்ளை வாமனன் பேசுவான்: தேசம் பெற்றால் உள்ளம் தீவை அவாவும், தீவைப் பெறினும், நிலைக்காது. ஆசையாம் நோயினுக்கு இறுதியென்பதேது? பெற்றவை கொண்டு பெருமகிழ்ச்சியடைவோர் முத்தியடைவர்; பெற்றனவிடுத்துப் பெறாதவைக்கேங்குவோர் சுற்றமோடும் கெடுவர்; தம்முன் தோன்றும் ஆசையை உவப்பினால் அடக்கும் அந்தணரே அறிவாளர்'

விரும்பியது கொடுப்பேன் என மாவலி கொடுக்க இருந்த சமயத்தில், குருவாகிய வெள்ளி 'ஒளிமிகுந்த திருமகள் கேள்வனாம் திருமால் காசிப முனிவனின் மகனாகி இங்குத் தோன்றி வானுலகத்தைப் பெற்று இந்திரனுக்களிப்பான் வேண்டி வந்துள்ளான்' என்றான்; ஆகுமொரு மூன்றடி மண் வழங்குவேன் என்றனை; பூமியில் ஓரடியும், பூமியின் மேலுள்ள அழகிய உலகமெல்லாம் ஓரடியாகவும் வைத்து வளர்வான் இவன். அஞ்சத்தக்க மூன்றாமடிக்கு மண்எவ்வாறு வழங்குவாய் நீ? கொடுத்தால் அது கொடையன்று; உன்னையும் சுற்றத்தையும் ஒரு சேர அழித்து நரகுலகு அடைய ஏதுவாகும்; குற்றம் பொருந்திய உன் விருப்பத்தை விட்டொழிவாயாக;

ஒருவன் தன் பொருளை ஐந்து கூறுகளாக்கி முறைப்படி வழங்கிடல் வேண்டும்; இப்படி ஒருவனுக்கே அனைத்தையும் வழங்கிடாதே.

ஊடல் கொள்ளும் மாதரிடத்துரைக்கும் பொய்யும், மறையோர், பசு, பொருட்கு உண்டாம் அழிவு அகற்றுகையில் கூறும் பொய்யும், நன்மைபயக்கும். இரந்துஉண்ணும் துறவியர் குற்றமற்ற செய்கையினின்றும் பிறழ்ந்து செழும்பொருள் பெற மனத்துள் விருப்பங்கொண்டு வந்தார்களாயின், அவர்தம் விருப்பத்தைப் பொய்யால் மாற்றுதல் குற்றமின்று வள்ளலே! வந்திருப்போன் அந்தணன் என நினையாதே, உலகுண்டவனாகிய திருமால் என்பதறிந்திடுக' என்று பல அறிவுரை பகன்றான் சுக்கிரன்.

அப்போது மாவலி, 'கொடுப்போம் எனக்கூறி மறுத்தவர் நரகஞ்சேர்ந்து நலிவர் என அறம் உரைத்தாய். என் உள்ளம் தெளியும் வகையில் இந்த அரிய நல்லறத்தினை அன்று எனக்குக் கூறினாயில்லை. நரகத்திற்கும் பகைவர்கைப் பகழிக்கும் பயமில்லை; என் உள்ளம் வசைக்கும் அந்தணர் வெகுளிக்கும் அஞ்சும்; நின்போலும் அந்தணர்தாம் மேகத்தைப் பழிக்கும் கொடை வள்ளலே! விரைந்து நல்கிடுக, என்னை விடவும் இரக்கப்பட்டார் நெஞ்சம் இல்லை என்பதை எங்ஙனம் உள்ளும்.

வறிய அந்தணர் இன்புற ஒரு பொருள் வழங்குதலால் நரகுலகு கிட்டும் என்றாலும் ஈதலே நன்று. திருமால் வாமனனாக வந்து மண் கவர வந்துளான் எனில் அதைவிடச் சிறந்த பேறு வேறெனக்கு ஏதுளது' என்றான் மாவலி. அப்போது சுக்கிரன் 'ஆசான் கூற்றை மதிக்காமல் கொடுப்பதையும் குலத்தியல்பு எனக்கூறிய அரசனே! வறுமையாற் பெருந்துன்பம் எய்துவாயாக' என வசவுரை (சாபம்) பகன்றான். மாவலி வாமனன் வேண்டியவாறு நல்கிட, பெற்று மகிழ்ந்தனன் வாமனன்.

மாவலியின் மனையாளாகிய விந்தியாவலி என்பாள் நீர்வார்த்திட, மாவலி வாமனனின் பாதத்திலும் கையிலும் நீர் வார்த்திட்டான். மாவலி வாமனன் கையில் அன்பின் நீர் அளித்ததும் தேவர் பூமாரி பெய்து பேரிகை கொட்டினர் மகிழ்ச்சியால்.

மாலின் செங்கையில் மாவலி வார்த்த நீர் செல, வளர்ந்த் மாயனின் உருவப் பெருமையை யாரே பேசவல்லார்? ஒரு தாள் பாரெல்லாம் மூடிற்று, பிறிதொரு தாள் முகிலைக் கிழித்து ஊடுருவிற்று அண்டத்தை. விண்ணுக்கும் மண்ணுக்குமாகப் பரமன் 'விராட்' எனும் விஸ்வரூபம் எடுத்து விளங்கினான். ஐம்புலப் பேருருவம் கண்டு நின்றான் மாவலி தேவர் மகிழ்ந்தார். பிரமன் மலர்தூவிப் பரசினன். திருமாலின் பாதத்தில் பிரமன் பெய்த கமண்டல நீரானது கங்கையாய்ப் பெருக்கெடுத்து மூவுலகினும் பாய்ந்தது.

மாயவன் வஞ்சனை செய்தானென்று அவுணர் சீற, மாவலி' இது தேவர்தம் நற்காலம்' எனக்கூறித் தேற்றினன்.

'கடலாற் சூழப்பட்ட உலகெலாம் ஓரடியாய் ஓங்கும், பெரிய ஆகாயம் ஓரடியாவது; ஏனையோரடி எங்ஙனம் நல்குவாய், தாராது போயின் நரகமெய்துவாய்'. எனக் கூறிடும் வருண பாசத்தாற் கட்டுண்டான் மாவலி. 'ஆசான் சினத்தால் நான் இப்போது இடுக்கண் எய்தினன் போலும்' என எண்ணி மாவலி மாலைக்கண்டு வழுத்தி 'நின் திருப்பாதத் தினின்றும் வழியும் நீரை என் தலையிற் தாங்கி நிலைபெற்ற பெருஞ் செல்வத்தை மாவலி எக்காலத்தும் வழங்குவன் என்ற இன்பத்தைப்பெறுவதன்றித் துயரடைதற்கு எக்குற்றமுடை வன்யான்' எனக் கூறிவருணபாசத்தை நீக்கினான் மாவலி.

'இறைவ, நீ கூறுகின்ற ஓரடியயை என் சென்னி மீது வைத்து அளப்பாயாக' என்றான் மாவலி. அப்போது மாயன்' இரு சுடர் வீசும் தேவருலகும் தாழும்படி செல்வம் பெற்றுச் சுதலலோகத்தில் நீ அரசாள்வாய்; யாம் நின் வாயில் காப்போம்; எட்டாம் மனுக்காலத்து வேந்தன் (இந்திரன்) அரசும் அளிப்போம்' என்று வரமளித்தான் மாயனின் கட்டளையால் மாவலி சுற்றத்தொடும் சுதல லோகமடைந் தான். பிரகலாதன் இணையடி வாழ்த்த அவனுக்கும் வரமளித் தான் பரமன். 'நாடோறும் என்னை அங்குக் காண்பாய்' என மால்வரமளிக்கப் பிரகலாதன் சுதல லோகம் நோக்கிப் பெயர்ந்தான். திருமால் பின்னர் இந்திரனுக்கு அரசு நல்கி அமரர் யாவர்க்கும் அவர்தம் இருப்பிடம் அருளினன். சுக்கிரனைப் பார்த்துத் திருமால், 'வேள்விக்குரிய குறைக்

காரியங்களையும் செய்திடுக' என்று கூற, சுக்கிரன்' அண்ணலாகிய நீ ஈண்டுப் பொருந்தியுள்ளாய், ஆகவே மகத்திற்குப் பின் ஏது குறை? குறையில்லை எனினும், நீ பணித்தவாறு பணி செய்குவன்' எனச் சுக்கிரன் வணங்கி நின்றான். அதிதி மகிழ்ச்சியுற இறைவன் உபேந்திரனாகி விண்ணுலகில் உறைவான். அருகிலுள்ள இளையோன் போல உபேந்திரன் இருந்திட, இந்திரன் மூவுலகும் புரந்து மகிழ்ந்திருந்தான். இக் கதை கற்போர், கேட்போர் இன்பமுறுவர்.

'திருமாலின் திருவிளையாடற் சிறப்புக்கள் அரசே! உரைத்தற்கு எளிதாமோ' என்று சுகன் கூறிடப் பரீட்சித்து, 'மாயன் மீனுருவம் எடுத்த வகையினை விளம்புமாறு' வேண்டினன். சுகமுனிவன் தொடர்ந்தான்.

**8) மச்சாவதாரம் உரைத்தல்.**

பிரளயம் ஏற்படுமென எண்ணிய மாயன் மீன் உருவ மெய்தினான். இறைவன் மீனுருவம் எடுத்த காலத்தில் தமிழ் நாட்டிற் பாண்டியமன்னன் அரசு செய்தான். திருமாலிடத்துப் பக்திபூண்ட அப்பாண்டியன் பெயர் சத்தியவிரதன் என்பதாகும். வையையாற்றில் இறைவன் கயலாக உருவெடுத்தான். பாண்டியன் வையையாற்றில் அருக்கியம் வழங்கத் தாங்கிய புனலிடைக் கயல் தோன்றிற்று. மன்னவன் மீனை வையையாற்றில் விட்டவுடன் மீன் பாண்டியனை நோக்கி' 'சரண் என வந்தடைந்த என்னை, பல்வகைப் பகையுயிர்கள் உள்ள இவ்வாற்றில் ஏன் விடுத்தாய்? தண்சுனை நீரினும் இனிய கமண்டலத்துள் விடுத்து என்னை இனிது காக்க' என மீன் கூறியவுடன் பாண்டியன் அதைக் கன்னலின் நீருள் உய்த்திட, அது விம்மி வீங்கிடவே, அதை எடுத்து நறுமலர் வாவியுள் விடுத்தான் பூந்தடத்து நீரும் நிறைதலால், மீனை எடுத்துக்கடலுள் விடுத்தான். உடனே மீன், 'கடலிடை விட்டுப்புறப்பட்டாய் பாண்டியனே! இக்கடலிலுள்ள, பெரிய மீன்கள் சினந்து என்னைச் சிதைக்கும்' என்றது, பாண்டியன் 'மீனுருவம் கொண்டு இவண் விளங்கும் நீ திருமாலே ஆவாய். இழிந்த இப்பிறவி ஏன் எடுத்தனை?' என வினவினான். அப்போது மீன், 'அரசே இன்னும் ஏழு நாளில் மூன்றுலகும் மறையும்படிக் கடல் பொங்கிடும்; அந்நாள் தோணியொன்று அடையும்; அதில் நின்னையும், உலகுநிறை வித்தையும்,

முனிவர் கணத்தையும் பொறுத்து வலிமையால் வேதம் கவர்ந்தோனைக் கொன்று அவ்வேதங்களைப் பிரமன் துயில் நீங்கியபின் மறை நாட்டுவேன்' எனக்கூறி மீன் கடலுக்குள் சென்றது. பாண்டியனும் பரமனை வழிபட்டு வாழ்ந்து வரும் நாளில் திருமால் சொன்ன வண்ணமே கடல் பொங்கியெழுந் தது. இரவுப் பொழுதில் வரைகள் சாய்ந்தன. கடல் பொங்கி அலைகள் அலைப்பக் கடல்முகட்டில் உறங்கியபிரமனிட மிருந்து உளைப்பரிமிடற்றன் (உறய்க்கிரீவன்) எனும் அவுணன் மறைகளைக் கவர்ந்தான். மீனம் ஆகிய மால் அந்த அவுணனுடன் போரிட்டு மீட்டும் வேதங்களை அளித் தான் பிரமனிடம்,

உலகையும் சத்தியவிரதனையும் தெப்பத் தேற்றிப் பிரமன் விழித்திடும் காலம் வரையும் கடல் முகட்டிடை இருந்தான் மீனமாகிய மாயன். கடல் யாவும் ஓர் எலும்புப் புரையுள் சென்று தங்கியதை யாரும் அறிந்திலர். மயங்கித் தேடி மாயனை வழுத்தி நின்றார். சேலுருவமெடுத்த மாலின் மாண்பினை யாரே சாற்றவல்லார்?

நிலைபெற்ற ஒற்றைக்கொம்பில் வாசுகியாத்த ஓடத்தின் மேல் விளங்கிய முனிவரோடும் சத்தியவிரதன் போற்றிய வுடன் மாயன் தத்துவம் யாவும் விளங்க உரைத்தான்.

பிரமன் உறக்கம்விட்டு விழித்தபோது திருமால் சத்திய விரதன் எனும் அரசனைப் பாதுகாத்து வைவச்சுதன் மனுவாக்கினான்.

இக்கதை கேட்போர் படிப்பவர் பழுதற்ற வீடு எய்துவர் அரசே என்று சுகமுனிவன் கூறினான் என்று முனிவர்கட்குச் சூத முனி உரைத்தான்; பின்னும் சுக முனிவன் சொல்லிய பெருங்கதை வழங்கலாயினன் சூத முனிவன்.

——*——

# ஒன்பதாம் கந்தம்

## 1 இளன் கதையுரைத்தல் :

'சத்தியவிரதன் என்பான் வைவச்சுதமனுவாக ஆட்சி புரிந்தான் எனக் கூறினாய்; அவனது வம்சத்தின் வள்ளல் தன்மை விளங்கச் சொல்வாயாக' எனப் பரீட்சித்து வேண்டச் சுகமுனிவன் இயம்பலாயினன்.

மரீசி முனிவனின் மகன் காசிபனாவன். காசிபன் புதல்வனாகிய விவச்சுவான்தன் மைந்தனே வைச்சுதன் என்பவன். வைவச்சுதன் சிரத்தை என்ற பெண்ணை மணந்து மகப்பேறு வேண்டி வசிட்டன் கூறியபடி யாகம் செய்தவேளை, யாகம் இயற்றிய முனிவன் ஓதாவிடம் மகன் வேண்டினாள்சிரத்தை. ஆனால் ஓதா வஞ்சமாகப், பெண்பிள்ளை தோன்றுமாறு மந்திரம் உரைத்தான்.

இளை என்ற பெண் பிறந்தாள். அப்போது வைவச்சத அரசன் வசிட்டனை நோக்கி 'நான் புதல்வன் வேண்டி யாக மியற்றப் பெண் பிறந்த காரணமென்ன?' என்று வினவ, வசிட்டன் நிகழ்ந்தனகூறிப் பின் திருமாலை வணங்கி, அப்பெண் குழந்தையினைக் குற்றமற்ற ஆணாக்கினான்.

இளன் எனும் பெயருடன் வளர்ந்த அவன் ஒரு நாள் குதிரையேறிச் 'சுகுமாரம்' எனும் வனத்தில் வேட்டையாடச் சென்றான். மீட்டும் அவன் பெண் உருவமெய்தினான். அவன் ஊர்ந்து சென்ற குதிரையும் பெண் குதிரை ஆயிற்று. அப்போது பரீட்சித்து, 'பெண்ணாகி அவர் வருந்துதற்கு உற்ற சாபம் யாது' என வேண்டச் சுக முனிவன் உரைக்கலுற்றான்.

சொல்லப்பட்ட இச் சுகுமாரவனத்தில் பண்டொருநாள் சிவன் உமையொடு கலவி செய்தவேளை. முனிவர் சிவனை வாழ்த்தினர். அப்போது உமை நாணவே. முனிவர் திரும்பினர். நாணிய உமை பின் உருத்திரனை அணைந்தாளல்லள். சிவன் சினந்தான்; அப்போது சிவன் 'இச்சுகுமார வனத்தடைந்த

ஆண் உருவம் பெண் உருவம் ஆகும்' என வசவுரை வழங்கினான். அந்த நாள் முதல் பெருமை மிகு ஆடவர் அங்குச் சேர்ந்திடார்' என்று சுகன் கூறினான்.

இளை என்ற மாதினைப் புதன் தழுவிப் புரூரவவை ஈன்றான். இளன் என்பான் மீட்டும் பெண் உருவம் அடைந்த செய்தியறிந்த வசிட்டன் ஆண் ஒரு மாதமும் பெண் ஒரு மாதமுமாக அமைத்தான் இளனை.

ஆணாக வைகிய திங்களில் இளன் பெண்ணைப் புணர்ந்து சிறுவோரைப் பெற்றான். உத்கலன், கயன், விமலன் என்ற மூவரையும் இளன் தென்திசைக்கு இறையாகச் செலுத்தினான்.

பின் இளன் புரூரவாவுத்கு முடிசூட்டிக் கானகம் அடைந்தான். 'அரசே' மீட்டும் வைவச்சுதன் பெற்றபுதல்வர்தம் புகழைக் கேட்பாயாக' எனச் சுக முனிவன் தொடர்ந்தான்.

## 2 சையாதி கதையுரைத்தல் :

வைவச்சுதன் என்பான் இக்குவாகு, சையாதி, விடத்துரு, நபகன், கவி, ஆதி முதலான பத்து மைந்தரைப்பெற்றான். அவருள் கவி என்பான் எவையும் பிரமம் என்றெண்ணிப் பிரமமாய் நண்ணினான். விடத்துரு என்பான் ஆசான் வசிட்டன் ஆணையால் பசுநிரை மேய்த்து வரும் நாளில் தொழுவத்தே ஒரு புலி தோன்றியது. இருளில் புலி வந்து பசுக்களைத் கொல்லத் தொடங்கிற்று. பசுக்கள் கத்தின. படையொடு சென்ற விடத்துரு, புலியெனக் கருதி ஒரு பசுவினைக் கொன்றுவிட்டான். காலையிற் கொலையுண்ட பசுவினைக் கண்ட வசிட்டன் விடத்துருவைச் சூத்திரனாக வசவுரைத்தான். சூத்திரனாகிய விடத்துருவனமடைந்து மாதவம் இயற்றிய போது காட்டுத் தீயால் சுடப்பட்டுப் பதமடைந்தான்.

சையாதி என்பான் ஒரு பெண் மகவினையும், ஆநத்தன் முதலான புதல்வர் மூவரையும் பெற்றான். சையாதி தன் மகள் சுகன்னிகையுடன் சவனன் உறையும் வனமெய்தினான். சவனன் தவம் இயற்றினான் அவன் உடல் புற்றாகிச் சவனனது கண்கள் மின்மினி போல் தோன்றின. அவற்றைக் கண்டாள் சுகன்னிகை. ஒரு முள்ளை எடுத்து அக் கண்களிற் குத்தினாள். குருதி வடிந்தது. சையாதியோடு வந்தோர்

அனைவரும் குருடராயினர். சையாதி 'யாரோ முனிவருக்குத் தீங்கிழைத்தார். யாவரவர் 'என்று அவன் தேடும் போது சுகன்னிகை' தன் பிழையை ஒப்புக் கொண்டாள். சையாதி முனிவனை வணங்கி 'இப்பெண் அறியாமற் செய்த பிழை பொறுத்தி' என வேண்டச், சவனன், 'நின் மகளை எனக்கு மணம் முடித்துக்கொடு' என்றான். வேந்தனும் பெண்ணை மணம் செய்து கொடுத்தான் முனிவனுக்கு. அப்போது யாவரும் கண் பெற்றார். சையாதி வீரர்களுடன் நகர் சென்றடைந்தான்,

சவனன் 'இப் பெண்ணை அணைய இவ்வுடலம் பயனற்றது. ஆகவே காமன் விரும்பும் அழகுடல் தருவீரெனப்' பரிப்பேர்ப் புத்தேளிரை (அசுவினி தேவர்) வணங்கி வேண்டினான். பரிப்பேர்த்தேவர் அங்குத் தோன்றி அம் முனிவனுக்கு அழகுடல் ஈந்தார்.

அசுவினி தேவர் இருவர் சவன முனிவன் மூவரும் உருவ மொத்து தோன்றினர். சுகன்னிகை தன் கற்புத்திறத்தால் கணவனாகிய சவனரையே சார்ந்தாள். பின் முனிவன், வாக்களித்தவாறு வேள்வி செய்து அவி வழங்கினான். அசுவினி தேவர்க்கு அவிர்ப்பாகம் பெற அருகதையற்ற அசுவினி தேவர் அது நுகர்தல் கண்டு சினந்த இந்திரன் வச்சிரப்படை கைக்கொண்டான். சவனன் இந்திரன் கைதனைச் செயலற்றதாக்க இந்திரனும் உடன்பட்டு வேள்வியை வாழ்த்திப்போயினான். அன்று முதல் பரிப் பேர்த் தேவரும் அவிர்ப்பாகம் பெறத் தொடங்கினர். சவனன் சுகன்னிகையோடு இனிதுறைந்தான்.

காட்டில் முனிவனுடன் வாழும் மகளைக் காண சையாதி வந்தான். 'முதியவனான முனிவனை விடுத்து இவ்விளை ஞனைச் சார்ந்து வாழந்தனை; பிழை, எவ்வாறு நேர்ந்தது' எனத் தந்தை வினவச் சுகன்னிகை நடந்தன கூறினாள். மன்னன் சையாதி அது கேட்டு மகிழ்ந்து தன் நகரடைந்தான்.

சையாதியின் பிறிதொரு மைந்தன் ஆநத்தன் ரேவதன் என்னும் மகனைப் பெற்றான். ரேவதன் என்னும் அரசன் ரேவதியைப் பெற்றெடுத்து அப்பெண்ணை யாருக்கு மணம் முடித்துக் கொடுக்கலாம் என நினைந்திருந்தான். ரேவதன் மலரவனிடம் சென்று கேட்டான். பிரமன் 'பல்லூழி கழிந்த

இப்பாரில் நின்குல வேந்தர் ஒருவருமிலர், நிலப்பொறை தவிர்க்கும் கலப்பைதனைப் படையாகவுடைய பலராமனுக்கு நின் மகளை மணம் செய்து கொடு' என்றான். ரேவதனும் மகிழ்ந்து அவ்வாறே பலராமனுக்குத் தன் மகள் ரேவதியைத் திருமணம் செய்தளித்தான்,

நீண்ட உருவத்துடன் திகழ்ந்த ரேவதியைக் கலப்பையால் சம உருவாக்கி மணமாலை சூட்டினான் பலராமன்.

அடுத்துச் சுகமுனிவன் பரீட்சித்து மன்னனுக்கு அம்பரீடன் கதையினைக் கூறத் தொடங்கினான்,

## 3 அம்பரீடன் கதையுரைத்தல்

வைவச்சுத மனுபெற்ற நபகன் என்பான் நாபகன் என்னும் மகனைப் பெற்றான். நாபகன் தவம்செய்து அம்பரீடனைப் பயந்தான், அம்பரீடன் பிறப்புகள் நீங்க மாயனைப் பணிந்தான்.

அம்பரீடன், தலையால் திருமால் தாள்பணிந்தும், காதால் மால்புகழ்பேசும் நூல்கள் கேட்டும், நெஞ்சால் நினைத்தும், திருமால் கோவில் சென்று கையால் பூசையியற்றியும், நாவால் அரிநாமம் விளம்பி 'எப்பொருளும் மாலது உருவமே' என்றான். அம்பரீடன் புலமைதனை யாரே புகல வல்லார்? வசிட்டன் முதலான முனிவரைக் கொண்டு புரவி வேள்விகள் இயற்றிப் பயன் கருதாமல், ஏழு பெருந் தீவுகளிலும் தன் ஆட்சி நிகழ்த்தினான் அம்பரீடன். வினைவயத்தால் அம்பரீடனுக்கேற்பட்ட வசவுரைதனை மால் போக்கி உலகளித்தான் எனச் சுகமுனிவன் கூற, 'அக்கதை விளங்கக் கூறுக' என வேண்டினான் பரிட்சித்து. முனிவன் தொடர்ந்தான்.

அம்பரீடன் திங்கள்தோறும் விண்டுவின் நாளாம் ஏகாதசியில் உண்ணாநோன்பிருந்து துவாதசி திதியில் அந்தணர்க்குப் பசு நிரையளித்து உணவளித்துப் பின், தான் உணவு அருந்துவான். இவ்வாறு ஒழுகும் நாளில் துவாதசி திதியில் துருவாசன் அங்கு வரவே அம்பரீடன் 'முனிவ ஈண்டு

உணவருந்துக' என்றுவேண்ட, முனிவனும் உடன்பட்டான். அம்பரீடன் துருவாசனைப் பார்த்து' இன்னும் ஒரு நாழிகைப் போதில் உணவருந்திடல் வேண்டும். ஆகவே விரைந்து யமுனை சென்று நீர்படிந்து மீள்க' என வேண்டினான். துருவாசனும் நீராட யமுனையாறடைந்தான். ஒரு நாழிகை கடந்தும் முனிவன் குடில் வந்து சேர்ந்தானிலன். ஆகவே அம்பரீடன் ஏகாதசியில் உண்ணாநோன்பிருந்தவன் ஆகையால் துவாதசியில் ஒரு நாழிகைக்குள் நீர்ப்பாரணை செய்யும் முறைப்படிச்சிறிது, நீரை நுகர்ந்தனன், திரும்பிவந்த துருவாசன் 'அதிதிபூசை ஆற்றுவன் என்று சொன்னசொல் பிறழ்ந்து நீர்ப்பாரணை செய்திட்டாய்' எனச் சினமுற்றான். சினத்துடன் துருவாசன் தன் செஞ்சடையை நிலத்தறைந்து கைவாளொடு ஆற்றல்மிகு பூதமொன்றைத் தோற்றுவித்து 'நீ இவனைக் கொல்' என ஏவ, பூதம் கண்டு அம்பரீடன் அஞ்சவில்லை,

நடந்தனவெல்லாம் கண்டிருந்த திருமால் 'நம் அன்பன் அம்பரீடனைக் காப்பாயாக' என ஆழியை ஏவ, ஆழி பூதத்தைக் கொன்றது. துருவாசனையும் ஆழி துரத்திற்று' கொல்லவரும் ஆழிக்கஞ்சிய முனிவன் மேருமலைக் குகையுள் ஒளிந்து கொண்டான். ஆழி அங்கும் வந்திடவே, அஞ்சிய துருவாசன் பிரமனுலகு அடைந்து,பிரமனிடம் முறையிட்டான். 'மாயன் ஆணையை யாரே மாற்றுவர்'? எனக் கைவிரிக்க, முனிவன் சங்கரனைச் சரண்புகுந்தான்;' மாயன் ஆழியை மாற்றவல்லார் எவருமிலர், தாயினும் அன்புடைய திருமாலி னையே சென்றடைக' என ஆற்றுப்படுத்தினான் அரன். வைகுந்தம் சென்றடைந்த துருவாசன் 'நின்னன்பன் அம்பரீட னுக்கு அறியாமற் தீங்கிழைத்தேன் பொறுத்தருள்க' எனப் பணிய, மாலும் முனிவரனுக்கு அருள்மொழி கூறினான்.

'அன்பர் உள்ளம் என்னிடம் பொருந்தும்; என் உள்ளம் அன்பர்பால் இயைந்திருக்கும்; திருமகளைக் காட்டிலும் அன்பருக்கே அடங்கியிருப்பேன். அடியார்களே எமக்கு இனியார். சுற்றம் முதலியன துறந்து என்பாதங்களையே மனத்துட் கொண்ட அடியார்க்கு இடர் வந்துற்றபோது அவ் விடரைப் போக்காதிரேம். என் உள்ளம், கறவைப் பசு கன்றிடத்துக் கொள்ளும் பாசம் போன்று, அடியாரிடத்து அன்பு கொள்ளும், அன்பருக்குத் துயர் விளைவிக்கக்கருதி

யோர் துன்புறுவது இயல்பே, நின் துயரத்தை அரசனாம் அம்பரீடனே போக்குவான்; அவனைச் சென்று வணங்கு' எனப் பணித்தான் திருமால். மால் சொன்னவாறே துருவாச முனிவனும் அம்பரீடன் பாதம் பணிந்து துதித்தான்; 'என்ன பாவம் இங்கு வந்து இயைந்தது' எனக் கூறி அம்பரீடன் மால் பதம் துதித்தான். அப்போது, ஆழி முனிவனைக் கொல்லாது விடுத்து, அறவாழி அந்தணனாம் திருமால் கையிற் பொருந்திற்று. அம்பரீடன் பின்பு மாதவன் துருவாசனைத் தொழுது உணவருந்த வேண்டினான். ஆழி முனிவனை வெருட்டிய ஓராண்டுக்காலமும் அம்பரீடன் உணவின்றி இருந்து முனிவன் உணவு அருந்தியபின் தானும் உண்டான். துருவாசன் அம்பரீடனை வாழ்த்தித் தேவர் உலகு அடைந்தான்.

சுகேது முதலான மைந்தர் மூவர் அம்பரீடனுக்குப் பிறந்தனர். அவர்க்கு மணிமுடி சூட்டிவிட்டு அம்பரீடன் தவமியற்றக் கானகமடைந்தான். அம்பரீடன் முத்தியுற்றான். அம்பரீடன் தன் மரபும் தழைத்தது. இக்கதை கேட்க விழைவோர் மால் பதமடைவர். இனி 'இக்குவாகுவின் மரபுனக்குக் கூறுவேன்' எனச் சுக முனிவன் இயம்பினான்.

### 4. இக்குவாகுவின் கதையுரைத்தல் :-

வைவச்சுதமனு தும்மியபோது மூக்கிலிருந்து உதித்தவன் இக்குவாகு என்பான். விகுக்கி, நிமி, தண்டகன் முதலிய நூறு புதல்வர் இக்குவாகுவிற்குப் பிறந்தார்.

அவருள் விகுக்கி என்பான் தாதை ஏவத் தென்புலத்தார் கடன் கழிக்கக் காட்டிற்குச் சென்று முயல் முதலியன வேட்டையாடி, பசி வருத்தவே வேட்டையாடிவற்றுள் சில முயல்களை அருந்தி எஞ்சியவற்றைக் கொணர்ந்தான். அது கண்ட வசிட்டன், 'இவை பிதிர்க்கடனாற்றத் தகுதியற்றன' என்றான். மீட்டும் இக்குவாகு தன் மகன் விகுக்கியைக் கானகம் ஏகுமாறு பணித்தான். அவ்வாறே காட்டையடைந்து 'முயலைத் தின்றவன்' என்று பலரும் ஏசப் பல ஆண்டுகள் வனத்திடைத் திரிந்தான் விகுக்கி. தன் தந்தை இக்குவாகு இறந்த பின் முடி சூட்டி அரசாண்ட விகுக்கி, புரஞ்சயன் எனும் மைந்தனைப் பெற்றான்.

புரஞ்சயன் என்பான் ககுத்தன், இந்திரவாகனன் என்ற பெயர்களும் அடைந்தான். அப்பெயர்கள் புரஞ்சயன் அடையக் காரணம் என்னவெனில், அசுரர் வெருட்டப் பதியிழந்து ஓடிய தேவர்களுடன் சென்ற பிரமன் திருமாலைப் பணியப் பிரமனைப் பார்த்துத் திருமால்'புரஞ்சயனிடத்து எமது ஓரம்சம் பொருந்தும். ஆகவே அவனை நீவிர் அடையின், போரில் அசுரரை வென்று பதியடைவீர்' என்றான். 'தேவரும் புரஞ்சயனிடம் சென்று உதவுமாறு வேண்ட,அவன் 'இந்திரன் எனக்கு ஊர்தியாய் வரின், நும் துயர் தீர்ப்பேன்' என்றான்.

இந்திரனும் விடையாக உருவெடுத்துப் புரஞ்சயனை முதுகிற்தாங்க, புரஞ்சயன் அசுரரைப் போரில் வென்று தேவர்க்கு உலகளித்தான். இந்திரனாகிய விடையின் திமிலில் புரஞ்சயன் தங்கியிருந்தான் ஆகையால் ககுத்தன் (திமிலில் நின்றவன்) என்ற பெயரும், இந்திரவாகனன் என்ற பெயரும் புரஞ்சயனுக்கு ஏற்பட்டன. புரஞ்சயனுக்கு 'அனேனசு' என்னும் மைந்தன் பிறந்தான். அனேனசு என்பானுக்குப் பிருது என்பான் மகனாவான்.பிருதுவின் மகன் விச்சுவகந்தன். விச்சுவகந்தனுக்குச் சபத்தன் எனும் மகன் பிறந்தான். சபத்தன் மகன் பிரகதாச்சுவன் என்பவனாவான்.

பிரகதாச்சுவன் மகன் குவலாயாச்சுவன். குவலயாச்சுவனுக்கு இருபத்தோராயிரம் பேர் மைந்தராய்ப் பிறந்தார். அச்சிறுவரோடு துந்து என்ற அசுரன் போரிட்டு மூச்சுக் காற்றால் அவர்களைக் கொன்றான்.மூவர் மட்டிலும் உயிர் பிழைத்தார். மைந்தரை யிழந்து வருந்திய குவலயாச்சுவன் சினந்து துந்து எனும் அந்த அசுரனைப் போரிற் சந்தித்துக் கொன்றான். அதனால் குவலாயிச்சுவன் துந்துமாரன் எனப் பெயர் பெற்றான்.உயிர் பெற்றுய்ந்தமூவருள் திடாச்சுவான் என்பான் அரிச்சுவனைப் பெற்றான். அரிச்சுவனுக்கு நிகும்பன் பிறந்தான்.

நிகும்பனுக்குப் பரிகிணாச்சுவன் மகனாவான்.பரிகிணாச்சுவனுக்குக் கிருதாச்சுவன் பிறந்தான். கிருதாச்சுவனுக்குச் சேனசித்தன் புதல்வனாயினன். சேனசித்தன் என்பான் யுவனாச்சுவன் என்பவனை மகனாய்ப் பெற்றான்.

யுவனாச்சுவனுக்கு மகப்பேறில்லை. தன் மனைவியர் நூறு பேர்களுடன் அரசன் மகம் பெற வேண்டிக் கானக

மடைந்தான். அங்கு முனிவரர் மகவுதிப்ப மகம் செய்தார். நீர் வேட்கையால் யுவனாச்சுவன் யாகசாலையில் முனிவர் வைத்திருந்த மந்திர தீர்த்தம் நிறைந்த குடத்திலிருந்து நீரெடுத்து அருந்தினான். அறிந்த அந்தணர், 'அரச, உன் வயிற்றில் அரிய மகன் பிறந்திடுவான்' எனக் கூறினர்.

யுவனாச்சுவன் இறக்காதபடி மால், அரசனது வயிற்றைப் பிளந்து கொண்டு பிறந்தான். இந்திரன் அங்குத் தோன்றி அக்குழவிக்கு மாந்தாதா எனும் பெயரிட்டு அமுதம் அளித்தான். ஒரே நாளில் உலகம் வியப்புற வளர்ந்தான் மாந்தாதா.

சிறந்தமுறையில் ஆட்சிநடத்திய மாந்தாதா சசவிந்துவின் மகளாம் விந்துமதியை மணந்தான். மைந்தர் மூவரும், புதல்வியர் ஐம்பதுபேரும் மாந்தாதாவுக்குப் பிறந்தனர்.

மகளிர் ஐம்பதுபேரையும் சவுபரிஎனும் முனிவற்கு மணம் முடித்துத் தந்தான், மாந்தாதா. அக்கதையாவது: சவுபரி முனிவன் யமுனையாற்றில் மூழ்கி நெடுநாள் தவமியற்ற, மீன்கள் அவன் சுற்றமாயின; முனிவனும் அவ்வாறே உறைய எண்ணினன். நினைந்த சவுபரி மாந்தாதாவிடம் வந்து 'புதல்வியருள் ஒருத்தியை எனக்கு மணம் முடித்துக்கொடு' என வேண்டினான். மாந்தாதா, வந்த முனிவனது உருவின்மை கண்டு 'கன்னியர் விரும்பின் வழங்கத்தடையில்லை' என்றான். 'கன்னியர் வரனாக வரித்திடின் நீ வழங்குவாயா?' என வினவினன் முனிவன்.

மாந்தாதா, தம் பெண்கள் உறையும் அறையின் வாயில் காப்பானாகிய கஞ்சுகி என்பவனிடம்' இம் முனிவனை அப் பெண்கள் இடத்திற்கு அழைத்துச் சென்று அவர் திறம் இவனுக்குக் கூறு' எனச் சொன்னான். அரசன் பணித்தவாறு கஞ்சுகி முனிவனை அழைத்துச் சென்றான். முனிவன், மன் மதனும் ஏக்கமுறும் அழகிய வடிவெடுத்தான். முனிவனைப் பெண்டிர் முன் நிறுத்தி 'இவன் நுமக்குப் பொருந்தினனோ' எனக் கூறினான் கஞ்சுகி. 'இங்கு மன்மதனே எழுந்தருளினனோ' என வியந்த மாந்தாதவின் புதல்வியர் முனிவனைச் சூழ்ந்தார். 'முந்த நான் மாலை சூட்டிடுவேன்' என ஐம்பது பேரும் சவுபரிதனை மொய்த்தனர். கஞ்சுகி செய்தியினை அரசனிடம் சென்று உரைத்தான். மாந்தாதா ஐம்பது புதல்வி

யரையும் சவுபரி முனிவனுக்கே மணம் முடித்துத் தந்தான். மாதவன் மங்கையரோடு மயனியற்றிய மாடத்திற் குடிபுகுந்தான். ஐம்பது உருவமெடுத்துச் சவுபரி தோகையர்தம் நலம் துய்த்து வாழ்ந்தான்.

சவுபரியுடன் மனைவியர் ஐம்பதுபேரும் கானகம் சென்றடைந்தார். மகவாசையால் மன்னன் மாந்தாதாவும் கானகமடைந்தான். மக்கட் செல்வத்துடன் சவுபரி மகிழ்ந்து வாழ்ந்தான்.

காமம் நுகர்ந்த சவுபரி சலிப்பெய்திப் போகம் நீக்கி மாலை நினைந்து தவமியற்றி முக்தியடைந்தான். சவுபரியின் மனைவியரும் வீடு பெற்றார்.

## 5 அரிச்சந்திரன் கதையுரைத்தல்

தம் முன்னோர்களாகிய அம்பரீடன், புருகுச்சன், முசுகுந்தன் ஆகியோர் பெயர் துலங்கச்சிறப்புடன் ஆட்சிபுரிந்தான், யுவனாச்சுவன். யுவனாசுவனுக்கு அரிதன் எனும் மகன் பிறந்தான். அரிதனுக்கு மாரிதன் மகனாயினன். மாந்தாதாவின் புதல்வனாகிய புருகுச்சன் பகைவரை ஒழித்துச் சிறந்தான். மகிழ்வுற்ற நாகர்தம் உடன் பிறந்தவளாகிய நருமதை என்பாளைப் புருகுச்சனுக்கு மணம் செய்து கொடுத்தார். புருகுச்சனுக்குத் திரசதசியன் என்பான் பிறந்தான். திரசதசியன் என்பானுக்குக் குச்சன் மகனாயினான். அயோத்தியையாண்ட குச்சன் அநரண்ணியன் என்பானைப் பெற்றான். இராவணனால் போரில் உயிர் துறந்த அநரண்ணியனுக்கு அரியச்சுவன் என்பான் பிறந்தான். அருணன் அரியச்சுவனுக்கு மகனாவன். அருணன் மகன் பந்தனன். பந்தனனுக்குச் சத்தியவிரதன் பிறந்தான். சத்திய விரதனின் மகன் திரிசங்கு என்பான் ஆவன்.

திரிசங்கு என்பான் வசிட்டனால் கானகம் சென்று சண்டாளனாய்த் திரிந்து கோசிகன் அருளால் சுவர்க்கம்புக, அமரர் ‘இங்கு வாராதே’ எனத்தள்ள, வெகுண்ட கோசிகன் வீழ்ந்த திரிசங்குவை விண்ணிலே நிறுவினான். இன்னமும் இவ்வாறு விண்ணிற் திகழும் திரிசங்குவின் புதல்வனே அரிச்சந்திரனாவான். அரிச்சந்திரன் நிமித்தம் வசிட்டனுக்கும் கோசிக முனிவனுக்கும் சீற்றம் பிறந்தது.

அரிச்சந்திரன் பிள்ளைப் பேறின்றித் துயருற்ற நாளில் நாரதன் அரிச்சந்திரனை அடைந்து 'நீ வருணனை நினைத்துத் தவமியற்று' எனக் கூறிப் போனான். வருணன் அரிச்சந்திரன் முன் தோன்றி 'நீ வேட்டவாறு மகன் வழங்குவேன், ஆயின் பிறந்த மைந்தனை நற்பசுவென மகம்புரிவாய் கொல்' எனக்கேட்க, அரிச்சந்திரன் ஒப்பினான். வருணன் அருளால்' அரிச்சந்திரனுக்கு மகன் பிறந்தான். மகனுக்கு 'ரோகிதன்' எனப் பெயரிட்டான் அரசன். 'மகவு ஒரு பசுவென மகம் விரைந்து செய்' என வருணன் தோன்றிக் கூறினான். அப்போது அரிச்சந்திரன் 'ரோகிதனாகிய பசு இன்னமும் சிறுவனாயுள்ளான். மழலை மாறவில்லை, புனிதமாம் குணம் வாய்த்திலது' என்றியம்பிட, வருணனும் உடன்பட்டு மறைந்தான்.

பல் முளைத்தபின் வருணன் மகம் செய்யுமாறு வேண்ட அரிச்சந்திரன்' பல் விழுந்து வரிசையாக இன்னும் பற்கள் முளைத்தில' என்றான். வருணன் மகம் செய்யக்கோரி வந்த சமயத்தெல்லாம் மன்னவன் மகன் மீது கொண்ட பற்றினால் ஏதேனும் காரணம் கூறி வந்தான். இதையறிந்த ரோகிதன் தவம் செய்தற்காக வனமடைந்தான். மன்னவன் அரிச்சந்திரனே மகனைத் தவமியற்ற வனத்திடைப் போக்கினான் எனக் கருதிச் சினந்த வருணன் மன்னவன் வயிற்றில் நீரை நிறைத்தான். அரிச்சந்திரனுக்கு மகோதரன் என்ற பெயர் ஏற்பட்டது.

தவமியற்றக் கானகம் சென்ற ரோகிதன் தன் தந்தை அரிச்சந்திரன் மகோதரநோயால் துன்புறுதல் கேட்டு' 'என்னைக் கொன்று வருணன் தந்தையின் வயிற்றுநோய் தணிக்கினும் மிக நன்று; நாட்டிற்குச் சென்று தந்தையைக் காண்பேன்' என எண்ணி ரோகிதன் புறப்பட்டான். இடையில் இந்திரன் தடுத்து ரோகிதனிடம்' புண்ணிய தீர்த்தங்களிற் படிந்தால் ஏதம் தீரும்' என்றான். ரோகிதனும் அவ்வாறே புண்ணியதீர்த்தமாடி வரும் போது இரிசிக முனிவரின் மைந்தருள் நடுமைந்தனாம் சுனச்சேபனை அரும்பொருள் கொடுத்து வாங்கித் தந்தை அரிச்சந்திரன் முன் விடுத்தான் ரோகிதன். அரிச்சந்திரன் வருணன் வேண்டிய நரமேத யாகத்தை நிறைவேற்றிப் பிணி போக்கினான், மகம் இயற்றிய போது கோசிகன், ஓதா, சாமகன், வசிட்டன், அத்துவரியு,

பிருகு, சமதங்கி முதலானோர் பங்கேற்றார். வருணன் அரிச்சந்திரனுக்குப் பிணி தீர்த்தருளினான். இந்திரன் பொன்தேர் அளித்தான். மகத்திற் பலியிடப் பட்ட சுனச்சேபன் கதையைப் பின்னர் சுகமுனிவன் உரைப்பான்.

அரிச்சந்திரன் பின்பு ரோகிதனுக்கு முடி சூட்டிக் கோசிகன் உபதேசத்தால் தவமியற்றிப் பதமடைந்தான்.

**6) சகரன் கதையுரைத்தல்.**

அரிச்சந்திரன் மகன் ரோகிதன் என்பான் அரிதன் என்பானை மகனாகப் பெற்றான். அரிதனுக்குச் சம்பன், பிறந்தான். சம்பனுக்குப் பிறந்தவன் சுதேவன் என்பான். சுதேவன் உயிர்த்த மகன் விசயன் என்பர். விசயனுக்குப் பிறந்த மகன் ருருகன் என்பான். ருருகன் மைந்தன் விருகன். விருகன் மைந்தன் வாகுகன். வாகுகன் பகைவரால் விரட்டப் பட்டுக் கானகம் எய்தினான். ஊருவன் எனும் முனிவனது ஆச்சிரமம் அடைந்து மனைவியொடும் சில நாள் வாழ்ந்து இறந்தான் வாகுகன். வாகுகன் மனைவி கணவனுடன் தீயுற்புகநினைந்தாள். மாற்றவள் வாகுகன் மனைவிக்கு விடம் அளித்தாள். வாகுகன் மனைவி விடத்தினொடு ஒரு மகனைப் பெற்றெடுத்தாள்.

கொடிய விடத்தொடும் பிறந்ததால் அவனுக்குச் சகரன் என்ற பெயர் ஏற்பட்டது. சகரன் பகைவரை ஒழித்துச் சிறந்த முறையில் ஆட்சிபுரிந்தான், குருவாகிய வசிட்டர் சகரனிடம் 'பகைவர்தமைக் கொல்லுதல் ஒழித்து அருள் செய்திடுக' என்று கூறவே சகரன் பகைவர்தம் தலைமயிரைக் களைந்து' 'இத் தோல்விக் குறியுடன் ஓடுங்கள்' என்றான். பின் சகரன் அசுவமேதயாகம் புரிந்தான். மகக்குதிரையை இந்திரன் வௌவிக் கொண்டு போய்த் துறக்க நகரில் கபில முனிவனிடம் விட்டான். சகரன் முதலோனார் 'குதிரை எங்குச் சென்றது' எனத் தேடலாயினர்

சகரனின் புதல்வர் அறுபதினாயிரம் பேரும் குதிரையினை நிலமெங்கும் தேடினர். மகக்குதிரை கண்டிலர். நிலத்தைத் தோண்டித் துருவித் தேடினர். திருமாலே இவன் எனக் கருதப் பட்ட கபில முனிவன் இருந்த இடம் சென்று சகரன் புதல்வர்

க்ண்டார். குதிரை அங்கு இருத்தல் கண்ட சகரன் புதல்வர் 'நீதான் குதிரையைக் கொண்டு வந்தாயோ' என வெவ்வுரை பகர்ந்தனர். முனிவன் கபிலனது வசவுரையால் மைந்தர் அனைவரும் நீறாயினர். தூதரால் செய்தியறிந்த சகரன் தன் பெயரனாகிய அஞ்சுமான் என்பானை விளித்து 'நீ குதிரையை இங்குக் கொணர்தி' என்றான். இவ்வாறு சுகன் மொழிந்ததும் பரிட்சித்து 'அஞ்சுமானைப் பெற்ற தந்தையின் திறம் கூறுக' என்றான். சுகமுனிவனும் அஞ்சுமான்தன் தாதை திறம் இயம்பலுற்றான்.

சகரன் என்பான் சுகேசினி என்பாளைக் கூடி, பார் இகழும் அசமஞ்சன் என்ற மகனைப் பெற்று வாழ்ந்து வரும் நாளில், ஒரு நாள் அசமஞ்சன் கானகம் சென்றனன். அப்போது உடன் வந்த மைந்தரைச் சரயு நதியிற் தள்ளி மாய்த்தான். உலகமெல்லாம் அசமஞ்சனைப் பேதையன் எனத் தூற்றிற்று. சகரனிடம் வந்த சிலர் அசமஞ்சன் செய்த செயலைக் கூறி வருந்தினர். சகரன்அசமஞ்சனை வைது காட்டிற்கனுப்பினான்.

தன்னால் சரயுவில் வீழ்ந்து மாய்ந்தவர் உயிர்பெற்று எழுந்திட அருளிப் போனான் அசமஞ்சன். சரயுவில் இறந் தவர் உயிர்பெற்றெழுந்ததைக் கண்ட சகரன் 'மகனாகிய அசமஞ்சனைக் காட்டிற்குச் செல் என ஏவினேனே' என்று எண்ணி உள்ளம் நைந்தான்.

சகரன் ஏவலால் குதிரை மீட்கச் சென்ற அஞ்சுமான் குதிரை கபிலன் பக்கல் இருக்கக்கண்டான். முனிவன் வசவுரை யால் பலர் இறந்து சாம்பலாய்க் கிடந்ததும் கண்டான். அஞ்சு மான் கபிலனைக் குறித்துத்தவம் நிகழ்த்தினான். கபிலன் அஞ்சுமானிடம்'கங்கை இவ்விடம் வந்தால் இறந்த மன்னவர் பொன்னகர் அடைவர், நீ இக்குதிரையினை வேள்வியிடத் திற்குக் கொண்டு செல்க' எனக் கூறினான்.

அஞ்சுமான் குதிரையோடும் தன் இடத்தை அடைந்தான். சகரன் வேள்வி முற்றுவித்து விண்ணவர் மகிழச் செய்தான். சகரன் பின் அஞ்சுமானிடம் அரசாட்சி நல்கி வனத்திடைச் சென்றான்.

## 7 பகீரதன் கதையுரைத்தல்

கபிலன் சினத்தால் இறந்த தன் தந்தையரைக் கற்பக நாடெய்துமாறு கங்கை வந்தெய்துதற்கு அஞ்சுமான் தவம் இயற்றியும் கங்கையாள் அங்கு வந்திலள். அஞ்சுமான் தன் மைந்தன் திலீபனும் கங்கைமாநதி நோக்கித் தவமியற்றினான். அப்போதும் கங்கை வரவில்லை. திலீபன் பகீரதன் என்னும் புதல்வனை உயிர்த்தான். பகீரதன் பல நாள் தவமியற்றியதும் உருத்திரன் சடைவழிக் கங்கை வந்துற்றது. கங்கையாறு பாதலத்தை உற்றுப் படிதலும் மாய்ந்த சகரன் புதல்வர் அறு பதினாயிரம் பேரும் விண்ணுலகடைந்தார். மால் பதத்தில் பொங்கியெழும் கங்கையாள் தன்னிற் படிந்தோரின் பிறப் பறுத்து நலம் செய்வள் என்பது பூவுலக வழக்கு. இவ்வாறு, கங்கையாறு திருமால் பாதம் கழுவி உருத்திரன் சடைவழிச் சுழன்று வீழ்ந்தது. அக்கங்கையானவள் அகம் மகிழ்ந்து பகீரதன் பெயர் புனைந்து பாகீரதி என வழங்கப்படுகிறாள் எனில் நிலம் தாங்கிய பகீரதன் புகழை யாரே புகல வல்லார்? பகீரதனுக்குச் சுருதன் என்பான் பிறந்தான். சுருதனின் தோன்றல் நாபாவரன் என்பான் ஆவன். நாபாவரன் என் பவன் சிந்துத்தீபன் எனும் மகனைப் பெற்றான். சிந்துத் தீபனுக்கு அயுதாயு எனும் மகன் பிறந்தான்.

அயுதாயு மகன் இருதுபன்னன் என்பானாவன். இருது பன்னன் சந்திரவம்சத்தவனான நளனோடு நட்புக் கொண்டு வாழ்ந்தான். நளன் இருதுபன்னனுக்குப் புரவியின் உள்ளமறி யும் வித்தை உரைத்தான். இருதுபன்னனுக்குச் சருவகாமன் என்பான் பிறந்தான். சருவகாமன் என்பானுக்குச் சுதாசன் எனும் மகன் பிறந்தான்.

சுதாசன் என்பான் மித்திரசகன் என்பானை உயிர்த்தான். மித்திரசகன் மதயந்தியை மணந்தான். மித்திரசகன் அயோத்தி யில் சிறப்புற அரசாண்டு வருகையில் வசிட்டனின் வசவுரை யால் கன்மாடபாதன் எனும் பெயரோடு காட்டை எய்தினான்.

'மித்திரசகனுக்கு வசவுரை எக்காரணத்தால் வந்தெய்தி யது, விளங்கக் கூறுக' எனப் பரீட்சித்து வேண்டச் சுக முனிவன் தொடர்ந்தான்.

**8) கன்மாடபாதன் சரித்திர முரைத்தல் :-**

மித்திரசகன் வேட்டையாடக் கானகம் சென்ற போது கொடிய அரக்கன் ஒருவனைத் தண்டித்தான். அரக்கனை அழித்தல் அறிந்த இளைய அரக்கன் கொடுந்தொழில் செய்யும் நோக்குடன் மனிதனாகி அரசனைத் தொழுது அரசனுக்கு உணவு தருவோருடன் சார்ந்தான்.

தென்புலத்தார்க்கு ஊட்டுநாள் (சிரார்த்ததினம்)வந்ததால் மித்திரசகன் வசிட்டனை அன்புடன் அழைத்து உண்பித்தான். அப்போது கொடியோனாகிய அரக்கன் நரஞுன் அளித்தனன். நரமாமிசம் கொடுத்தவனுடைய வஞ்சம் அது என்றறியா வசிட்டன்'இவ்வூன் தின்னும் இராக்கதனாகுக'என அரசனுக்கு வசவுரை (சாபம்) வழங்கினான்.

வசிட்டன் நரமாமிசம் அருத்தியது அரக்கனிழைத்த மாயம் என உணர்ந்து 'அரசே! அறியாமல் யான் வழங்கிய வசவுரை பன்னிரண்டாண்டு அடைந்து ஒழிக' என்றான். புனலைக் கையிலேந்திய மித்திரசகனும் 'நினக்கொரு வசவுரை வழங்குவேன்' எனத் துணிந்தபோது அரசனின் மனைவி மதயந்தி 'நின் குலத்தில் குருவை வைதவர் உண்டு கொல் மன்னவ?' என்றாள். அப்போது மித்திரசகன் 'எவ்விடத்தும் உயிரினம் உள்ள இப்பாரில் இச்சுடுபுனல் எங்கு விடுக்க 'எனக் கூறித் தன்னிருபதத்தில் விடுவித்தான் கால்கள் கருகின. ஆகவே மித்திர சகனுக்குக் கன்மாடபாதன் (கருகிய கால்களையுடையோன்) என்ற பெயரும் ஏற்பட்டது. மித்திரசகன் காட்டையடைந்து மனிதரைக் கொன்று உறையும் நாளில் அந்தணன் ஒருவனைக் கண்டு, 'நீ உணவாக மேவினையோ' எனக் கூறி அந்தணனைப் பற்றினான் கன்மாடபாதன். அந்தணன் மனைவி 'அரசே' ஆராயாமல் வசிட்டன் தந்த வசவுரையால் அரக்க வடிவெடுத்தாய்; சிலநாள் கழித்து நீ மீட்டும் பழைய உருவை அடைவாய். உன் குலத்தோர் பகைவரிடமிருந்து வேதியரைக் காப்பதல்லால் தாமே அந்தணருக்குத் துன்பம் இயற்றுநர் உண்டோ கூறுக' என அழுது நின்றாள்.

அந்தணன் மனைவி அழுது புலம்பியும் கேளாத கன்மாடபாதன் அந்தணனது தசையுண்டு என்பை உமிழ்ந்தான். கன்மாடபாதன் துப்பிய தன் கணவனது எலும்பையெல்லாம்

எடுத்துத் தீயிற் சொரிந்தாள் அந்தணன் மனைவி. பின் அந்தணன் மனைவி 'அரசே நின் வசவுரை நீங்கி நீ ஊருக்குச் சென்று எழில் வாய்ந்த மதயந்தி முதலான மனைவியரைக் கலந்தாய் எனில் இறப்பாயாக' என வசவுரை வழங்கிப் பின் எரி மூழ்கினாள்.

சிலநாள் கானகத்தில் வைகிய பின் கொடிய வசவுரை நீங்கி மன்மதன் போலும் அழகிய உடலுடன் மித்திரசகன் நகரம் சென்று சேர்ந்தான். அரசன் தன் மனைவி மதயந்தி யின் நலந்துய்க்க அவளை நெருங்க, மதயந்தி அப்போது காம இன்பம் காதலித்த அந்தணனைக் கொன்று மறையோன் மனைவி சினந்து வழங்கிய வசவுரையை நினைவூட்டினாள். அது கேட்டு வருந்திய அரசன் வசிட்டனை அணுகி மகப் பேறடைய அருளுமாறு வேண்டினான்.

இவ்வுலகாளும் மகனைப் பெறுதற்காக மித்திரசகன் மனைவி மதயந்தி வசிட்டனைக் கூடி ஒரு மதலையை வயிற்றி லடைந்தாள். ஏழாண்டுகளாகியும் மகவைப் பெறாத மதயந்தி வருந்திக் கல்லால் வயிற்றில் (அஸ்மம் – கல்) எற்றினாள். அச்சுமகன் என்ற மகன் பிறந்தான் மூலமெனும் நன்னாளில் அவன் பிறந்ததால் அவனுக்கு மூலகன் என்று பெயரிட்டார். பெண்கள் மூலகனைப் பரசுராமனுக்கு மறைத்துப்போற்றிய தால் மூலகன் நாரீகவசன் எனும் பெயரையும் அடைந்தான்.

மூலகன் தயரதனை உயிர்த்தான். தயரதன் அளபிடி என்பானை ஈன்றான். அளபிடி என்பான் விச்சுவசகன் என்பானை மகனாகப் பெற்றான். விச்சுவசகன் என்பான் கட்டுவாங்கன் என்பானை உயிர்த்தான். கட்டுவாங்கனைத் தேவர் அணுகி 'அருள்க' என வேண்டினர். கட்டுவாங்கன் வானோர் உலகெய்திப் பகைவர் பலரை அழித்தான். சமர் முடிந்தபின் தேவர் கட்டுவாங்கனிடம் 'அண்ணலே! நினக்கு ஆயுள் இன்னமும் ஒரு முகூர்த்தம் உள்ளது' என்றனர். கட்டுவாங்கன் நிலத்தை நண்ணினான். மால் பதம் கருதிய கட்டுவாங்கன் முத்தியடைந்தான். கட்டுவாங்கன்தன் புகழ்க்கு வரம்பு எவர் பகர்வர்?

கட்டுவாங்கன் தீர்க்கவாகு என்ற மகனை உயிர்த்தான். தீர்க்கவாகு என்பான் ரகுவைப் பயந்தான். ரகு எனும் அரசன்

அசன் எனும் அரசனை ஈன்றான். அசன் என்பான் தசரதனை மகனாகப் பெற்றான்.

'தசரதன் மைந்தன் என்றுரைப்ப, அமரர்க்கு அருள் தர வேண்டித் திருமால் தன் அம்சத்தாலும், அம்சத்தின் அம்சங்களாலும் இராமன், இலக்குவன், பரதன், சத்துருக்கன் எனும் நால்வராகத் தோன்றிப் பதினான்கு உலகினையும் ஆண்டான்' எனக் கூறினான், சுகமுனிவன்.

9) சக்கரவர்த்தி திருமகன் சரித முரைத்தல்:-

'திருமால் எழுந்து வானவர்க்கருள் செய்த வகையினை விளக்கிக் கூறுக' எனப் பரீட்சித்து வேண்ட, சுக முனிவன் கூறலுற்றான்.

திருமாலைத் தேவர்கள் தொழுது 'அரக்கர்தமையழித்து எமைக் காத்திடுக' என வேண்டினர். திருமால் பணித்தவாறு தேவர்கள் குரங்கு உருவங்கொண்டு நிலத்திற் சேர்ந்தார்.
தயரதன் கோசலை, கைகேயி, சுமித்திரை எனும் மூவரைக் கோமுறையில் மணந்தான். அரக்கர்தம் போருக்கஞ்சிய தேவர் வேண்டலால் திருமால் இராமன் எனும் பெயரால் கோசலை பெற்றிடத் தோன்றினான். இராமனின் பாதம் போற்றும் பரதனைக் கைகேயி பெற்றாள். நிலத்தின் துன்பந் துடைத்துத் துலங்கச் செய்யும் இலக்குவனையும் சத்துருக்கனனையும் ஈன்றாள் சுமித்திரை.

இராமன் முதலான நால்வரும் ஜாதகர்மம் முதலியவையும், உபநயனமும் அடைந்தனர். கோசிகன் வேண்டலால் இலக்குவனுடன் சென்ற இராகவன் தாடகை வதைசெய்தான். யாகசாலையிற் பொருத தாடகையின் புதல்வர் இருவருள் சுபாகுவை இராமன் கொன்றான். மற்றொரு புதல்வனாகிய மாரீசனைக் கடலிற் செலுத்தினான்.

விசுவாமித்திரனின் மகம் குறைவற நிறைவேற உதவிய இராமன் பின் அகலிகை எய்திய வசவுரை அகற்றி வளம் மிகுந்த மிதிலையை யடைந்தான். முனிவனொடும் தம்பியொடும் இராமன் சென்று சனகன் எதிர்கொள்ள விதேக நாடடைந்தான்.

சீதையின் மணம் பொருட்டு வைக்கப்பட்ட சிவனது திரியம்பகம் எனும் வில்லானது இற்றிட வளைத்து வீழ்த்தினான் இராமன். அண்டம் இன்று உடைந்ததோ எனக்கோதை வில்லிறுத்த குரிசிலாம் இராமனுக்குச் சனகன் சீதையை மணம் முடித்துத் தந்தான். இலக்குவன், பரதன், சத்துருக்கனன் ஆகிய தம்பியரும் மணம் செய்தனர் மகளிரை. சிலநாள் சீதையுடன் வைகிய இராமன் தன் மனையாள் சீதையொடும் தம்பியரோடும் அயோத்திநகர் நோக்கிப் புறப்பட்டான், கல்லையும் காரிகையாக்கும் காலினான் ஆகிய இராமன் வழியில் எதிர்ப்பட்ட பரசுராமன்தன் வில்லையும் வளைத்து அயோத்தி அடைந்தான்.

தயரதன் இராமனுக்கு முடிசூட்டக் கருதினான். இராமன் கானகம் ஏக ஏதுவாக முடிசூட்டுவதை மாற்றத் தேவர் விரைந்து கூனியின் நெஞ்சினை மயக்கினர். தலைவி கைகேயி தனையடைந்து கூனி என்பாள் ‘உன் மன்னவனாகிய தயரதனிடம் இராமன் காடு செல்லவும், காதல் மைந்தனாம் பரதன் நாடாளவும் முன் வரம் கேட்பாயாக’ எனக் கூறினாள், கூனியின் சொற்கேட்ட கைகேயி தயரத மன்னனிடம் சென்றாள். தயரதனுடைய உள்ளம்தனை அறுக்கும் அரம்போன்று கைகேயி மன்னனிடம் வரத்தால் ‘என் புதல்வனை அரசனாக இருத்தி, இராமனை வனத்திடைச் செலுத்தி’ என வேண்டினாள். அறம் காத்தற்பொருட்டுத் தயரதன் இசைந்தான். இராமனும் வனம் செல்ல வழிக்கொண்டான். சீதையும் இராமன் பின் தொடர்ந்தாள்.

இராமன் கானகம் சென்று விட்டது நினைந்தே தயரதனும் உயிர் நீத்தான். அயோத்தியில் இராமனைப் பிரிந்து எவ்வாறு தங்குவது என்றெண்ணி இலக்குவனும் இராமன் பின் சென்றான். மரவுரிதரித்து அறிவுவடிவாகிய இராமனும் சீதையும் இலக்குவனும் கானகம் போன தன்மையை யாரே புகல வல்லார்? சீதையும் இராமனும் இலக்குவனும் கானகம்போகும் போது பட்டதுன்பம் யாரே பகர வல்லார்? குகன் உதவியால் மூவரும் கங்கையாற்றைக் கடந்தனர். பரத்துவாச ஆசிரமத்தில் இராமன் விருப்புடன் ஒருநாள் தங்கி இலைக்கறியுண்டான். அங்கிருந்து மூவரும் சித்திரகூடம் சென்றனர். சித்திரகூடத்தில் இருந்தபோது இராமன், அன்னையரோடும் பதாகினியொடும் வந்துற்ற பரதனைக் கண்டு தந்தை விண்ணுலகெய்திய

செய்தியறிந்தான். இராமன் சித்திரகூடக் காட்டிலேயே தந்தைக்கு ஆற்றவேண்டிய பிதிர்க்கடன் செய்தான். வாட்ட முற்ற பரதனை நாட்டிற்குச் செல்வாயாக எனப் பணித்தான் இராகவன். இராமனிடமிருந்து பாதுகைபெற்ற பரதன் தன் தமையனைத் தொழுது சுற்றமொடும் புறப்பட்டு நந்திக்கிராமம் நண்ணினான். இராமன், சீதை இலக்குவன் பின்தொடர அத்திரி முனிவரின் ஆசிரமம் அடைந்தான்.

அத்திரி ஆசிரமத்தினின்று புறப்பட்ட இராமன் தண்டகவனம் அடைந்து அங்கு விராதன் என்னும் அரக்கனைக் கொன்றான். தண்டகவனத்திலிருந்து புறப்பட்ட இராமன் சரபங்கன் எனும் முனிவன் உடலம் விடுத்து முத்திபெற அருளினான். பல காதம் கடந்த மூவரும் முனிவர்க்கு அபயம் நல்கிப் பத்தாண்டு வைகினர். பின் மூவரும் அகத்திய முனிவன் இருந்த ஆசிரமம் அடைந்தனர். வழி சொல்லி வில்லும் கணைகளும் அகத்தியன் தர அவற்றைப் பெற்றுக் கொண்ட இராமன் முனிவன் சொல்லிய வழியில் ஏகினான். வழியில் இராமன் கழுகரசனாம் சடாயுவைச் சந்தித்துப் பின் மூவரும் கோதாவரி ஆறு நோக்கிப் புறப்பட்டனர்.

கோதாவரிக் கரையடைந்தனர் மூவரும். பஞ்சவடியில் இலக்குவன் அமைத்த பர்ணசாலையில் மூவரும் தங்கினார். இராவணன் தங்கையாகிய சூர்ப்பநகை எனும் கொடியாள் இராமனைக் கண்டு இச்சித்து அழகுடைய வடிவுடன் அங்கு வந்தாள். சீதையைக் கவர்வேன் என வஞ்சமகள் சூர்ப்பநகை வந்ததறிந்த இலக்குவன் வாளால் மூக்கையும் காதையும் முலைக்கண்ணையும் அரிந்தான். மனங்குலைந்த சூர்ப்பநகை கரன் முதலிய அரக்கரிடம் சென்று இலக்குவன் செய்த தீமையைக் கூற, அது கேட்ட அரக்கர் இராமனை வளைத்து அமர் விளைத்தார். கரன் முதலானோர் இராகவன் தொடுத்த வாளியால் அழிந்தது கண்டு ஆர்த்த தேவர் மலர்மாரி பெய்தார்.

மூக்கறுபட்ட தன் குறை நீக்குமாறு சூர்ப்பநகை தன் தமையன் இராவணனிடம் முறையிட, இராவணன் மாமன் மாரீசனை ஏவ, மாரீசன் பொன்மான் வடிவு கொண்டு புறப்பட்டான்.

பொய்மான் கண்டு அதனழகில் மயங்கிய சீதை அதைப் பிடித்துத் தருமாறு இராமனிடம் கூற, வஞ்சகம் என்றறிந்த

இராமன் அம் மான் மீது கூரிய அம்பொன்றை எய்தான். அம்பால் மாய்ந்து வீழ்கையில் மாசீசன் 'இலக்குவனே' என விளித்து இறந்தான். இராகவனுக்கு ஏதோ ஏதம்விளைந்த தெனப் பிறழ உணர்ந்த சீதை இலக்குவனை யாதென அறியுமாறு அனுப்பினாள். இலக்குவன் தீச்சொல்லை 'அரக்கனே கூறினான்' என்று கூறச் சீதை, 'போய் யாதென அறிந்துவா என நான் கூறியும் மறுத்தனையோ' எனப் புலம்ப இலக்குவன் இராமனைத் தேட விரைந்தான். தனித்திருந்த அன்னையாம் சீதையை இராவணன் கவர்ந்து விண்ணெழுந் தான் காலம் கரந்து கொல்லுதற் குற்றதென உணராதவனாய்,

சானகியைக் கவர்ந்தேகும் இராவணனைத் தடுத்து அமர் முறையால் போர் செய்த சடாயுவின் இரு சிறகுகளையும் துணித்தான் இராவணன், இலங்கைக்குக் கொண்டு சென்ற இராவணன் சீதையைச் சிறையில் வைத்தான். மாயமானை வதைத்து இராகவன் திரும்பும் போது இலக்குவனைக் கண்டு 'சீதையைத் தனியே விட்டு வந்தது ஏன்' எனக் கேட்டான். பின் இராமன் இலக்குவனுடன் விரைந்து பர்ணசாலை அடைந் தான். சானகியைப் பர்ணசாலையிலும் சுற்றுப்புறத்திலும் காணாத இராகவன் துயரடைந்தான்.

மனைவி மேற் செல்லும் காதலை மாற்றத்திறமையுள்ளோர் வினவினால் 'மனைவி இவ்வுலகில் இல்லை' எனச் சார்ந்தவை நோக்கிக் கூறினவற்றை யாரே அறிய வல்லார்?

பஞ்சவடிவிட்டுப் பரமனும் இளவலும் வருங்கால் சிறகு இழந்த சடாயுவைக் கண்டார். நடந்தன கூறி மறைந்தான் சடாயு. இராகவன் சடாயுவுக்கு இறுதிக்கடன் இறுத்தான். பிறகு இருவரும் புறப்பட்டுச் சென்றனர். வழியில் இலக்குவன் அயோமுகி எனும் அரக்கியது மூக்கினைச் சிதைத்தான். பின் இருவரும் கவந்தன் வாழும் வனமடைந்தனர். வனவிலங்கை வதைத்து வரும் கவந்தனை அம்பெய்து கொன்றனர். வச வுரையால் பெற்ற பிறப்பு நீங்கிய இயக்கன் இராமனைத் தொழுது 'நீவிர் சவரி என்பாள் இருக்குமிடம் சேர்வீர்' எனக் கூறினான். இருவரும் சவரி இருக்குமிடம் சார்ந்தார். விருப் புடன் சவரி இலைக்கறி, கிழங்கு முதலியன இராம இலக்கு வனுக்குத் தந்தபின் 'மதங்கர் எனும் முனிவரிருந்த மலையையு

அடைவீர், அங்குக் கதிரோன் மைந்தனாகிய சுக்ரீவனைச் சந்திப்பீர்' எனக் கூறினாள்.

சவரி சொல்லியவாறே இராமனும் இலக்குவனும் விரைந்து போய்ப் பம்பை ஆற்றை அடைந்து அனுமனுடன் நெருங்கிப் பழகி மந்தகமலையில் இருந்த சுக்ரீவனைச் சந்தித்துத் தம் துன்பம் நீங்க அவனுடன் தோழமை பூண்டனர்.

சுக்கிரீவனுக்கு, வாலியோடு போர் செய்யும் வலிமை காட்ட இசைந்த இராமனது பாதம் துந்துமி என்பானது எலும்பை எறிந்திட, மலர்க்கை எய்த அம்பு ஏழு மராமரங் களையும் ஊடுருவியது; அது கண்டு உளம் மகிழ்ந்தான் சுக்கிரீவன். 'தான் தோற்ற சமயத்தில் வாலியைக்கொன்றுவிடு' என இராகவனிடம் கூறி வாலியை வலியப் போருக்கழைத்துப் பொருதான் சுக்கிரீவன்; வரதன் மறைந்திருந்து வாலி மீது அம்பெய்தான். வாலி மடிந்ததும் இராமன் கிட்கிந்தையின் அரசைச் சுக்கிரீவனுக்கு வழங்கினான். கார்காலம் முடியும் வரையும் இராமனும் இலக்குவனும் மதங்க மலையிலேயே தங்கியிருந்தனர்.

கார்காலம் முடிந்ததும் தன்னைவந்து காணாத சுக்கிரீவனைக் 'கொணர்க' என இலக்குவனிடம் இராமன் கூறினான். இலக்குவன் கிட்கிந்தை சென்று சுக்கிரீவனிடம் சொல்லச் சுக்கிரீவன் இராமனைக் காண விரைந்து வந்தான்.

சுக்கிரீவன் சீதையைத் தேடும் பொருட்டு வானரத்தலை வரைத் திசைதோறும் விடுத்தான். அனுமன் முதலானாரைத் தென்திசைக்கு விடுத்தான் சுக்கிரீவன். இராமன் சீதையிடம் கொடுக்குமாறு மோதிரமொன்றையளித்தான்.

தென்திசைக்கண் சென்ற சாம்பவன், நீலன், அங்கதன், அனுமன் ஆகிய நால்வரும் சுயம்பிரபை என்பாள் உதவியால் மகேந்திர மலையடைந்தனர். சீதையை எங்கும் காணாத வானரவீரர் நால்வரும் 'சடாயுவைப் போல் சமர்க்களத்தே மடிந்தோமில்லையே' எனக் கூறி இருந்தனர். அங்கிருந்த சம்பாதி என்பான்—சடாயுவின் தமையன்—'தம்பி சடாயு

இறந்தது எவ்வாறு கூறுதிர்' எனக் கேட்க, நடந்தன முறையே கூறிச் சீதையைத் தேடி வந்ததையும் கூறினர்.

'இராவணன் சீதையொடும் போதல் கண்ட என் மகன் அவனைத்தடுக்க, அப்போது இராவணன் 'அருள் செய்வாயாக' எனப்பணிந்து கூற, என் மகனும் அவனைப் போகவிட்டான்; இலங்கை செல்வீராயின் சீதையைக் காண்பீர்' எனச் சம்பாதி கூறினான். முன்னர்ச் சூரிய வெப்பத்தால் தீய்ந்த சிறகு இராமன் தூதரைக் காணில் பொருந்தும் என்ற வரத்தின்படிச் சிறகு பொருந்திடப் புறப்பட்டான் சம்பாதி.

கழுகரசன் சம்பாதியின் உரை கேட்டு மகிழ்ந்த நால்வரும் யார் கடலைக் கடப்பது எனக் கருதியிருந்தனர். அரிய கடலை 'யான் கடப்பேன்' என எழுந்தான் அனுமன். காற்றின் மாமகனாகிய அனுமன் கடல் கடந்து இலங்கை புகுந்து அசோக மாவனத்தில் சீதையிருக்கக்கண்டு மனம் குளிர்ந்தான்.

அரக்கியர் சூழவும் துயில இரவில் வீழிப்பழம் போலும் சிவந்த வாயையுடைய சீதைமுன்சென்று அனுமன் கற்பரசிக்கு அடையாள மோதிரம்கொடுத்து இராகவன் நிலையுரைத்தான்.

மரங்களை ஒடித்து இராவணன்தன் வீரர்களைக் கொன்றான் அனுமன். 'குரங்கைக் கொல்லுங்கள்' என ஏவிய இராவணன்தன் வீரர்களைக்கொன்றான் அனுமன். அப்போது இந்திரசித்து அயன்வாளியால் அனுமனைப் பிணித்துத் தந்தை இராவணன் முன் விடுத்தான்.

இராவணன் அனுமனிடம் 'நீயாரென' வினவ அனுமன், 'உன்னைக் கொல்லும் இராகவனின் தூதன்'என்றான். அதைக் கேட்ட இராவணன் 'இக்குரங்கை விரைந்து கொல்லுவீர்' எனக் கூற, அங்கு வந்த வீடணன் 'தூதரைக் கொல்லுதல் அறமன்று' எனக் கூறித் தடுத்தான். பின்பு இராவணன், 'இக்குரங்கின் வாலில் துணியைச்சுற்றி நெருப்பை வையுங்கள்' என ஏவினான் அரக்கரை. அவ்வாறே அரக்கர் அநுமனின் வாலில் நெருப்பை வைத்தவுடன், மாருதி அந்நெருப்பால் நகர் முழுதும் சுட்டான். சீதையிருக்குமிடம் தவிர அநுமன் நகரெங்கும் நெருப்பிட்டான். பின் சீதையிடம் சென்று அவள் வழங்கிய சூடாமணியைப் பெற்றுக் கொண்டு கடலைத் தாவி

மகேந்திரமலைக்கு வந்துசேர்ந்தான் மாருதி. அநுமன் அங்கதன் முதலானோரிடம் சீதையைக் கண்ட வரலாறு கூறிப்பின் அவரொடும் விரைவிற் சென்று இராமனுக்கும் சீதையைக் கண்டமை தெரிவித்தான்.

கடல் கடந்த அநுமன் இராமனிடம் இலங்கையில் நிகழ்ந்த வற்றைக் கூறிச் சீதை வழங்கிய சூடாமணியினை இராமனிடம் கொடுத்தான். இராமன் சூடாமணியைத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

சுக்கிரீவன் முன்னே செல்ல, அநுமனும் நீலனும் முதலான வானர வீரர் சூழ, இலக்குவன் அருகில் வர, இராமன் கானகம் கடந்தான். இராமன் கடற்புறத்தில் வந்து தங்கினன், பாற்கடல் வைகிய புன்மை போன்று நூற்கடல் கடந்த இராகவன் வானரச் சேனையென்னும் பெரிய கடலிடை வைகினான்.

இராமன் சேனையொடும் கடற்கரை இருந்தான் என ஒற்றர் மூலம் அறிந்த இராவணன் புன்மையரான தம்மவ ரொடும் ஆலோசனை புரிந்தான். அப்போது வீடணன் இராவணனிடம் 'சீதையைச் சிறை வீடு செய்திடு' எனப் பல அறமொழிகள் கூற, இராவணன் சினந்து 'நீ இங்கிருந்து கடிது ஒழிந்திடுக' என்றான். கோபத்தால் தன் தமையன் இராவணன் தன்னை நீக்கியதும், வீடணன் இராமனிடம் சென்று சரண டைந்தான். அநுமன் பரிந்துரைக்க இராமன் வீடணனுக்குத் தஞ்சம், அளித்தான். அவ்விடத்தே இராமன் 'இலங்கை அரசனாகுக' என வீடணனுக்கு முடி சூட்டினான். இராமன் கருத வருணன் வந்துற்றான். பின் வானரப்படைகள் கடலுள் மலைகளைப் பெய்து நூறு யோசனை தூரம் அளவுள்ள அணையை நளனைக் கொண்டு அமைத்தன. இராமன் படையொடு சுவேல மலையை அடைந்தான். உளவறிய வந்த சுகன், சாரணன் ஆகிய தூதரிடம் இராமன் 'எங்கள் பலத்தை இராவணனுக்குக் கூறுங்கள்' எனக் கூறினான்.

தூதர் வந்து கூறிய செய்தியறிந்த இராவணன் கோபுரம் நின்று நோக்கினான். இராமனும் அங்கு நோக்கினான். சுவேல மலையேறி இராமனுடன் நோக்கிய சுக்கிரீவன் விரைந்து தாவிப்போய் இராவணனின் மாமுடி மண்ணில் வீழ்த்தித் திரும்பினான், இராமன் அங்கதனை இராவண

னிடத்துத் தூதாக விடுக்க, இராவணன் கோபங்கொள்ள, அங்கதன்மீண்டவுடன் வானரச் சேனை மதிலை வளைத்தன.

மதிலைச் சூழ்ந்து எதிர்த்த அரக்கரை வானரக் கூட்டத்தார் அழித்திட, இராமன் இராவணனுடன் எதிர்த்துப் போர் செய்தான். இராமன் தசமுகனுடன் செய்த போரை யாரே சொல்ல வல்லார்? இராவணன் படைக்கலங்கள் அற்று நின்றான். அப்போது இராமன் இராவணனிடம் 'படைக்கலம் இழந்த நீ, இன்றுபோய் நாளை வா' என்றான். நாணமுற்றுத் திரும்பிய இராவணன், தம்பி கும்பகர்ணனிடம் 'நீ உன் புயவலி காட்டு' என விடுத்தான்.

தேவரும் வெருளக் கொடிய போர் செய்தான் கும்பகர்ணன். இராகவன் விடுத்த கணையால் கும்பகர்ணன் தலை அறுக்கப்பட்டுக் கடலுள் ஆழ்ந்தது. அடுத்து இராவணன் தன் மகன் அதிகாயனைப் போர் செய்ய ஏவினான். அயன் வாளியை எய்து இலக்குவன் அதிகாயனை இமைப்பொழுதிற் கொன்றான். அடுத்து இராவணன் தன் மகன் இந்திரசித்துவைப் போருக்கனுக்பினான். விண்ணில் ஒளிந்தவண்ணம் இந்திரசித்து அரவக்கணை விடுத்தான். இலக்குவனும் இராகவனும் அக்கணையால் கட்டப்பட்டனர். பெரிய திருவடியாம் புள்ளரசு கருடன் அங்குத்தோன்ற அக்கணை நீங்கிற்று. இராகு நீங்கிய மதிபோன்று தம்பியொடும் எழுந்த மாயனைத் தொழுதான் கருடன். கருடன் போனபின், வானரப்படை கடல்போல் ஆரவாரித்து எழுந்து அரக்கர்கோன் ஏவலால் வந்துற்ற அரக்கர்தமைப் போரிட்டுக் கொன்றன. மீட்டும் களத்தில் வானரப்படை அஞ்சச் சிலையொடும் இந்திரசித்து தோன்றினான்.

இந்திரசித்து எவிய அயன்படையால் அனுமன் தவிர அனைத்து வானர வீரரும் பதைத்து வீழ்ந்தார். மாருதிசஞ்சீவி மலை கொணர வானரப் படைவீரர் துயில் விடுத்து எழுந்தார் போல உயிர்பெற்று எழுந்தார். மாயத்தால் மறைந்துசென்று இராவணி (இந்திரசித்து) நிகும்பலை என்னும் இடத்தில் துயர் விளைக்க வேள்வி இயற்றினான். வானரப்படையுடன் இலக்குவன் அங்குற்று அமர் செய்தான். தேர்ஊர்ந்த இந்திரசித்தும், மாருதிபுயத்தேறி இலக்குவனும் செய்த போர்த் திறத்தைப் பங்கயனும் விரிக்கல் ஆற்றான்! இந்துவின் கணை

(அர்த்த சந்திரபாணம்)விடுத்து இலக்குவன் இந்திரசித்தனைக் கொன்றான். தேவர் மகிழ்வெய்தினர். இந்திரசித்து இறந்தது கேட்ட தசமுகன் இருபது விழிவழி நீர் சோரத் துயர்க்கடல் புக்கான். பின்னும் இராவணன் போர் செய்திடவே துணிந் தான். மூலமாபலமெனும் வீரர்களை ஏவ இராகவன் அவரை யும் கொன்றான். இராவணன் பின்பு தானே தேரூர்ந்து கள மடைந்தான்.

இந்திரன் தேர்ப்பாகனாகிய மாதலி கொணர்ந்த தேரில் ஏறி இராமன் வில்லை வளைத்து' ஒரு பெண்ணை கரவாகக் கவர்ந்து சென்ற கள்வனிவன்'எனச்சினந்து களமடைந்தான். இராமராவண யுத்தம் நிலத்தில் நடக்கின்ற சமர்க்கெல்லாம் உவமையாக, இமையவரும் சாற்ற, இராமன் இராவணனுடன் செய்த பழமையான போர்க்கு உவமையாக வேறு எதனைக் கூற? அயன் படை விடுத்து இராகவன் இராவணனை மாய்த் தான். மகிழ்ந்த இமையோர் மலர் மாரி பொழிந்தார்.

துயர் மிகுந்த அரக்கியர் அழுது அரற்றக் கைலாயமெடுத்த இராவணன் முதல் அமரில் மடிந்த அரக்கர் யாவருக்கும் வீடணன் இராமன் அருளால் பிதிர்க்கடன் இயற்றினான்.

இலங்கை நாட்டைக் காக்க வீடணனுக்கு ஒரு கற்பம் ஆயுள் அளித்து, கற்பரசியாம் சீதையைப் புட்பக விமானத்து வைத்து இலக்குவனோடும் இராமன் எழுந்தான். இலங்கையி லிருந்து இராமன் கிட்கிந்தையடையச், சுக்கிரீவன் முதலிய வானரர் மனைவியரோடும் சீதையை அருகிருந்து பார்த்துக் களித்தனர். இராமன் பின்னர் சீதைக்கு அருகிலிருந்த தவத் தோர் சாலைகளை எடுத்துக் கூறினான். பின் இராமன் பரத்து வாசன் அளித்த விருந்தினை ஏற்றான். குகனோடும் யாவரும் புடைசூழ இராமன் வருதலை அனுமன் முன் சென்று நந்திக் கிராமத்திலிருந்த பரதனிடம் கூறப், பரதன் தாயரொடும் தமையனை எதிர்கொள்ளப் புறப்பட்டான்.

பரதன் சத்துருக்கனனுடன் சென்று இராமனை வணங்கி னான். விமானத்திருந்து இறங்கிய இராமன் இளைஞரைத் தழுவிப் பின், தம்பி இலக்குவனோடும் தாயரைப் பணிந்தான், பின் வசிட்டனை வணங்கினான் இராமன்.

தாரைமுதலான மங்கையர் சூழச் சீதைமாமியர் மலர்த்தாள் பணிந்தாள்.பின்யாவரும் நந்தியம்பதிக்குப்புட்பகவிமானத்திற் சென்றனர்.

இளைஞராம் பரதன், சத்துருக்கனன், வானரர், வீடணன், குகன், மற்றுள்ளோருடனும் நந்தியம்பதி அடைந்து அமர்ந்த இராமன் புட்பகந்தனை'நீ மந்திரிபால்போ'கென விடுத்தான்.

வானரப்படை சூழ, இன்னிசை முழங்க, சுக்கிரீவனும் வீடணனும் கவரி வீச, மாருதி கவிகை நிழற்றப் பரதன் தேரோட்ட இராகவன் அயோத்தி மாநகர்க்கெழுந்தான்.

மக்கள் அயோத்தியை அமராவதிபோன்று அழகுக்கோலம் புனைந்தார். இராமன் வந்தவுடன் மழை கண்ட பயிர்க்குலம் போன்று, யாவரும் கண்டு மகிழ்ந்தார். இராகவனைக் கண்டு அசையும் பொருளும் அசையாப்பொருளும் அடைந்த இன்பம் உரைக்கடங்காது. அரசனாம் இராமன் இளையோர் சூழச் சீதையுடன் அரண்மனை புகுந்தான். இராமனுக்கு வசிட்டன் மணிமுடி சூட்டினான்.யாவரும்மகிழ இராமன் அரசு செய்தான். ஏக தாரனாம் இராமன் நாட்டில் மழைபெய்ய வளம் சுரந்தன; அறம் தழைத்தன. இராமனாட்சியில் நகரம், நதி, புள், மா, மரம்,மலை யாவும் மகிழ்ந்தன. வேதியர் பொருட்குவை தாமே முகந்து போக, மூவுலகும் போற்ற வசிட்டனாற் பல மகம் இயற்றினான் இராமன்.

இராமகதை கேட்போர், நினைப்போர், நிகழ்த்துவோர் யாவரும் விழைந்தன, எய்தி வாழ்வர்.

**10) தன்னுடைச் சோதிக் கெழுந்தருளிய சரிதமுரைத்தல் :-**

சீதை இராமனுடன் கூடிச் சூலுற்று வைகும் நாளில் 'இராவணன் வவ்விச் சென்ற சீதையை விலக்காமல் இராமன் திரும்பவும் சேர்த்துக்கொண்டதேன்' என ஒரு மூடன் சொன்னதைக்காக்க இராகவன் இலக்குவன் மூலம் சீதையைக் காட்டிற்கனுப்பினான்.

வான்மீகி முனிவன் துன்புற்ற சீதையைத் தேற்றித் தன் பர்ணசாலையில் வாழுமாறு செய்தான். சீதை இரட்டைக் குழந்தைகளை ஈன்றெடுத்தாள்.

வான்மீகி முனிவன் தருப்பைப் புல்லின் (குசையின்) நுனி யால் தடவியதால் மூத்த குழந்தைக்குக் குசன் என்றும், தருப்பையின் அடிப்பாகத்தால் தடவியதால் இளையோன் லவன் என்றும் அழைக்கப்பட்டனர். அவ்விருவரும் பிறை போல் வளரும் நாளில் வான்மீகி சௌளம் முதலான வினைகள் புரிந்தான்.

பரதன் புட்கரன், தக்கன் எனும் இருவரை உயிர்த்தான். இலக்குவன், அங்கதன், சந்திரகேது எனும் இருவரைப் பயந் தான். சத்துருக்கனன் சுவாகு, சுருதசேனன் எனும் இரு புதல்வரைப் பெற்றான்.

சீதையின் உருவினைப் பொன்னாற்சமைத்து இராமன் புரவி வேள்விபத்தாற்றும் போது வேள்விச் சாலையடைந்து வான்மீகி அருளால் சிறுவர் இருவரும், (லவகுசர்) தன் சரிதம் பாடக் கேட்டு மகிழ்ந்த இராமன் பல்பொருள் பரிசளிக்கக் கருதினான்.

'பரிசு பெறுவீர்' என இராமன் கூறியது கேட்ட மைந்தர் 'காட்டில் தவமியற்றுவோர் பொருள் பெறுதல் தீதெ'னக் கூறிப் போயினர். அப்போது இராமன் அவையை நோக்கிச் 'சீதையை அடைந்தே தீருவேன்; அவளைக் கொண்டு வாருங்கள்' எனச் சூளுரைத்தான். தூதர் மூலம் செய்தியறிந்த வான்மீகி இராமன் அவைக்களத்துச் சீதையைக் கொணர்ந்து நிறுத்தி 'இவள் கற்புக்கரசி' எனக்கூறினான். சீதையும் 'நான்' கற்பரசி என்பது உண்மையாகில் நான் சேரத்தக்க வழியைப் பூமித்தாய் தருக' என்றாள்.

யாவரும் மனம், சுழல, பூமி பிளந்து அதில் எழுந்த எரிமணித் தவிசில் சீதையைத் தாங்கிப் பூமித்தாய் ஏற்றாள். அது கண்டு சினந்த இராமன், வில்லை வளைக்கப் பிரமன் 'நீ சினம் தவிர்வாயாக; சீதையாகிய என் தாய் வைகுந்தம் சேர்ந் தாள்; எந்தையே நீயும் வைகுந்தம் பொருந்துவாயாக' எனக் கூறிப் போனான். சீதையைப் பிரிந்த இராமன் அவள் பிரிவிற் காக வருந்தினான் எனில், மனைவியரைப் பிரிந்து யாரே உயிருடன் வைக வல்லார்?

பின் இராமன் மைந்தரைப் புல்லி உச்சி மோந்தான். பதின்மூன்றாயிரமாண்டு ஆட்சி புரிந்த இராமன் தன் புதல்வருக்கும், பரதன் முதலியோர்தம் புதல்வருக்கும் மௌலி சூட்டிச் சரயு நதியில் மூழ்கினான்.

கோசல நாட்டுச் சராசரம் யாவும் பொன்னுலகடைய அருளிய இராமன் பாம்பணைதுயிலும் ஆதி மூர்த்தியாய்ச் சென்றமர்ந்தான்.

இராமன் சரிதை கூறும் மாதவரும் வானவரும் வீடெய்துவர். இராமகதை பாடுவோர் வீடு அடைவர்; இக்கதை கேட்போர் துயரற்ற நலம் துய்ப்பார்.

குசன் என்பான் அதிதி என்பனைப் பெற்றான் அதிதியின் மகனாக மருத்து என்பான் தோன்றினான். மருத்து என்பான் தவமியற்றிக் கலிகாலத்தில் களபக் கிராமத்தில் உறைகின்றான்.

சுமித்திரன் என்பான் கடைசி அரசனாக அரசர் சிலர் தோன்றிக் காப்பார். பின் இக்குவாகு மரபு முடிவுறும் என்று பரீட்சித்தை நோக்கிச் சுக முனிவன் கூறினான்.

**11 நிமி மரபுரைத்தல் :–**

இக்குவாகு எனுமரசன் பெற்ற மக்கள் நூற்றுவருள் நிமி என்பானது மரபினை விண்டுராதனுக்குச் சுக முனிவன் விளக்கலானான்.

மகம் புரிதற்கு நிமி என்பான் வசிட்டனை அழைத்தான். அப்போது வசிட்டன் 'பெரிய வேள்வி இந்திரன் ஆற்றத் தொடங்கி ஐந்நூறு ஆண்டு கழிந்தன; இன்னும் ஐந்நூறு ஆண்டில் அந்த யாகம் முடிவுதும்; அதன் பின்னர் நீ யாகம் செய்யலாம்' என்றான். நிமி 'பொருந்திய உடல் இப்பூவுலகில், இருப்பதென்பது திண்ணமன்று;அறம் செய்வதே சிறப்பாகும்' எனக் கூறிக் கோதமனால் யாகம் இயற்றினான்.

'ஓராயிரம் வருடம் யாகமியற்றுவேன்' எனக்கூறி ஐந்நூறு ஆண்டுகள் யாகம் முடித்து நிமி இருந்தநாளில் இந்திரன்

இயற்றிய வேள்வியின் எஞ்சிய ஐந்நூறு ஆண்டு வேள்வி யினையும் முடித்து வசிட்டன் வந்தான். வசிட்டன் வந்த தறியா நிமி உறங்கிக் கொண்டிருந்தான். சினந்த வசிட்டன் 'உடல் ஒழிக' என நிமிக்கு வசவுரை (சாபம்) வழங்கினான். 'வந்ததறியாமல் துயின்ற என்னைச் சபித்த வசிட்டனும் இறந்தொழிக' என நிமி வசவுரை வழங்க இருவரும் இறந்தனர்.

மித்திராவருணருக்கு உருப்பசி மூலமாய்ப் பொற் குடத் தில் வசிட்டன் மைத்திரா வருணி எனும் பெயருடன் பிறந்தான். நிமி மீட்டும் பிறப்பெடுக்கவில்லை நிமியின் உடலைப் பேணித் தவத்தோர் மகத்தை முடித்தனர்.

அரசனைப்பெற வேண்டி அந்தணர் நிமியின் உடலைக் கடையச் சனகன் பிறந்தான். சனகன் மகன் சுதாவசு என் பான். சுதாவசுவுக்கு நந்திவர்த்தனன் பிறந்தான். நந்திவர்த் தனன் சுகேதுவை உயிர்த்தான். சுகேதுவிற்குத் தேவராதன் மகனாய்ப் பிறந்தான். தேவராதன் மகன் பிரகத்திரதன் என் பான். பிரகத்திரதன் மைந்தன் மாவீரியன்; மாவீரியன் மகன் சுகிர்த்து, சுகிர்த்து என்பான் திட்டகேதுவைப் பெற்றான். திட்டகேதுவின் மைந்தன் அரியச்சுவன். அரியச்சுவன் மகன் மரு என்பான். மருவின் மகன் பிரணிந்தகன் ஆவன். பிரணிந்தகன் மைந்தன் கிருதிதன் கிருதிதன் என்பான் தேவ பீடனை ஈன்றான். தேவபீடன் மகன் விதுர்த்தன்; விதுர்த்தன் மைந்தன் மகாகிருதி என்பவனாவான், மகாகிருதி கிருதுராதனைப் பெற்றான். கிருதுராதன் மைந்தன் மகா ரோபன்; மகாரோபனின் மகன் கனகரோமா; கனகரோமா என்பான் இரச்சுவரோமனைப் பெற்றான். இரச்சுவ ரோமனுக்குச் சீரத்துவசன் எனும் சனகன் பிறந்தான். சனகன் உழுசாவிற் சீதையைப் பெற்று அவளைக் காகுத்தனுக்கு மணம் முடித்தான். சனகனின் மைந்தன் குசச்துவசன் தருமத் துவசனைப் பெற்றான்.

தருமத்துவசனுக்கு அகித்துவசனும், மித்துவசனும் பிறந் தார். அகித்துவசன் கேசித்துவசனை உயிர்த்தான்; மித்துவசன் மகன் காண்டிக்கன், காண்டிக்கன் என்பான் கேசித்துவசனுக் கஞ்சிக் காட்டிற்குச் சென்று கருமம் நீக்கிக் கேசித்துவசன் சொன்ன ஞானமும் உணர்ந்தான்.

கேசித்துவன் மைந்தன் பானுமான். பானுமான் வழிவந் தோர் பலர். நிமி மரபு உதித்தவர்கள் நல்வினையாற் கட்டுப் பட்டார் போன்றிருப்பினும், தவசிகளும் வியக்கும் மெய்ஞ் ஞானம் முதிர்ந்தவராவர். இவ்வாறு சுகமுனிவன் உரைத்தான்.

**12) சந்திரன் மரபுரைத்தல்:-**

சூரியன் மரபு கேட்டுவந்த பரிட்சித்து சுகமுனிவனிடம் சந்திரமரபினைப் பற்றிக் கூறுமாறு வேண்ட அவ்வாறே முனிவன் சொல்லத் தொடங்கினான்.

திருமாலின் உந்தித்தாமரையில் உதித்த நான்முகன் அத்திரிதனை உயிர்த்தான். அத்திரி இந்துவை அளித்தான். நான்முகன் மதியை விண்பதிக்குவேந்தாக முடிபுனைவித்தான்' சந்திரன் மூவுலகையும் ஆண்டு இராசசூயம் எனும் மகம் நிறைவேற்றி மகிழ்ந்தான். சந்திரன் பிரகஸ்பதிமகள் தாரையை மணந்தபின் தேவரோடும் போர் செய்ய எழுந்தான். 'நீ தாரையை விடுத்தி' எனக்கூறிப் போர் செய்யும் தேவர்க் கெதிராகச் சந்திரன் அசுர குரு வெள்ளியோடும் இயைந்தான். அங்கு நான்முகன் வந்து 'நீ பிரகஸ்பதியின் மகளைக் கலந்தது எதனால்?' எனக் கூறச் சந்திரனும் அவளை விடுத்தான்.

தன்னை வந்தடைந்த தாரையை நேரக்கிப் பிரகஸ்பதி 'அயலானாகிய சந்திரனை அணைந்துற்ற அந்தக் கரு ஒழிக' என அழகியதொரு குழவியாக உயிர்த்தாள் தாரை. அழகிய குழவியைப்பார்த்துச் சந்திரனும் பிரகஸ்பதியும் எனதென எனதெனப் பகர்ந்து ஏங்கினர். முனிவரும் தேவரும் தாரையை நோக்கி 'நீ யாரொடு கூடி இம்மகவினை ஈன்றாய்' என வினவ அவள் நாணத்தால் மௌனமாயிருந்தாள் அயனும் அவ்வாறு அவளை வினவ அவள் 'மதிக்குநான் பெற்றேன்' என்றாள். அம்மகவுக்குப் புதன் எனப் பெயர் சூட்டினர்.

புதன் என்பான் இளை என்பாளை மணந்து புரூரவாவைப் பெற்றான். புரூரவாவின் அழகினைக் கேள்விப்பட்டு உருப்பசி உருகினாள். அதையறிந்த மித்திராவருணர் அளித்த வசவுரையால் உருப்பசி நிலத்திற் பிறந்து புரூரவாவைக் கண்டாள். அவனும் உருப்பசியின் அழகில் மயங்கினான்;

அப்போது உருப்பசி புரூரவாவிடம் 'பல் சுவை உணவை நீக்கி நெய்யருந்தி நின்னைத் தழுவிப் பலநாள் நான் இங்கிருப்பேன்; என்பால் அன்புடைய, எனக்கு உணவு நல்கிடும் இந்த இரண்டு ஆடுகளும் என்னுடன் இருக்க அருள்க, அத்துடன் இவ்வாடுகள் என்னைவிட்டு நீங்கினாலோ அன்றி நீ ஆடையின்றி என்னெதிர் வந்தாலோ நான் நின்னைவிட்டு பிரிவேன்' எனக் கூறினாள். உருப்பசியும் புரூரவாவும் இன்பத்தில் திளைத்தனர். உருப்பசி நீங்கியதால் வானுலகு களையிழந்தது கண்ட இந்திரன் கந்தருவர் இருவரை ஏவினான். கந்தருவர் உருப்பசியும் புரூரவாவும் கலந்தின்புறும் இரவு வேளையில் வந்து ஆட்டை வவ்வினர். 'என் ஆட்டை யாரோ கவர்ந்தனர்' என உருப்பசி புரூரவாவை நொந்து கொண்டாள். ஆடையின்றியிருந்த புரூரவாவும் விரைந்து சென்று கந்தருவர் விட்டுச் சென்ற ஆடு கொண்டு உருப்பசியிடம் சென்றான். துகிலில்லா வேந்தைக் கண்ட உருப்பசி விண்ணுலகடைந்தாள். உருப்பசியைப் பிரிந்த புரூரவா மிக்க துன்பத்துள் ஆழ்ந்தான்.

உள்ளம் வருந்திய புரூரவா உருப்பசியை ஆண்டுக்கொரு முறை கண்டு தோய்ந்து ஆயு வே முதலான அறுவரைப் பயந்தான். உருப்பசி புரூரவாவிடம் ஒரு நாள் 'அரசே! என்னை அடைதற்கொரு வழி கூறுவேன்; கந்திருவரைக் கேட்பாயாக' எனக் கூறி மறைந்தாள். புரூரவாவும் கந்தருவரைக் கேட்டான், கந்திருவ அரசர் 'வேந்தே' நீ உருப்பசியை மணக்க மகம் இயற்றுகெனச் சொல்லி அவனிடம் கனற்றாலி (அக்நிஸ்தாலி) ஒன்றைக் கொடுத்துப் போந்தார்.

அங்கியந்தாலியைக் கொணர்ந்த புரூரவா இடைவழியில் 'இது என்கொல்'என விடுத்து நகர் புகவே திரேதாயுகம் பிறந்ததால் புரூரவாவின் உள்ளத்தில் கருமம் வந்துற்றது.

'உருப்பசியை அடைதற்பொருட்டுத் தேவர் உவப்ப மகம் செய்வேன்' என எண்ணிப் புரூரவா அங்கியந்தாலி தேடிப் போனான் வைத்த இடத்தில் அதைக் காணவில்லை. புரூரவா வன்னி மரத்தின் கருப்பத்தில் உண்டான அரசமரத்தை அவ்விடத்திற் கண்டான்.

புரூரவா வேதத்திற் சொல்லியவாறு இரும்பினால் அரசைக் குறைத்துக் கொண்டு வந்து மேலரணிதானாக உருப்பசி கீழாக

மதிக்கும் தண்டம் இலிங்கமாக எண்ணிக்கடையப் பொறிகள் நிறைந்த தீ மூன்றாயிற்று (ஆகவநீயம், கார்ஹபத்தியம், தக்கிணாக்கினி) வேதமும் மூன்றாயின கிருதயுகத்தில் வேதம் பிரணவமாக ஒன்றாயிருந்தது திரேதாயுகத்தில் புரூரவாவி னால் வேதம் மூன்றாயின.

புரூரவா கருமம் உண்டாக்கி வேள்வி பல புரிந்து விண் ணுலுகடைந்து உருப்பசியை அடைந்தான்.

## 13 பரசுராமவிசுவாமித்திரர் கதையுரைத்தல்

புதன் உருப்பசியை மணந்து ஆயு, சுதாயு, சத்தியவாயு, விசயன், சயன், ரயன் எனும் அறுவரைப் பெற்றான். அவருள் சுதாயு என்பான் வசுமானை உயிர்த்தான். சக்தியவாயு என்பான் சுதஞ்சயனையும், ரயன் என்பான் சுரதன், ஏகன் ஆகிய இருவரையும், சயன் அமிதனையும் விசயன் வீமனையும் பெற்றனர். வீமன் என்பான் காஞ்சனனை உயிர்த்தான். காஞ்சனன் ஓத்திரன் என்பானைப் பெற்றான். ஓத்திரன் புதல்வனாகிய சன்னுவைப் பெற்றான். சன்னு என்னுமவன் கங்கையைத் தன் செவிவழி விடுத்தான். ஆகவே கங்கைக்குச் சானுவி எனும் பெயரேற்பட்டது. சன்னுவிற்குப் பூரு எனும் மகன் பிறந்தான். பூரு வலாகனை உயிர்த்தான். வலாகன் அசகனைப் பெற்றான். அசகன் குசனைப் பெற்றான். குசன் என்பான் குசாம்பன், அதூர்த்தன், குசநாபன், வசு ஆகிய நால்வரைப் பெற்றான்.

குசாம்பனுக்குக் காதிபிறந்தான். காதி சத்தியவதியைப் பெற்றெடுத்தான் சத்தியவதிதனை இருகிகன் எனும் முனிவன் மணஞ்செயக்கருதினான் அப்போது காதி, முனிவனிடம் ‘மதி போல் விளங்கும் பசுமை நிறமுடைய ஒரு செவியுடன் கூடிய ஆயிரம் குதிரை பரிசளித்தாற் பெண்ணைத் தருவேன்’ எனக் கூறினான். வருணனிடம் குதிரைகளைக் கேட்டுப் பெற்று வந்த இருசிகன் காதியிடம் அவற்றை ஒப்படைத்துச் சத்திய வதியை மணந்தான்.

அரசக் குழந்தையும் அந்தணக் குழந்தையும் பெறும் நோக்குடன் இருசிகன் அரச மந்திரமும் பிரமமந்திரமும் கூறிப் பாயசத்தைத் தன் மனைவிக்கும் மாமியாருக்கும் வழங்கினான்,

பாயசத்தைச் சத்தியவதியும் அவள்தாயும் மாறி அருந்தினர். 'சினக்கும் நெஞ்சுடைய சிறுவனை நீ பெறுவாய்; நின் தாய் நன்மை செய்யும் சிறுவனைப் பெறுவாள்' எனக் கூறினான் முனிவன். சத்தியவதி கணவனைத் தொழுது 'நன்மை விளைக்கும் மகப்பெற அருள்க' என்றாளாக, முனிவன் 'சினந்த பகைவகையழிக்கும் சிறுவனைப் பெறுவாயாக' என அருளினன். சத்தியவதி சமதங்கி முனிவனைப் பெற்றெடுத்துத் தன் கணவன் வீடுறவே நதியானாள், சத்தியவதியின்தாய் கோசிகனை ஈன்றெடுத்தாள்

சமதங்கி ரேணுகையை மணந்து சில மகவுயிர்த்துப் பின் திருமாலின் அம்சமாய்ப் பரசுராமனையும் பெற்றான். பரசு ராமன் ஆயிரம் கை படைத்த கார்த்த வீரியனைக் கொன்றதை விவரிப்பேன் எனச் சுகமுனிவன் தொடர்ந்தான்.

கார்த்தவீரியன் அத்திரிபுதல்வனையடைந்து ஆயிரம் கைபடைத்துச் சீரிய முறையில் அரசோச்சி வரும் நாளில் கார்த்தவீரியன் ஒரு சமயம் நருமதையாற்றிற் தன் மனைவிய ரோடும் நீர்விளையாட்டயர்ந்தான்,

பலநாடுகளும் வென்றுவந்த இராவணன் தன் படை யொடும் நருமதைக்கரையில் வந்து தங்கினான். ஆயிரங் கையாற் தடுத்துக் கார்த்தவீரியன் புனலாடியதால் நீர் தேங்கி இராவணனை நனைத்தது நீர் தேங்கக் காரணம் யாதென அறியச் சென்ற இராவணன், கார்த்தவீரியன் செயல்கண்டு. அவனுடன் போர் செய்தான். கார்த்தவீரியன் இராவணன் தன் கைகளைப் பிணித்து நகருக்குக்கொண்டு சென்றான், இராவணன் பாட்டன் புலத்தியன் கார்த்தவீரியனிடம் சென்று போற்றி வழிபட்டு இராவணனை விடுவிக்க வேண்டினான், கார்த்தவீரியன் இராவணனை விடுவித்தான்.

பின்னர்க் கார்த்தவீரியன் வேட்டையாடக் கானகம் சென்றான். சமதக்கினி ஆசிரமம் அடைந்து உணவருந் தினான். முனிவனுக்குப் பல வளங்களும் தந்துதவிய காம தேனுவைக் கவர்ந்து கொண்டு கார்த்தவீரியன் படையொடும் நகர் திரும்பினான். செய்தியறிந்த பரசுராமன் சினந்து மழுப் படையும் வில்லும் சரங்களும் கொண்டு சென்று கார்த்த

வீரியன் தன் நால்வகைப்படைகளையும் எதிர்த்துப் பொரு தான். அரசன் விடுத்த பதினெட்டு அக்குரோணிகள் தமையும் முனிமைந்தன் ஒருவனாக எதிர்த்து நாசம் செய்தான். மைந்தர் மாயக் கண்டு கார்த்தவீரியன் தானே பரசுராமனுடன் போரிட்டான். ஐந்நூறுகை விற்பிடிக்க ஐந்நூறுகை அம்பு தொட்டிடத் தேரேறிக் கார்த்தவீரியன் அமர்விளைத்தான். பரசுராமன் ஏவிய மழுப்படையால் கார்த்தவீரியன் மாய்ந்தான்.

பின்னர்ப் பரசுராமன் மகப்பொருள் வழங்கும் காமதேனு வைக் கைப்பற்றி ஆசிரமம் அடைந்தான். தந்தையிடம் நடந்தன கூறினான், பரசுராமன். சமதக்கினி 'என்ன செயல் செய்தாய், அந்தணர் இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்வோர், வேந்தனைக்கொல்லுமளவு சினம், கொண்ட தேன்' பாவம் போக்கப் புண்ணிய நீர் படிந்துவா' என ஏவப் பரசுராமனும் தீர்த்தமாடப் புறப்பட்டான்.

கங்கை முதலான ஆறுகளிற் படிந்து பரசுராமன் மீண்டும் ஆசிரமம் அடைந்தான். ஓமம் இயற்றுதற்குச் சமதக்கினி கேட்ட நீரைக் கொணரும்பொருட்டு ரேணுகை கங்கை சென்றாள். அங்குச் சித்திரரதன் எனும் கந்தவருன் தன் மனைவியரோடு நீர்விளையாடிய காட்சி கண்டு உள்ளத்திற் சலனமுற்றாள் ரேணுகை. கந்தவருன் மீது மையல் கொண்டு ரேணுகை சற்று நேரம் நின்று, பின்னர் ஓம காலம் கழிந்தது எனக் கருதியவளாய் ஆசிரமத்திற்கு விரைந்து வந்தாள். சினந்த சமதக்கினி 'உங்கள் தாய் பிழை செய்தாள்; அவளைக் கொல்லுங்கள்' என மைந்தருக்குக் கட்டளையிட்டான். அது கேட்ட மைந்தர் ,தாயை யாம்கொல்ல மாட்டோம்' எனத் தாமதிக்க. முனிவன் பரசுராமனை நோக்கி 'உன் தாயையும், 'என் சொல் மீறிய நின் சகோதரர்களையும் கொல்வாயாக' என்றான். அவ்வாறே பரசுராமன் தன் மழுப்படையால் தாயையும் உடன்பிறந்தாரையும் வெட்டினான். தன் சொற் தவறாத மைந்தன் பரசுராமனைக் காதலுடன் நோக்கி' நீ விரும்பியது கேள், தருகிறேன்' என்றான். உடனே பரசு ராமன் 'என்னால் உயிர்துறந்த தாயும் சகோதரர்களும் மீண்டும் உயிர்பெற அருள்க' என்றான். முனிவன் உயிர்ப் பிக்க, ரேணுகையும் பரசுராமனின் சகோதரர்களும் உயிர் பெற்றெழுந்தனர்,

பரசுராமன் இல்லாத வேளையில், கார்த்தவீரியனின் மைந்தர் ரேணுகை தடுத்தும் கேளாமல் சமதக்கினி முனிவனைக் கொன்றனர். முனிவன் தலையைக் கொண்டு போயினர் கொடியவர். சமதக்கினி விண்ணுலகடைந்து ஏழ் முனிவருள் ஒருவனாக ஆயினான்.

நிகழ்ந்தன கேட்ட பரசுராமன் சினந்து சென்று கார்த்த வீரியனின் மைந்தரைக் கொன்றொழித்துத் தன் தந்தையின் தலையைக் கொண்டு வந்து உடலிற் பொருத்திப் பிதிர்க்கடன் ஆற்றினான்,

தந்தை இறந்தபோது தாய் ரேணுகை தன் மார்பில் மூவேழ்முறை அடித்துக் கொண்டதால், பரசுராமன் அறம் வழுவிய அரசர்களை இருபத்தொரு தலைமுறைமாய்த் தொழித்தான். அப்படிக்கொன்று குவித்த அரசர்தம் உடலங்களினின்றும் ஒழுகிய குருதி சேர்ந்த சமம், தபம், சுகம் எனும் மூன்று தடங்களாக்கித் தன் தாதைக்கு இறுதிக்கடன் முற்றுவித்தான் பரசுராமன். அத்தகு பரசுராமன் பல மகங்கள் ஆற்றிக் காசினியைக் காசிபன் முதலானோர்க்குப் பகிர்ந்தளித்துத் தேவர் வணங்க இன்றும் மகேந்திரமலையில் உறைகின்றான்.

காதியின் மைந்தனான கௌசிக முனிவன் நூற்றொரு பிள்ளைகள் பெற்றான். அம்மைந்தர் நடுவில் மதுச்சந்தனும் ஒருவன். கோசிகன் தங்கைக்கும் ரிசீகனுக்கும் பிறந்த சுனச்சேபன் என்பான்,கோசிகன் தவஞ் செய்த போது அம்பரீடன் இயற்றிய வேள்வியில் பசுவாகச் சார்ந்தான். அம்பரீடன் வேள்வி முற்றியது. சுனச்சேபன் தேவராதன் எனும் பெயர் பெற்றான். மருகனைக் கோசிகன் மகவாகக் கொண்டு 'தேவராதனிடத்து அன்புசெய்யார் மிலேச்சராவர்' எனச் சினந்துரைத்தான்.

மதுச்சந்தன் முதலான கோசிகன் மைந்தர் நூற்றுவரும் தேவராதனைத் தமையனாகக் கொண்டனர். தேவராதன் கோசிக குலத்தனாகி மகிழ்ந்தான்.

'இக்கதை நிகழ்த்துவோர், கேட்போர் பிறவிக்கடல் நீந்தித் திருமால் பதம் பெறுவர், அரசே! எனப் பரிட்சித்திடம் சுகமுனிவன் கூறினான்,

## 14. யயாதி கதையுரைத்தல்.

புரூரவாவின் புதல்வன் ஆயு என்பான் நகுடன், அரச விருத்தன், அரசியரம்பன், சிலை மதன்போன்ற ஏனசு ஆகிய நால்வரைப் பெற்றான். அவருள் அரசவிருத்தன் மரபில் திருமாலின் அம்சமான தன்வந்திரியும், சஷினகராதி அந்தணரும் அறுபத்தாறாயிரமாண்டு ஆட்சிபுரிந்த அளர்க்கன் முதலான வேந்தரும் உதித்தார், நகுடன் மக்களாக யதி, யயாதி, சையாதி, ரயாதி, வியதி கிருதி ஆகிய அறுவர் பிறந்தார். அவருள் யதி என்போன் துறவறம் பூண்டான். நகுடன் இந்திரனாக விண்ணுலகு எய்தி ஏழ் முனிவர் வழங்கிய வசவுரையால் (சாபம்) மலைப்பாம்பாக வீழ்ந்தான்.

யயாதி தன் சகோதரர் நாற்றிசையளிப்ப அரசாண்டான். யயாதி அசுரர் குரு சுக்கிரன் மகளாகிய தெய்வயானையை மணந்தான் எனச் சுகமுனி கூறியதும் பரிட்சித்து, 'அரசன் யயாதி அந்தணகுலப் பெண்ணை ஏன் மணந்தான்' என வினவச் சுகமுனி தொடர்ந்தான்.

சுக்கிரன் மகள் தெய்வயானையும், அவுணர்கோன்விடவருவானின் மகள் சன்மிட்டையும் குளத்து நீராடினர். ஆடைகளைக் கரையில் வைத்திருந்தனர். சிவன் விமானம் ஊர்ந்து விண்ணிற் தோன்றியபோது நாணிய மகளிர் விரைந்து சென்று துகிலுடுத்தபோது தெய்வயானையின் தானையைச் சன்மிட்டை உடுத்தாள். அது கண்ட தெய்வயானை சன்மிட்டையை நோக்கி 'உம்பர்தம் உணவை நாவால் நயந்துண்ணும் நாயாவாயாக' என வசவுரை தந்தாள். தெய்வயானை சொற்கேட்டு வருந்திய சன்மிட்டை, 'மிச்சிலை உண்ணும் காகம் போன்று எங்கள் வீட்டில் இரந்துண்ணும் ஏழை' என ஏசித் தெய்வயானையை நீரற்ற கிணற்றிற் தள்ளி விட்டுத் தன் தோழியரோடும் மனையடைந்தாள்.

வேட்டைக்கு வந்த யயாதி கிணற்றுள் வருந்திக் கொண்டிருந்த தெய்வயானையைக் கண்டு அவளுக்கு ஒரு துகிலைக்கொடுத்துக் கரையேற்றினான். தன்னைத் தொட்டுத் தூக்கிய யயாதியைக் கணவனாக வரித்தாள், தெய்வயானை. யயாதி' அந்தணகுலப் பெண்ணாகிய நீ என்னை மணக்கச்

சம்மதித்ததேன்' என வினவத் தெய்வயானை கூறு லுற்றாள்.

பிரகஸ்பதிக்கு மகனாகிய கசன் வழங்கிய வசவுரை தன்னால் தன்னை வேதியர் மணக்கார் எனக்கூறி மனை யடைந்தாள். தன் தாதை சுக்கிரனிடம் நிகழ்ந்தன கூறினாள் தெய்வயானை. அவுணர் வருந்த சன்மிட்டை செயல்கேட்ட சுக்கிரன் அவ்வூர் கடந்து போனான். அவுணர்கோன் விடவருவா சுக்கிரனை வணங்கி 'நீ மீண்டும் நகருக்கு வருக' என வணங்கினான். அப்போது சுக்கிரன் 'என் மகள் தெய்வ யானை கூறினால் வருவேன்' என்றான். விடவருவா தெய்வ யானையிடம் சென்று' உன் தங்கை செய்த பிழை பொறுக்க' என்றான். தெய்வயானை 'ஆயிரம் பெண்களுடன் நின்மகள் என்றனுக்கு ஏவல் புரிந்திடக் கொடுத்தால் உன் நகரில் தங்குவோம்' என்றாள். அவுணர்கோனும் உடன்படச் சுக்கிரன் நகர் திரும்பினான்.

சுக்கிரன் யயாதிக்குத் தன் மகள் தெய்வயானைதனை மணஞ்செய்து கொடுத்தான். தெய்வயானை தன்னொடும் தாதியரோடும் யயாதி தன் நகர் அடைந்தான். சன்மிட்டை பணிவிடை புரியத் தெய்வயானை யயாதியைக் கூடி எது, துருவசுவை ஆகிய இருவரைப் பெற்றாள். தெய்வயானை அறியாவாறு சன்மிட்டையுடன் கூடிய யயாதி துருகுவை, அநுவை, பூரு ஆகிய மூவரைப் பயந்தான். சன்மிட்டையைத் தன் கணவன் விரும்பிய செய்தியறிந்து வருந்திய தெய்வ யானை தன் தந்தை சுக்கிரனிடம் முறையிட்டாள். மனைவி யின் சினம் அறிந்த யயாதி தடுத்தும் கேளாமல் தெய்வயானை தன் தந்தை சுக்கிரனிடம் சென்றாள். யயாதியும் அங்குச் சென்றான். மகள் முறையிட்டவுடன் சுக்கிரன் யயாதியை நோக்கி, 'குற்றம் புரிந்த நீ, மகளிர் இகழும் கிழவுருவத்தை அடைவாயாக' என வசவுரை தந்தான். யயாதி முனிவனிடம் 'மூப்பெய்திய பின்னும் நின் மகள்மேற்காதல் குறைந்திலது' எனக் கூறிப்பணிந்தான். அப்போது சுக்கிரன் 'இம்மூப்பு கொடுக்கவும் வாங்கவும் உரித்து' என்றான். யயாதி 'முனிவ எனக்கு நல்லுரு அளித்தவனுக்கு நாட்டாட்சி வழங்குவேன்' எனக்கூறித் தெய்வயானையுடன் திரும்பினான்.

யயாதி தன் மைந்தரைத் தனித்தனியழைத்து 'என் மூப்புருவைத் தாங்கிக்கொண்டு இளமை தந்தால் அரசுரிமை தருவேன்' என்றான். அது கேட்ட எது, துருவசு, துருகுவை, அநுவைஆகிய நான்குமைந்தரும் மறுத்துவிட்டனர், பூரு தந்தை விரும்பிய இளமை கொடுத்தான். யயாதி இளமை திரும்பப் பெற்றுப் பாவையுர் நலந்துய்த்து ஆயிரமாண்டுகள் ஆட்சி புரிந்தான் பின் ஆசை நிலையற்றதென உணர்ந்து யயாதி பூருவுக்கு இளமையைத் திரும்பநல்கினான். யயாதி முன்பு தான் வாக்களித்தபடி பூருவிற்கு முடிபுனைந்தான், மற்ற நால்வருக்கும் நாற்றிசை அளித்தான்.

மனையாளொடும் கானகம் அடைந்து தவம் இயற்றி யயாதி மால்பதம் எய்தினன். தேவயானை தூலம், சூக்குமம், காரணம் ஆகிய மூன்றுடலங்களும் நீத்து உயர்கதி அடைந்தாள்,

## 15) பூரு மரபுப் பரதன் கதையுரைத்தல்.

'தாதைக்கு இளமை வழங்கிய நின்குலச் செல்வனாகிய பூருவின் மரபில் கண்ணுவனாதி முனிவர்களும் போர்செய்யும் அரசர்களும், கோதமன் சேர்ந்த அகல்யாவும் பிறந்து விளங்கினர். நின் மரபிற் சில அரசர்தம் வரலாறுரைப்பேன் கேள்' எனச் சுகமுனிவன் பரீட்சித்திடம் கூறலுற்றான்.

பூருவின் மைந்தன் சனமேசயன்; சனமேசயன் மகன் துட்டியந்தன் (துஷ்யந்தன்) ஆவன். ஒரு நாள் துட்டியந்தன் வேட்டையாடக் கானகம் சார்ந்தான். திருமாலை வணங்கும் கண்ணுவமுனிவரின் பர்ணசாலையடைந்தான் துட்டியந்தன். அங்குச் சகுந்தளை என்பாளைக் கண்டு மயங்கினான். துட்டியந்தன் 'பெண்ணே நீயாரென வினவினான். சகுந்தளை' கோசிகனை மேனகை என்பாள் கூடி என்னைப் பெற்று, விட்டுச் சென்றாள். கண்ணுவ முனிவர் அன்புடன் என்னை வளர்த்தார்' என்றாள். பின் அவள் மன்னவ, 'நடைவருத்தம்தீர இங்குத் தங்கிச் செல்லலாம்'. என்றாள். 'எழில் மங்கையர் அழகிய கணவனைக் காணின் புல்லுவர். நீயும், என்னைத் தழுவி என் காமநோய் போக்குவாயாக' எனத் துட்டியந்தன் வேண்டச் சகுந்தளையும் அது நேர்ந்தாள். இருவருக்கும் கந்தருவ மணம் நிகழ்ந்தது. ஆசிரமத்தில்

ஒருநாள் சகுந்தலையுடன் உறைந்த துட்டியந்தன் மறுநாள் நகர் சென்றான். பார்புகழ் பரதனைப் பெற்றாள் சகுந்தலை; வளர்ந்த பரதன் பெண் சிங்கத்துடன் விளையாடியது கண்டு கண்ணுவமுனிவர் 'இவன் திருமாலின் அம்சமோ' என வியந்தான்.

கண்ணுவன் சகுந்தலையைப் பார்த்து 'நீ உன் பிள்ளையுடன் நின் பதியடைக' என்றான். அவளும் துட்டியந்தன் நகர் சென்றடைய அவன் அவளை 'யார் நீ' என வினவினான். நிகழ்ந்தன கூறி நினைவூட்டினாள் சகுந்தலை. 'வீண் பழி' என உரைத்தான் மன்னன் துட்டியந்தன். அப்போது ஆகாய வாணிதோன்றி 'அரசே, ஐயுற வேண்டா, சகுந்தலை நின்மனைவியே; அவள் கற்புடையவள்; சிறுவன் நீ பெற்ற புதல்வனாவன்; சங்குரேகை கையிலும் பங்கய ரேகை பாதத்திலும் இருக்கக் காணலாம்; இப்பரதன் ஏழுலகாளும் அரசனாவன்' என்று கூறியதும் துட்டியந்தன் உளம் தேறினான்.

சகுந்தலையுடனும் பரதனுடனும் இன்பமுற்று வாழ்ந்த துட்டியந்தன் ஐம்பது புரவிவேள்வி புரிவித்தான். பின் துட்டியந்தன் வீடுற்றான். பரதன் முடிபுனைந்து பாரகம் புரந்தான். பரதன் பதினாலாயிரம் வேள்வி இயற்றினான். பரதனுக்கிணையான ஆற்றலுடையார் முக்காலத்திலும் இலர்.

பரதனை மணந்த பூவையர் மூவரும் பிறந்த பிள்ளைகள் தம் கணவனைப் போன்று இல்லையெனக் கூறி அப்பிள்ளைகளைக் கொன்றனர். 'இவர் இப்பிள்ளைகளை எவனுக்குப் பெற்றார்' என்ற பழிவரும் என்றஞ்சியே அவ்விதம் அவர்கள் குழந்தைகளை நாசம் செய்தனர்.

இறவாத மகன் வேண்டிப்பரதன் மருதஸ்தோமம் எனும் மகம் செய்யத் தேவர் பிரகஸ்பதிபெற்ற பரத்துவாசனை மகவாக அருளினர். பரிட்சித்து 'முனிவ, மைந்தன் உதித்தவாறு உணர்த்துக' என வேண்டச் சுக முனிவன் கூறலானான்.

பிரகஸ்பதி ஒருசமயம் காமவயப்பட்டுத் தன் சகோதரன் உசத்தியன் மனைவியைப் புல்லினான். அவள் முன்பே கருவுற்றிருந்தாளாகையால் இன்னுமோர் கருவினுக்கு இடமில்லையென உதறித்தள்ள, பிரகஸ்பதியின் வீரியம்

நிலத்திடை வீழ்ந்தது. அது அழகிய குழந்தையாக விளங்கிற்று. பிரகஸ்பதி போய்விட்டான். உசத்தியன் மனைவியும் 'பழிவரும்' எனக்கொண்டிலள். அதனைத் தேவர் பரத்துவாசன் எனப்பெயரிட்டுப் பரதனுக்களித்தார்.

பாத்துவாசன் மரபில் அந்தணரும் அரசரும் தோன்றினர். அவருள் ஒருவன் அத்தினாபுரி அமைத்துப்போனான். அவன் மரபில் சராசந்தன் மரபும், பாஞ்சாலர் மரபும் சேர்ந்தன. அவை விவரிக்கின் விரியும். அத்திமரபில் குரு வந்தான், குருமரபில் வந்தோன் பிரதீபன் என்பான்.

16) சந்தனுவின் கதையுரைத்தல்.

பிரதீபனுக்குத் தேவாபி, சந்தனு, பாகலீகர் எனும் மூவர் பிறந்தார். அவருள் தேவாபி என்பான் தவஞ்செயப் போனான். சந்திரமரபில் வந்த தேவாபி தவத்தோனாய்க் கலியுகத்தில் இன்னமும் களபக் கிராமத்தில் தங்கியுள்ளான்.

சந்தனு கங்கையை மணந்து ஒரு புதல்வனை உயிர்த்தான். பீஷ்மன் எனுமவன் கோதையரை மணந்திடா விரதம் மேற்கொண்டான். சந்தனுவுக்குப்பின் பாராசரமுனிவன் சத்தியவதியைத் தழுவி வியாசனைப் பெற்றான்.

சந்தனு சத்தியவதியை மணந்து சித்திராங்கதன், விசித்திர வீரியன் எனும் இரு புதல்வரை உயிர்த்தான். சித்திராங்கதன் கந்தருவன் ஒருவனால் மாய்ந்தான்.

காசிவேந்தன் மக்களாகிய அம்பாலிகை,அம்பிகை ஆகிய இருவரையும் விசித்திரவீரியன் மணந்தான். விசித்திரவீரியன் கயநோய் காரணமாய் இறந்தான். விசித்திரவீரியனின் தாயாகிய சத்தியவதி மரபு அற்றுவிடக் கூடாதென்றெண்ணித் தான் முன்னர்ப்பராசரனுக்கீன்ற வியாசனை நினைக்க. அவனும் அவள்முன் தோன்றினான்.

தாயின் உரை தலைமேற்கொண்டு விசித்திரவீரியன் மனைவியராகிய அம்பாலிகை, அம்பிகை, சிலதி ஆகிய மூவரைக் கலந்தான் வியாதன்.

அம்பிகை, அம்பாலிகை இருவரும் கண்ணிலான் (திருதராட்டிரன்) தனையும், பாண்டுவையும் ஈன்றனர். வியாதனைக் கூடியதொழுத்தை (பணிப்பெண்) விதுரனைப் பெற்றாள்.

திருதராட்டிரன் காந்தாரியை மணந்து அரவக்கொடியுயர்த்த துரியோதனாதியரையும் ஒரு பெண்ணையும் பெற்றான். குந்தியையும் மாத்திரையையும் மணந்த பாண்டு உன் முன்னோர்களாகிய தருமன் முதலியோரைப் பெற்றான். பாண்டு குழந்தைப் பேறடைய முடியாமைக்கு ஒரு வசவுரை காரணமாகும். தேவர் கொடுத்த வரத்தால் குந்தி எமனைத் தழுவித் தருமனையும், வாயுவைத் தழுவி வீமனையும், இந்திரனைத் தழுவி அருச்சுனனையும், ஈன்றாள். பரித் தேவரைத் தழுவிய மாத்திரை நகுல, சகாதேவரை ஈன்றாள்.

பஞ்சபாண்டவர் பாஞ்சாலியை மணந்து சிறுவரைப் பெற்றனர். கண்ணன் உடன் பிறந்தாளாகிய சுபத்திரைதனை மணந்த அருச்சுனன் உன் தந்தையாகிய அபிமன்யுவைப் பெற்றான். அபிமன்யு வீராடன் மகள் உத்தரையை மணக்க நீ (பரிட்சித்து) பிறந்தாய். போரிற் துரியோதனாதியர் மாய்ந்ததால் வருந்திய பரித்தாமா (அசுவத்தாமா) எய்த கணையால் கருவில் அழிவுறாமல் கண்ணன் நின்னைக் காத்தான்.

அரசே! உன் மைந்தர் நால்வருள் ஒருவனாகிய சனமே சயன் நின் வரலாற்றைக் கேட்டுச் சினந்து பணிவேள்வி (சர்ப்பயாகம்) செய்வான் எனக் கூறினான் சுக முனிவன் பரிட்சித்திடம்.

## 17 அநுமரபுரைத்தல் :-

யயாதியின் மைந்தர் ஐவருள் ஒருவனாகிய அநு என்பான் மரபில் அங்கன், வங்கன், கலிங்கன் முதலானோர் வந்தனர். அவர்கள் ஆண்ட நாடுகளை அங்கம், வங்கம், கலிங்கமெனத் தம்பெயரால் அழகுபடுத்தினர்,

அங்கனின் மகனாகிய உரோமபதன் என்பான் தயாதன் மகளாகிய சாந்தையை வளர்த்து அவளைக் கலைக்கோட்டு

முனிவருக்கு (ரிசிய சிருங்கர்) மணம் முடித்துத் தந்தான். பின்னர் உரோமபதன் சதுரங்கன் எனும் மைந்தனை உயிர்த்தான்.

சதுரங்கன் அங்கநாட்டை ஆண்டதன் பின்னர், குந்தியென்பாள் கன்னிப் பருவத்திற் கதிரோனுக்கீன்ற கன்னன் (கர்ணன்) அங்கநாட்டிற்கு அரசனாயினான்.

**18) எதுமரபுரைத்தல் :–**

யயாதி என்பான் சுக்கிரன் மகள் தெய்வயானையை மணந்து உயிர்த்த எதுவின் மரபுரைப்போரின் தவப்பயன் சொல்லுதற்கரியது. திருமாலாம் கண்ணன் பிறந்த சிறப்பிற் குரியது எதுவின் மரபு.

எதுவின் புதல்வர் சகத்திரசித்து, குரோட்டன், நளன், ரிபு எனும் நால்வராவர். அவருள் சகத்திரசித்துவின் மகன் சதசித்து என்பான் ஆவன். சதசித்துவின் புதல்வன் கேகயன், கேகயன் மகன் தருமன்; தருமன் தனையன் தருமகேத்திரன், தருமகேத்திரனின் மகன் குந்தனாவன். குந்தனின் மைந்தன் சாவஞ்சியன். சாவஞ்சியன் மகன் மயிட்டுமான் என்பான். மயிட்டுமான் மைந்தன் பத்திரசேனன். பத்திரசேனனின் மைந்தன் துன்மிதன் தநிகன் என்பான். தநிகனின் தோன்றல் கிருதவீரியன். கிருதவீரியன் புதல்வன் கார்த்தவீரியன். கார்த்தவீரியன் எண்பதாயிரமாண்டுகள் அரசாட்சி புரிந்து மழுப்படையானாகிய பரசுராமனால் இறந்தான். கார்த்தவீரியன் மைந்தர் ஆயிரம் பேராவர். அவருள் ஐவர் உலகை அரசாண்டனர். ஏனையோர் பரசுராமனால் அழிவுற்றார். இதுவரை எதுவின் முதற்புதல்வனான சதசித்தின் மரபு கூறப்பட்டது.

குரோட்டன் மறைகளுணர்ந்த இரசினவான் என்பானை உயிர்த்தான். இரசினவானின் மதலை அவிபு என்பான். அவிபு என்பான் குருசேருவை உயிர்த்தான். குருசேருவின் மைந்தன் சித்திரதரன். சித்திரதரன் மகன் சசிவிந்து என்பான். சசிவிந்து என்பான் பதினாயிரம் மகளிரைத் தழுவிப் பத்து லட்சம் மக்களைப் பெற்றான். அவருள் அறுவர் அரசராயினர். அறுவரிற் பிருதுசிரனசு என்பானின் மகன் தருமனாவன், தருமன் உசநசுவைப்பெற்றான். உசநசு என்பானின் மைந்தன் ருசகன்;

ரூசகன் சாமன் முதலிய ஐவரைப் பெற்றான் சாமன் மைந்தன் விதர்ப்பன். விதர்ப்பன் என்பான் குருதன், குதன், ரோபாதன் ஆகிய மூவரை உயிர்த்தான்.

குதனின் மகன் குந்தியாவான். குந்தி மகன் நிருவிருத்தி; நிருவிருத்தியின் சேய் தசாருகன்; தசாருகன் மைந்தன் வியோமன், வியோமன் தன் புதல்வன் சீமூதன், சீமூதன் மகன் விகுதி; விகுதியின் சேய் தீவிராதன்; தீவிராதன் புதல்வன் நவரதன், நவரதன் மைந்தன் தயரதன். தயரதன் மகன் சகுனி, சகுனி புதல்வன் கரம்பன். கரம்பன் மகன் தேவராதன்; தேவராதன் மைந்தன் தேவகத்திரன் என்பான். தேவகந்திரன் மகன் மது என்பான், மதுவின் மகன் குதசதன். குதசதன் மைந்தன் அநு அநுவின் புதல்வன் புருகோத்திரன். புருகோத்திரன் புதல்வன் அங்கிசு, அங்கிசு மகன் சாத்துவதன். சாத்துவதன் மன்னருக்கு அந்தகன், விருட்டினி, போசனாதியர் எழுவர் பிறந்தார்.

போசகன் மரபுளோர் மாபோசன் என்று உலகாற் போற்றப்பட்டார். விருட்டினி புதல்வர் அநமித்திரனாதி மூவர். அநமித்திரன் அளித்தோர் நிமமனன், பிரச்சிவி முதலாம் மூவர். நிமமனனின் புதல்வர் சித்திரசித்தும், பிரசேனனும் ஆவர். பிரச்சிவியின் மக்கள் சுவர்க்கனும், சித்திராங்கதனும் ஆவர். சுவர்க்கன் காந்தினியை மணந்து அக்ரூரன் முதலாம் பன்னிருவரை உயிர்த்தான். அவருள் அக்ரூரன் என்பான் தேவவரன் முதலாம் நால்வரைப் பெற்றான்.

சாத்துவதிவின் மூன்றாம் புதல்வனாகிய அந்தகன் என்பான் குகுரன், பயமானன் முதலாம் நால்வரைப்பெற்றான். குகுரன் மகன் விருட்டுனி என்பான். விருட்டுனி புதல்வன் விலோமன். விலோமனின் மைந்தன் கபோதரோமனாவன். கபோதரோமன் அந்தகனை அளித்தான். அந்தகன் மகன் துந்துபி. துந்துபியின் மகன் தருமியோதா. தருமியோதாவின் மகன் புனர்வசு என்பான். புனர்வசு என்பான் ஆகுகன், ஆகுகை இருவரை உயிர்த்தான். ஆகுகன் உக்கிரசேனன், தேவகன் இருவரைப் பயந்தான். உக்கிரசேனன் கஞ்சன் முதலாம் நால்வரை உயிர்த்தான். கஞ்சவதி, யயாதி முதலிய நான்கு பெண்டிரையும் பெற்றான். மகளிர் நால்வரையும் உக்கிரசேனன், வசுதேவனின்மகனுக்குமணம் செய்தளித்தான்,

தேவகன் என்பான் தேவவான் முதலான மைந்தர் நால்வ ரொடு தேவகி, திருததேவை, சாந்தி தேவை, சகதேவை, ததி தேவை, தேவரக்கிதை எனும் மாதர் எழுவரையும் பெற்றான். மகளிர் எழுவரையும் வசுதேவன் மணந்தான்.

அந்தகனின் மகனான பயமானன் என்பான் விடூரதனை உயிர்த்தான். விடூரதன் மகன் சூரன். சூரனின் மகன் பயமானன். பயமானன் மகன் சினி. சினியின் புதல்வன் போசன். போசன் மகன் திருதிகன். திருதிகன் மைந்தன் கிருதவன்மா. கிருதவன் மாவின் புதல்வன் தேவமீடன், சூரன், வசுதேவன் முதலாம் பதின்மரைப் பெற்றான் குந்தியாதி முதலாம் மகளிர் ஐவரையும் பெற்றான். வசுதேவன் பிறந்தபோது உலகிற்கு நன்மைசெய இவன் மாயனை உயிர்ப்பான் எனக்கூறித் தேவர் மகிழ்ந்தனர். வசுதேவனுக்கு ஆனகதுந்துபி எனும் மற்றொரு பெயரும் வழங்கியது.

சூரன் தன் பெண் மக்களுள் ஒருத்தியைக் குந்தன் எனும் தன் நண்பனுக்களித்தான். இவளது இயற்பெயர் பிருதை. குந்தன் வளர்த்ததால் அவள் குந்தி எனப்பட்டாள். குந்தி துருவாசனளித்த வரத்தால் கதிரோனுக்குக் கன்னனைப்பெற்று ஆற்றில் விட்டாள். குந்தியை நின் தாதையின் மூதாதையாகிய பாண்டு மணந்தான். குந்தியின் சகோதரியருள் ஒருத்தியாகிய சுருதகீர்த்தி ஐந்து கேகயரை நல்கினாள். மற்றொருத்தியாகிய சுருததேவை என்பாள் தந்தவக்கிரனை ஈன்றாள். பிறிதொருத்தி யான சுருதசிரவசு சிசுபாலனைப் பெற்றாள். மற்றொருத்தி யாகிய ராதிதேவி விந்தனையும், அநுவிந்தனையும் உயிர்த்தாள். வசுதேவனுடன் பிறந்த மன்னவர் பதின்மரும் மக்களைப் பெற்றுச் சிறக்க வாழ்ந்தார்.

வசுதேவன் தேவகி முதலாம் எழுவரொடு உரோணி என்பாளையும் மணந்தான். உரோணி பலராமன் முதலாம் மைந்தரைப் பெற்றாள். தேவகியின் ஏனைய சகோதரிகளும் சிறுவரை ஈன்றார். தேவகி என்பாள் கீர்த்தமான் முதலான சிறுவர் அறுவரைப் பெற்றாள். ஏழாம் மகவாகப் பலராமனைத் தன் கருவிற் சுமந்தாள். பின் மாயையால் உரோணியின் கருவுக்கு மாற்றப்பட்டுப் பலராமன் பிறந்தான்.

அவுணரை அழித்து அறத்தை நிறுவக் கண்ணனைத் தேவகி எட்டாம் மகவாக நல்கினாள், உன் தந்தை அபிமன்யு மணம்புரிதற் பொருட்டுச் சுபத்திரை என்பாளைத் தேவகி அடுத்து ஈன்றாள்.

நைமிச முனிவர்களே! இக்கதை கூறுவோரும், அன்பாற் கேட்பாரும், பூமியில் நிறைஆயுள் உடைய மகப்பெற்றுச் சிறக்க வாழ்ந்து மால்பதம் எய்துவர் என்றான் சூத முனிவன்.

அவ்வாறு சூதன் இயம்பலும், நைமிசமுனிவர், 'கண்ணன் வரலாற்றைப் பரீட்சித்திற்குச் சுக முனிவன் கூறியாங்குச் சொல்' என வேண்டச்சூதமுனிவன் சொல்லத் தொடங்கினான்.



# பத்தாம் கந்தம்

## 1 திருவவதாரம்

கதிரோன் மரபும் திங்களின் மரபும் கேட்ட மன்னன் பரிட்சித்து, சந்திரனுடைய மரபில் தனிச்சுடராய்த் தோன்றிய திருமாலின் திருவிளையாட்டினைத் தெளிவாகக் கூறும்படி வேண்டச் சுக முனிவன் செப்பலானான்.

'துரியோதனின் படைக்கடலை ஒரு குளம்பின் அடியிலுள்ள நீராகும்படி கடக்கப் பாண்டவர்க்குப் புணையாய் இருந்த, என்னைக் கருவிற் காத்தருளிய கண்ணனின் ஒப்பற்ற கதையினை விரித்துக் கூறுக' எனப் பரிட்சித்து வேண்டச் சுக முனிவன் உரைத்தான். மாயன் கதை கேட்போர்,படிப்போர் கங்கையிற் படிந்தார் போலப் புனிதராவர் என்று சுகமுனிவன் கூறலுற்றான்.

அரச உருவெடுத்த அவுணரால் துன்பந்தாங்காதநிலமகள் பசு உருவெடுத்துப் பிரமனிடம் கூறினாள். பிரமன், சிவனுடனும் தேவர் குழுவோடும் பாற்கடல் அடைந்து பரமனைத் தொழுதார். அப்போது அசரீரி வாக்கு எழுந்தது. அசரீரியின் பொருள் தெளிந்து பிரமன் அமரரைப் பார்த்துக் கூறினான். 'அண்ணலாம் திருமால் விண்ணுலகிலிருந்து நீங்கி அரம்பையரோடு மண்ணுலகடைந்து எது குலத்தில் வாசுதேவனுக்கு அருள் சுரந்தளிப்பான்–மகனாகத் தோன்று வான்'-எனப் பிரமன் வகுத்தான். நிலமகளை நோக்கிப் பிரமன் 'திருமால் உன்னைக் காப்பான்; நீ வருந்தாதே' எனக் கூறி விடுத்துப்பின் தன் உலகமடைந்தான்.

சூரசேனனின் மைந்தனாகிய வசுதேவன் மதுரையை ஆண்டு வந்தான். வசுதேவன் தேவகியை மணந்தான். தேரில் தேவகியுடன் கஞ்சன் (கம்சன்) மதுரை நகருக்கு எழுந்தான். தேவகியின் எட்டாம் கருப்பத்தில் தோன்றும் குழந்தை கஞ்சனுயிரை அழிக்கும் என்ற அந்தரவாணி உரை கேட்டுச் சினந்த கஞ்சன் வாளை உருவினான், 'தேவகியைக்

கொல்லுவேன்' என்று அவளை நெருங்கிய கஞ்சனிடம் வாசுதேவன், 'அரசே தங்கையைக் கொல்லுதல் தகுமோ?' என்று இன்னுரை வழங்கினான். வசுதேவன் சொல்லிய நன்மொழி கேளாது பின்னும் தேவகியைக் கொல்லத் துணிந்து நின்றான் கஞ்சன், அடுத்துச் செய்வது யாதெனக் கருதிய வாசுதேவன், 'இவளைக் கொல்லாதே; இவள் பெறுகின்ற குழந்தையைக் கொல்க'எனக் கஞ்சனிடம் கூற, அது கேட்ட கஞ்சன் அவ்விடம் விட்டு அகன்றான்.

வசுதேவன் அரண்மனை சென்றடைந்தான். வசுதேவன் இன்பமுடன் வாழும் நாளில் தேவகி பெற்ற குழத்தையைத் தன் அங்கையிற் தாங்கிக் கஞ்சன் முன் எய்தினான். 'இக் குழந்தையால் விளையுந் தீங்கொன்றுமில்லை; ஆகையால் கொண்டு செல்' எனக் கஞ்சன் கூறியமாற்றம் தெளியாது வசுதேவனும் குழந்தையுடன் அரண்மனை திரும்பினான்.

நாரதன் கஞ்சனிடம் சென்று 'யதுவம்சத்தவர் அமரராவர்; நின்பால் கூடிய அவுணரையெல்லாம் திருமால் தோன்றி அழிப்பான்' எனக் கூறினான். அது கேட்டு முனிந்த கஞ்சன் உக்கிரசேனன் எனும் தாதை பேரரசு மாற்றித் தனியரசெய்தி னன். படையுடன் சென்று கஞ்சன் யாதவரெல்லாம் தோற்று ஓடும்படிச் செய்து, தேவகியையும் வசுதேவனையும் சிறைப் படுத்தித் தேவகியின் பிள்ளைகளையெல்லாம் கொன்றொழித் தான்.

கூற்றுவன் போலும் கஞ்சன் தேவகியின் ஆறு குழந்தை களையும் கொன்றபின் தேவகியின் கருவில் இருந்த திருமால், மாயையை நோக்கி 'தேவகியின் இளஞ்சூலை நந்தகோன் மனையிலுள்ள உரோணியின் கருப்பத்திற் கஞ்சனுக்குத் தெரியாமல் வைத்திடு; தேவகி வயிற்றில் நாம்பிறப்போம்; யசோதை வயிற்றில் நீ சென்று பிறப்பாயாக' எனப் பணித் தான். திருமாலை வணங்கிச் சென்ற மாயை, தேவகியின் வயிற்றுக் கருப்பந்தன்னை வாங்கி உரோணியின் வயிற்றிடை வைத்தது. தேவகியின் கருப்பம் அழிந்துபோயிற்றென மூதூர் புலம்பிற்று.

எள்ளும் எண்ணெயும் போல எப்பொருளகத்தும் இயை யும் நாரணன் நிலப்பொறை தவிர்ப்பான் வேண்டி ஆன

துந்துபி (வசுதேவன்) மனத்தடைந்தான்; வசுதேவன் மனத்தே திருமால் வந்து பொருந்தியதால் வசுதேவன் ஒளி மிகுந்து தோன்றினான். தன் மனத்திற் தோன்றிய திருமாலை வசுதேவன் தேவகியின் இடத்து மனத்தால் வைத்தான். அன்றே தேவகி திருமாலைத் தன் திருவயிற்றிற் சுமந்தாள். திருமால் தேவகியின் வயிற்றை அந்த ஆலிளந் தளிர்போலு மென்றெண்ணி அடைந்தனன். கருவுற்ற தேவகியின் முகம் மதியை நிகர்த்தது. மாயனே தேவகியின் வயிற்றகத்து வந்தடைந்தான், தன் உயிரை மாய்க்க' என உணர்ந்தான் கஞ்சன். பாம்பாகச் சீறிய கஞ்சன் 'இப்போதே தேவகியைக் கொல்வேன் என நினைப்பான்; கருப்பம் முற்றிய இவளைக் கொன்றால் பெரும்பழி ஏற்படும்' என மனம் மீட்பான். இருந்தாலும், சென்றாலும், கிடந்தாலும், மாயன் பற்றிப் பிறர் உரைத்தாலும், உண்டாலும் திருமால் நம்மைக் கொன்றிடுவானோ என்ற எண்ணமுடையவனாதலின் கஞ்சன் பார்க்குமிடமெல்லாம் பகைவர்தம் குருதி பருகும் பரமனாம் திருமால் உருவமே கண்டான்.

அயனும் அரனும் ஏனையத் தேவர்களும் சேர்ந்து அனைத்துலகையும் தன் வயிற்றுட் கொண்ட மாயன் மற்றோர் மடந்தையின் வயிற்றுள் வாழுதல் கண்டு வாழ்த்தி நின்றார்.

'மறைகளும் முழுதுணரா மாயனே! மாயை வயப்பட்டார் நின்னை மூவருள் ஒருவனாக மதிப்பர்: உளத்தெளிவுற்றோர் உன்னை ஒப்பற்ற தனி முதலாகப் பார்ப்பர்.

தோன்றுதலும் அழிவுமற்ற அமலனே! வாக்கொடு மனத்துக்கெட்டா வள்ளலே! அறத்தின் வாழ்வே! தீயோரை அழித்து நல்லோரைப் புரக்கவன்றோ இத் தெய்வ உருவம் எய்தினை. ஊழி முடிவில் ஆழிவாய் அறிதுயல் செய்வோய்! நின் தாள் பற்றியோர் எளிதிற் பிறவிக் கடல் கடப்பர். அருட்கடலாகிய நீ கதிரவன் போன்று பிறந்திலாயேல் உலகிற்கு ஞானப் பொருட்கதிர் இல்லாததாகும். ஆதியே! மக்கள் நின் பெயரைக் கேட்டும், ஓதியும், உருவு கண்டும் வீட்டின்பம் உண்பர்! கிண்கிணி பொருந்திய மாயனின் சிற்றடி தீண்டப்பெற்றிட இந்த மாநிலம் என் நோற்றதோ! முத் தொழிலும் வல்ல மாயனே! ஒரு மாயையாகிய நின் தோற்ற

மெல்லாம் ஆராயின் ஒரு விளையாட்டன்றோ! இவ்வாறு அயனும் அரனும் தேவரும் ஏத்தியபின், 'தேவகி! உன் வயிற்றுள் வளரும் திருமால் கஞ்சனைக் கொல்வான்; வேறொன்றும் கருதி வருந்த வேண்டா' எனக் கூறி வாழ்த்தித் தம் நிலைக்களஞ் சார்ந்தார்.

திங்கள் குணதிசை உதித்தாற் போன்று அண்ணல் திருமால் தேவகியிடத்து ரோகிணி நட்சத்திரத்தில் தோன்றினான். தாமரை போன்ற நான்கு கரங்களில் சங்கும் நேமியும், கதையும், தாமரையும் நிலவ, மார்பினில் திருமறுச் சிறப்பக், கழுத்தில் கவுத்துவம் அழகு செய்ய, முடியிற் கிரீடம் விளங்க, ஆய்தொடி வில்லிட, காதிற் குழை ஒளிவீச, மேகலை பொன்னாடைமேல் நிலவ, மேனி இந்திரவில் போல ஒளி வீசிடத் தாமரைக் கண் அருள் சிந்திட, அற்புதக் குழவியாகக் கண்ணன் பிறந்தது கண்ட வசுதேவன் வியந்தான். கண்ணனைக் கண்டு தொழுது அன்பால் ஏத்தினான் வசுதேவன். படைத்தற்குப் பிரமனின் செவ்வண்ணத்தையும், காத்தற்குத் திருமாலின் பால் நிறத்தையும், அழித்தற்கு உருத்திரனின் நீல நிறத்தையும் கொண்டான் மாயன்.

'திருமகள் காதல! மண்ணிற் கொடிய அரசரைக் கொல்ல அன்றோ நீ கரிய உருவை அடைந்தாய்! மன்னன் படையின் செயலை மன்னன் செயலாகக் கருதுதல் போல, நீ மூவராகி இயற்றிய செயல்களை நின்னுடைய செயலென்றே நிகழ்த்துவர்' என்று வசுதேவன் வாழ்த்தி நின்றபோது, தேவகியும் கன்றினைக் கண்ட கறவை போன்று கசிந்து போற்றினாள். 'நிலம், நீர், தீ, கால், வான் ஆகிய பஞ்ச பூதங்களைப் படைத்த பிரமனைப் படைத்த கண்ணபிரானை நான் உயிர்த்தனன் எனல் நகையுடைத்து; நான்முகன் காலங்கழிந்து யாவும் அழியச் சேடன் - எஞ்சியவன் — எனக் கூறுமாறு நின்ற உன் நிலை செப்பற்கரியது. இராவணாதியரை அழிக்க வில்வளைத்த சேவக! கஞ்சனெனும் காலனுக்கு அஞ்சினோம்; நீ அவனை அழித்தல் வேண்டும் சங்கு சக்கரத்தொடு திகழும் இக்கடவுட் தன்மையுடைய உருவை நீ மாற்றல் வேண்டும். எதற்காக நீ இவ்வுருவங் கொண்டு தோன்றினை, எனத் தேவகி போற்றி வணங்க, மாயவன் 'முன்னம் நீர் நற்றவஞ் செய்தமையால் உமக்கு மகனாகத் தோன்றினோம்;

'உன்னையொத்த புதல்வனைத் தருக என நீவிர் வேண்டி யதால் எமக்கு நிகர் யாமல்லது 'இல்லையாதலால் உமக்கு யாம் அந்நிலையுடன் பிறந்தனம்' என்று கூறிய மாயன் தெய்வ உருவம் நீங்கிக் குழவி உருவம் கொண்டான். பின் கண்ணன் வசுதேவனை நோக்கி, 'மன்னவ, நந்தகோன் மனைவியாகிய அசோதை ஒரு பெண் மகவு பெறுவாள். அக்கன்னியை நீ கைக் கொண்டு, என்னை நீ அங்கு வளரச் செய்வாயாக' என்றான்! அசோதை குழுதை என்றொரு பெண் குழவி தன்னை ஈன்றாள்.

யாவரும் மயக்கமுற்றுத் துயின்றனர்; மாணிக்கக்கதவும் தாள் திறந்தது; வசுதேவனின் கால்விலங்கு அவிழ்ந்தது; விண்ணில் மின்னல் ஒளி வீச, மேகம் துளி சிதற ஆதிசேடன் கண்ணபிரானை எடுத்துச் செல்லும் வசுதேவன் மேல் குடை கவித்தான். வசுதேவன் யமுனையாற்றை அடைய, யமுனை யாறு நெறியுதவிற்று. வசுதேவன் நந்தகோன் வாழும் வனத்தையடைந்தான். அசோதை தான் ஈன்ற பெண் குழவி யுடன் துயின்ற படுக்கையிடம் சார்ந்தான். கண்ணபிரானை அசோதையிடத்துத் துயிலச் செய்து, அக்கன்னியைக் கைக் கொண்டு வசுதேவன் மீண்டான். மனைவி தேவகியிடத்து ரோகிணியைக் கொடுக்கக் கதவும் அடைக்கப்பட்டன; சிறையில் குழந்தை அழுதது. குழந்தையின் அழுகுரலை வாயிலோர் மூலம் கேட்ட கஞ்சன் அங்கு வந்து சேர்ந்தான்; 'நின்மகன் மணக்க ஏதுவாகும் இக்குழந்தையைக் கொல் லாதே' எனக் கஞ்சனை வேண்டிக் கூறினாள் தேவகி. தேவகி யின் கைகளிலிருந்து குழந்தையை வலிந்து பற்றி அதன் கால் களைப் பிடித்துப் பளிங்குப் பாறையில் மோதும் சமையத்து, அக்குழந்தை அவனை விட்டகன்று அவன் தோளில் உதைத் தாள். எண் கரத்தொடும், துளவ மாலையொடும், கரிய ஆடை யுடனும் விண்ணிற் தோன்றிய காளி; 'அரச, என்னை நீ பாறையில் மோதுவது எதற்கு? நின்னைக் கொல்பவன் வேறோரிடத்தில் வளர்கின்றான்' எனக் கஞ்சன் அஞ்சும் கட்டுரை கூறி மறைந்தாள். ரோகிணி கூறியது கேட்ட கஞ்சன் தேவகியுடன் மைத்துனன் தளையை மாற்றினான்.

கஞ்சன், 'அசரீரி பொய் செப்பிற்று; குழந்தைகள் கொல்லப்பட்டன; தீவினையின் விளைவை யாரே விலக்க வல்லார்! வருந்தாதீர், ஆதலும் அழிதலும் எப்பொருட்கும்

உண்மை; யான் புரிந்த பிழை பொறுப்பீர்' எனப் பணிந்து கூறிப்போனான்.

அடுத்த நாள் கஞ்சன் ரோகிணி கூறியதைச் சொன்னவுடன் அமைச்சர் எல்லாக் குழந்தைகளையும் கொல்லுதல் வேண்டும்' எனக் கூறினார். குழந்தைகள் யாவற்றையும் கொல்லுமாறு பூதனையை ஏவினன் கஞ்சன், தாமரை போலும் முகத்தையுடைய பசுங்குழவி வாய்த்ததென மகிழ்ந்திருந்தான் நந்தகோபன் வேதியர் கண்ணபிரானுக்குத் தோற்றச் செய்வினையை (சாத கருமங்கள்) இயற்றினர். நந்தகோன் மறையவர்க்கு அவர்தம் ஆசையடங்க இருபதினாயிரம் பசுக்களை நல்கினான், நந்தன் கானம் இந்திரன் நகர்போல் விளங்கிற்று,

நந்தகோன் கஞ்சனுக்குத் திறைகொண்டு ஆயர் சூழ மதுரை யடைந்தான். கஞ்சனைக் கண்டபின், நந்தகோன் வசுதேவன் வீட்டிற்குச் சென்றான். வசுதேவன் 'குழந்தை பிறந்ததன்றோ' எனக் கூறித் தழுவினான். பின் வசுதேவன் நந்தகோனைப் பார்த்து 'நண்ப கோகுலத்தில் தீயன உண்டாகும்; கஞ்சனைக் கண்டுவிட்டாயல்லவா. இனியும் தாமதியாதே விரைவிற் செல்' எனக் கூறியவுடன் நந்தகோன் கோகுலத்திற்கு விரைந்தான்.

## 2) பூதனை வீடு பெறல்:-

ஒளியுடைய மணிகளையுடைய மேகலை சிலம்பொடு ஒலிக்க, வஞ்சிக்கொடிபோலும் இடைதடுமாற, நஞ்சுடைய மார்பைக் கண்ணபிரானுக்கு ஊட்ட அஞ்சத்தகும் பெண்ணுருவம் தாங்கிப் பூதனை நடந்தாள். கண்டவர் மனம் பருகும் நீலோற்பலம் போன்ற கண்ணாளாகிய பூதனை திருமகள் போல, அருள் மழை பொழியும் கொண்டலாகிய கண்ணன் விளையாடும் கோகுலத்தை அடைந்தாள். விடமூறும் பாம்பை அழகிய மாலை யொன்றை அங்கையில் எடுப்பதைப் போலப் பூதனை, ஆலிலையையும், வேதாந்தத்தையும், பாற்கடலையும் நீத்துக் கோவலர்தம் கொழுந்தாக உள்ள கண்ணனை எடுத்தாள்,

கண்ணனைத் தன் தொடைமீது இருத்திக் குறுநகை விளைத்த பூதனை, மண்ணும் விண்ணும் உண்ட கண்ணனுக்குத் தன் வெய்ய முலையூட்டினள்,

வஞ்சமறிந்த கண்ணனும் நகையாடித் தன் அங்கையால் அவளின் மார்பைப் பற்றி மார்பின் துவாரத்தின் வழி வஞ்ச மகளின் பாலொடு உயிரையும் சேர்த்துண்டான். நஞ்சூறும் முலைதந்து குழந்தைகளையெல்லாம் கொன்ற பூதனை இறந்து உருவம் வேறாகி மலையின் மரமெல்லாம் 'நிலம்புக விழுந்தாள். குன்றில் மேகம் விளையாடல் போலப் பூதனை மேல் இருந்த கண்ணனைக் கண்ட யசோதை கலங்கி அழுது கண்ணனை எடுத்தாள். மூப்பு, இளமை இல்லாதவனாய் மூவுலகும் உண்டு பாம்பணை துயில்வோனும், நான்முகனை உந்தித் தாமரையிற் தந்து காப்பவனுமாகிய கண்ணனுக்கு யசோதை தாயன்பால் கண்ணெச்சில் கழித்தாள்.

கண்டோர் அஞ்சத்தக்க உருவுடைய பூதனையின் உடலம் நோக்கிய நந்தகோன்; 'கோகுலத்தில் தீயன உண்டாகும், நீவிரைந்து செல்' என வசுதேவன் கூறியதை நினைந்து வியந்தான். நந்தகோன் கண்ணனை விழிப்புனலாட்டி அணைத்தான். நந்தகோன் பணிக்க, யாதவர் பூதனையின் உடலை வெட்டிக் கடலில் மடுத்தார். அரக்கியின் மார்பில் கண்ணன் பாலருந்தியதால் பூதனையின் உடலைச்சுட்ட புகை நான்கு காத தூரத்திற்கு அகிற் புகையின் மணம் கமழ்ந்தது.

கண்ணனுக்குப் பாலூட்டுபவர் அடையும் முத்தியின் பத்தை நஞ்சூறும் முலைதந்த பூதனையும் அடைந்தாள் எனில் பரம்பொருளின் கருணையை என்னவென்று சொல்ல!

3 சகடம் உதைத்தல் :-

யசோதை கண்ணனுக்குப் பாலூட்டித் தொட்டிலிற் துயிலச் செய்தாள். கண்ணன் பிறந்த மூன்றாம் திங்களில் பிறந்த நாள் விழாவில் யசோதை கோபியரை உபசரித்துக் கொண்டிருந்த வேளையில், கண்ணன் பசித்து அழுது காலை நீட்டி உதைத்தபோது சகட உருவில் வந்த அசுரன் உருவேறு பட்டு வீழ்ந்தான். வீழ்ந்த சகடம் கண்ட யசோதை கண்ணனை

எடுத்துத் தன் துடையில் வைக்கக்குழவி மலைபோலக் கனத் திடக் கீழே விட்டாள். சூறைக்காற்றுப் போன்று வாதாசுரன் எனும் அவுணன் தன்னை விண்ணிற் கொண்டு எழுந்தான்.

தூளிப் படலத்திடைக் கண்ணபிரான் மறையக் குழந்தை யைக் காணாது யசோதை வருந்தினாள். தன்னைக் கொண்டு சென்ற அவுணனின் கழுத்தை நெரித்தான் கண்ணன். அத னால் கண்பிதுங்கி அவ்வசுரன் மலைமேல் வீழ்ந்திறந்தான். அசுரன் உடல் மீது விளையாடும் கண்ணனைக் கண்ட யசோதை அஞ்சி அவனைக் கையிலெடுத்துப் பாலூட்டி உள்ளம் குளிர்ந்தாள்.

புதுமலர் போலும் கண்ணன் கொட்டாவி விட்ட போது வாயிடை ஞாலம் திகழும் திறன் கண்ட யசோதை அச்சத்தாற் தன் கண்ணைப் புதைத்தாள். வசுதேவன் அனுப்பக் கர்க்க முனிவன் அங்கு வந்தான். முனிவனை வணங்கி நந்தகோபன் 'சிறுவர்க்குப் பெயர் சூட்டிடுக' எனப் பணிந்தான். ரோகிணி யின் புதல்வனுக்குப் பலராமன் எனவும், தாமரை மலர் போலும் கண்ணழகுடையானுக்குக் கண்ணன் எனவும் பெயரிட்டான் முனிவன். மற்றை யுகங்களில் வெண்மை, செம்மை, பொன்மை நிறங் கொண்ட திருமால், கலியுகத்தில் கண்டோர் கண்கவரும் கருமை நிறமெய்திக் கண்ணன் என்று ஆயினான். பின் கண்ணன் தவழ்தலைக் கற்றான். பற்கள், முளைத்தன; நடை கற்றான் கண்ணன். முத்தொழிலியற்று மண்ணல் கண்ணன் விளையாடலுற்றான். கண்ணன் செய்த திருவிளையாடல்களை ஆய்ச்சியர் யசோதையிடம் கூறினர். கட்டமைந்த சிறு கன்றை விடுத்தும், வெண்ணெயும் தயிரும் உண்டும், நீண்ட உறியைத் தொடுதற்கு உரலினின்று கை நீட்டியும், எட்டாத வேளை கல்லாலெறிந்து உறியிலுள்ள பானைதனை உடைத்தும், இருட்டிற் சென்று வெண்ணெய் திருடி அருந்தியும் கண்ணன் இயற்றிய குறும்புச் செயல்களை ஆய்ச்சியர் யசோதையிடம் சொல்லி முறையிட்டனர். அவை கேட்ட யசோதை மறுமொழி கூறாது மகிழ்ந்திருந்தாள். 'பெண்ணே' உன் குழந்தை மண்தின்றான்' என ஆய்ச்சியர் கூறக் கேட்ட யசோதை கண்ணனின் கையைப் பற்றி

'வாயைக் காட்டு' என்று கூற, மணிவண்ணனது வாயில் உலகனைத்தும் விளங்கக் கண்டாள் யசோதை, 'இவனே திருமால்' எனக் கண்ணனை வணங்கிப் புகழ்ந்தாள். கண்ணன் மாயையால் அவற்றை மறைத்தான், யசோதை கண்ணனைப் பலபடப் போற்றி மகிழ்ந்தாள்.

இவ்வாறு சுக முனிவன் கூறியவுடன், பரீட்சித்து 'ஈன்றவராகிய வசுதேவனும் தேவகியும் பெறாத கண்ணன்தன் இளமைத் தன்மையைக் காணும் பேறு பெற்றதற்கு நந்தகோனும் யசோதையும் முற்பிறப்பில் என்ன தவம் செய்தார்' என வினவச் சுக முனிவன் சொல்லத் தொடங்கினான்,

4) மருதிடைத் தவழ்ந்தது:-

துரோணன் எனும் எட்டுவசுக்களுள் ஒருவனை 'மனைவியுடன் மண்ணிற் பிறக்க என்றான்' நான்முகன்; அப்போது துரோணன், 'திருமாலின் அன்பனான எமக்குத் திருமாலை அளித்திடுக' என வேண்டினான். மலரோன் 'கண்ணன் நும்மிடத்து வந்தடைவான்' என அருளினான். துரோணனும் அவன் மனைவி தரையும் நந்த கோபனும் யசோதையாகவும் பிறந்தனர்.

யசோதை ஒருநாள் தயிர்கடைந்தவேளை கண்ணன் சென்று யசோதையின் மார்பிற் பால் அருந்தினான். அவ்வாறு மணிவண்ணன் அருந்திக் கொண்டிருந்த சமயத்தில் காய்ச்சுகின்ற பால் பொங்கிற்றென யசோதை மார்பிற் பால் சொரியவும் மாலையிற் தேன்துளி சிந்தவும் சமையலறைக்குள் ஓடினாள். அப்போது கண்ணன் பெரிய பானையை உடைத்து வெண்ணெயை வாரி ஓடினான். யசோதையும் கண்ணனை விரட்டித் தொடர்ந்தாள். அன்னை யசோதை களைத்துவிட்டாள் எனக் கருதிய கண்ணன் தானே தாயின் கையிலகப்பட்டான். யசோதை கண்ணனை உரலோடு பிணிக்கலுற்றாள். அங்குமிங்கும்தேடி ஓடி அவனைக் கட்டுதற்குக் கொணர்ந்த கயிறு இருவிரலளவு குறைந்தது தன் கைகள் சிவக்க, நுதல் வியர்ப்ப அன்னை தன்னைக் கட்டுதற்கடைந்த துன்பம் நோக்கிய கண்ணன் யாக்கப்பட்டான்,

நளகூபர மணிக்கிரீவர்கள் எனும் குபேரனின் மைந்தர் நாரதனின் வசவுரையால் மருதமர உருக்கொண்டு நின்றமை கண்டான் கண்ணன்.

இவ்வாறு சுகமுனிவன் கூறலும் பரீட்சித்து 'நாரத முனிவன் வசவுரையைத் தனதன் காதலர் உற்ற தெவ்வாறு?' என வினவச் சுக முனிவன் தொடர்ந்தான்.

ஒரு சமயம் நளகூபரனும் மணிக்கிரீவனும் அரமகளிரோடு புனலாடினர், மதுவருந்தியும் தூசு நீங்கியும் அரமாதருடன் புனலாடல் கண்ட நாரதன் இருவரையும் மரமாகுமாறு வசவுரை வழங்கினான். மேலும் நாரதன், 'தேவ வருடத்தில் நூறாண்டு மரமாய் நின்று கண்ணபிரானை அடையும் போது வசவுரை நீங்குவதாக' எனவும் கூறினான். நாரதன் கூறியாங்கு, வசவுரை விலக்குதற்குக் கண்ணன் சென்றான். தேவகியின் மைந்தனான கண்ணன் மேகம்போல மருதிடைத் தவழ்ந் தான். உரலோடும் கண்ணன் தவழ்ந்ததால் அவ்விரு மருத மரங்களும் அடியற்று மலைபோல வீழ, வசவுரை நீங்கப் பெற்ற நளகூபர மணிக்கீரிவர் கண்ணனைத் துதித்துப் போயினர்.

இடியோசை போன்று பேரொலியுடன் மரங்கள் விழ்ந் தன கேட்டுப் பதறியோடி வந்த ஆய்ச்சியர் கண்ணன் உரலு டன் தவழ்ந்து செல்ல அவை முறிந்து வீழ்ந்தன எனத் தெளிந் தார். செய்தியறிந்த நந்தன் கண்ணனின் கட்டவிழ்த்தான். பின் கண்ணனைத்தழுவி மிக்க மகிழ்ச்சியடைந்தான்.

பலராமனின் தாயாகிய ரோகிணி வருந்தியழைத்தும், கண்ணன் வராதவனாய் ஆற்றங் கரையில் ஆடினான். அப் போது யசோதை, 'கண்ணா இன்று உன் பிறந்தநாள்; அந்தணர்க்குப் பசுக்களைத் தானம் செய்ய வந்திடுக; விளையாட்டையே விரும்பித் திரிவாயோ' என வேண்டக் கண்ணன் வந்தான்.

'கற்பகம் கொணரக் கண்ணன் ஆடிய கூத்தை என் னென்று புகல்வேன்' என வியக்கின்றார் செவ்வைச் சூடுவார். பூவையர் ஆடுக எனக் கூறியவுடன் கண்ணன் சீறடி சிவப்பு நின்றாடினான்.

'துன்பந்தரும் இவ்விடம் விட்டு வேறோரிடத்து அடைவோம்' என உபநந்தன் கூற, நந்தகோன் ஆய்ச்சியர் முன் செல்லக்கண்ணன் முதலிய குழந்தைகளொடும் புறப்பட்டான்,

## 5 விருந்தாவனம் அடைதல்:-

நந்தகோன் விருந்தாவனம் என்ற பொழிலை அடைந்தான், மேகக் கூட்டம் தவழ் கோவர்த்தனமலையும், தாழைமணம் வீசும் காளிந்தி நதியும், புதுமணலும், குன்றும் கண்டு ஆயர்தலைவன் நந்தகோன் மகிழ்ந்தான். கண்ணன் ஆயர்சிறுவரோடும் கன்றினம் மேய்த்தான், வத்சாசுரன் எனும் அவுணன் கன்றின் உருவத்துடன் கலந்துள்ளமை கண்ணன் கண்டான். தன் தமையன் பலராமனுக்கு அதை உணர்த்தினான் கண்ணன், கண்ணன் அந்த அசுரனது கால்களைப்பற்றி எறியப் பொய்யும் கொலையும் போக்கிடமில்லையெனப் புலம்பிட அவுணன் மடிந்தான். சக்கரப்படை ஏந்தும் கரத்தானாகிய கண்ணன் கையிற் சிறு கோலை எடுத்துக் கன்றினத்தை ஓட்டினான். கண்ணன் பின் கன்றினம் நீருட்டினான்.

சினம்மிக்குப் பகாசுரன் எனும் அவுணன் கொக்கு வடிவெடுத்துக் கண்ணனை விழுங்க முயன்ற வேளை, கண்ணன் பகாசுரனின் வாயைக் கிழித்தான். கொக்கு வடிவில் வந்த அவுணன் இறந்தான். கண்ணன் பின் முல்லை நிலம் முழுவதும் கன்றினம் தொடர விளையாடினான். தயிரையும் வெண்ணையையும் மூட்டைக்கட்டிக் கொண்டு ஆயர் சிறுவர் தன்னை நெருங்கவும் கண்ணன் ஊதுகொம்பை வாய் வைத்தெழுந்தான்.

பூதனைக்கும் பகாசுரனுக்கும் தம்பியான அகாசுரன் என்பான் மலைப்பாம்பு உருவத்தில் வாய்விரித்துக் கிடந்தான் வழியிடை, மலைப்பாம்பின் வாயில் சிறுவர் ஆக்களுடனும் கன்றினத்தோடும் நுழையக் கண்ணன் ஒன்றும் கூறானாகிப் பாம்பின் வாயில் நுழைந்து கழுத்தைக் கிழித்தான். கன்றும் சிறாரும் உயிர்த்தெழுந்தார். அகாசுரன் மால்பத முற்றான். கண்ணனின் விளையாடல் கண்டு மலரவன் களித்தான்.

அஞ்சத்தகும் உருவமுடைய அகாசுரனை ஐந்து வயதுப் பாலகனாகிய கண்ணன் கொன்றதைக் கண்டு ஆயர் சிறுவர்

புகழ்ந்தனர். இவ்வாறு சுகமுனிவன் கூறலும், பரீட்சித்து 'அச் சிறுவர்ஏன் அவ்வாறு புகழ்ந்தனர் கூறுக' என வேண்டச் சுக முனிவன் தொடர்ந்தான்.

6) **மலரவன் சிறார்க்கன்று கவர்தல் :-**

பசுக்களும் கன்றுகளும் புல்லுணவு தெவிட்டிக் கழுக மர நிழலிற் படர ஆயர் சிறுவர் யமுனை ஆற்றங்கரையில் வேறு வேறாக இலை விரித்துப் பொதி சோறு அயின்றார். வட்டுடை யில் குழலும், வயிற்றிடையில் ஊது கொம்பும் பிரப்பங் கோலும் அணைத்துக் களியமுது இடக் கரத்தேந்திய கண்ணன் தவிசின் அமர்ந்து உணவினை உண்டான்.

நிழலிற் தங்கியிருந்த கன்றினம் வெவ்வேறு திக்கிற் படர, 'நில்லுங்கள்' என ஆயர் சிறுவரை திறுத்திக் கையில் கவளத் துடன் கன்றுகளின் பின்னே தொடர்ந்த கண்ணன் விளையாட்டை இப்போது பார்ப்போம்' என்று சிறார் இருந்த வேளையில், நான்முகன் மாயையால் இடைச்சிறாரையும் ஆன்கன்றுகளையும் ஒளித்தான்.

மறைகளும் முற்றக் காணா மாயன் சிற்றடித்தாமரை சிவப்பக் கன்றினம் தேடிக் காண்கிலன்; இடைச்சிறாரையும் காணப்பெறாத கண்ணன் காரணம் யாதெனக் கருதினான். நான்முகனே அவற்றை ஒளித்துள்ளான் என்பதுணர்ந்த கண்ணன் தானே சிறாரும் கன்றுகளும் ஆயினான்.

இடைச்சிறார்தம் வண்ணமும், வனப்பும், தோற்றமும், வடிவும், தொழில்களும்,குணமும், பூந்துகிலும், பூந்தாரும், தீங் குழலும், வார்கோடும் வேற்றுமையின்றி அங்ஙனம் விளைந்த விளைவைத் தாம் எவ்வாறு எடுத்தியம்ப என வியக்கின்றார் செவ்வைச் சூடுவார்.

இடைச்சிறாரும் கன்றுகளுமாக உருவங்கொண்டு கண்ணன் கோகுலம் செல்லலும் ஆய்ச்சியர் சிறுவரைக் கண்டு களித்தனர். வருடம் ஒன்று இவ்வாறு கழிந்தது.

பலராமனுடனும் கண்ணன் ஆன்கன்றுகளை ஓட்டிக் கொண்டு மரங்களடர்ந்த மலைச்சாரல் அடைந்தான். பசுக்கள் ஆயர் கையிகந்து சென்று கன்றுகளுக்குப் பாலூட்டின.

ஆயர்கள் தங்கள் சிறார்களின் அழகு முதலியன நோக்கிக் களித்தார்.

'என்ன நேர்ந்தது' எனப் பலராமன் வியந்து கண்ணனை நோக்கக் கண்ணன் தானே கன்றினமாகவும் சிறார்களாகவும் இருத்தலைக் கூறினான். இதற்கு என்ன காரணம் எனப்பார்த்தான் பலராமன். கன்றுகளும் சிறார்களும் கண்ணபிரானாகத் தோன்ற அமரரோடு சேர்ந்து தானும் கண்ணனைத்துதித்தல் நோக்கி நான்முகன் மனக்கலக்க மடைந்தான்.

பிரமனின் மறுகுதல் கண்ட மாயன் தன்மாயைதனை வாங்க, மாயன் ஒருவனேயாகி வெண்கவளமுள்ள செங்கையுடன் கன்றினம் தேடி நிற்றல் கண்டு நான்முகன் மகிழ்ந்தான். பின் பரமன் தன் நான்கு முடிகளும் பொருந்தத் தன்னைப் பெற்றெடுத்த பிரானாகிய கண்ணனின் அடிகளிற் பணிந்து வணங்கினான். பிரமன் கண்ணனைப் பலவாறு ஏத்திப் போற்றினான்.

'மாமாயனாகிய நின்னிடத்து யான் செய்த மாயை கதிரோன் முன் மேவிய மின்மினி, பனி, இருள் போன்றதே. வயிற்றில் வளரும் சேய்தன் காலால் உதைத்தலைப் பிழையாகக் கொள்ளாள் தாய். அது போன்று யான் செய்ததும் பிழையாகாது. வேள்வியில் மறையோர் ஊட்டிடும் அவியுண்டு தெவிட்டாத நினக்குத் தெவிட்டுமாறு முலைப்பாலளித்த ஆய்ச்சியர் செய்த தவம்தான் என்னே! பசுக்களின் தவத்தை எப்படிக் கூறுவேன்? சினம் மிக்கு நஞ்சூட்டிய பூதனைக்குப் பதமளித்த நீ, நெஞ்சுவந்து அமுது ஊட்டிய ஆய்ச்சியருக்கும் ஆன்களுக்கும் என்ன கொடுப்பாயோ யானறியேன்! முல்லை நிலத்து நின்னொடு உறையப் பெற்றார் பெரிதும் திருவினர் ஆவர்,' எனக் கண்ணனைப் புகழ்ந்து போற்றி நான்முகன் சென்றான். பின் கண்ணன் நான்முகன் சிறாரிடத்து விடுத்த கன்றினம் ஒட்டிக் கொண்டு கோகுலம் சேர்ந்தான்.

'கன்றுகளைத் தேடிச் சென்ற நீ யாங்கள் ஒரு கவளம் உண்ணுதற்குள் மீண்டு விட்டாய்; நீயும் உணவருந்திடுக' எனக் கூறினர் ஆயர் சிறுவர். கண்ணன் பின் காட்டினின்றும் நீங்கினான். மலைப்பாம்பு வடிவாக வந்த அகாசுரன் இறக்க அங்குக்கிடந்த தோலைக்கண்ட இடைச்சிறார். 'இது

அக்கண்ணன் கொண்ட வெற்றியே' என வியந்து முல்லைப் புலத்து மக்களுக்குக் கண்ணன் செயலைப் புகழ்ந்துரைத்தார்.

'அகாசுரன் இறந்து ஓராண்டு கழிந்தபின் இடைச்சிறார் கண்ணன் அவ்அவுணனைக் கொன்றமைக்குப் புகழ்ந்தது எதனால்? ஆய்ச்சியர் தம்சிறார் மேற்கொண்ட அன்பைக் காட்டிலும், மாயன் மேற் காதலுற்றது என்ன காரணம்' என்று பரீட்சித்து வினவச் சுக முனிவன் கூறலுற்றான். 'தன்னுயிர் மேல்செலும் காதலை விடவும் தான் பெற்றதனிடத்துக் கொள்ளும் காதல் பெரிதல்லவா? உயிரனைத்தும் மாதவனே! ஆகவே இன்னுயிர்க் குழவியாகிய கண்ணன்மீது காதல் மிகுந்தது' என்றான் சுகமுனிவன்.

## 7. அரவின்மே லாடியது :-

கண்ணன் பலராமனோடு ஆநிரை மேய்க்கலுற்றான். பலராமன் கண்ணனைப் பார்த்து 'நின்னை நோக்கி மயில்கள் ஆடின; வண்டுகள் பாட்டிசைத்தன; மரக்கிளைகள் நாள்மலர் பூத்தன; மான்கள் இறைஞ்சின' எனக் கூறினான். இளமயில் களாடிக் களைத்தன; திருமகள் தீண்டும் கண்ணனின் திருவடி களை இடைச்சிறார் வருடத் தங்கியிருந்தான் கண்ணன். பலராமனைப் பார்த்துத் திருத்தாமன் எனும் இடைச்சிறுவன்; 'ஈங்குப்பனங்கனிகள் நிரம்ப உள்ளன; நிரம்பச் சுவையுடை யன' எனக் கூறினான். பலராமன் பழம் முதிர்ந்த மடற்பனை யைப் பிடித்து உலுக்கினான். அப்போது கழுதை வடிவுடைய தேனுகாசுரன் சினத்துடன் அங்குத் தோன்றினான். பலராமன் அக்கழுதையைப் பற்றி விண்ணில் எறிய அவ்வசுரன் பனை மரத்தை முறித்தபடிக் கீழே வீழ்ந்திறந்தான்.

கருங்குஞ்சியில் மலரும் பீலியும் சூடிக் குழல் இசைத்த வண்ணம் ஆனினத்தை ஓட்டிக் கொண்டு ஆய்ச்சியர் கண்டு மகிழக் கோகுலத்தை அடைந்தான் கண்ணன்.

பின் கண்ணன் ஆநிரை ஓட்டிக் கொண்டு யமுனையாற்றின் ஒருபக்கம் சென்றான். ஆயர் சிறார்களும் சேதாக்களும் விடப்புனல் மாந்தி இறந்தன. உலகங்காக்கும் கண்ணன் பசுக்களையும் இடைச்சிறார்களையும் உயிர்த்தெழச் செய் தான். விடப்புனலையும், விடப்புனல் விளைத்த பாம்பையும்

கண்ணன் நீக்கினான் எனச் சுகமுனிவன் கூறியவுடன் பரீட்சித்து 'கண்ணன் அவற்றை எவ்வாறு நீக்கினான் என்பதை விளங்கக் கூறுக' என வேண்டச் சுகமுனிவன் செப்பலுற்றான்.

கொடிய நஞ்சுடைய காளியன் எனும் பாம்பு காளிந்தி மடுவில் வாழும்; மடுவினில் தவழ்ந்த காற்றுப் பட்டாற்கூட விலங்கு மாயும்; பறவைகள் வீழ்ந்து வருந்தும்; மரங்கள் வெம்பிக்கரியும்;அவ்விடத்திற் கடம்பமரம் ஒன்றுண்டு 'இறுதி விளைவிக்கும் மடுவின் நீரையகற்றுவேன்' எனக் கூறிக் கண்ணன் கடம்ப மரத்தின் மீதேறி காளிந்தி மடுவிற் பாய்ந்த போது நூறு வில்லின் அளவு நீர் கிழிந்து அகன்றது. யமுனை யில் நீந்திய கண்ணனைக் காளியன் எனும் பாம்பு வாலை வளைத்துத் தன் படத்தொகுதியால் மறைத்துக் கடித்தது. காளியனிடம் அகப்பட்டுக் கண்ணன் வருந்தியது கண்டு ஆயர் சிறுவரும் அமரரும் தளர்ந்தனர். இடக்கண் துடிப்பது எதனால் எனக் கருதிய நந்தகோன் முதலானோர் யமுனையாற்றங்கரை அடைந்தனர். கண்ணனின் மேனியைக் காளியன் வளைத் திருக்கக்கண்ட நந்தகோன் 'நாமும், வீழ்வோம்' என எழுந்த போது பலராமன் 'வீழாதே' எனத் தடுத்தான். நந்தகோன் உள்ளிட்ட ஆயர் கொண்ட வருத்தம் போக்க எண்ணிய கண்ணன் தன் மேனி வளைத்திருந்த பாம்பை அகற்றினான். பின் கண்ணன் அப்பாம்பின் உச்சிநின்று ஆடினான்.

பண்பு அழிந்து காளியனின் படத் தொகுதி பதைக்க, வாய் குருதி கக்க, வெங்கண் பிதுங்கக் கண்ணன் நடமாடல் நோக்கிக் காளியனின் மனைவியரான நாககன்னியர் 'காப்பாற்றுக' எனக் கண்ணனின் பாதம் பணிந்தனர். கண்ணன் திருப்பாதம் தலையிற்படக் காளியன் என்ன தவம் செய்தனனோ என அமரர் வழுத்தினர். 'காளியன் அறியாமற் செய்த பிழை பொறுத்திடுக' என நாககன்னியர் வணங்கக் கண்ணன் ஆடலை விடுத்து எழுந்து 'நீ முன்னம் இருந்த ரமணகத் தீவிலே சென்று வாழ்வாயாக; நின் தலையில் எம் அடிபட்டதால் வீரம் பொருந்திய கருடன் நின்னைக் கொல்லும் வன்மையுடையவனல்லன்', எனக் காளியனிடம் ஓதினான். கண்ணனை வணங்கிக் காளியன் தன் மனைவியரோடும் ரமணகத் தீவிற்குச் சென்றான். காளிந்தியெனும் யமுனை ஆற்று மடுவும் நஞ்சு நீங்கிற்று. இவ்வாறு சுகன் கூறியதும்

பரீட்சித்து 'ஏன் காளியன் தீவை யகன்று வந்து மடுவில் மன்னினான்; விளக்கமாகக் கூறுக' எனக் கேட்கச் சுகமுனிவன் பின்னும் இயம்பலானான்.

தன்னை வழிபட்டுத் திறைசெலுத்தாமற் காளியன் என்ற பாம்பு இருந்ததால் கருடன் சினந்து தன் சிறகுகளாற் தாக்க, அஞ்சிய காளியன் யமுனையாற்றை அடைந்தான். யமுனை யாற்றில் மீனைக் கொன்று கருடன் தின்றதும் அதுகண்ட சௌபரி எனும் முனிவன் 'இங்கு இனி மீன் எறியல்' என்ற ஒரு வசவுரை வழங்கியதால், கருடன் யமுனையாற்றிற்கு வர மாட்டான் என்பதறிந்த காளியன் அங்குப்போய் தங்கினான். இவ்வாறு சுகமுனிவன் சொன்னான்.

கண்ணனின் தாயாராகிய ரோகிணி, யசோதை முதலியோர் காளியனின் விடம் பாய்ந்த கண்ணனின் ஆகம் முழுவதையும் தழுவினர். யாவரும் பின்னர் உறங்கலாயினர். 'பிழைக்கவும் வழியுண்டோ' என நந்தகோன் மனம் நையுமாறு சாமுகம் என்னும் காட்டுத்தீ வளைத்தது கண்ணன் காட்டுத் தீயை வெண்ணெயுண்டாற்போல் விழுங்கினான். யாவரும் கடல் முகத்து விளங்கும் முல்லைவனத்தைக் காலைப்போதிற் சென்றடைந்தனர். வேனிற் காலம் வந்துற்றது குயிலினத் தொடு எதிர் கூவியும், வேய்ங்குழலிசைத்தும், மயில்களாடக் கண்ணன் எழுந்தான். வேனிற்காலத்தின் அழகு எங்கும் நிறைந்தது.

பிரம்பலன் எனும் அசுரன் இடைச்சிறுவன் போன்று உருவங்கொண்டு, கண்ணன் இருக்குமிடத்திற்கு வந்தான். பிரம்பலன் இடைச்சிறுவர் கூட்டத்துள் கலந்துள்ளான் என்ப தறிந்த கண்ணன், அனைத்துச் சிறார்களையும் இருபிரிவாகப் பிரித்து ஒரு பிரிவிற்குப் பலராமன் தலைவனாகவும் மற்றொரு பிரிவிற்குத் தான் தலைவனாகவும் இருந்து 'விளையாட்டிற் தோற்றவர் வென்றவரைச் சுமக்க வேண்டும்' எனக் கூறி விளையாடலாயினான்.

பலராமன் அணி விளையாட்டில் வெற்றிபெறவே, சீதா மனைக் கண்ணன் சுமந்தான் பலராமனை வஞ்ச மனத்தனா கிய பிரம்பலன் சுமந்தான். பலராமன் தன்னிடம் அகப்பட்டுத்

கொண்டான் என எண்ணிய பிரம்பலன் பழைய அசுர வடி வெடுத்துப் பலராமனைச் சுமந்து விண்ணேகினான். அதை யறிந்த பலராமன் அசுரனின் தலையிற்குத்தப் பிரம்பலன் குருதி கக்கி வீழ்ந்து மடிந்தான். இவ்வாறு இடைச்சிறார்கள் கண்ணனோடு விளையாடிக் கொண்டிருந்த சமயத்தில் பசுக்கள் காட்டினின்றும் நீங்கி மறைந்தன.

புல்தழைத்த காட்டில் மேயச் சென்ற பசுக்களை இடைச் சிறார் அழைத்தபோது பசுக்கள் கத்தவில்லை. ஆயின், கண்ணன் அழைத்தவுடன் அவை குரல் கொடுத்தன. மீண்டும் காட்டுத்தீ பரவவே இடைச்சிறார் கண்ணனிடம் 'கண்ணா, காப்பாற்று' என இறைஞ்சக் கண்ணன் காட்டுத் தீயைப் பருகினான். ஆய்ச்சியர் மகிழச் சிறாரொடும் ஆநிரை யோடும் கண்ணன் மீண்டான்.

**8) வேய்ங்குழல் இசைத்தது:-**

கார்காலம் வந்துற்றது. குழலிசைக்கும் கண்ணனின் இசையில் மயங்கிய கோவியர் போன்று மழை பொழியும் மேகம் கண்டு மயில்கள் நடித்து மகிழ்ந்தன. திருமாலின் அருள் பெற்று முனிவர் விளங்குதல் போல மழையால் மரங்கள் தளிர்த்தன, கண்ணன் விளையாடும் முல்லைவனம் வானோர் தம் கற்பகவனம் கண்டு எள்ளிய செயலொப்ப முகை விண்டன. பாரதப்போரில் அறத்தின் மகனாம் தருமன் வெல் லும் பொருட்டுக் கண்ணன் மறைத்த கதிரோன்போல், மேகம் கதிரோனின் சுடரை மறைத்தது. கண்ணன்தன் கமலவாய் வைத்திசைத்த குழலோசை கேட்டுக் குயில்கள் வெட்கி வாயடைத்தன. வானில் நிலவுமறைய மின்மினி விளங்குதல் கலிகாலத்தில் மறைகள் திகழாமல் அவற்றை இகழ்வோர் விளங்கும் இயற்கை ஒக்கும். விசும்பு கதிரையும் மின்னுடன் விளையாடும் மேகத்தையும் தழுவ நின்ற தோற்றம் பரம் பொருளாம் திருமால் பொருளியலும் குணத்தைக் கலந்து விளங்குதல் கடுக்கும். இவ்வாறு கார்காலத்தில் கண்ணன் ஆநிரை மேய்த்து மகிழ்ந்தாடினன்.

அடுத்துக் கூதிர்காலம் வந்துற்றது. காந்தள் மலர்ந்தன; காயா பூத்துப் பொலிந்தன. தாமரை தேன் சிந்தின. கூதிர் காலத்தில் தீங்குழலிசைத்த வண்ணம் ஆநிரை மேய்க்கக்

கானகம் சென்ற கண்ணன்தன் குழலில் பூங்கொத்தும், தளிரும் புனைந்தான்.

மலைகளும் உருக, மான்களின் செவியில்நிறைய, கண்ணன் வேய்ங்குழல் இசைத்தான். கோவியரும் அரமடந்தையரும் கண்ணனைச் சூழ்ந்தனர். யானை, சிங்கம், புலி மான் போன்ற விலங்குகளும் இசையை மாந்திச் சித்திரத்துள்ள உருவைப் போன்று உருகி நின்றன. இசைகேட்ட மேகங்களும் அமுதமாகிய மழைபொழிந்தன. மாதவன் இன்னிசை இசைக்க நச்சுப்பாம்புகளும் நல்லமுது உகுத்தன. இசையில் மயங்கிய கலைமகளும் கண்ணனிடம் நடம் நவிலுகின்றாள். இசைகேட்டு இந்திரன் ஆயிரம்கண்களும் தூளி தூவின. கண்ணன் இசை நுகர்ந்த உருத்திரன் சூடிய அரவங்களும் ஆடின. ஆன்கன்றுகள் பாலருந்தில; கறவை கடித்த புல்லை உண்ணவில்லை; அமரர் அமுதம் எய்திய அந்த நாளைவிட மிகவும் அகம் மகிழ்ந்தார். பட்டமரங்கள் தளிர்த்தன. கண்ணன் இசைமேற் காமங்கொண்டு ஆய்ச்சியர் கட்டிய கண்ணிகள் வாடிக் கரிந்தன; கோவியர் மார்பிற் பூசிய குங்குமமும் கரிந்தன; இசைகேட்டு விரகதாபம் எய்திய ஆய்ச்சியர்க்குத் திங்களிள் கதிரும் தீயென எரிக்கும்; குயிலிசையும் அவர்க்குச் சுடுநஞ்சாயிற்று; கண்ணனின் வாயமுதம் மாந்தக் கழை என்ன தவம் செய்ததோ எனக் கோவியர் அயர்ந்தார்.

**9. கோவியர் துகில் கவர்ந்தது :-**

கண்ணன் குழலிசையில் மயங்கிய ஆய்ச்சியர் விரக நோயால் மார்புகள் வெதும்பக் காமனின் மலர்க்கணை முகத்தெழும் புகைப்படலம் போன்று மூடுபனி எழுந்தது. பனி வந்தவுடன் வாடும் தாமரையிதழ். போன்று கோவியர் முகத்தாமரை வாடின. பனி தவழ்ந்திடத் தாமரை மிகவும் கரிந்தன. கன்னியர் காளியைத் தொழுது 'கண்ணன் எம் கணவன் ஆகுக' என வேண்டினர். இருதாள்களையும், தடக்கைகளையும் முகத்தையும், கண்களையும் தாமரைகாட்டு தலின் கண்ணனைப் போல் திகழ்ந்த யமுனையில் நீராடப் போந்தார் ஆய்ச்சியர். பாம்பின்தோல் போன்ற ஆடைகளைக் கரையில் வைத்துத் துறை கமழும்படி வாசனைப்பொடி முதலியன பூசிக் கன்னியர் நீராடினர். கன்னியர் முகம்

தாமரை ஒத்தன; குங்குமக்களி அளாவிய தாமரையை முலை யென ஒழித்துக் கன்னியரது சாந்தழிந்த முலையைத் தாமரை யென்று கருதி வண்டுகள் மொய்த்தன. ஆய்ச்சியரின் துகிலனைத்தையும் கைக்கொண்டு கண்ணன் கடம்ப மரத்தில் ஏறினன். ஆடை கவர்ந்த கண்ணனை நோக்கிக் கோவியர் 'கண்ணா, பூந்துகில் வழங்கிடு' எனப் பணிந்து வேண்டினர்.

அப்போது கண்ணன் ஆய்ச்சியரை நோக்கி, 'ஒலியுடைய இப்பெரிய ஆற்றில் ஆடையின்றி ஆடிய குற்றத்திற்காக நீவிர் அப்படியே கரையில் ஏறித் தொழுதால் ஆடை தருகிறேன்' என்றான். ஆய்ச்சியர் ஒருத்தி முகத்தை ஒருத்தி நோக்கிக் காதலும் நாணமும் மிக்கனர். மேகம் விட்டெழுந்த மின்னலைப் போன்று கோவியர் தாழ்ந்த கூந்தலோடும் முகத்தோடும், ஒரு கையால் அல்குல் மறைத்து மற்றொரு கையால் தொழுதபடிக் கரையேறினர். அப்போது கண்ணன் கோவியரை நோக்கி 'ஒரு கையால் தொழுதால்' ஒரு கையால் கண்ணீரைத் துடைத்தல் வேண்டும்' எனக்கூறச் சிலர் கொடியில் மறைந்தார்;மனமுருகிச் சிலர் மட்டும் துறையிற் படிந்தார். கூந்தல் கொண்டும், தழைகொண்டும், தாமரையிலை கொண்டும் தம் தனங்களையும் அல்குலையும் மறைத்துக் கோவியர் இருகைகளாலும் கண்ணனைத் தொழுதனர் கண்ணன் கோவியர்க்குக் கலிங்கமளித்தான். கோவியர் மகிழ்ந்து ஆடையுடுத்த போது அவை நெகிழ ஆய்ச்சியர் சோர்ந்து நிற்க 'நேய நோக்குதவி அரும்பி வீங்கும் நும் மார்பைத் தழுவிடுவேன் ஒருநாள்' எனக் கண்ணன் கூறி அகன்றான்.

### 10 வேள்வி மங்கையர் உணவளித்தது

கண்ணன் தன் தோழரோடு ஆநிரைகளைக் காட்டிற்கு ஓட்டிச் சென்றான். பல சோலைகளில் நடந்ததால் களைத்த இடைச்சிறார் கண்ணனிடம் தங்களுக்குப் பசிக்கிறது எனத் தெரிவித்தனர்.

அருகில் யாகசாலை அமைத்து அழல் வளர்த்த அந்தணரிடம் சென்று இடைச்சிறார். 'கண்ணன் நும்மிடம் வெண் சோறு பெற்றுவர விடுத்தான்' எனக் கூறினர். கண்ணனைச் சிறுவனென்று எண்ணிய அந்தணர் சோறுதர மறுத்தார். சிறார் கண்ணனிடம் அச்சேதி சேர்த்தார். அப்போது

கண்ணன்; 'வேதியர் மனைவியரிடம் சென்று கேளுங்கள்' எனச்சிறார்களிடம் கூறினான். சிறுவரும் வேதியர் மனைவியரிடம் அணுகிச் சோறு வேண்டினர்.

முல்லைப்பூவைச்சூடிய வேதியருடைய மனைவியர் சுவையுள்ள துவையலையும் சோற்றையும் எடுத்துக் கொண்டு வேதியர் தடுத்தும் கேளாமல், கண்ணனிடம் வந்தனர். கண்ணனைக் கண்குளிரக் கண்டனர் வேதியர் மனைவியர், சோற்றை உண்டபின் கண்ணன் 'நீவிர் யாகசாலை திரும்புக' என அந்தணப் பெண்களிடம் கூறினான். அப்போது வேதியர் மனைவியர்' நாங்கள் யாகச்சாலைக்குத் திரும்பிப் போக மாட்டோம்; அங்குச் சென்றால் வேதியர் சினம் கொள்ளுவர்' என்றனர். 'அவர் முனிவு செய்திடார், நீங்கள் செல்லுங்கள்' எனக் கண்ணன் கூற அப்பெண்கள் யாகசாலை அடைந்தனர்,

அப்போது வேதியர் தம் மனைவியரை நோக்கிக் 'கண்ணனை நாங்கள் காணப் பெற்றிலம்! பெண்ணின் அறிவும் பெற்றிலம் பேதையேம்' எனக் கூறி உள்ளம் நெகிழ்ந்தனர். மாலை நேரத்தில் கண்ணன் ஆநிரைகளை ஓட்டிக் கொண்டு சிறாருடன் மீண்டான்.

### 11) கோவர்த்தனம் எடுத்தது :-

நந்தகோன் இந்திரன் மகிழப் பண்ணிகாரம் செய்தனன். யாவும் அறிந்த கண்ணன் நந்தகோனிடம் 'நீ என் செய்வான் மேவினை?' என்ன, நந்தகோன் 'இந்திரபூசையியற்ற' எனப் பதிலுரைத்தான். இந்திரன் சீற்றம் காண விழைந்த கண்ணன் 'முன் செய்த வினைப் பயனல்லது தெய்வம் பயனுதவ வல்லதன்று; இந்திர பூசை இயற்றுதலாற் பயனொன்றுமில்லை. ஏதேனுமொரு வினைசெயின் அவ்வினைப்பயன் விளையுமேயன்றித் தெய்வம் என் செயும்' என நந்தகோனிடம் கூறினான். 'மறையோர்க்கும் ஆவினங்களுக்கும் அவர் விரும்பியன நல்கி மேகம் தவழும் கோவர்த்தனம் வழிபடல் மிக நன்மை பயக்கும்' என்றான் நந்தகோன். படையல் பல படைத்து நந்தகோன் பொருப்பினை அருச்சனை புரிந்தான். தானே கோவர்த்தன மலையாகிக் கண்ணன் வெண்சோறு முதலியன

உண்டு 'யாம் உவந்துளோம்' என்றான். நந்தகோன் முதலி யோர் 'மலை வாய் திறந்து உண்டதும், உவந்துளோம் என விண்டதும் வியப்பே' என்றனர். பின் யாவரும் கோவர்த்தன மலையை வணங்கினர். 'மகன் சொல்லைக் கேட்ட நந்தன் மலை வழுத்தினன் என்' எனச் சினந்தான் இந்திரன். 'ஒரு மகனும் மலையும் காப்பதைக் காணலாம்' எனக் கறுவி இந்திரன் மிக்க மழை பொழியுமாறு ஏழ்பெருங்கொண்டலை ஏவினன். இடி மழையால் ஆநிரைகள் பட்ட துயரை என் சொல்ல?

கோவலர் கண்ணனை அணுகிக் 'காட்டுத் தீயிடமிருந்து அன்று எங்களைக் காத்த நீ, இம்மாரியும் காத்தல் வேண்டும்' எனப் பணிந்தார். 'யாவரும் வாரீர்' எனக் கூறிய கண்ணன் கோவர்த்தனமலையைப் பிடுங்கிக் குடையாகக் கொண்டு மாரி காத்தான். ஏழு நாட்கள் அண்ணல் திருமால் வரையேந்தி மழை காத்த கோலம் கண்ட இந்திரன் புயல் ஏழையும் மீட்டான். மகிழ்ச்சியுற்ற கோவலர் கண்ணன் கோவர்த்தன மலையேந்தி நிற்றல்கண்டு ஐயுற்றார். நந்தன் கண்ணபிரானை புகழ்ந்தான். இந்திரன் கண்ணனிடம் வந்தான். இந்திரன் கண்ணனின் தாள் பணிந்தான். பலவாறு போற்றியபின், சிற்றத்தாற் செய்த பிழை பொறுக்குமாறு கண்ணனை வேண்டினான். 'மயக்கத்தால் நீ சினந்து செய்த செயலை உணர்த்திடவே அவ்வாறு செய்தேன்' என அருளினன் கண்ணன்.

தன் குலம்காத்த கண்ணனைப் போற்றிப் பணிந்தது காமதேனு. ஐராவதம் பாரிசாதமாலை சூட்டிக் கங்கை நீரால் கண்ணனை நீராட்டிற்று. குன்றமேந்தி ஆக்களைக் காத்த கண்ணனுக்குக் கோவிந்தன் எனப் பெயர் சூட்டினான், இந்திரன். தேவமாதர் நடமிட்டனர். கின்னரர் பாட்டிசைக்கத் தேவர் பூமாரி பொழிந்தார். கண்ணனை வாழ்த்தி இந்திரன் தன் இருப்பிடம் சென்றான்.

### 12. கோவியரை மணந்தது:-

பன்னிரண்டாம் திதியன்று (துவாதசி திதி) நந்தகோன் ஆற்றில் நீராடச் சென்றபோது ஓர் அசுரன் நந்தகோனைக் கவர்ந்து செல்லக் கண்ணன் போரேறுபோல எழுந்தான்,

'எங்குச் சென்றாய்' எனக் கோவியரும் கோவலரும் கண்ணனை வணங்கித் துதிக்கக் கண்ணன் வருணன் பதிசென்று நந்தகோனைக் கொணர்ந்தான். வருணன் கண்ணனை வணங்கியதை இடைச்சிறார்க்கு எடுத்தியம்பினான் நந்தகோன். 'தேவரும் விரும்பித்தொழும் வண்ணம் காட்டுதி' என ஆயர் வேண்ட அவர் விரும்பிய கோலத்துடன் காட்சி தந்தான் கண்ணன். பின் கண்ணன் யமுனை ஆற்றை அடைந்து வேய்ங்குழலிசைத்தான். கண்ணனின் குழலிசைகேட்ட ஆய்ச்சியர் நெஞ்சில் மாரன் கணைப்பட்டுக் காமநோய் மிகுவித்தது ஆய்ச்சியர் கண்ணனின் இசையாகிய வலையில் மயங்கி வீழ்ந்தார். 'கணவரைப் பிழைத்து என்பால் அடைதல் அறமன்று; மீண்டு செல்லுங்கள்' எனக் கண்ணன் கோவியரிடம் கூறினான் 'காட்டுத்தீயிடமிருந்து எம்மைக் காத்தருளிய கண்ணா? கோவர்த்தன மலை தாங்கி எம்மை மாரிகாத்த மணிவண்ணா! மாரனெய்யும் அம்புகளிடமிருந்து ஏன் எம்மைக் காத்திலை? காளிந்திமடுவின் விடத்தினின்றும் எம்மைக் காத்த கண்ணா இந்த வாடைக் காற்றாகிய விடத்திடமிருந்து எம்மை ஏன் நீ காக்கவில்லை? பூதனையின் மார்புப்பாலும், வெண்ணெயும் உண்டகண்ணா எங்கட்கு ஒருநாள் ஏன் உதவினாயில்லை' என இவ்வாறெல்லாம் கூறிய கோவியர் கண்ணனின் மேனியழகைக் கண்ணாற் பருகினர்.

கோவியரை மணந்து அவருக்கு மனம் நெகிழும்படி மகிழ்வித்தான். 'கண்ணன் நம்மிடம் ஆர்வம் மிக்கான்' எனச் செருக்குற்றுச் சில மடந்தையர் கூறக் கண்ணன் மின் போல மறைந்தான். கண்ணனைக் காணாத கோவியர் தவித்தார். நிறையழிந்து நெஞ்சம் வருந்தினர் இடைச்சியர்.

பின் கண்ணன் கோவியர் முன் தோன்றினான். கோவியர் மகிழ்ந்தார். கோவியருடன் கண்ணன் இணைந்து குரவைக் கூத்தாடினான். ஆய்ச்சியர் பின் மனை திரும்பினர்.

இவ்வாறு சுக முனிவன் கூறியதும், பரீட்சித்து, 'பரமன் அவ்வாறு ஆய்ச்சியர் நலந்துய்த்தது அறமாகுமோ?' என வினவச் சுகமுனிவன் கூறலுற்றான்.

'தீ எல்லாவற்றையும் உண்ணுகின்றதன்றோ? சிவபெருமான் போலப் பிறர் விடத்தை மாந்தினால் பிழைப்பரோ? எல்லாவற்றையும் செய்கின்ற இறைவன் போன்று யாவராலும்

செயற்பட முடியாது. இறைவன் விதித்தபடி நிற்பதே அறம். அயனையும் அரனையும் பிறரையும் நெறியில் நிறுத்திடும் பரம்பொருளாம் திருமாலுக்கு அறமும் பாவமும் இல்லை.

ஆய்ச்சியரைத் தோய்ந்த இறைவன் பிரம்மசாரியின் ஒழுக்கம் பொருந்தியுளான் தன்னைச் சார்ந்தாருக்கு இன்பம் தரல் அவன் வழக்கம், கண்ணபிரான் நித்திய பிரம்மசாரி என்பர்' என்றான் சுகன்,

## 13) சங்க சூடனைக் கொன்றது:-

'பரிட்சித்து மன்னவ! கேள், நந்தகோன் கண்ணன் முதலியோர் தொடர அம்பிகாவனத்துள்ள சிவனை வழிபடச் சென்றான், அங்கு அந்தணர்க்கெல்லாம் அறுசுவையுண்டி வழங்கினான். பின் சரசுவதி ஆற்றிற் குளித்துவிட்டுச் சிவனை வணங்கினான். அவனை இரவில் சுதரிசனன் எனும் பாம்பு விழுங்கிற்று. கண்ணன் அப்பாம்பைக் காலால் எற்றினான். பாம்புருவம் நீங்கி விஞ்சையன் ஒருவன் தோன்றினான். கண்ணன் அவனை 'நீயாரென' வினவ, அவன் 'சுதரிசனன் எனும் பெயரினன்; நான் பிரகஸ்பதி முனிவரை அழகற்றவன் என ஏசியதால் அவர் என்னைப் பாம்பாகும்படி வசவுரைத் தார். நின் பாதம் பட்டதால் அவ்வசவுரை தீர்ந்தேன்' எனக் கூறித் தொழுதகன்றான். யாவரும் பின் சிவனை வழிபட்டு முல்லைவனம் திரும்பினர்.

கண்ணன் இசை பயிற்றினான். இசைகேட்ட ஆய்ச்சியர் பொழில் சென்று கண்ணனின் அழகு கண்டு களித்தார். அப்போது, கோவியரெல்லாம் அஞ்சியோடச் சங்குசூடனெ னும் அசுரன் தோன்றினான். கண்ணன் அசுரனின் மார்பில் எற்றிக் கொன்றான். பின் ஆய்ச்சியருடன் இன்பந்துய்த்த கண்ணன் வைகறையில் ஆயர்பாடி யடைந்தான். கண்ணன் சங்கு சூடனிடம் பறித்த சிவந்த மாணிக்கத்தைப் பலராமனுக்கு வழங்கினான்.

## 14. நாரதர் கஞ்சனோடு உரைத்தது :-

இரவெல்லாம் ஆய்ச்சியர் கண்ணனுடன் ஆடிக்களித்தனர். பின் கண்ணன் குழலிசைக்கும் அழகைச் சுவைத்தார்

ஆநிரை மேய்த்த கண்ணன் ஓர் சமயம் யமுனை ஆற்றின் கரையில் விளையாடுகையில் காலால் நிலத்தைக் கீறி வானளவு உயர்ந்த அரிட்டாசுரன் என்பான் இடியெனத் தோன்றினான். இடபவடிவுடைய அந்த அவுணனின் கொம்பைப் பிடித்துக் கண்ணன் தள்ளி அது நூறடிக்கப்பால் சென்று விழுமாறு செய்தான். பின்னும் அவ்வவுணன் சினந்தெழவே கண்ணன் அதன் கொம்பைப் பற்றி நந்தியும் அஞ்சிட அறைந்து கொன்றான். தேவர் பூமழை பொழிந்தார், நாரதன் கஞ்சனிடம் சென்றான்,

நாரதன் கஞ்சனிடம் 'அரசே' யசோதை பெற்ற ரோகிணி என்ற கன்னியையே நீ கொன்றாய். தேவகி மைந்தன் கண்ணனாவான். பலராமன் ரோகிணியின் புதல்வன். ஆயர்பாடியில் வளரும் குமரர்களாய கண்ணனும் பலராமனும் நீவிடுத்த அவுணரைக் கொன்றார்' எனக் கூறினான்.

நாரதன் கூறியதுகேட்ட கஞ்சன் சினந்து தன் மைத்துனன் வசுதேவனைக் கொல்லப் புறப்பட்டான். அப்போது நாரதன் கஞ்சனை நோக்கி 'வசுதேவனைக் கொல்லாதே; கண்ணனையும் பலராமனையும் கொல்லப் பொருந்துவாயாக' எனக் கூறிய கன்றான். கஞ்சன் தேவகியையும் வசுதேவனையும் சிறைப் படுத்தினான் பின் கஞ்சன் கண்ணன் பலராமனைக் கொல்லக் குதிரை வடிவுடைய கேசியெனும் அசுரனை ஏவினான்.

'வில் வேள்வி இயற்றுவீர்; மல்லர்சாலை அமைப்பீர்; களிற்றுச் சாலையை வாயிலிற் சேர்ப்பீர்; அரசர் யாவரையும் மற்போருக்கு அழைப்பீர்; கண்ணன் பலராமனைக் கொல்வீர்' எனக் கருணையின்றிக் கூறினான் கஞ்சன்.

குவலாயாபீடமெனும் பட்டத்துயானைப் பாகனிடம் கஞ்சன் 'தனுர் யாகத்திற்கு வரும் பலராமனையும் கண்ணனையும் களிற்றைச் செலுத்திக் கொல்லுக' எனப் பணித்தான். பின் அக்குரூரனை நோக்கி 'கண்ணன் பலராமனை யாகத்திற்குத் தேரில் அழைத்துவா, விரைவில்' எனக் கட்டளையிட்டான்.

குதிரை வடிவுடைய கேசி எனும் அசுரன் கண்ணனைக் கொல்லக் கருதிக் கண்ணன் முன் சினந்து சென்றான். அக் கேசியின் வாயினுள் கையை நீட்டி நுழைத்து வளரச் செய்தான் கண்ணன். கேசியின் மார்பு கிழிந்து மடிந்தான். நாரதன் அங்குச் சென்று 'கஞ்சன் முதலியோர் அழிவது காண்போம்' என்று கூறிக் கண்ணனை வழிபட்டுப் புறப்பட்டான்.

## 15. அக்குரூரன் வருகை :-

கண்ணனுடைய நண்பர்கள் சிலர் கள்வராகவும் சிலர் காக்குநராகவும் சிலர் மறியாகவும் பாவித்து மலையில் விளையாடினர் மயன் மகன் வியோமன் என்பானும் ஆயர் மகனாகி வந்து விளையாடினான். கள்வனாய் நடித்த வியோமன் இடைச்சிறார்களை வவ்விக் குகைக்குள் நுழைந்தான். வியோமன் சிறார்களைக் கொல்லுதற்கே சமைந்தான் எனக் குறிப்பாலறிந்த கண்ணன் வியோமனைக் கொன்று சிறுவரோடும் ஆநிரையோடும் மாலையில் இல்லம் திரும்பினான்.

அக்குரூரன் கண்ணனை அழைத்துவரும் பொருட்டு முல்லைநிலம் அடைந்தான். கண்ணனைக் கண்டு அக்குரூரன் வணங்கினான். ஆயர் அக்குரூரனைத் தழுவி மகிழ்ந்தார். பின் அக்குரூரனுக்கு விருந்து படைத்தார் ஆயர்.

கண்ணன் அக்குரூரனைத் தனியே அழைத்துச் சென்று 'என் பெற்றோராகிய தேவகியும் வசுதேவரும் என் பொருட்டுத் துன்புற்றனர் என்ற செய்தியன்றி வேறு ஏதேனும் செய்தி உள்ளதோ; வந்த காரியம் என்ன?' எனக் கேட்டான். அக்குரூரன் கண்ணனிடம் நாரதன் வந்து கஞ்சனிடம் கூறியதும், கஞ்சன் வசுதேவனைச் சிறைப்படுத்தியதும், தான் கண்ணனையும் பலராமனையும் அழைத்துச் செல்லும் பொருட்டு வந்துள்ளதையும் எடுத்தியம்பினான்.

கண்ணன் நந்தகோனிடம் 'கஞ்சன் சிலைமகம் செய்கின்றான்; நம்மை, அழைத்துள்ளான். ஆதலின் விரைவிற் செல்வோம்' எனக் கூறினான். 'கண்ணனை அழைக்கத் தேரில் வந்த அக்குரூரன் கொடியவன் கருணையற்றவன்' எனக் கூறிக் கோவியர் மறுகினர். 'கோவியரே! வருந்தாதீர் கஞ்சனைக் கண்டு விரைவில் மீள்வேன்' என்று கூறிய

கண்ணன், பலராமன், நந்தகோன் முதலியோருடன் தேரில் ஏறிப் புறப்பட்டான். நண்பகலில் யமுனையடைந்தனர். அக்குரூரன் யமுனையில் நீராடினான். நீரில் மூழ்கிய அக் குரூரன் திருமாலின் அறிதுயில் காட்சி கண்டு வணங்கினான். பின் மாயன் அவ்வுருவத்தை மறைத்தான்.

பின் யாவரும் மதுரை நகருக்கு அருகிலுள்ள சோலை யடைந்தனர். கண்ணன் அக்குரூரனை நோக்கி 'நீ முன்னால் புறப்படுக; நாங்கள் வருகிறோம்' எனக் கூறினான். அக் குரூரன் கண்ணனைத் தன் இல்லத்திற்கு வருமாறு அழைத் தான். கண்ணன் சம்மதிக்கவே அக்குரூரன் தேரில் விரைந்து சென்று கஞ்சனிடம் கண்ணன் மதுரையடைந்துவிட்ட செய்தி சேர்த்தான்.

## 16 மதுரை காணுதல்

மாலையில் கண்ணனும் பலராமனும் மதுரை காணப் புறப்பட்டனர். கஞ்சனின் மதுரை நகரின் அகழியும் மதிலும் மாளிகை மீது பறந்த கொடிகளும் சிறப்புறத் திகழ்ந்தன. தம் தந்தங்களை ஒடிப்பவனாம் கண்ணன் வந்துற்றான் என்ப தறிந்த களிறுகள் அஞ்சித்தம் எல்லையில் நில்லாவாயின. கேசியின் உடல் கிழித்த கேசவன் வந்துள்ளானென அஞ்சிய பரிகள் நிலத்தில் நில்லாமல் விண்ணிடைப் பறக்க ஆயத்த மாயின.

கண்ணன் மதுரை நகரடைந்தான். கண்ணன் மதுரை நகர்த்தெருவில் கஞ்சனது ஆடை மாசைக் கழுவுவான்தனைக் (வண்ணான்) கண்டு 'வெளுத்த ஆடை தருக' எனக் கேட்டான். பொன்னாடை அணியும் கண்ணன் கூறியது கேட்ட வண்ணான், 'காட்டிலும் மலையிலும் வாழ்பவர் இத்தகு பூந்துகிலையோ உடுப்பது' என இகழ்ந்தான். உடனே கண்ணன் வண்ணானின் தலையைக் கொய்தான். பின் தான் ஒரு மெல்லிய ஆடையை உடுத்திக் கொண்டு எஞ்சியிருந்த ஆடைகளைத்தம் நண்பர்க்குத் தந்தான். பின் ஊசியால் நுட்பமான தொழிலியற்றும் சேணியன் ஒருவன் கண்ணனுக்கு அழகிய பட்டாடையும் கச்சையும் அணிவித்தான். கண்ணன் அச்சேணியனுக்குப் பதமளித்தான்.

அடுத்துக் கண்ணனும் பலராமனும் மலர் தொடுப்பான் ஒருவனின் மருங்கடைந்தனர். பூ வணிகன் கண்ணனுக்கு அழகிய மாலை அளித்தான் கண்ணன் பூவணிகனிடம்' யாது நீ விரும்பியது' எனக் கேட்க அவன் 'நின்னிடத்து நீங்காத அன்பு தழையச் செய்' எனப் பணிந்தான். கண்ணன் அவனுக்கு அருள் வழங்கினான். அடுத்துக் கண்ணன் மேனி யில் சந்தனம் பூசுவித்தாள் ஒரு கூனி, கண்ணன் அக்கூனி யின் சிலம்படி மிதித்துப் பிடரிபற்றி எடுக்க அவளது கூனல் நீங்கி அழகிய பெண் உருவை எடுத்தாள். அப்பெண் கண்ண னைத் தன் மனைக்கு எழுந்தருள வேண்டினள். வந்தவினை முடித்து வருவதாக அருள் செய்தான். கண்ணன் பின் கஞ்சன் தனுர்யாகம் செய்யும் இடமடைந்தான். அங்கு வைக்கப் பட்டிருந்த வில்லைக் கரும்பை ஒடிப்பதுபோல் ஒடித்தான். கண்ணன் அவண் எதிர்த்த மறவரைக் கொன்றான். மாலை வந்தவுடன் கண்ணன் நந்தகோன் தங்கியிருந்த சோலை யடைந்தான். பின் கண்ணன் தோழருடன் பாலடிசில் அருந் தினான்.

## 17) கஞ்சனைக் கொன்றது:-

கண்ணன் தனுர் யாகசாலை வைத்திருந்த வில்லை முறித் தது கேட்ட கஞ்சன் துயில்நீத்து நெஞ்சம் புழுங்கினான். கஞ்சன் மல்லர்சாலை அடைந்தான். கஞ்சன் அரசு கட்டில மர்ந்தான். யாதவர் மற்போர் காணத் தவிசில் இருந்தனர். கஞ்சன் அழைத்தலால் நந்தகோன் வேந்தவை எய்தினான். மல்லர் கூடினர். கண்ணன் பலராமனுடன் மல்லர்சாலை அடைந்தான். கண்ணனின் அழகு பருக மாதர் மாளிகை தோறும் மொய்த்தனர்.

கண்ணன் நடந்து செல்லும் பாதையில் பட்டத்து யானை குவலாயாபீடம் எதிர் நின்றது. கண்ணன் யானைப் பாகனை நோக்கி 'யானையை வழியை விட்டு நீங்கச் செய்; இல்லா விடில் நாம் அதைக் கொல்வோம்' என்றான், கண்ணனின் மாற்றம் கேட்ட பாகன் சினமிகு குவலயாபீடத்தைக் கண்ணன் மேற் தூண்டிச் செலுத்தினான். கஜேந்திரன் எனும் யானை முன் அழைக்கச் சென்றுதவிய கண்ணன் களிறு வளைக்கின்ற கையிற் படுவான்; பின் யானையின் உரல்போலும் காலிற் சென்று மறைவான்; யானை தன் துதிக்

கையால் கண்ணனைப் பற்றத்தொடரக் கண்ணன் யானையின் வாலைப்பற்றி இருபத்தைந்து வில்லினளவு வளைத்துப் பிடித்து நின்று சுற்றினான். பின் கண்ணன் யானையின் எதிரிற் தோன்றி அதன் நுதலிற் தட்டினான். சினந்து வரும் களிறு மேலும் நடக்கும்படி விளையாட்டாய் ஓடி விழுந்தான். பின் யானை தன் மருப்பினாற் குத்த வருகையிற் கண்ணன் மருப்பிடை மறைந்தான். கண்ணன் பின் குவலயாபீடத்தின் மணி மருப்பை ஒடித்துக் கொன்றான். பாகன் பத்திரனும் கண்ணனாற் கொல்லப்பட்டான். கஞ்சன் வயிறு எரியும்படிக் கண்ணன் கையிலேந்திய யானையின் தந்தம் திருமாலின் கையகத்துள்ள சங்கினைக் காட்டியது. இரணியனைக் கொல்ல நரசிங்க உருவமெடுத்த திருமால் குவலயாபீடத்தைக் கொன்ற வெற்றியிலும் சிங்கம் போல் திகழ்ந்தான். பலராமன் யானையின் மற்றொரு மருப்பொசித்து ஏந்தி நின்றான்.

பின் கண்ணன் கூற்றமெனக் கஞ்சன் அவைக்களம் புகுந்தான். ஆடவரும் பெண்டிரும் கண்ணனின் அழகைக் காண அமர்அரங்கில் மொய்த்தனர். சாணூரன் எனும் மல்லன் கண்ணனை அடைந்து கஞ்சன் காண 'நான் நின்னுடன் மற்போர் செய்கிறேன்' என்றான். 'இளையோனாகிய நான் நின்னுடன் எவ்வாறு போரிடுவது' என்றான் கண்ணன். குவலயாபீடத்தின் மருப்பொடித்த நின்னைவிடச் சிறந்த இளையோர் இவ்வுலகில் உண்டுகொல்! விரைந்து வந்து போரிடுவாயாக' என அழைத்தான் சாணூரன். கஞ்சனின் உள்ளம் நடுங்கக் கண்ணன் சவாலை ஏற்றான். சாணூரனும் முட்டிகனும் மாய்ந்தனர். பின் கண்ணன் சலன், கவுசலன் எனும் மல்லர்களையும் மாய்த்தான்; பலராமன் கூடன் எனும் மல்லனைக் கொன்றான். ஏனைய மல்லர் அஞ்சி ஒளிந்தார். கண்ணன் தன் தோழருடன் விளையாடியது கண்டு கண் சிவந்தான் கஞ்சன்.

'நந்தனைச் சிறைப்படுத்துங்கள்; கண்ணன் பலராமனைக் கொல்லுங்கள்; உக்கிரசேனனையும் வசுதேவனையும் கொல்லுங்கள்'எனச் சினந்து மொழிந்தான் கஞ்சன். கண்ணன் கஞ்சன் மேற்பாய்ந்து பாம்பைப் பற்றும் கருடன் போன்று கஞ்சனின் குஞ்சியைப் பற்றி வீசக் கஞ்சன் கீழே வீழ்ந்தான். கஞ்சன் மடிந்தான். நட்பொடு பகையிலாக் கண்ணனை அஞ்சி நாள்தோறும் கஞ்சன் நினைத்தவாற்றால் மால் பதம்

எய்தினான். சீற்றம் கொண்டெழுந்த கஞ்சனின் தம்பியர் எண்மரைக் கொன்றொழித்தான் பலராமன் அமரர் மலர் தூவி ஆர்த்தனர். கஞ்சனது நகரமே வருந்திற்று. கஞ்சனுக்கு ஈம வினைகள் செய்வித்தான் கண்ணன்.

பின் கண்ணனும் பலராமனும் வசுதேவனையும் தேவகியையும் பணிந்தனர், இருவரும், வசுதேவன் தேவகியிடம் 'எம்மை நீர் பெற்றதால் இன்பம் துய்த்திலீர், உங்களிடம்வளர நாங்கள் தவம் செய்திலோம்' என்றனர். கடவுளர் இவர் என்று பெற்றோர்மகிழ மாயன் பெற்றோரின் எண்ணம் மறைத்தான். புதல்வரைத் தழுவி உவகைக்கண்ணீர் பெருக்கினர் பெற்றோர்; 'சிறுவரது மழலை மொழி கேட்கும் தவமிலேம்' என வாடினர். கண்ணன் வாயால் 'அத்தா, அன்னாய்' என அழைக்கப் பெற்ற தவமுடையோராகிய யசோதை நந்தகோன் மகிழ்ச்சியை யாரே வகுத்துரைப்பார்?

கண்ணன் மதுரைக்கு அரசனாக உக்கிரசேனனை நியமித்தான். கஞ்சனுக்கு அஞ்சியோடிய அரசரை அழைப்பித்தான். வந்த அரசர் கண்ணன் செவ்வி கண்டு மகிழ்ந்தனர். பின் கண்ணனும் பலராமனும் யசோதையையும் நந்த கோனையும் வணங்கித்தழுவிப் 'பெற்ற புதல்வரைப்போல் எம்மை வளர்த்த தாய் தந்தையர் நீவிர் அன்றோ' எனக் கூறினர். 'நீ ஒன்றும் எண்ணல் வேண்டா; நின்பால் நாம் எய்துவம்' எனக் கூறித் தூசும் பொற்பூணுமளித்துக் கண்ணனும் பலராமனும் நந்தனுக்கு விடைதந்தனர் புதல்வரை நீங்கித்தனியாக நந்தகோன் நாடு திரும்பினான். கண்ணனும் பலராமனும் இருபிறப்படைந்தாராகும்படி வசுதேவன் கர்க்க முனிவனால் முப்புரிநூல் புனைந்தான்.

## 18 குரவன் மைந்தனைக் கொணர்தல்

அவந்தி நாட்டு சாந்தீவினி முனிவரிடம் கண்ணனும் பலராமனும் அறுபத்து நான்கு கலைகளும் பயின்றனர். கண்ணன் தன் ஆசானைப் போற்றிப் பணிந்து 'ஆசானுக்குரிய தக்கிணையை எம்மிடம் பெற்றுக் கொள்வாயாக' என்றான். சாந்தீவினி முனிவர் மாணாக்கராகிய கண்ணன் பலராமனிடம் என்ன கடனாகப் பெறலாம் எனத் தன் மனையாளுடன் சூழ்ந்தார். அவள் இறந்த தங்கள் பிள்ளையைத் திரும்பக் கொள்ளுதலைத் தக்கிணையாக வேண்டும்படிக் கூறினாள். சாந்தீவினி

முனிவர் கண்ணனிடம் கடல் விளையாட்டில் மாய்ந்த தன் மகனைத் தருமாறு வேண்டினார்.

உடனே கண்ணன் பலராமனுடன் பொற்தேரில் ஏறி, வருணன் உலகிற்குப் புறப்பட்டான். 'வந்த காரணம் என்ன' என்றான் எதிர்கொண்டழைத்த வருணன். 'கடலில் அகப் பட்டு மாய்ந்த ஆசான் மகனைக் கொடு' என்றான் கண்ணன் 'பாஞ்சனன் எனும் அசுரன் அச்சிறுவனை விழுங்கினான்' எனப் பதிலிறுத்தான் வருணன். கடலிற் புகுந்து சிறுவனைக் கண்ணன் தேடலானான். பாஞ்சனனைக் கொன்று கண்ணன் பாஞ்சசனியம் எனும் சங்கைப் பெற்றான். பின் கண்ணன் தென்புலம் சென்று யமனிடத்துச் சங்கை முழக்கினான். 'வந்தது என்' என்ற யமனிடம் வந்த நோக்கம் தெரிவித்துக் கண்ணன் குரவன் மைந்தனைக் கொண்டு விரைந்து சென்று ஒப்படைத்தான். தம் சிறுவனைக் கண்ட சாந்தீவினி முனி வரும் அவர்தம் மனையாளும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார். அவர் அடைந்த உவகையை யாரே சொல்ல வல்லார்! 'மேலும் விரும்புவது உளதேல் கூறுக' என்ற கண்ணனிடம் சாந் தீவினி முனிவர் 'உம்மை மாணாக்கராய்ப் பெற்ற எமக்கேது குறை' எனப் போற்றினார்.

கண்ணனும் பலராமனும் முனிவரிடம் விடை பெற்று மதுரை மீண்டனர்.

## 19 உத்தவனைக் கோகுலத்தில் விடுத்தல்

தாய்தந்தையராகிய நந்தகோன் யசோதையையும் ஆய்ச்சி யரையும் தெருட்டும் பொருட்டுக் கண்ணன் யாதவனாகிய உத்தவனைக் கோகுலத்திற்கு அனுப்பினான். கண்ண னின் தூதனாக உத்தவன் கோகுலமடைந்தான், நந்த கோன் உத்தவனை வரவேற்று விருந்தளித்தான். உத்த வனிடம் நந்தன் 'என் நண்பன் வசுதேவன், புதல்வனாம் கண்ணனுடன் நலமாயுள்ளனன் கொல்' என வினவினான். 'கண்ணன் என்னை நினைப்பானா? இந்த மலைச்சாரலையும் யமுனையாற்றையும் தோழரையும் மறந்தனன் போலும், கண்ணனைக் கண்குளிரக் காணுமாறு அவன் இனி இங்கு வருவானோ?' எனப் பலவாறு நந்தன் கூறியவுடன் யசோதை யும் நெஞ்சுருக நின்றாள். உத்தவன் நந்தகோனை நோக்கி

'தாருவில் உள்ள தீ போன்று கண்ணன் உங்கள் மனத்திலும் என் மனத்தலும் உள்ளான். எங்கும் உள்ளான் கண்ணன். கண்ணன் உமதுள்ளம் உவக்கும்படி நீர்பெற்ற பிள்ளையல் லன், விண்ணும் மண்ணும் படைத்த தந்தையன்றோ!' எனப் பல கூறி நந்தனின் உள்ளம் தெளிவித்தான். ஆய்ச்சியர், காளியன் மீது நடமிட்ட கண்ணன் செயல் கூறித்தயிர்கடைந் தனர்.

உத்தவன் பின் யமுனையாடச் சென்றான். கண்ணனை மதுரைக்கழைத்துச் சென்ற அக்குரூரன் வந்தனனோ என எண்ணி உத்தவனிடம் நெருங்கினர் ஆய்ச்சியர். கண்ணன் நண்பன் எனக் கண்டு ஆய்ச்சியர் உத்தவனை மொய்த்துப் 'பெற்றவர் துன்பம் போக்கினாய் தேனுண்டபின் வண்டு மலரைத் துறக்கும், கனியுண்டபின் பறவை மரத்தை விடுக் கும், கண்ணனுக்கு இனி எம்மிடம் என்ன காரியம்?' என்றனர் ஆய்ச்சியர். ஒரு வண்டைத் தூதாகப் பாவித்த ஓர் ஆய்ச்சி, 'தேனை விரும்பும் வண்டே! கண்ணன் தழுவிய மடவாரின் செம்முகமுடைய நீ எம்மடி தீண்டாதே, இடைச்சியர்முன் என்ன பேசுவாய்! மதுரைப் பெண்டிர் முன் சென்று பாடிடுக. மதுரைப் பெண்களின் நலன் நுகராமல் கண்ணன் சிற்றிடை ஆய்ச்சியர் தோள்சேர நினைப்பானோ! பசலை படர்ந்து வருந்தும் எம்மைக் காக்க நினைப்பான் கொல்! கண்ணனை யாரே முற்ற அறிந்தார்? கண்ணன் உரைத்த கட்டுரையால் திருமகளும் நிறையழிந்து மடநெஞ்சு வருந்தி, விட்டிலளாய் மார்பம் விழைந்தாளே! குளிர்ந்த புன்னகையால் உயிருண்டு விடும் கண்ணனது புருவச் செயல் கண்டால் யாம் என்ன,தேவ மாதரே மயங்கி வீழாரோ! மார்பில் ஒருத்தி வாழ, மற்றொருத்தி தோளைச் சேர, கண்ணனுடன் சேர்க்க இன்று எழுந்தாயே! நம்மை மறந்த கண்ணனை நாமும் மறக்குதும் எனில் காளிந்தி காணினும் மணிகள் காணினும் மாறாமல் நெஞ்சல் மாயனை நினைக்கின்றதே!' இவ்வாறு அந்த ஆய்ச்சி கூறியவுடன், உத்தவன் 'கண்ணன் மீதுற்ற காதலால் உயர்ந்தீர், பஞ்ச பூதத்தும் உறையும் கண்ணன் உங்கள் மனத்திலும் உளன், கண்ணன் என்றும் பிரிந்திலன். கண்ணன் சேய்மையில் வைகியது நும் மனம் அன்பு முற்றிப் பற்றிட அன்றோ!' எனக் கூறி ஆய்ச்சியரைத் தெளிவித்தான்.

நந்தனும் யசோதையும் பாராட்டச் சிலதிங்கள் தங்கிய உத்தவன் பின் மதுரைக் கெழுந்தான். கண்ணனைச் சந்தித்து உத்தவன் நந்தன் கொடுத்தன, கூறியன யாவும் அளித்தான். பின் கண்ணன் அழகிய கூனியின் இல்லத்திற்கு உத்தவனுடன் புறப்பட்டான். ஆய்ச்சியர் நலமுண்ட கண்ணன் கூனியின் தோள்நலந்துய்த்தான் தன்னுடனே இருக்குமாறு வேண்டிய கூனிக்கு முறுவலித்துக் கண்ணன் அக்குரூரன் மனைக்குச் சென்றான்.

எதிர்கொண்டழைத்து அக்குரூரன் கண்ணன் திருவடியைப் புனல்கொண்டு கழுவினான். பின் அக்குரூரன் கண்ணனை வாயாரப் போற்றினான். கண்ணன் மகிழ்ந்தான்.

**20. அக்குரூரனை அத்தினாபுரத்து விடுத்தல் :-**

'தந்தை பாண்டுராசன் இறப்பத் தளர்ந்த பாண்டவரைக் கண்ணிலான் திருதராட்டிரன் தன் மைந்தரைப்போல் காப்பான் கொல்? நீ சென்று அறிந்துவா' எனக் கண்ணன் அக்குரூரனை அத்தினாபுரத்துக்கு அனுப்பினான். அத்தினாபுரம் சென்றடைந்த அக்குரூரன் திருதராட்டினைச் சந்தித்தான். துரியோதனின் புதல்வர், பீஷ்மன் ஆகியோரிடம் சென்றுவிட்டுப் பின் அக்குரூரன் குந்தி வீட்டை யடைந்தான் 'கஞ்சனைக் கொன்ற கண்ணன் எம்மையெல்லாம் நினைக்கும் கொல்' எனக் கூறிக் குந்தி வருந்தினாள். 'கண்ணன் காப்பான்' எனக் கூறி அக்குரூரன் குந்தியைத் தேற்றினான்.

துரியோதனன், திருதராட்டிரன் ஆகியோர் செயலைச் சில திங்கள் அத்தினாபுரத்து தங்கி அறிந்த அக்குரூரன் திருதராட்டிரனை நோக்கி' பெற்ற மக்களைப்போல் நீ பாண்டவரைக் காத்தல் வேண்டும். பகை, நட்புப்பாராமல் உலகம் காக்க, புகழல்லால் உலகில் நிலைத்திருப்பது இல்லை' என்று பலவாறு கூறினான் 'என் மைந்தரிடத்துக் கொண்ட அன்பு மிகுதியால், நின்சொல் என்னுள்ளத்திற் பொருந்தவில்லை' என்றான் கண்ணிலான்.

'உலகின் துன்பந்துடைக்கத்தோன்றிய கண்ணன் விதித்த விதியை யாரே கடப்பர்' எனக் கூறிக் கண்ணனைத் தொழுத அக்குரூரன் விரைந்து மதுரையடைந்து கண்ணனிடத்து அனைத்தும் கூறினான்.

## 21. சராசந்தனொடு பொருதல் :-

கஞ்சன் இறந்தவுடன் கஞ்சனின் மனைவியராகிய இரு பேதையர் தம் தந்தையாகிய சராசந்தனிடம் போய் முறையிட்டார். கண்ணன் தன் மருகனைக் கொன்றான், என அறிந்து சராசந்தன் சினம் மிகக் கொண்டான். சராசந்தன் நால்வகைப் படையுடன் கடற்படையையும் தயார் செய்ய ஆணையிட்டான் அனைத்துப் படைகளுடன் யாதவரை அழிக்கக் கருதிப்புறப்பட்டான் சராசந்தன். மதுரை எயிலை வளைத்தன இருப்பத்து மூன்று அக்குரோணி அளவுள்ள படைகள். யாதவரும் எதிர்த்துப் போரிட்டனர். கண்ணன் பலராமனுடன் இரு தேரில் ஏறிவந்து அமர் விளைத்தான். சராசந்தன் பலராமனை விளித்துக் 'கண்ணன் இளைஞன் ஆதலின் நிற்க, நீ என்னொடு சமர் செய்' என அழைத்தான். 'சராசந்தனின் படைவெள்ளம் அழித்துப்பூமிபாரம் குறைப்போம்' எனக் கருதிக் கண்ணன் வில் வளைத்தான்.

பலராமன் இருப்புலக்கையுடன் சராசந்தனுடன் பொருதான். பலராமன் விடுத்த கணையெல்லாம் மகத மன்னன் சராசந்தன் விலக்கிடப் பின் சராசந்தனைப் பலராமன் வருணபாசம் வீசிப் பிணித்தான்.

கண்ணன் விளைவதுண்டு விடுப்பாய்'எனப் பலராமனிடம் கூறிச் சராசந்தனை விடுவித்து மதுரை மன்னவன் உக்கிரசேனனிடம் வழங்கினான்.

போர்க்களத்தில் தன் படைகள் எய்திய அழிவு கண்டு புழுங்கினான் சராசந்தன். கண்ணன் பெற்ற வெற்றி கண்டு தேவர் ஆர்ப்பரித்தார். அரச வாழ்வை வெறுத்துத் தவஞ் செய்யத் துணிந்தான் சராசந்தன். மற்ற அரசர்கள் சராசந்தனிடம்'வெற்றி தோல்வி விளைந்திடவில்லை,ஆகவே நீ தவஞ் செய்யப் போதல் வேண்டா' எனத் தேற்றினர்.மகத நாட்டை நோக்கிப் புறப்பட்டான் சராசந்தன்.

## 22. முசுகுந்தற்கு அருள்புரிதல் :-

சராசந்தன் சினந்து மதுரை மீது படையெடுத்துப் பதினேழு தடவை போரிற் தோற்றான். பின்னும் படையெடுத்தற்குப்

படைதிரட்டிய போது, நாரதன் காலயவனன் எனும் அசுரனை யடைந்து போரிற் கலக்கும்படி வேண்டினன்.

மகதனாகிய சராசந்தன் தோற்றிடவே 'எம்மோடு பொருவார் இனியாருமில்லர்' என யாதவர் களித்திருக்க, முக்கோடிக் கடற்படையுடன் யாதவர் அரணைக் காலயவனன் வளைத்தான். 'யவனன்படை ஒரு பக்கம் அமர் விளைக்கும்; மகதன் படை ஒருபால் அடையின் நகர் கலக்கமடைந்திடும்' எனக் கருதினான் கண்ணன். உடன் விசுவகர்மா எனும் தேவதச்சனை அழைத்துக் கண்ணன் துவாரகை நகரை அமைக்கச்செய்தான். இந்திரன் துவராகையுள் மந்தார மலர்ச்சோலையும் அத்தாணி மண்டபமும் அமைத்தான்; குபேரன் அரியமணியுடன் இருநிதியம் வரவிட்டனன். பல பரிகள் வருணன் நல்கினான். மதுரையில் வசித்தமக்கள் அனைவரையும் கண்ணன் தன் மாயையால் அவர் அறியாவாறு துவாரகையுள் உய்த்தான். 'போர் ஏற்பாடுமிக்க இம்மதுரை நகர் காப்பாயாக' எனத் தன் தமையன் பலராமனிடம் கூறிவிட்டுக் கண்ணன் படை ஏந்தலனாய் ஓடினான் நாரதன் கூறிய கண்ணன் இவன்தான் என்று கருதிய காலயவனன் குதிரை பூட்டிய தேரில் பின்தொடர்ந்தான்.

கண்ணன் ஓடி ஒரு குகையில் ஒளிந்தான். தொடர்ந்து சென்ற காலயவனன் அங்கு முசுகுந்தனைக் கண்டான். 'எயிலை வளைத்துக்கொள்ள, உடன் எதிர்த்துப் போர் செய்யாமல் இங்கு வந்து துயில்கின்றனையோ' எனக் கூறிக் காலயவனன் முசுகுந்தனை உதைத்தான். திருமாலாம் முசுகுந்தன் விழித்து நோக்க யவனன் உடல் வெந்தான். இவ்வாறு சுகமுனிவன் கூறியவுடன், பரீட்சித்து 'முசுகுந்தன் என்பான் யார்' என வினவச் சுகமுனிவன் உரைக்கலானான்.

மாந்தாதாவின் மகன் முசுகுந்தன். தேவாசுரப் போரில் அவுணரைத் தோற்கடித்து முசுகுந்தன் தேவர்கட்குத் தேவருலகத்தை அளித்தான். முசுகுந்தனைப் பார்த்துத் தேவர்' 'வீடு நல்குதல் திருமால் ஒருவனால்தான் ஆகும். வேறு வரம் கேள் தருகிறோம்' என்றார். வீடுபேற்றைத் தவிர வேறு விருப்பமில்லா முசுகுந்தன் விண்ணாடர் உதவ மலைக் குகையுள் தூங்கிக் கொண்டிருந்தான். அவுணரை வென்று அமரருக்குத் தேவருலகளித்த முசுகுந்தன் இயல்பை யாரே

விளக்கவல்லார் எனக் கூறிப் பின்னும் தொடர்ந்தான் சுக் முனிவன்.

திருமால் முசுகுந்தனுக்கக் காட்சிதந்தான். திருமாலைக் கண்டும் அறியாத முசுகுந்தன் 'நீயார்' எனப் பணிந்து வினவி னான். அப்போது கண்ணன் 'பாற்கடல் துயிலும் முகுந்தன் யானே; எம் தோற்றம் அளவில; புவிப்பொறை தீர்ப்பான் வசுதேவன் மகனாகத் தோன்றினன். உனக்கு வரம் தர இங்கு வந்தடைந்தேம் கேட்பாயாக' என்றான்.

'இருபத்தெட்டாம் யுகத்தில் வசுதேவனுக்குத் திருமால் தோன்றிக் காப்பான்' எனும் கர்க்க முனிவனின் உரை எண்ணி உள்ளம் குளிர்ந்து முசுகுந்தன் கூறலானான்.

'அருட்கடலே! பிறவாச் சிறப்புநெறி தந்திடல் வேண்டும்; மாதர் முதலிய எல்லாப் பொருளும் போயது நின்னருளால்! இனி ஒன்றும் விரும்பகில்வேன், நின் பாதத்தாமரை ஒன்றே விரும்பினேன். அலந்தார்க்கு நின் பதமளித்தல் ஆகாதோ' என்றான் முசுகுந்தன்.

'முத்தியடைய வேண்டுமென்ற நின் நோக்கம் நன்று; வேட்டையாடியதால் விளைந்த பாவத்தைத் தவமியற்றி நீக்கி, அந்தணர் குலத்துப் பிறந்து பின் நம் அடிசேர்க'எனப் பணித் தான் கண்ணன்.முசுகுந்தன் மகிழ்ந்து கண்ணனைப் போற்றித் துதித்தான்.முசுகுந்தன் வதரிகாச்சிரமம் அடைந்து முனிவர்க்கு விருந்தாயினன்

கண்ணன் பின் மதுரை சென்று வில்வளைத்து எயிலைச் சூழ்ந்த யவனன் படைகளைக் கொன்று குவித்தான். அகப் படுத்திய பொருளைத் துவரையிற் கொண்டு சேர்த்தான். மகதன் சராசந்தனும் எதிர்த்துப் போரிட்டான். சராசந்தன் நெருக்கிப் போரிடவும் தோற்றவன் போன்று கண்ணன் ஓடினான்.

பலராமனுடன் ஓடிய கண்ணன் ஒரு மலையில் மறைந்தான். மகதன் மலைக்குத் தீயிட்டான். இருவரும் தீயில் மடிந்தார் என்றெண்ணிச் சராசந்தன் நகரம் எய்தினான். மலையுச்சியி லிருந்து கண்ணன் பலராமனுடன் துவாரகையுள் குதித்தான்.

## 23 உருக்குமிணி மணத்திறம் உரைத்தல்

ஆனத்த நாட்டரசன் இரேவதன் மகள் இரேவதியைப் பலராமன் மணந்தான். விதர்ப்பன் மகள் உருக்குமிணியைக் கண்ணன் மணந்தான். இவ்வாறு சுக முனிவன் கூறி முடிப்பதற்கு முன் பரீட்சித்து 'இராக்கத மணத்தால் உருக்குமிணியை மணந்த தன்மையாவும் யான் உணரக் கூறுக' என வேண்டச் சுக முனிவன் கூறலுற்றான்.

விதர்ப்பநாடன் கண்ணனுக்குத் தன் மகளை மணமுடித்துக் கொடுக்க விரும்பினான். தந்தையின் கருத்தறிந்த விதர்ப்ப இளவரசன் உருக்குமி உரைக்கலானான். 'உருக்குமிணியைக் கண்ணனுக்குத் தர நினையாதே; சிசுபாலனுக்கு மணமுடித்துக் கொடுப்போம்' என்றான் உருக்குமி. தமையன் உரைகேட்டு உருக்குமிணி வருந்தினாள். உருக்குமிணி ஒரு மறையவனைக் கண்ணனிடத்துத்தூதாக விடுத்தாள். துவரை எய்தி மறையவன் கண்ணனிடம் செய்தி சொன்னான். 'உருக்குமணி உன்னை மணக்க விரும்புகிறாள். ஆனால் உருக்குமிணியைச் சிசுபாலனுக்கு மணமுடித்துத் தர எண்ணியுள்ளார். மணநாளுக்கு முதல்நாள் உருக்குமிணி காளிகோயிலுக்கு வழிபடச் செல்வாள். அவ்வமயம் நீ சென்று காக்காவிடில் தீயில் விழுந்து இறந்து விடுவாள்' என்று அந்தணன் கூறினான். 'மன்னவர் யாவரும் காண உருக்குமிணியைக் கொள்வோம்' என மறையவனிடம் கூறிய கண்ணன், தன் தேரைத் தயார் செய்யப் பணித்தான்.

கடலன்ன படை சூழக்கண்ணன் மறையவனுடன் தேரிற் புறப்பட்டான். 'எதிர்த்த வேந்தர்களை அழித்து உருக்குமிணி கண்ணனுக்கு மாலையிடச் செய்வேன்' எனக் கூறிப் பெரும் படையுடன் பலராமன் எழுந்தான். தன் மகன் உருக்குமியின் சொல்லைத்தட்ட முடியாத விதர்ப்பவேந்தன் உருக்குமிணியைச் சிசுபாலனுக்குக் கொடுக்கத் தீர்மானித்து நகரைக் கோலஞ்செய்யக் கட்டளையிட்டான்.

சிசுபாலன் வந்தான். 'கண்ணன் வந்து வளைத்தாலும் உருக்குமிணியைச் சிசுபாலனுக்கே உடைமையாக்குவோம்' எனக் கூறும் சராசந்தன் முதலான பல அரசர் குழுமினர். 'அந்தணன் ஏன் இன்னும் திரும்பவில்லை' என உருக்குமிணி

எண்ணிக்கொண்டிருந்த சமயம் அவளின் இடக்கண் ஆடிற்று; அந்தணன் உருக்குமிணி முன்னர்த் தோன்றினான். அவள் மனம் மகிழும்படி அந்தணன் முகப்பொலிவுடன் தோன்றினான். உருக்குமிணி உள்ளம் மகிழுமாறு 'கண்ணன் வந்தான்' என அந்தணன் கூறினான். கண்ணபிரான் வரவுகேட்ட உருக்குமிணி கவின் எய்தினாள் கண்ணன் விதர்ப்ப நாட்டை அடைந்தான். தன் மகள் திருமணத்திற்கு வந்துள்ளான் எனக் கருதி விதர்ப்ப வேந்தன் கண்ணனை எதிர்கொண்டழைத்தான் 'கண்ணன் உடலழகு காணக்கண்கள் ஆயிரம் பெற்றிலமே' என மக்கள் உருகினர். 'நாம் முன்பு நல்வினை செய்திருப்போமாயின் கண்ணன் உருக்குமிணியைக் கைப்பற்றுவான்,' என்றனர்.

கண்ணன் அழகு கண்டு மயங்கிய மாதரின் வளையல் கையிகந்தொழிந்தன. ஆடை நெகிழ்ந்தன. இவ்வாறு மாதரெல்லாம் ஏங்கி நிற்கக் கண்ணன் கோயில் புகுந்தான். உருக்குமிணியை நன்கு அழகுபடுத்தினர். உருக்குமிணி பின்னர் பார்வதி தேவியின் கோயிலுக்குச் சென்று 'கண்ணனை எனக்குக் கணவனாகக் கொடு' என வேண்டித் தேரில் ஏறி நின்றாள். 'கண்ணன் எங்குவந்து தங்கியுள்ளான்' என உருக்குமிணி கண்மலர் பரப்பினாள். அரசர் பலருங்காண அப்போது கண்ணன் அங்குத் தோன்றி உருக்குமிணியைக் கவர்ந்தான். சராசந்தன் முதலிய வேந்தர் தேரேறிக் கண்ணனைச் சூழ்ந்தனர்.

எதிர்த்த மன்னர் கலங்கிவேறு வேறாகத் தோற்றோடும்படிப் பலராமன் வில்லில் நாணேற்றித் தெறித்தான் பலராமன் சராசந்தனோடு பொருதான். குராமர நிழலில் இருந்த உருக்குமிணியைக் கண்ணன் கொண்டெழுந்தான். ஆற்றாத சராசந்தன் பலராமனுடன் போர் செய்யாமல் பின்வாங்கி ஓடினான். 'உருக்குமிணியைக் கண்ணன் கவர்ந்தான்' என்று உள்ளம் வருந்திய சிசுபாலனைச் சராசந்தன் தேற்றினான். 'எதிர்த்த போரில் எல்லாம் கண்ணனிடம் தோற்றேன். ஒரு முறைகூட வெற்றி ஏற்படவில்லை, கலங்காதே எனச் சொல்லும் திறன் எனக்கேது' எனக்கூறிப் போந்தான் சராசந்தன். தன் தங்கையைக் கண்ணன் கவர்ந்து சென்றமை கண்டு உருக்குமி மிக்க சினமடைந்தான். 'தங்கையை மீட்காமல் நாடு திரும்பமாட்டேன்' எனச் சூளுரைத்த உருக்குமி சினந்து கண்ணனைத்

தாக்கினான். சில அம்புகளைக் கண்ணன் மேற்சிந்தினான், உருக்குமி கண்ணன் தன் வில்லை வளைத்தான். பின் உருக்குமி வாளைச் சுழற்றியபடிக் கண்ணனை எதிர்த்தான். வில்லற்று வாளோடு எதிர்த்த உருக்குமியைக் கொல்லக் கண்ணன் வேலை ஏந்தியபோது உருக்குமிணி 'அவனைக் கொல்ல வேண்டா' என வேண்டினாள். கண்ணன் உருக்குமி தனைக் கொடியால் தேரிற்பிணித்துக் குஞ்சிதனைக்குறைத்தல் செய்தான், பிற மன்னர்களை எல்லாம் பலராமன் வென்று கண்ணனிடம் திரும்பினான்,

உருக்குமியைத் தேரோடு பிணித்தமைக்குக் கண்ணனைப் பலராமன் கோபித்து, அவனை விடுவித்து உருக்குமிணியை யும் தேற்றினான். தன் நகர் நீங்கி உருக்குமிபோசடம் என்ற நகரில் தங்கினான். கண்ணன் உருக்குமிணியை அழைத்துக் கொண்டு துவரையடைந்தான். உருக்குமிணி திருமகள் போன்று துவரை நகரிற் சிறப்புறக்கண்ணனுடன் வாழ்ந்தாள். அத்தினாபுரத்தரசர் முதலான பல அரசரும் துவரையில் வந்து தங்கியிருப்பக் கண்ணன் உருக்குமிணியை மணந்தான்.

இக்கதை இசைப்பார், கேட்பார் திருமகள் அருள்பெற்று மக்கட் செல்வத்துடன் மகிழ்ந்திருப்பர்,

## 24. பிரத்துமனன் அவதரித்தல் :-

கண்ணனைக்கூடிய உருக்குமிணியின் வயிற்றில் சிவனின் நெற்றிக்கண் பார்வையால் இறந்த காமன் பிறந்தான். இரணி யாக்கன் மகன் சம்பாசுரன் மன்மதன் பிறந்துள்ளமையறிந்து மன்மதன் அமிசமாகிய பிரத்துமனனை அசுரன், ஈன்ற அறை யிலிருந்து எடுத்துக் கடலிற்போட்டான். பிரத்துமனனை ஒரு மீன் விழுங்கிற்று. அதை வலைவீசிப் பிடித்த வலைஞன் அதைச் சம்பரனிடம் கொடுத்தான். சம்பாசுரன் அதைச் சமைத்திடுமாறு சமையல் அறையிற் கொடுத்தான். சமையற் காரியாயிருந்த இரதியின் அமிசமாகிய மாயாவதி மீனை நறுக் கியவுடன் அதனுள் இருந்த பிரத்துமனனைக் கண்டு மகிழ்ந் தாள். அக்குழந்தையை மாயாவதி, வியந்து எடுத்தபோது நாரதன் அங்குத் தோன்றி, 'இவன் மாயனின் மகன் மன்மத னாகிய நின் மணாளன்' என்றான். மாதர் மயங்க வளர்ந்தான் பிரத்துமனன், காளைப்பருவம் எய்திய பிரத்துமனன் தோள்

கண்டு மாயாவதி மயங்கினாள். கரும்பு வில்லுடைய பிரத்து மனன் மாயாவதியை நோக்கி 'அன்னையாகிய நீ விரும்பிய தென்ன?' என்றான். 'கண்ணன் மகனாகிய நீ என் கணவனா வாய்' என நிகழ்ந்தன உரைத்தாள் மாயாவதி. மேலும் அவள் 'சம்பாசுரனைப் போரில் வெல்வாயாக' எனக் கூறி மந்திர மொன்றும் மாயாவதி நல்கினாள், பிரத்துமனன் அறைகூவலை ஏற்றுச் சம்பாசுரன் போர் செய்தான். பிரத்துமனன் அசுரனை வாளால் வெட்டிவாகை சூடினான். பின்னர்ப் பிரத்துமனன் கண்ணன் வாழும் துவரை நகரடைந்தான். பிரத்துமனனைக் கண்டு துவரை நகர் மகளிர் மயங்கினர்

உருக்குமிணி பிரத்துமனனைப் பார்த்து ஈன்ற அறையில் மறைந்த குழவியின் வடிவம் போன்று பிரத்துமனன் கோலம் இருத்தல்கண்டு நெகிழ்ந்தாள், உருக்கிமிணியிடம் கண்ணன் ஒன்றும் உரைத்திலன். நாரதன் தோன்றி 'நின் வயிற்றில் பிறந்த மகன் இவனே!' எனக் கூறினான். உள்ளம் உருகத் தன் மார்புறப்பிரத்துமனனை உருக்குமிணி தழுவினாள். கண்ணனும் வசுதேவனும் தேவகியும் தம் குலக்கொழுந்தான பிரத்துமனனைத் தழுவினர். பின், பிரத்துமனன் மாயாவதி எனும் இரதியை மணந்து அழகுடன் வீற்றிருந்தான்.

## 25. சத்தியபாமை மணத்திறம் உரைத்தல் :-

சத்திரசித்து எனும் அரசன் சமந்தகமணியையும் சத்திய பாமையையும் கண்ணனுக்குத்தந்தான். இவ்வாறு சுகமுனிவன் கூறியதும் பரிட்சித்து 'சமந்தகமணியொடு சத்தியபாமையைச் சந்திரசித்து கண்ணனுக்கு அளித்ததை விரித்துரைக்க' என வேண்டச் சுக முனிவன் விளம்பலுற்றான்.

சத்திராசித்து கதிரவனை வழிபட்டுச் சமந்தக மணியைப் பெற்றான் கண்ணன் சத்திராசித்து மன்னனை எய்தி மணியை வழங்கிடவேண்டினான் 'நாளும் நூற்றறுபது துலாம் பொன் நல்கும் மணிதனைக் கொடுக்கிலேன்' என்றான் சத்திராசித்து.

சத்திராசித்தின் தம்பி பிரசேனன் என்பான் மணியை அணிந்து கொண்டு வேட்டையாடச் சென்றான். அப்போது ஆண் சிங்கமொன்று பிரசேனனைக் கொன்று மணியைக் கவர்ந்தது சாம்பவன் எனும் கரடிகளின் அரசன் அரிமாவைத்

தூக்கி மணியைக் கைப்பற்றித் தன் குழந்தையாடும் தொட்டில் மேல் கட்டினான். தம்பியைக் காணாத சத்திராசித்து வருந்தி, 'மணியின் பொருட்டுக் கண்ணனே தம்பியைக் கொன்றான்' எனக் கூறினான். மன்னன் கூறியது கேட்ட கண்ணன், மலைச் சாரல் அடைந்து பிரசேனன் ஒருபக்கமும் அரிமா ஒருபக்கமும் இறந்து கிடத்தலையும், கரடி ஒன்று அவ்வழியே சென்ற தடத்தையும் கண்டான். சாம்பவனின் குழந்தையாகிய சாம்பவதி கிடந்த தொட்டிற் பக்கல் கண்ணன் சென்றான். குழவியின் வளர்த்ததாய் அழுது அழைத்தாள். கைத்தாய் குரல் கேட்ட சாம்பவன் சினந்தெழுந்து கண்ணனுடன் பொருதான். திகிரிப் படை எடுக்காமலே கண்ணன் எண்கின் வேந்தனுடன் போரிட்டான். ஒன்பதுநாள்போர் நடைபெற்றது. வந்திருப்போன் கண்ணனே எனத் தெரிந்த சாம்பவன் கண்ணனை நோக்கி 'வந்த காரணம் என்னை' என வினவினான். மணியைக் கொண்டு போக வந்ததை உரைத்தான் கண்ணன். கண்ணனிடம் சாம்பவன் மணியைக்கொடுத்தான். சத்திராசித்திடம் கண்ணன் மணியைத்தந்தான். செய்தபிழையைத் தீர்க்கும் பொருட்டுச் சத்திரசித்து சமந்தக மணியுடன் சத்திய பாமைதனையும் கண்ணனுக்கு அளித்தான்.

சத்தியபாமையை மணந்து கொண்ட கண்ணன் மணியைத் திரும்ப சத்திராசித்திற்கு வழங்கியருளினான்.

26. சததன்னுவாவைக் கொன்றது :-

எல்லாம் அறிந்தவனாய் இருந்தும் கண்ணன் பாண்டவர் புதிதாகச் செய்த அரக்கு மாளிகையிற் பொன்றினார் எனக் கேட்டுப் பலராமனுடன் அத்தினாபுரம் சென்றான். பீஷ்மன், திருதராட்டிரன், காந்தாரி, விதுரன் ஆகியோரைக் கண்டு கண்ணன் அங்கிருந்தான்.

அக்குரூரனும் கிருதவன்மாவும் சத்தியபாமையின் மீது காதல் கொண்ட சததன்னுவாவின் இல்லம் அடைந்து உரையாடினர். 'மாறிலாய்! சத்தியபாமையைக் கண்ணனுக்கீந்த சத்திராசித்தைக்கொன்று அவனிடத்துள்ள மணியையும் கைப் பற்றுக' என்றனர், உறங்கிய சத்திராசித்தைக் கொன்று

சததன்னுவா மணியைக்கவர்ந்து வந்தான். இறந்த தன் தந்தையை எண்ணெய்ப் தோணியிலிட்டுச் சோர்ந்த முகத்துடன் சத்தியபாமை தன் கணவன் கண்ணனிடம் முறையிட்டாள். உடனே கண்ணன் தேரேறித் துவரையடைந்தான். கண்ணன் வந்துற்றான் எனக் கேள்விப்பட்ட சததன்னுவா கலக்கமெய்தினான். கிருதவன்மாவிடம் சென்ற சத்தன்னுவா 'கண்ணனுடன் போர் செய்வோம்' என்றான். 'நாம் எப்படிக் கண்ணனுடன் போரிடுவது' எனக் கிருதவன்மா கூறிடச் சததன்னுவா மனம் வருந்தினான். சததன்னுவா அக்குரூரனிடத்துச் சென்று கண்ணனுடன் பொருதல் பற்றி அறிந்திடலாம் எனஎண்ணி விரைந்தான்.'சாணூரன் முட்டிகன் முதலிய மல்லர்களை அழித்த கண்ணபிரானுடன் போரிட வல்லார் மண்ணுலகிலும் விண்ணிலும் யாருமிலர்'என அக்குரூரன் கூறினான். போர் செய்யும் எண்ணத்தைவிட்ட சததன்னுவா மணியை அக்குரூரன் மீது வீசிவிட்டு விரைந்து செலும் தன் குதிரை மீதேறிப் புறப்பட்டான். கண்ணன் பலராமனுடன் சேர்ந்து சததன்னுவாவைத் தொடர்ந்தான்.

மிதிலை நகருக்கருகில் குதிரை வீழவே, சததன்னுவா ஓடினான். தேரை விட்டிறங்கிக் கண்ணன் சததன்னுவாவைத் துரத்திச் சென்று தன் நேமிப்படையால் எறிந்து சததன்னுவானின் தலையை வெட்டினான். சததன்னுவானிடத்திற் கண்ணன் மணியைக் காண்கிலன்.'மணி காணவில்லை'எனப் பலராமனிடம் கண்ணன் கூறினான். 'இவனிடத்தில் மணியில்லையாயின், நகரில் உள்ள ஒருவனிடம் வைத்திருத்தல் கூடும்; தேடுக' எனக் கூறிய பலராமன் மிதிலை சென்றான். மிதிலை மன்னன் பலராமனை வரவேற்றான்.

கிருதவன்மாவும் அக்குரூரனும், கண்ணன் சததன்னுவாவைக் கொன்றிட்டான் என்ற செய்திகேட்டு அஞ்சி ஓடலுற்றனர். சத்திராசித்திற்குக் கண்ணன் நீர்க்கடனாற்றினான்.

அவ்விடத்தில் உத்தவன் எனும் யாதவன் முதலியோர் கண்ணனிடம் உரையாடினர். 'இந்நாடு மழைவளம் கரந்தது. அக்குரூரன் ஒழிதலிற்போலும்; மேகம் பொய்த்ததால் காசி மன்னன் சுபல்கனை அழைத்துத் தன் மகள் காந்தினியை மணம் முடித்துக்கொடுத்தான். சுபல்கன் காசியில் தங்குதலால்

அங்கு மழைவளம் பெருகிற்று. சுபல்கனின் மகனான அக்குரூரன் இங்கு வந்தால் மழைவளம் பொலியும்' என உத்தவன் முதலியோர் கூறியவுடன் கண்ணன் தூதினால் அக்குரூரனை அழைத்தான். கண்ணன் மணியைத் தருமாறு கேட்க அக்குரூரன் மணியைத் தந்தான். அவையோருக்கு மணியைக் காட்டிய கண்ணன் திரும்பவும் மணியை அக்குரூரனுக்கு வழங்கினான்.

## 27, காளிந்தியை மணஞ்செய்தல் :-

கண்ணன் பாண்டவரைக் காணப்புறப்பட்டு இந்திரப்பிரத்த நகரடைந்தான். பாண்டவர்களைக் கண்டு கண்ணன் மகிழ்ந்தான். தருமன் கண்ணனைப் புகழ்ந்து ஏத்தினான். வேட்டையாடக் கண்ணன் அருச்சுனனோடு புறப்பட்டான்.

அங்குச் சோலையில் சூரியனின் பெண் காளிந்தி விளையாடக் கண்டனர். கண்ணன் திருமகளைக் கண்ட அந்நாளைப் போல் மகிழ்ந்தான். கண்ணன் குறிப்பால் விசயன் பாரிசாதமரநிழலில் நின்ற காளிந்தியையடைந்து 'நீ யார் என்ன விருப்பமுடையாய்?' எனக் கேட்டான். 'பருதிக்கு மகள் நான்; கண்ணபிரானை மணந்திட விரும்புகிறேன்' என்றாள் காளிந்தி. காளிந்தியைக் கண்ணன் தேர்மிசை ஏற்றித் திரும்பினான். விசயன் பின் காண்டவ வனத்தைத் தீயால் உண்ணச் செய்தான். வனம் உண்ட எரி விசயனுக்குத் தேர் கணை, தூனி, வில் ஆகியன வழங்கியது. வனத்தில் மயன் மாடம் சமைத்தான். பாண்டவருடன் சிலகாலம் கண்ணன் அம்மாடத்தே வைகியபின் காளிந்தியுடன் துவரை மீண்டான். பின் கண்ணன் காளிந்தியை விதிப்படி மணந்து கொண்டான்.

## 28 மித்திர விந்தையை மணம் புணர்தல்

வசுதேவன் உடன் பிறந்தாளாகிய ராசாதிதேவியின் மகள் மித்திரவிந்தை கண்ணன் மேல் காதல் கொண்டாள். அவந்தியை யாளும் மித்திரவிந்தையின் தமையன்மார்களாகிய விந்தர் அனுவிந்தர் இருவரும் தம் தங்கையைத் துரியோதனனுக்கு மணமுடிக்க விரும்பினர். மித்திரவிந்தையை மணக்க விரும்பித் துரியன் அரசர் குழாத்தோடும் எழுந்தான். ஆனால் கண்ணன் அரசவை புகுந்து மித்திரவிந்தையைக்

கவர்ந்து சென்றான். கண்ணனோடு போர் புரிய இயலாத துரியன் மன்னர் திரளொடு திரும்பினான். கண்ணன் மித்திர விந்தைதனைத் தேர்மீது ஏற்றிக் கொண்டு சென்று மணம் புரிந்து கொண்டான்.

## 29 சத்தியையை மணம்புரிதல்

கோசல நாட்டு மன்னன் நக்கினசித்து என்பான் சத்தியை என்பாளைப் பெற்றான். வலிய ஏழு எருதுகளை வென்ற வனுக்குத் தன் மகளைக் கொடுப்பதாக நக்கினசித்து அறிவித் தான். பலரும் ஏறு தழுவக் கூழுமினர், பலர் அம்முயற்சியிற் தோற்றார்.

கண்ணன் விசயனுடன் கோசலமடைந்தான். கண்ணன் மேகம் போன்ற ஏழ் உருவங்கொண்ட ஏழ் விடைகளையும் தழுவினான். நக்கினசித்து கண்ணனுக்குத் தன் மகள் சத்தியை தன்னை மணம்முடித்துத் தந்தான். கண்ணன் நக்கினசித்து வழங்கிய பரிசுப் பொருள்களுடன் துவாரகை புறப்பட்டான். ஏறு தழுவற் போட்டியில் தோற்ற வேந்தர் கண்ணனோடு பொருத முயன்றக்கால் விசயன் அவர்கள் அனைவரையும் வில்லாற்றலாற் தோற்கடித்தான். பின் கண்ணன் துவாரகை சென்றடைந்தான்.

## 30 பத்திரையை மணத்தல்

வசுதேவன் தங்கை சுருதகீர்த்தியீன்ற பத்திரை என்பாள் கண்ணன் மேல் காதல் கூர்ந்தாள். கண்ணபிரானின் செவ் வியை உறவினர் மூலம் கேட்டுப் பத்திரை மனம் மகிழ்ந்தாலும் அவள் காமம் வளர்க்குமெனக் கொண்டு யாழிசைகேட்கிலாள்; கண்ணன் புகழ் தன்செவியுற்ற போதே பொற்பூண் அணிந்த போதும் பத்திரை கொங்கையில் முத்தைப் புனைந்திலள். அஞ்சனவண்ணன் கண்ணனின் செவ்வி செவிப்பட்ட போதே பத்திரை கண்களில் மைதீட்டிய போதும் மார்பில் சாந்தெழுத அஞ்சினாள்.

பத்திரையை மணத்தற்பொருட்டுக் கண்ணன் கேகயநாடு சென்றடைந்தான். பத்திரையின் தமையன் தன் தங்கையின் குறிப்பறிந்து கண்ணனுக்கு அவளைக்கொடுத்திடத் தீர்மானித் தான். தமையன் சந்தர்த்தனன் பத்திரையைக் கண்ணனுக்கு

மணஞ்செய்தளித்தான். கண்ணன் பத்திரையுடன் கூடி பந்துய்த்தான். பின் கண்ணன் பத்திரையுடன் துவாரகை சென்று சேர்ந்தான்.

31) இலக்கணையை மணம்புரிதல்:-

மத்திரநாட்டரசனுக்கு இலக்கணை என்பாள் பிறந்தாள். நீரில் தோன்றும் நிழலைக் கண்டு விண்ணிலமைத்த மீன் பொறியை வில்லால் அம்பெய்தவனுக்குத் தன் மகள் இலக்கணையை மணம் முடித்துத் தருவதாய் அறிவித்தான் மத்திர நாட்டரசன். இலக்கணையை மணத்தற் பொருட்டு மன்னர் மத்திர நாட்டிற் கூடினர். இலக்கணைக்குக் கோலஞ் செய்து மாளிகை கொணர்ந்தனர். மீன் பொறியை அறுக்க அரசர் கூடினர். வில்லை வளைத்திடும் முயற்சியிலேயே பலர் தோற்றார்.

தந்த வக்கிரன் வில்லை வளைத்தும் வானில் அமைக்கப் பட்ட மீன் பொறியாகிய குறி எய்ய இயலவில்லை சிசுபாலன் எய்த அம்பு மச்சயந்திரத்தை எய்யாமல் கங்கையாற்றுக் கயல் மீது தாவி விழுந்தது. சராசந்தன் எய்த அம்பு பொறியைப் பிழைத்துத் திங்கள் வாழ் முயல்முகம் கிழித்தது. துரியோதனன் விட்ட கணை யந்திரத்தில் மேல் ஏறிப் போயிற்று. கன்னன் விட்ட அம்பு மீன் பொறியிற் பட்டும் படாமலும் சென்று ஆகாயத்தைப் பிளந்து சென்றது. விசயன் விட்ட பகழி பொறியை மோந்து போயிற்று. நண்பகல் பொழுதாயிற்று.

கண்ணன் வில் வளைத்ததும் நாணேற்றியதும் கணை எய்ததும் யாரும் கண்டிலர்; மச்சயந்திரம் அறுபட்டு வீழ்ந்ததைக் கண்ணாற் கண்டார். தேவர் மலர் மாரி பெய்தார். இலக்கணை கண்ணனுக்கு மாலை சூட்டினாள். அது கண்டு பொறுக்கலாற்றாத மன்னர் அமர் விளைத்தார். இலக்கணை தனைத் தேர் மேல் ஏற்றிக் கொண்டு கண்ணன் மான்கூட்டத்தின் நடுவே செல்லும் புலி போலச் சென்றான். கண்ணன் அரசருடன் போரிட்டான். வென்ற கண்ணன் மாதொடும் துவாரகை சென்றடைந்தான். மத்திர நாட்டரசன் கண்ணனுக்குப் பல பரிசுகள் நல்கினான். பின் கண்ணன் இலக்கணையை மணந்து இன்பந்துய்த்தான்.

32) நரகாசுரனைக் கொல்லல்:-

நரகாசுரன் இறக்கும்படிப் போர் செய்து கண்ணன் பதினாறாயிரம் கோதையரை மணந்தான். இவ்வாறு சுக முனிவன் கூறியதும் பரிட்சித்து; 'கண்ணன் போரில் நரகா சுரனைக் கொன்று பதினாறாயிரம் குலமாதரை மணந்த வாற்றைக் கூறுக' என வேண்டச் சுகமுனிவன் இயம்ப லுற்றான்.

இந்திரன் கண்ணனிடம் சென்று, 'நரகாசுரன் என் அன்னை அதிதியின் குழையையும் குடையையும் கொடியை யும் கவர்ந்து சென்றான்' எனக் கூறினான். சத்தியபாமை யுடன் புள்ளூர்ந்து சென்ற கண்ணன் நரகாசுரன்தன் அரண் அடைந்தான். கண்ணன் அசுரன்தன் நீரரண், காற்றரண், படையரண் ஆகியவற்றை வாளியால் அழித்தான். முரன் என்பானையும் அவன் மைந்தர் எழுவரையும் கண்ணன் அழித்தான். படைகள் கண்ணனை எதிர்க்கமாட்டாமல் ஓடியமை கண்ட நரகாசுரன் சினந்து தானே போருக்கெழுந் தான். நால்வகைப் படையும் அசுரனுக்குத் துணைநின்று கண்ணனுடன் பொருதன.

கண்ணன் தன் சக்கரப்படையால் அசுரனின் தேர் அச்சு அற்றன. கண்ணனை எதிர்க்கமாட்டாமல் வீழ்ந்தழிந்தன. நரகாசுரன் சினந்து தன் வேலைக் கருடன் மீது எய்தான். வேல் கரிமேல் தொடையெனக் கருடன் தோளுற்றது. கண்ணன் நேமியால் அசுரனது முடிதடிந்தான். நிலமகள் கண்ணனைப் பணிந்து 'நரகாசுரன் நாட்டில் பொருள் வளம் செழிக்கச் செய்திடுக' என ஏத்தினள். கண்ணன் பார்மகள் சொற்கேட்டு மகிழ்ந்து அசுரன்தன் மகன் பகதத்தன் என்பா னுக்குத் தஞ்சமளித்தான்.

கண்ணன் பின் அசுரனது அந்தப்புரமாகிய நிதியறை நோக்கினன். நரகாசுரனாற் கவரப்பட்ட பதினாறாயிரம் கன்னியர் இருக்கக் கண்டு அவர்களுக்குக் கலன்பல நல்கிச் சிவிகையேற்றித் துவாரகைக்கு அனுப்பினான். பின் அயிரா வதத்தின் மரபிற் பிறந்த நான்கு யானைகளைக் கண்ணன் கவர்ந்தான். கண்ணன் புள்ளூர்ந்து சென்று முன்னர் நரகா சுரனால் கவரப்பட்ட குண்டலத்தை இந்திரன் அன்னை

அதிதிக்கு வழங்கினான்: சத்தியபாமை கற்பகச் சோலை கண்டு ஆசைப்பட்டாள். பாமையின் உள்ளக் கருத்தறிந்த கண்ணன் பாரிசாதத்தை வேரொடும் பிடுங்கினான். தேவர் கண்ணனிடம் 'கற்பகத்தைக் கொள்ளாதே' எனத் தடுத்துரைக்க அவர்தம் வலி கெடுமாறு மாயன் சங்கம் வாய்வைத்தான் பின் கண்ணன் கற்பகத் தருவைக் கொண்டு சென்று பாமையுடன் துவாரகை அடைந்தான். அங்கு சத்தியபாமை விளையாடற் கேற்றவாறு கற்பகத்தைக் கண்ணன் சோலையாக்கினன் மாயன் பிறகு பதினாறாயிரம் மாதரை மணந்தான. கண்ணன் மாதர் மகிழ வனங்கள் தோறும் ஆடினான். பதினாறாயிரம் மகளிரும் மகிழக் கண்ணன் தழுவி வீற்றிருந்தான்.

## 33) உருக்குமிணி ஊடல் தீர்த்தல்:-

உருக்குமிணி கவரி வீச, மல்லிகை மணம் வீச, கண்ணன் முற்றத்து நிலவுப்பயன் துய்த்திருந்தான். கவரி வீசிக் கொண்டிருந்த உருக்குமிணியை நோக்கிக் கண்ணன், 'பல வேந்தர் நின்னை அடைய விரும்பியும் போருக்குப் பயந்து கடலுள் அமர்ந்த என்னை ஏன் விழைந்தாய்? பிச்சை ஏற்று உண்கின்றவரன்றி யார் என்னை விழைவார்?' என்றான். கண்ணன் சொற்கேட்ட உருக்குமிணி கவரிசோரதொடி சோரச் செயலற்று வீழ்ந்தாள்.

உருக்குமிணியைக் கண்ணன் எடுத்து அணைத்தான்; துளிக்கும் கண்ணீர் துடைத்து அவள் முகத்திற் தூ நீர் தெளித்தான். ஊடல் கொண்ட மாதை நோக்கிக் கண்ணன் 'பாவாய் அழாதே' எனக் கூறித் தேற்றினான் பின் கண்ணன் உருக்குமிணியின் கோதை திருத்தி, நுதல் நீவி, அணிகலண் அழகு செய்து பணிவிடை செய்ய, அவை கண்டு உருக்குமிணி கண்ணனைப் போற்றியவாளய் 'கிடைத்த தேனைக் கிடைக்கும் போதுண்ணும் வண்டுகள் போல் பற்றின்றி வாழும் பெரியோரன்றிச் செல்வக் களிப்பால் மயங்கிய மாக்கள் எவ்வாறு நின்னை விழைவர்?' ஆலிலை அமர்ந்தோய்! நின் புகழ் புகலாதார்க்கு ஏது புகழ்,மணியில் ஒளியையும் மலரின் மணத்தையும் போல எங்கும் திகழ்வோய்! சிவன், பிரமன், இந்திரன் முதலானோரும் நீ குறித்த பணி செய்கின்றனர். உன் புகழ் எல்லாம்

மொழியால் வழுத்தற்கு எளிதோ?' என்று உருக்குமிணி கூறினாள்.

கண்ணன் மகிழ்ந்தான்; உருக்குமிணியின் முறுவல் மாந்தி இன்புற்றான்.

**34. பிரத்துமனன் மணம்புரிதல்:-**

பட்டத்துத்தேவியர் எண்மரும், பதினாறாயிரம் மடந்தையரும் புகழ்தற்கரிய பண்புடைப்புதல்வர் பதின்மரை ஒவ்வொருவரும் பெற்றெடுத்தார். கண்ணனின் மனைவியாகிய விதர்ப்பநாட்டு அரசன் மகள் உருக்குமிணி ஒரு பெண் மகளைப் பெற்றாள். உருக்குமிணியின் மகள் சாருமதியைக் கிருதவன் மாவின் மகன் விசாலாக்கன் என்பான் மணந்தான்.

உருக்குமிணியின் தமையன் உருக்குமியின் மகளை மணத்தற்பொருட்டு அவன் நகரமாகிய போசகடத்தில் மன்னர் பலர் வந்தீண்டினர். அப்படி வந்து தங்கிய மன்னர்களோடு உருக்குமியின் மகளை மணக்க விரும்பிக் கண்ணனின் மகனாகிய பிரத்துமனனும் வந்திருந்தான். குழுமியிருந்த அரசர் சபையின்கண் உருக்குமியின் பெண் சென்று அடைந்தாள். அங்கிருந்த பிரத்துமனனுடைய தோளையே நோக்கி நின்றாள், உருக்குமியின் பெண்.பிரத்துமனனும் அவளைக் கவர்ந்தான். பிரத்துமனன் உருக்குமியின் பெண்ணுடன் கூடிக் களித்தான். அவருக்கு அநிருத்தன் என்பான் பிறந்தான்.

உருக்குமியின் மகன் பெற்ற பெண்ணை, பிரத்துமனன் மகனாகிய அநிருத்தன் மணந்தான். இவ்வாறு சுக முனிவன் கூறியதும் பரீட்சித்து,'மாயனை வெறுக்கும் உருக்குமி எவ்வாறு மாயன் பெற்ற மகன் பிரத்துமனனுக்குத்தன் மகளை மணஞ்செய்து கொடுத்தான்' என விவை 'தங்கை உருக்குமிணியின் மனம் மகிழத் தன் மகளைத் தந்துதவினான்' என்று பதிலிறுத்தான் சுகமுனிவன்.

அநிருத்தன் திருமணம் பொருட்டுப்பலராமனும் கண்ணனும் போசகடம் வந்து தங்கினர். உருக்குமியின் மகன் பெற்ற பெண்ணை அநிருத்தன் அழல் சான்றாக மணந்தான். திருமணத்தை முடித்துக் கண்ணன் இருந்த நாளில் பலராமன் உருக்

குமியுடன் சூதாடினான். சூதில் கலிங்க வேந்தனாகிய உருக்குமி இருமுறை வென்றான். அடுத்து ஒருமுறை பலராமன் உருக்குமியைச் சூதில் வென்றானாக உருக்குமி 'யானே வென்றனன்' என்று கூறினான். கூடியிருந்த அரசர்களும் 'உருக்குமியே வென்றான்' எனக் கூறினர். ஆனால் 'பலராமன் வென்றான்' என அசரீரி கூறிற்று; 'அரசர் தொழிலும் சூதாடலும் இடையர் அறியார்? எனக் கூறி உருக்குமி நகை செய்தான். சினந்த பலராமன் கலப்பையால் உருக்குமியின் தலையை உருட்டினான். கலிங்கவேந்தன் பிடரியைப் பற்றி அவன் பல்வரிசையை உகுத்தான் பலராமன்.

பின் கண்ணன் தன் படையொடும் உருக்குமியின் மகனுடைய பெண்ணொடும் துவாரகை அடைந்தரன்.

## 35 அநிருத்தன் மணம் புரிதல்

சிவபெருமான் கூத்தில் வாணன் எனும் அசுரன் சிறந்த வகையில் முழவத்தை இசைக்க அது கேட்டு மகிழ்ந்த சிவன்; 'விழைவுற்றது என் தருவேம்' என வாணனைப் பார்த்துக் கூறினான். 'என் மாநகர் காப்பாய்' என வாணன் உரைக்க அதன்படிச் சிவன் வாணன் நகர் காத்திருக்க, மற்றொரு நாள் போர் செய்யும் விருப்புடைய வாணாசுரன் சிவனிடம்,'வெற்றி தரும் போர் விளைக்கின்றவர் நின்னையல்லது வேறு எவரும் இல்லாததால் வெற்றிதரும் அமர்தருவாய்' எனக் கேட்டான். முப்புரமெரித்தான் நகைசெய்து; 'நிலவுலகில் என்னினும் வலிமிக்கான் வந்து நின்னொடு போர் செய்வான்' என்றான். கிடைக்கப்பெறாத போர் பெறப்படும் என மகிழ்ந்த வாணாசுரன் 'அன்னான் எந்நாள் வருவான்?' என அசுரன் வினவ, 'நின் பொற்கொடி வீழ்வுற்றிடும் போதில்' என்றான் சிவன். வாணாசுரன் மிக்க மகிழ்ச்சியடைந்தான்.

சிவன் பார்வதியைத் தழுவியது கண்டு அசுரன் மகள் உஷை என்பாள் மயங்கிப் பார்வதியிடம் செல்லப் பார்வதி அருளுடன் உஷையை நோக்கி' நின் கனவில் தோன்றும் ஆடவன் ஒருவன் நினக்குக் கணவன் ஆவான்' என்றாள். உஷை அப்பொழுதே பிரத்துமனன் மகன் அநிருத்தனைக் கனவிற் கண்டு கலந்தாள். கண்விழித்த உஷை' என் காதலன் எங்குற்றான்' எனக் கவன்றாள்.

உஷை தன் தோழி சித்திரரேகையை நோக்கித் 'தோழி நீ இங்கு இருந்தும் என்ன பயன்? என் வளை சோர்கின்றன; நிலவு வருத்துகின்றது' எனக்கூறிப் பெருமுச்செறிந்தாள். சித்திரரேகை தன் தலைவியை நோக்கி 'இவ்வாறு நீ கூறிய தேன்? ஒருவனை நீ விரும்பியவள் போல் இருக்கின்றாய். நீ விரும்பியதென்ன கூறுக' என்றாள். உஷை 'கனவில் ஒருவனைக் கண்டேன்; அவன்தன் மார்பும் தோளும் நகையும் என்னை வருத்தின' என்றாள். உடனே சித்திரரேகை உலகத்துள்ள அழகிய ஆடவர்தம் உருவத்தினைத்திரைச்சீலையில் ஓவியமாகத் தீட்டிக் காட்டினாள். அவற்றைக் கண்ட உஷை ஓவியத்தெழுதிய பாவை போல வாளா இருந்தாள்.

சித்திரரேகை பின்பு திரைச் சீலையில் கண்ணனின் உருவத்தைத் தீட்டிக் காட்ட அது கண்ட உஷை கண்களித்தாள். பின் தோழி கிழியில் பிரத்துமனன் உருவத்தை எழுதிக்காட்ட உஷை அது கண்டு சிறிது நாணி முகம் சாய்த்தாள். கடைசியில் சித்திரரேகை அநிருத்தன் உருவம் தீட்டியவுடன் உஷை வாய்திறந்து 'இவனே இவனே' எனக் கூறினாள் அதுகேட்ட சித்திரரேகை உடனே மாயையால் அநிருத்தனை அவன்உறங்கும் படுக்கையோடும் கொணர்ந்தாள். துயிலெழுந்த அநிருத்தன் அருகிருந்த உஷை முகந்தனை நோக்கி 'நிலவோ' என ஐயுற்றான். ஒரு பெண்ணின் முகமெனக் கொண்டு அநிருத்தன் மகிழ்ந்தான் அநிருத்தன் உஷையைத் தழுவினான். இவ்வாறு உஷையின் நலம் நுகர்ந்து அநிருத்தன் அங்கு மறைந்திருந்தான். உஷைதன் கண் சிவப்பும் வாய் வெளுப்பும் புணர்ச்சி உண்டானமையை வாயிற்காப்பார்க்கு உணர்த்தின. வாயிற் காப்பார் வாணாசுரனிடம் சென்று செய்திகூற,அசுரன் கன்னிமாடம் வந்தான். அங்குத் தன் மகளுடன் அநிருத்தன் சூதாடிக் கொண்டிருக்கக் கண்டு சினம் கொண்டான். வாள் வீரர் அநிருத்தனுடன் போர் புரிந்தனர். அநிருத்தன் உலக்கை ஒன்றை எடுத்துப்போர் செய்ய மல்லர் மாய்ந்தார். வாணாசுரன் நாகபாசத்தால் அநிருத்தனைப் பிணித்துச் சிறைசெய்தான். நான்குதிங்களாக அநிருத்தனைக் காணாத யாதவர் அவன் எங்கு உள்ளான்? எனத் தேடியபோது நாரதன் அவர்க்கு நிகழ்ந்தன உரைத்தான்.

கண்ணனின் புதல்வர் படையெனத் திரண்டு சென்றார். நால்வகைப் படையும் வாணாசுரனின் நகரமாகிய சோணித

புரத்திற் சென்று தங்கின. கொடிப் படைசென்று அசுரனின் காவற்காட்டை அழித்தது வாணாசுரன் சினங்கொண்டு போர் செய்ய எழுந்தான். அசுரன் அமைச்சர்களான கூபகன்னன், கும்பாண்டன் இருவரும் அமர் வேட்கையின் எழுந்தார். சிவன் விடையூர்ந்தும், முருகன் மயிலூர்ந்தும் போருக்குப் புறப்பட்டனர். கண்ணன் படைக்கடலும், வாணாசுரன் படைக்கடலும் மோதின. புள்ளின்குலம் நிணம் மாந்தின. கவந்தக் (தலையற்ற உடல்) குலம் நின்றாடின. முருகனும் பிரத்துமனனும் சமர் புரிந்தார் கும்பாண்டனும் கூபகன்னனும் பலராமனொடு பொருதனர். வாணாசுரன் மகனும் சாம்பனும் போரிட்டனர்.சாத்தகினும் யாதவன் வாணனை எதிர்த்தான். சிவனும் கண்ணனும் பொருதினர். சிவன் திருமால் போர் காணத் தேவர் விண்ணில் மொய்த்தார். சிவன் விரைவுடன் காற்றுக் கணைவிடுத்தான்.கண்ணன் அரவக்கணை விடுத்துக் கணையை மாற்றினன்.

சிவன் பின்பு அழற்கணை தொடுத்தான். கண்ணன் வருணப்படையேவி அழற்கணைதனை அறுத்தான். சிவன் விட்ட பாசுபதக்கணையைக் கண்ணன் தன் திகிரிப்படையாற் துணித்தான். சாத்தகியின் வில்லாற்றலுக்கு முன் ஆற்றாத ஐங்கரன் களம் விட்டோடினான். சிவபெருமானை மயங்கச் செய்த கண்ணன் திகிரிப் படையால் அசுரரை மாய்த்தான். பிரத்துமனன் வளைத்த வில்லுக்கு அஞ்சிய முருகன்தன் மயில் தன் தலைவன் முருகனுடன் வரைமேற் பறந்தது. பலராமனொடு பொருத அமைச்சர் கூபகன்னன் கும்பாண்டன் இருவரும் தானையொடும் சாய்ந்தனர். சாத்தகியுடன் போரிட்ட வாணாசுரன் கண்ணனை எதிர்க்கக் கருதித் தன் தேரைச் செலுத்திக் கண்ணன் முன் வந்தான்.

ஐந்நூறு கைகள் வில்வளைக்க, ஐந்நூறு கைகள் கணை தொடுக்க நிலவுலகம் நடுங்கும்படி அசுரன் கண்ணனுடன் பொருதான். கண்ணன்தன் கருடக்கொடி மீதும், மார்பிலும், தோளிலும் அசுரன் வெங்கணை பொழிந்தான். அவுணன் விடுத்த சரங்கள் அறக், கண்ணன் கணை தொடுத்தான். பின் கண்ணன் சாரங்கம் எனும் தன் வில்லை வளைத்து அவுணனின் வில்லைத் துண்டித்தான். அவன் தேரைச் சிதைத்த கண்ணன் வாணாசுரனின் பாகன் தலையை அறுத்துச் சங்கம் முழக்கினான். வாணாசுரனின் தாயாகிய கோடரை

என்பாள் களத்தில் ஆடையின்றி நிற்கக் கண்ட கண்ணன் வில்லை வளைக்காமற் தன் முகம் சாய்த்தான். வாணாசுரன் படைக்கலமும் தேரும் அற்றவனாய் வறிதே, தன் நகர் திரும்பினான்

சிவன் கண்ணன்மேல் மூன்று கால்களையும் மூன்று தலைகளையும் கொண்ட வெப்பினை (ஜ்வர தேவதை) விட்டான். நம்பி குளிர்வெப்பை விடுத்தான் கண்ணன் விட்ட குளிர்ப்புறு வெதுப்பிற்காற்றாத சிவனேவிய வெதுப்பு, கண்ணன் அடி தொழுது பரவிற்று.

படைதிரட்டிக் கொண்டு வாணாசுரன் மீட்டும் களமடைந்தான். கண்ணனுடன் அமர் விளைத்தான். கண்ணன்தன் சக்கரப்படையால் அவுணனின் நான்கு கைகளைத் துணித்தான். பின் கண்ணன் அசுரனின் பல தோள்களை வெட்டி வீழ்த்தினான். சிவன் மாயனை வாழ்த்தி, 'நின்னுடை மாயத்தால் பலர் என்னையும் ஏனோரையும் போற்றி இழிந்த செல்வம் பெறுவர்; உன்னைச் சரணடைந்து உன்னைப் போற்றுபவர் அழிவில்லா வீடு பேற்றின்பமடைவர்; அமுதை விடுத்து நஞ்சை நாடும் கசடர் போல என்னையும் மற்ற வானவரையும் போற்றி நாடுபவர் வீணர்;நின்னை விழைபவர் யோகர், நீயே முதற் காரணன் பிரகலாதனுக்கு அருளியது போன்று இவ்வாணாசுரனுக்கும் அருள் வழங்கிடுக' என்று பணிந்துரைத்தான்.

'பிரகலாதன் மரபில் வந்தோரைக் கொல்வதில்லை என நாம் முன்பு வரம் தந்துள்ளோம். நீ கூறியதும் விழுமியதே. அற்று வீழ்ந்த வாணாசுரனின் நான்கு தோள்களும் மன்னுக' என்றான் கண்ணன். நான்கு தோள்களும் மீளப் பெற்ற வாணாசுரன் கண்ணனைத் தொழுதான். வாணாசுரன் தன் மகள் உஷைதனை அநிருத்தனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். சிவனுடன் வாணாசுரன் தன் நகரடைந்தான்.

**உஷையை மணந்த அநிருத்தன் கண்ணனுடன் துவாரகை சென்றான்.**

36. நிருகனுக்கு அருள் புரிதல் :-

காட்டில் விளையாடிக் களைத்த கண்ணன் மைந்தர் உண்ணும் நீர்தேடி ஒரு கிணற்றை அடைந்தனர் கூவலுள் ஒரு கோம்பியைக் (ஓணான்) கண்டு கண்ணன் மைந்தர் நீர் எடுக்க மாட்டாமல் வருந்திக் கண்ணனிடம் சென்று கூறினர். கண்ணன் சென்று கிணற்றுள் கிடந்த கோம்பியைக் கையாற் தீண்டி எடுத்தான். கண்ணன் தீண்டப் பெற்ற கோம்பி உருவம் மாறி அமரனாகித் தோன்றிற்று.

நின்ற அமரனை அறிகிலான் போலக் கண்ணன் 'நீ யார்' என வினவ அவன் 'எவ்வுயிர்க்கண்ணும் விளங்கும் பெரும, நினக்கு யான் உரைப்பதென்ன? வேதங்களும் துணிதற்கரிய தலைவ! என் பெயர் நிருகன்; ஒருநாள் நான் அந்தணர்க்குப் பசுக்களைத் தானம் செய்தேன். அப்பொழுது அந்தணன் ஒருவனுக்குச் சொந்தமான புனிற்றா ஒன்று என் ஆநிரையிற் கலக்க அதைவேறோர் அந்தணனுக்கு வழங்கினேன் தன் பசுவுடன் சென்ற மறையவனைக் கண்ட பசுவுக்குரிய முதல் அந்தணன்'அரசன் என்ன சூழ்ச்சி செய்தான்' எனக் கூறிச் சினந்து அரண்மனையடைந்து நின்றான். நான் அவனை நோக்கி 'நினது என்று அறியாமல் அதை வேறு ஓர் அந்தணனுக்கு வழங்கிட்டேன்; அதற்கீடாக நூறு ஆயிரம் பசுக்கள்நினக்குத் தருகின்றேன்' எனக் கூறியும் பெறாமற் சினந்து போய் விட்டான் அவ்வந்தணன் நான் இறந்து எமலோகம் சென்றவுடன் மறலிஎன்னை நோக்கி,அறப்பயன் மிகுதியாகவுள்ளது. அறியாமற் செய்த பாவப்பயன் சிறிதாகவுள்ளது; வேந்தே! எதை நீ முதலில் துய்க்கின்றாய்' எனவினவினான். 'தீது முதலில் நுகர்வேன்'என யான் கூற,'ஓதியாய் வீழ்க',என மறலி கூறயான் இங்கு ஓந்தி வடிவெடுத்தனன்' எனக் கூறிக் கண்ணனைத் தாழ்ந்து அவ்வமரன் பொன்னாட்டிற் கெழுந்தான்.

கண்ணன் தன் புதல்வரை நோக்கி 'கொடிய நஞ்சை யுண்டாலும் அதற்கு மருந்துண்டு. ஆயின் 'அந்தணர் பொருளைக் கவர்ந்தால் அதற்குத் தீர்வே இல்லை' என்றான்.

37 நம்பி மூத்தபிரான் கோகுலமடைதல்

பலராமன் முல்லைவனம் சென்று நந்தகோன் யசோதையை வணங்கினான். கோவியர் மார்பம் தழுவிய பலராமன்

இளவேனிற் பருவத்துக்கோவியர் தம்முடன் சோலை சென்ற டைந்தான். சோலையில் வாருணி எனும் மதுவைப் பலராமன் அருந்தினான். கோவியருடன் புனலாட விரும்பிய பலராமன் தன் கலப்பையால் இழுத்தவுடன் அவ்வாறு பலராமன் பக்கல் ஓடியது. யமுனை யாறு பலராமனுக்கு வைஜயந்தி என்னும் மாலையொடு நெய்யாத இரு நீலநிற ஆடைகளையும் வழங் கியது.

பலராமன் கோவியருடன் யமுனையாடித் திளைத்தான். அவ்வாறு கோவியருடன் இன்பந்துய்த்துப் பலராமன் இரு திங்கள் இருந்தான்.

## 38 பவுண்டரனைக் கொன்றது

பவுண்டரன் எனும் வேந்தன் 'யானே திருமால்' எனச் சொல்லித் துழாய் அணிந்து சங்கு சக்கரம் தாங்கிக் கௌத்துப மணிபூட்டிக் கருடன் கொடியுயர்த்தி வைகினான். பவுண்டரன் சிவனை வழிபட்டுச் சங்கம், நேமி, கதை முதலியன பெற்று வாழும் நாளில் நாரதன் மொழி கேட்டுப் போருக்குச் சமைந்து நின்றான். பவுண்டரன் ஒருநாள் 'திருமால் யானே; சங்கம் சக்கரம்தாங்குதல் விடுத்தால் பிழைத்தான்; அவை விடுக்கா விடில் என்னுடன் போர் செய்யட்டும்' எனக் கண்ண பிரானுக்குத்தூது விடுத்தான். தூதுரை கேட்ட கண்ணன் படையொடும் பவுண்டரன் நகரின் எயிலையடைந்தான்.

பவுண்டரன் தன் நண்பன் காசி வேந்தனுடன் பெரும் படையுடன் கண்ணனுடன் போருடற்றக் களம்புகுந்தான். பவுண்டரனை நோக்கிக் கண்ணன்! 'நேமியை விடுதி என்று ரைத்தாய்; யாம் நேமி விடுதும்' எனக் கூறி விடுத்தான். நேமி பவுண்டர வாசு தேவனுடைய மணிமுடி துணித்தது. பவுண்ட ரன் இருவினை நீக்கி மாயனின் அழகுத் தோற்றம் கைபுனைந் திருந்தானாகையால் மாலுருவம் பொருந்தினான். பின்பு கண்ணன் கங்கை நாட்டான் தலையைக் கொய்து காசியில் விழுமாறு செய்தான். சுதசினன் எனும் காசியரசன் மகன் தன் தந்தைக்குப் பிதிர்க்கடன் ஆற்றினான். பின் சுதசினன் தன் தந்தையைக் கொன்றவனை அழிப்பேன் எனக் கொண்டு சிவனை வணங்கினான். சிவனிடம் வரம் வேண்டினான் சுதசினன். சிவன் 'அபிசாரத் தொழிலால்(மாரண வினையால்)

தென்பால் அழலினை வளர்ப்பாயாக; அதில் தோன்றும் பூதத்தை மறையவர்க்கு அன்பிலார் மேல் ஏவிடுக; நீ கருதியது முடிக்கலாம்' என்றான்.

சுதசினன் வளர்த்த தீயில் பசுங்கண் பூதம் ஒன்று தோன்றிற்று. தன் தந்தையைக் கொன்றவனது ஆவி போக்கி உண்ணுமாறு சுதசினன் ஏவ, அப்பூதம் துவாரகைப்பட்டினம் சுட்டது. 'ஊரைப்பூதம் சுடுகிறது. காத்திடுக' என நகர மாந்தர் கண்ணனிடம் சென்று கூறினர்.

திகிரிப்படையுடைய கண்ணன் ஒரு கோடி ஞாயிறு திரண்டாற்போல் நோக்க சூடுற்ற பூதத்தைக் கண்ணனின் நேமி துரத்திற்று. துவாரகைக்குத் தன்னை ஏவிய கங்கைத் துறைவன் ஆருயிர் உண்டது. பூதத்தால் கொல்லப்பட்ட சுதசினன் நகரைத் தீக்கிரையாக்கிப் பின் நேமி கண்ணனைச் சார்ந்தது.

இவ்வாறு சுகன் கூறியதும் பரீட்சித்து கோவியர் போகம் மாந்தி வீற்றிருக்கும் பலராமன் தன்மை கூறிடுக' என வேண்டச் சுகமுனிவன் கூறலானான்.

## 39 சாம்பன் மணம்புரிதல்:-

நரகாசுரனின் தோழன் துவிதன், கண்ணனின் சுற்றமாகிய யாதவரின் ஆநந்த நாட்டில் வரையை வீழ்த்திக் கடல்சார் நகரைக் கடல் கொள்ளப் புரிந்தழித்தான். பலராமன் ஆயர் மாதரொடு இன்பந்துய்ப்பான் வேண்டிச் சோலை சூழ்ந்த குன்றம் சென்றான். பலராமன் மீது ஆச்சாமரக்கிளை வீசித் துவிதன் சமர் விளைத்தான். பலராமன் மலையுச்சியில் இடி விழுந்தாற் போன்று துவிதன்தனைக் குத்தத் துவிதன் இறந்தான். பின் பலராமன் துவரை சென்றடைந்தான்.

துரியோதனன் இலக்கணை என்ற பெண்ணைப் பெற்றான். இலக்கணைக்குத் திருமணம் செய்விக்கக்கருதிய துரியோதனன் மன்னர்க்கெல்லாம் ஓலை விடுத்தான். கோசல நாட்டரசன், பாண்டி வேந்தன், காம்பிலிக் காவலன், அவந்தி நாட்டதிபன், வாரணவாசி மன்னன், மகதன், கன்னியைத் திருமணம் செய்யும் கருத்துடன் கூடினர்,

இலக்கணைதனைக் கங்கை நீரால் ஆட்டினார். அஞ்சனந் தீட்டி அணியூட்டி அழகுறுத்தினர். இலக்கணை அழகுபடுத்தப் பட்ட மாடத்தைச் சென்றடைந்தாள் ஆங்கொரு தவிசில் மன்னர் காண இலக்கணை வீற்றிருந்தாள். கூடியிருந்த அரசர் இலக்கணையின் கோலம் கண்டு மயங்கினர். கண்ணனுக்கும் ஜாம்பவதிக்கும் பிறந்தசாம்பன் இலக்கணையைக் கவர்ந்தான்

மாலையணிவதற்கு முன் தன் மகளைச் சாம்பன் கவர்ந் தெடுத்துச் சென்றமை கண்டு துரியோதனன் அராவெனச் சினந்தான். கன்னன் உள்ளிட்ட ஆறுவீரர்கள் சாம்பனைப் போகவிடாமல் வளைத்தார், சாம்பன் அவர்களனைவரையும் எதிர்த்துப் பொருதான். கன்னனுடன் வந்த தேர்ப்பாகர்களை யும் சாம்பன்தன் கணையால் மாய்த்தான். ஒருவன் சாம்பனின் தேர்ப்பாகனைக் கொன்றான். ஒருவன் சாம்பனின் வில்லை அறுத்தான். சாம்பனையும் பிணித்தனர். நாரதன் யாதவரிடம் சென்று செய்திகூற யாதவர்சாம்பனை மீட்கப் போர்க்கோலம் கொண்டு எழுந்தார். 'நானே குமரனை மீட்டு வருவேன்' எனக் கூறிப் பலராமன் யாதவரைத் தடுத்துத் தானே போருக்கெழுந் தான். அத்தினாபுரமருகில் பலராமன் சென்று தங்கினான். வழிப்போக்கன் சென்று துரியோதனனிடம் பலராமன் வந்துள்ள செய்தி கூறியதும் துரியோதனன் பலராமன் தங்கி யிருந்த சோலையிடத்துச் சென்றான். தன்னை வணங்கிய துரியோதனனிடம் பலராமன் 'வீரன் சாம்பனுடன் அரசர் பலர் போரிட்டது அறமன்று; அவர் நம் சுற்றமெனப் பொறுத்தேன்' சாம்பனை விடுக, அல்லாவிடில் போர்விளையும்' எனக் கூறினான்.

துரியோதனன் உடனிருந்த அரசர் நகை செய்து 'நாங்கள் கொடுத்தலால் வேத்தியல் பெற்ற யாதவர் வன்மை நன்று' எனக் கூறிப் போயினர். அது கேட்ட பலராமன் சினந்தான். தன் கலப்பையாகிய படைக்கலத்தால் பலராமன் அத்தினா புரியை வளைத்தான். நகர் மிதவை போல் கங்கையில் மிதப்பக்கண்ட அரசர் நடுங்கினர். துரியோதனன் இலக்கணை யோடு சாம்பனைப் பலராமனிடம் ஒப்படைத்துப் பணிந்தான். அத்துடன் பல பரிசுப் பொருள்களையும் துரியோதனன் கொடுத்தான். சாம்பனுடன் பலராமன் துவாரகை புறப் பட்டான்.

## 40. பதினாறாயிரம் திருவிளையாட்டுரைத்தல் :-

பதினாறாயிரம் மகளிரும் மகிழக் கண்ணன் இருந்த திறம் காண விரும்பி நாரதன் சென்றான். கண்ணன் கோவியருடன் இருந்த சோலைதனை நாரதன் அடைந்தான். கண்ணன் நாரதனைத் தொழுது 'வந்த காரணமென்ன?' என வினவினான் 'பிறவிக் கடல் நீந்த நின் மலரடிகளே சரண், ஆலிலை அமர்ந்தோய்!' என ஏத்தி அகன்ற நாரதன் மற்றோர் இடைச்சியின் வீட்டிற்சென்று தங்கியிருக்க, அறியாதான் போன்று கண்ணன் 'எப்பொழுது இங்கு வந்தாய்' எனக் கேட்டான் நாரதனிடம். நாரதன் உடனே அகன்று சென்றான். 'இவ்வாறு நாரதன் செல்லுமிடங்கள் அவ்வவ்விடத்திலுமிருந்த கண்ணன் வண்ணம் நான் எவ்வாறு வகுத்துச் சொல்ல' என்கிறார், ஆழ்வார்,

கண்ணன் ஆய மகள் ஒருத்தியின் இதழமுதம், அருந்துவான்; ஓர் ஆய்ச்சி வீட்டில் முத்தழல் வளர்ப்பான். ஒருத்தி மனையிருந்து அந்தணர் உவப்ப ஆக்களை வழங்கிடுவான், வேறோர் இடைச்சி வீட்டிருந்து விருந்தூட்டும், மற்றொரு ஆய்ச்சி வீட்டிருந்து அறம் கேட்கும், பின்னொருத்தி வீட்டிருந்து மரச்சோலை இயற்றும், ஒருத்தி மனையிருந்து ஒப்பிலான் தாமரைமணித்தடம் செய்கும், ஒருத்திமனையில் யானையை நடத்தும், ஒருத்தியுடன் தேரூரும், வேறொருத்தியுடன் பரிதனைச் செலுத்தும், பின்னோர் ஆய்ச்சி மனையில் வில்வித்தை பயிலும், வேறொரு கோவியின் இல்லத்து மற்போர் வகுக்கும். மற்றொருத்திமனையில் பொன் அழகு செய்யும். ஒரு கோவியின் வீட்டில் அரசு வீற்றிருக்கும், ஓர் அரிவைமனையில் அமைச்சருடன் செய்வினை தேரும், மற்றோர் ஆய்ச்சி மனையிருந்து வேற்படை வீரருடன் வேட்டமாடும், வேறொருத்தி மனைதனில் தன் மக்கள் மணவினை நிகழ்த்தும், பின்னொருத்தி மனையில் மகம் புரியும், மற்றொரு மாதொடு நீர் விளையாடும், ஒரு கோவியுடன் இளமரக் காவில் ஆடும். மற்றோர் ஆய்ச்சியுடன்செய்குன்றிற் குலவும், ஓர் ஆய்ச்சி மனையில் அவள் கவரி வீச, மெல்லணை வைகும், மற்றொருத்தி இல்லிருந்து சூதாடும். வேறொரு கோவியின் வீட்டிருந்து தானுயிர்த்த சேயின் குதலை கேட்டுவக்கும். மற்றோர் ஆய்ச்சியுடன்

மாடத்திருந்து நீலவுப்பயன் துய்க்கும். வேறொரு கோவியின் மார்பில் துயிலும், ஒருத்தி மனையில் நீராடும், ஒருத்தியின் தோளில் காமவல்லியின் உருவமெழுதும். ஒருத்தியின் கூந்தல் முடிக்கும், வேறொருத்திக்கு அணி பூட்டும், ஓர் ஆய்ச்சியின் வீட்டில் யாழிசை பருகும்.

இத்தன்மையில் பதினாறாயிரம் அரிவையர்தம் மனை தொறும் கண்ணன் தோன்றியிருந்தானாக, அத்திறம் [கண்ட நாரதன் 'நீன்மாயைதனை யாரே அறியவல்லார்!' எனக் கூறி ஏத்திப் போயினான்,

41 சிசுபாலனைக் கொன்றது:-

கஜேந்திரன் எனும் யானை கூப்பிட அறிதுயிலெழுந்த கண்ணபிரான் ஒருநாள் கோழி கூப்பிடத் துயில் எழுந்தான், தனிப்பெருஞ்சுடராம் கண்ணன் தன்னையே நினைந்திருந்தான் கண்ணன் யமுனையில் நீராடி, மார்பில் சாந்தணிந்து முகத்திற் திலகம் தீட்டினன்: இவ்வாறு கண்ணன் காலைக்கடன் முடித்தான். பின் முத்தழல் வகைப்பட வளர்த்தான்: அந்தணர்க்குப் பொன்னும் முத்துமீந்தான்: முனிவர், ஆசிரியர், பெற்றோர் அந்தணர் ஆகியோரைத் தொழுதான்: பின் கண்ணன் பொன் னாடை தரித்து, மார்பில் முத்தாரமணிந்து மாலை அணிந்தான். தன்னை ஆடியில் நோக்கினான். பின் கண்ணன் வேட்டோர்க்கு விரும்பியன நல்கினான். தேரூர்ந்து அரசிருக்கை சென்ற கண்ணன் தன்னைப்பணிந்த அரசர்க்கருளி அரசு வீற்றிருந்தான். சராசந்தனின் சிறையிற் கிடக்கும் முடிவேந்தர் தம் தூதன் கண்ணனின் அவையடைந்து வணங்கி 'மகதன் சிறை வைகும் மன்னர்க்கருள வேண்டும்' எனப் பணிந்துரைத்தான். அப்போது கண்ணனின் அரசவைக்கு நாரதன் வந்தான்.

நாரதனை வணங்கிய கண்ணன் 'உலகின் செய்கையெல்லாம் அறிந்த முனிவ, பாண்டவர் என்ன செய்கின்றார்?' என வினவினான். பாண்டவர் இராசசூயம் செய்ய விரும்புகின்றனர்; கண்ணா, யாகத்தை நீயே காத்தருள வேண்டும்' என நாரதன் மாற்ற முரைத்தான். மகத நாட்டரசன் சிறைவைகும் மன்னர் விடுத்த தூதன் கூற்றையும், நாரதன் கூற்றையும் கேட்ட கண்ணன் உத்தவன் முகம் பார்த்தான். 'தருமனியற்றும் யாகத்திற்குச் சென்றால் சிறைப்பட்ட அரசர்தம் எண்ணமும் நிறைவேறும்' என உரைத்தான் உத்தவன் சிறைப்பட்ட

வேந்தர் தூதனுக்கு விடையளித்துக் கண்ணன் நாரதனுடன் தேரூர்ந்து வேள்விக்குச் சென்றான். கண்ணன் ஆறும் குன்றும் நாடும் கடந்து இந்திரப்பிரத்த நகரெய்தினான். பாண்டவர் எதிர்கொண்டழைத்தார். அருச்சுனனைக் கண்ணன் தழுவிக் கொண்டபின் பீமனையும், தருமனையும் வணங்கினான். தருமன் மிக்க மகிழ்வுற்றான் கண்ணன் தன் புறத்தோற்ற அழகு கண்டு உருகிய முனிவர்தம் நிலை சொல்லுதற்கரியது. பின் கண்ணன் பாண்டவர் அரண்மனை சென்றான். கண்ணன் குந்ததேவியை வணங்கினான். பாஞ்சாலி கண்ணனின் பாதம் பணிந்தாள். பாண்டவர் வணங்கிப் போற்றக் கண்ணன் மகிழ்ந்தான். கண்ணன் மகளிருடன் இன்பமாக வைகினான், சில திங்கள் கழிந்தபின் தருமன் கண்ணனிடம் 'ஒப்பில்லா இராசசூயம் இயற்ற விரும்புகிறேன்; நீயே காத்திடல் வேண்டும்' என்றான். தருமன் கூறியது கேட்ட கண்ணன், 'உலகத்தரசர்களையெலலாம் வென்றால் அல்லாமல் இராசசூயம் புரியலாகாது' என்றான். மேலும் கணணன் 'தருமபுத்திரா, மெய்யுணரார் தம்மால் வெல்லப்படா என்னை மெய்யுரைப்பதால் 'வென்றாய்; பீமன் முதலிய தம்பியரால் திசையெலாம் வெல்க' எனவுரைத்தான். தருமன் கண்ணனைப் போற்றித் துதித்துத் தம் தம்பியரை, அரசர்களை வெல்லும்பொருட்டு அனுப்பினான்.

சகதேவன் தென்புலம் படர்ந்தான். நகுலன் குடபால் எழுந்தான். விசயன் வடபால் எழுந்தான். வீமன் கீழ்ப்பால் எழுந்தான். அருச்சுனன் முதலியோர் அரசரையெல்லாம் முடிவணங்க வென்று நிதியம் கொண்டு மீண்டனர். போரில் எதிர் வெல்ல முடியாத சராசந்தன் தன்னைக் குறிததுத் தருமன் ஆராய்ச்சி செயதான். தருமனிடம் கண்ணான் உத்தவன் உரைத்தனவற்றைக் கூறினான். 'அந்தணர் வடிவிற் சென்று போா செய்தலை இரந்து பெற்று வெம்போர் செய்யின் அல்லாமல் மகதனை வெல்லவியலாது' என்றான் கண்ணன்.

கண்ணன், வீமன், விசயன் மூவரும் அந்தணர் வடிவந் தாங்கி வளைக்கமுடியாத மகதவேந்தன் சராசந்தனின் தலைநகரானகிரிவிரச நகருட் புகுந்தனர். அதிதியர் வரவு நோக்கியிருந்த சராசந்தனிடம் சென்று மூவரும் இரந்தனர். 'புறவுக்காக உயிர் நீத்த சிபியின் புகழுக்கு அழிவில்லை. முன்னர் மகிழ்வுடன் ததீசி முனிவன் என்பை ஒருவற்கு

ந்தான்; நாங்கள் கேட்பதை அன்புடன் அருள வேண்டும்' எனக் கூறினர்.

வந்திருப்போர் அரசர் என்று அறிந்தான் சராசந்தன். கேட்டவன் முதல்வன் என அறிந்து மூவடி மண் வழங்கிய மாவலியின் சீர்த்தி இன்னும் மண்ணில் நிலவுகிறது. வந்திருப்போர் யாவராயினும் அவர் விரும்பியன கொடுக்கத் தீர்மானித்தான் மன்னன். 'அந்தணரே, நீவிர் விரும்பியதை நான் தருவேன்' என்றான் சராசந்தன்.

'மன்னவா' விரும்பியது தருவாயாயின், ஒருவனோடு ஒருவன் உடற்றும் போர் தருதி' என்றான் கண்ணன். மேலும் கண்ணன், 'இவன் வீமன், இவன் விசயன், நான் கண்ணன்' எனக் கூறினான். அது கேட்ட சராசந்தன் புன்முறுவல் செய்து; 'போருக்கு அஞ்சி நீ துவரையிற் புகுந்தாய்; விசயனோ இளைஞன், எதிர்த்துப்போரிட வல்லான் வீமனே' என்றான். 'போருக்கு இப்பொழுதே எழுக' எனக் கூறிய சராசந்தன் வீமனுக்கு வயிரத் தண்டத்தை நல்கினான் கதை ஏந்தி நகரின் புறத்தே அமர்க்கெழுந்தான்.

இருவரும் கொடும் போர் செய்தனர். மிக்க வன்மையால் ஒருவருக்கொருவர் ஒத்துநின்ற தன்மையால்வீமன் சராசந்தனை வென்றிலனாய்க் கண்ணனை நோக்கக் கண்ணன் சிறிய தளிரையுடைய கொம்பைக் கிழித்துக் காட்டினன். உடனே வீமன் சராசந்தனின் தோள், தலை, கால், முதலியவற்றைத் தனித்தனி பிளந்து மாய்த்தான். இவ்வாறு கண்ணன் அருளால் வீமன் பதினாயிரம் களிற்றுவலிபடைத்த சராசந்தனைக் கொன்றது கண்ட அமரர் மலர் தூவினர். பின் கண்ணன், சராசந்தன் சிறைவைத்திருந்த இருபதினாயிரத்து எண்ணூற்று அரசரையும் அருளால் விடுவித்தான். விடுதலை பெற்ற அரசர் கண்ணன் தாள்பணிந்தேத்தினர். குடையும் கொடியும் உடையோராய் அரசர் தம் பதி மீண்டனர். கண்ணன் சராசந்தனின் புதல்வனுக்கு முடிகவித்தான். பின் மூவரும் நகர் திரும்பித் தருமனிடம் செய்தி அறிவித்தனர். 'கண்ணன் முன் நிற்கும் பொழுது முடியாப் பொருள் நமக்கேது' எனக்கூறித் தருமன் மகிழ்ந்தான்.

பின் தருமன், 'இராசசூயம் செய்யப்போகிறேன் வருக' என முனிவர்க்கும் அரசர்க்கும் அழைப்பு விடுத்தான். அரசர்

எல்லாம் வந்து தங்கினர். நூறு மைந்தரோடு திருதராட்டிரன் வந்தான்; விதுரன் வந்தான், வீடுமன் வந்தான், தருமன் வேள்விச்சாலையில் மறைக்கிழவர் மொய்த்தனர்;தேவர் விண்ணில் தொக்கனர். நகுலன் வேள்விக்காகும் பொருள் கொண்டு உய்த்தான். வீமன் அடிசிற்சாலைக்குத் தலைமை பூண்டான்; சகாதேவன் மறைக்கிழவரை அருச்சனை புரிந்தான், கண்ணன் அந்தணர்தாள்மலர் விளக்கினான், துரியோதனன் நிதியறைக்குத் தலைமை பூண்டான்; கன்னன் இரவலர்க்குப் பொருள் வழங்கலை மேற்கொண்டான். தருமன் காசிபன் முதலியவரோடு இராசசூயம் புரிந்தான். அப்போது யாகமியற்றிய அந்தணாளர் அரசர் பலரும் கூடியுள்ள அவையில் யாருக்கு முதற்பூசை(அக்கிரபூசை)செய்வதுஎன எண்ணினான் தருமன். தருமன் குறிப்பறிந்த சகாதேவன் 'கண்ணனுக்கு முற்படப்பூசை யாற்றுக' என வுரைத்தான். மேலும் சகாதேவன்; 'படைப்பவனும காப்பவனும் அழிப்பவனும் கண்ணனே; உலகெலாம் கண்ணனே; ஆகவே கண்ணனுக்கு ஆற்றிய பூசை உலகுக்கெலாம் ஆற்றிய பூசையாகும்' என்றான். உடனே தருமன் கண்ணனைப் போற்றினான்; பின்பு பாஞ்சாலி பொழிந்த கலச நீரால் கண்ணனின் சேவடி கழுவினான். கண்ணனுக்கு மார்பில் ஆரம் பூட்டிக் கலவை பூசி, மாலை சூட்டிப் பொன்னாடை சாத்தி அண்ணலை வழிபட்டான்.

முறைப்படக் கண்ணனுக்குப் பூசை செய்யப்படுவது கண்டமுனிவர் மகிழ்ந்தார்; அறவழி ஒழுகும் அரசர் மகிழ்ந்தார்; கண்ணனுக்குப் பூசை செய்யப்பட்டது,கண்டு பொறுக்க மாட்டாத சிசுபாலன் மிக்க சினமுற்றான்.

'அந்தணர் இருக்க, அரசர் பலர் இருக்கப் பசுக்களைக் காக்கும் கண்ணனுக்கு முதற்பூசை செய்யும் தருமன் செயல் நன்று' எனக்கூறிச் சிசுபாலன் எழுந்து நின்றான். 'சகாதேவன் கூறியதால் தருமனும் நெஞ்சம் கலக்கமுற்றனனோ; காலத்தின் செய்கைதனை யாரே கடக்க வல்லார்!' எனக் கூறிச் சிசுபாலன் தீயன கிளக்கலுற்றான்.

'குலமின்றிக் குணமின்றி விரும்பியவாறு ஒழுகும் கண்ணன் என்று கேட்ட தன்மை நூற்கேள்வியிற் சிறந்ததன்றே. நன்று தீதென்று நாடான்; நானிலத்தெங்கும் உறைவான்; வேதத்தை

அறியகில்லான்; குன்றிலும் கானிலும் உறைவார் வேட்கும் குணத்தன்; பசுப்புரப்போன்; பித்தரும் அன்னமேற்பாரும் ஏத்தும் இந்தக் கண்ணனைப்போல் வேறொருவன்உண்டோ? ஆய்ச்சியரைத் தழுவும் தூர்த்தன்; முனிவரின் மிக்கவனாக ஆகியது மிக நன்று; போர் செய்யமாட்டானாய் வடமதுரை விட்டுத் துவாரகை புகுந்தான்தன்னை வலிமிக்க அரசர் கூடி யுள்ள அவையில் வழிபாடியற்றும் காட்சி நாளும் வாழிய!' என்று பலவாறு கொடிய சொற்களைக் கூறி நின்றான், சிசு பாலன்; கண்ணன் பேசாது இருந்தான்; சான்றோர் செவி பொத்தினர்; பாண்டவர் வெகுண்டு சிலை எடுத்தனர். யாத வரும் சிசுபாலனுக்கெதிராகப் போர்க்கோலம் பூண்டனர். சிசு பாலன் கேடகம் தாங்கிவாளேந்திப் போருக்கு ஆயத்த மானான்.

'சிசுபாலனைப் பிடித்துக் கொல்லுங்கள்; அவன்தன் நாக் கைத் துண்டியுங்கள்' எனக்கோபித்தவர்களைத் தடுத்துக் கண்ணன் எழுந்தான். தன் சக்கரத்தாற் கண்ணன் சிசு பாலனின் தலையை அறுத்தான். பகைவர் கதிரோன் கண்ட இருள்போல் ஓடினர். தேவர் ஆர்த்தனர், சிசுபாலின் உடலி னின்று சோதித்திரள் எழுந்து கண்ணன் பாதமடைந்தது.அவை யெலாம் காண. பகைமையால், முப்பிறவியிலும் கண்ணனை நினைத்தமையால் கண்ணனின் ஆழியால் இறந்த சிசுபாலன் கண்ணனைச் சேர்ந்தான். எவ்வகையிலானும் கண்ணனை நினைப்போர் முக்தியடைவர் என்று கூறினன் சுக முனிவன். பின் தருமன் யாவரும் மகிழப் பூசனை புரிந்தான்.

தருமன் கண்ணனுடனும் வேதியருடனும் கங்கையிற் படிந்தான். தருமன் பின் அரசர்க்கு விடையளித்தான். இவ் வாறு சுகன் கூறியதும் பரீட்சித்து 'மன்னரெல்லாம் மகிழ்ந்து தம் நாடு திரும்பிடத் துரியோதனன், மகிழ்ச்சியின்றிப் போய வாறு தெளிவாக உரைத்திடுக' என வேண்ட மாதவன் உரைக் கலுற்றான்.

வெளியிடம் அசையும் புனலெனத் தோன்றவும் விளங்கும் தண்புனல் வெளியிடம் போலத் தோன்றவும் மயனாற் சமைக்கப்பட்ட மண்டபம் ஒன்றிருந்தது. நிலாப் பரப்பென விளங்க இழைத்த தண்புனலிடை எழும் மரகதச் சுடரை மான் கன்றுகள் அறுகென நோக்கும்.வண்டினங்கள் முத்துக்களைத்

தாமரையரும்பென நெருங்கும். மாணிக்கக்கதிரை அன்னக் குஞ்சுகள் கமலமென்றெண்ணிச் செல்லும். நீலமணிகளை நீலோற்பலமென்று எண்ணி மாதர் கை நீட்டுவர்; இத்தகு அழகு பொருந்திய மண்டபத்து நடுவே அரசர் வந்திறைஞ்சத் தருமன் வீற்றிருந்தான்.

இளையோருடனும் கண்ணனுடனிருந்த தருமனைக் காணத் துரியோதனன் வந்தான் மண்டபம் அடைந்தான், மன்னன் துரியன். ஒளியமைந்த நிலத்தை நீரென்று கருதித் தொங்கிய ஆடையை இடப்பக்கம் அணைத்தவனாய்ச் சென்ற துரியோ தனன் நிலம் போன்று விளங்கும் நீரிடைப்போய் வீழ்ந்தான். அவையோர், நகைக்கச் 'சிரிக்க வேண்டாம்' எனத் தருமன் கூறினானாகக் கண்ணன் குறிப்புணர்ந்து வீமன் வெளிப்படையாகச் சிரித்தான். அத்துடன் திரௌபதியும் அவள்தம் தோழியரும் வெளிப்படையாகச் சிரித்தனர். தன்னைப் பார்த்து எள்ளி நகையாடக் கண்ட துரியோதனன் தருமனைக் காணாமல் சினத்துடன் தேரை விரைந்தோட்டி நீங்கினான். 'அத்தினாபுரத்திற்குத் துரியோதனன் ஏகிய காரணம் இதுவே; கண்ணன் சிசுபாலனின் நண்பனாகிய சாலு வன்தனைக் கொன்றமை கேட்பாயாக' எனச் சொல்லிச் சுக முனிவன் தொடர்ந்தான்.

## 42 சாலுவனைக் கொன்றது

சிசுபாலன் நண்பன் சாலுவன் என்பான் கண்ணன் உருக்குமிணியைக் கவர்ந்து செல்லும் நாளில் யாதவருடன் போரிட்டுத் தோற்றான். அதனாற் சினந்த சாலுவன் யாதவர் குலத்தை நாசப்படுத்தச் சிவனைக் குறித்துப் பன்னிருதிங்கள் தவமியற்றினான். சிவன் தோன்றிச் சாலுவனிடம் 'யாது நீ விழைந்தது?' எனச் சாலுவன் 'விண்ணும் மண்ணும் வெல்லப் படா விரைவுடை விமானம் வேண்டும்' என்றனனாக, சிவன் மயனிடம் செய்து கொடுக்குமாறு கூற, மயன் விமானம் சமைத்துச் சாலுவனுக்குக் கொடுத்தான். சாலுவன் விமானம் இவர்ந்து துவாரகை சென்றடைந்தான். சோலைகள் அழித்தும், மதிற்குடுமி கொண்டும், தூசியுள் மறைந்தும், மரங்களை வீசியும், கல்மழை பொழிந்தும் சாலுவன் துவரையைக் கலக்கினான்.

சாலுவன், நகரைக் கலக்குதல் கண்ட கண்ணன் மைந்தன் பிரத்தியும்னன் முதலியோர் படையுடன் எழுந்தனர் அமரர்க்கும் அசுரர்க்கும் நடந்த போர் போன்று சாலுவன் படைக்கும் பிரத்தியும்னன் முதலியோர்படைக்கும் இடையே கடும்போர் நடைபெற்றது. பிரத்தியும்னன் சாலுவன் செய்த சூழ்ச்சி யெல்லாம் தொலைத்து வென்றான். நால்வகைப் படைமீதும் பிரத்தியும்னன் அம்புமாரி பெய்தான். பிரத்தியும்னன் வில்லாற்றல்கண்ட சாலுவன் விமானம் ஊர்ந்து சிலைகைத் தாங்கி பிரத்தியும்னனை எதிர்த்தான். விமானத்திலிருந்த வண்ணம் கறங்கெனச்சுழன்று சாலுவன் கணைகள் எய்தான். யாதவர் பெயர்ந்திலர்.

பிரத்தியும்னன் சினந்து சாலுவன் விமானத்தின்மீது கணை எய்தான். அப்போது சாலுவனின் படைத்தளபதி தண்டத்தால் பிரத்தியும்னனைத் தாக்கப்பிரத்தியும்னன் சோர்ந்தான். பிரத்தியும்னனின் தேர்ப்பாகன் உடனே தேரை மீட்டனன் மயக்கம் தெளிந்த பிரத்தியும்னன் பாகனைப் பாராட்டினான்.

'போரில் யாதவர் புறமுதுகு காட்டிலர்;என் புகழ் நிலத்தில் நீடிக்கும்; தேரை மீட்டனை; என் தந்தை கண்ணனுக்கு நான் என்ன கூறுவேன்? என் மாமன் உருக்குமி புதல்வியராகிய என் மனைவியர் நகைப்பரே' என்றான் பிரத்தியும்னன். கண்ணன் தேர்ப்பாகன் தாருகன் தாருகன் மகன் பிரத்திரும்னன் தனக்குத் தேர்ப்பாகன் தாருகன் மகன் பிரத்தியும்னனை நோக்கி'தேரில் உள்ளவன் சோர்வு எய்தின், களத்திருந்து தேரை மீட்டல் எம்போன்றார் கடனாகும்' என்றான். தன்னைத் தாக்கிய தளபதி மேற்தேரைச் செலுத்துக என ஆணையிட்டான் பிரத்தியும்னன். பிரத்தியும்னன் எட்டுக் கணைகள் செலுத்தித் தளபதியைக் கொன்றான். சாம்பனும் சாத்தகியும் எய்த அம்பால் யானைகளும் குதிரைகளும் அழிக்கப்பட்டன. இவ்வாறு இருபத்தேழுநாள் போர் நடந்தது. தருமனின் வேள்விகாத்துக் கண்ணன் துவரையடைந்தான்.

கண்ணன் யாதவரும் சாலுவனும் போரிட்டமை கண்டு களஞ்சென்றான். சாலுவன் கண்ணன் தேர்ப்பாகன் தாருகன் மீது கணை தொடுத்தான். கண்ணன் தாங்கிய வில்லைக் கரத்திலிருந்து வீழுமாறு அம்பெய்து சாலுவன் 'என் நண்பன் சிசுபாலன் மணக்க விரும்பிய உருக்குமிணியைக் கவர்ந்த

தோடல்லாமல் சிசுபாலனையும் கொன்றாய்; உன்னைக் கொல்லாமல் விடமாட்டேன்' எனக் கூறினான்.

'பயனில் சொற்கள் விடுவாயாக' எனக் கூறிய கண்ணன் கதை தாங்கிப் போர் செய்யத் தொடங்கினான். சாலுவன் ஒளித்தனன். 'சாலுவன் வாசுதேவனைப் பிணித்துச் சென்று விட்டான் காப்பாயாக' எனத் தேவகி விடுத்த வீரன் ஒருவன் கண்ணனிடம் செய்தி சொன்னான். 'முடிந்தால் வசுதேவனைக் காப்பாற்று' எனக் கூறிய சாலுவன் வாளால் வெட்டினான். சோர்வதுபோல் நடித்துக் கண்ணன் வில்லை வளைத்துக் கணை தொடுத்துச் சாலுவனின் வில்லைத் துணித்தான்; பின் சாலுவனின் கவசத்தையும் தொலைத்தான்.

சாலுவன் மற்றொரு கடுங்கதையெடுத்துக் கண்ணனொடு பொருதான். கண்ணன் பிறைவாயம்பு விடுத்துச் சாலுவன் எடுத்த கதையைக் கையொடும் துணித்துச் சென்னியையும் அறுத்தான். தேவர் இடைவிடாமல் ஆர்த்தார்.

### 43 தந்தவத்திரனைக் கொன்றது

சாலுவன் இறக்க ஆறுபோற் குருதிபாய, நேமிப்படை வலங்கொண்டு கண்ணனிடம் சென்றது கண்டு சினந்தெழுந் தான் தந்தவத்திரன் என்பான். சூரன் மகளாகிய சுருத தேவைக்கும் விருத்தசர்மாவுக்கும் பிறந்தவன் தந்தவத்திரன். இவன் மாமன் வாசுதேவன். 'மாமன் மகனாக இருந்தும் என் னைக் கொல்லத் துணிந்த உன்னைத் தண்டிக்காமல் விட மாட்டேன்' எனக் கூறிய தந்தவத்திரன் கண்ணன் மீது கால தண்டத்தை வீசினான். கண்ணன் மார்பில் எற்றினான். கண்ணன் தன் கதையால் தந்தவத்திரன் மார்பிலடித்தான். வெங்கதையால் கண்ணன் தாக்கியவுடன் தந்தவத்திரன் மார்பு பிளந்து வீழ்ந்திறந்தான்; செங்குருதி பெருகிற்று.

தந்தவத்திரன் உடலினின்றும் ஒரு சோதி எழுந்து நிலப் பொறை தவிர்க்கத் தோன்றிய கண்ணனின் அடி சேர்ந்தது.

பின் தந்தவத்திரன் தம்பி விடூரதன் கண்ணனை எதிர்த்துப் போரிட்டு அவனும் மாய்ந்தான். தேவர் பாரிசாதமலர் பெய்து வாழ்த்தினர்.

## 44 நம்பி மூத்தபிரான் தீர்த்தயாத்திரை செய்தல்

கண்ணன் வண்டுவரை சென்று தங்கினான். பாண்டவர் கௌரவர்க்கிடையில் ஏற்பட்ட போரில் நடுநிலைமை வகித்த பலராமன் புனலாட்டு மேல் எழுந்தான். யமுனையிலும் கங்கையிலும் நீராடிப் பலராமன் களிறென நடந்தான். பலராமன் நைமிசாரணியம் நண்ண முனிவர் எதிர்கொண்டார். பர்ண சாலையடைந்தவுடன் சூத முனிவன் எழுந்து வணங்காத காரணத்தாற் பலராமன் புல்நுனியைப் படையாகக் கொண்டு சூதனின் சென்னியைப் போக்கினான் என்பர். 'பாகவதமாகிய தொன்னூல் சொல்வதற்காக நாங்கள் கொடுத்த தவிசில் இருந்த சூதனைக் கொன்றது அறமோ?' என முனிவர் பலராமனிடம் கேட்டனர். மேலும் நைமிசாரணிய முனிவர் பலராமனை நோக்கி 'முனிவரைக் கொன்ற பாவம் போக்க நீ பன்னிரு திங்கள் புனித நீராடல் வேண்டும். மேலும் எம்மைத் துன்புறுத்தும் வற்கலன் எனும் கொடியோனைக் கொல்லல் வேண்டும்' என வேண்டினர். அவ்வாறே செய்வதாகக் கூறினான் பலராமன்.

தந்தையே வந்து தனயனாய்ப் பிறப்பானென வேதம் உரைத்தபடிச் சூதன் மைந்தனே சூதனாய்ப் பிறந்து பாகவதமாகிய தொன்னூல் குற்றமறச் சொன்னான்.

வற்கலன் மலை போன்ற தோளினன்; கையில் இலங்கிய வேலினன்; ஆளிமொய்ம்பினன்; அத்தகுவற்கலன் சினந்து எழுந்தான், பலராமன் தன் படைக்கலமாகிய கலப்பையை உன்னினான். கலப்பையால் வளைத்துப் பலராமன் இருப்புலக்கை கொண்டு வற்கலனை அடிக்க மலை போல வீழ்ந்து மாய்ந்தான். உடனே அந்தணர் பலராமனைக் குளிர்ந்த நீராலாட்டினர். பலராமனுக்கு அந்தணர் வைசயந்தி எனும் பொற்றாமரை மாலையையும் அணியையும் ஆடையையும் கொடுத்தனர். மாதவர் வணங்கியேத்த அங்கிருந்து பலராமன் புறப்பட்டான்.

பின்பு பலராமன் கவுசிகி நீர்படிந்து சரயுமா நதியிலும் ஆடினான். பயாகையிற் படிந்தபின் பலராமன் கோமதியாற்றிலும் சோணையாற்றிலும் குளித்துக் கயையைக் காணச் சென்றான்.

கங்கையின் சங்கமத்துறைபடிந்து பலராமன் பரசு ராமனைத் தொழுது புறப்பட்டான். பின்பு கோதாவிரி, பெண்ணை, பம்பை ஆகிய ஆறுகளிலும் படிந்தான் பலராமன். கிரவுஞ்சகிரியிற் குமரனைக் கண்ட பலராமன் சயிலம் நண்ணினான். பின்பு பலராமன் தமிழ்நாடு சேர்ந் தான். வேங்கடத்தானைத் தொழுத பலராமன் காஞ்சி நகர டைந்தான். திருவரங்கத்துக் கண்வளரும் அரங்கநாதனைக் கண்டு வணங்கிய பலராமன் காவிரியிற் படிந்தான். பிறகு பலராமன் திருமாலிருந்த சோலை அடைந்தான். பின் மதுரை சென்றான். அங்கு வையை நதிப்புனல் படிந்தான். பலராமன் பின்னர்க் கடலில் விளங்கும் சேதுவைக் கண்டான். சேதுவிற் குளித்த பலராமன் பின் அகத்தியன் விரும்பிய பொதியமலை சேர்ந்தான். பொருநை நீர் ஆடினான். பின் குமரித்துறை படிந்தான் பலராமன். கண்ணன் அறிதுயில் செய்யும் திருஅனந்தபுரத்துச் சென்றான். பலராமன் யாதமலை சென்று நாரணனைப் பரவினான். அங்கிருந்து பலராமன் கோகன்னம் எனுமிடத்திற்கு வலப்பக்கத்தே தூரியோதனனும் வீமனும் போரிட்ட படுகளப் பரப்படைந்தான்.

கண்ணனுடன் நின்ற பாண்டவர் பலராமனை முறைப்படி வணங்கினர். கொடும்போர் செய்த வீமனையும் துரியோதன னையும் நோக்கிப் பலராமன் 'சமபலம் உடையநீவிர் செய் யும் இக்கொடிய போர் தவிர்க' என்றுரைத்தான். பலராமன் சொற்கேளாமல் இருவரும் தொடர்ந்து போர் புரிந்தனர். பலராமன் துவராகை சேர்ந்தான்.

முல்லையங்கோதையொடு பலராமன் நைமிசாரணியம் சென்று வேள்விசெய்மாதவர்க்கு வேதாந்தம் தெளிவுற உரைத்தான் அருமறை தவத்தோர்க்கு அறிவித்த பலராமன் மீட்டும் துவரை சென்று சேர்ந்தான்.

இவ்வாறு சுகமுனிவன் கூறலும் பரீட்சித்து, 'கண்ணனின் திருவிளையாட்டு இன்னும் கூறுதி' என வேண்டச் சுக முனிவன் விளம்பலானான்.

**45) குசேலருக்கு அருள்புரிதல்.**

மாயனிடத்தன்புடைய குசேலன் என்றொரு மறையோன் இருந்தான். எவ்வளவு சிறிய பொருளாயினும் கிடைத்தது

உண்டு கண்ணனைக் கருதும் அக்குசேலன் மனைக்கிழத்தி பசியால் மிகத் துன்புற்று, 'திருமகள் கேள்வனுக்கு அன்பனாயிருந்தும் வறுமைத்துன்பம் அகன்றாயில்லை. கண்ணபிரானைக் கண்டு பெரும் பொருள் பெற்று வருக' எனக் கூறினாள். 'மாயனைக் காணச்சென்றால் கையுறையாக என்னகொண்டு செல்ல' எனக் குசேலன் கேட்டான். செந்நெல் இடித்துச் செய்த பசிய அவலைத் துகிலில் பொதிந்து மனையாள் கொடுக்க, அதையெடுத்துக்கொண்டு குசேலன் விருப்பில்லானாய் மெல்ல நடந்தான். கண்ணனைக் காணும் பேரன்பு தூண்டக் குசேலன் விரைந்து சென்று கண்ணனின் அரண் மனையடைந்தான். மூன்று வாயில் கடந்து உருக்குமிணியுடன் கண்ணன் இருந்த இடத்தை நண்ணினான் குசேலன்.

மெல்ல அசைந்து வரும் குசேலனைக் கண்ணன் 'வருக வருக' எனக் கூறி எதிர்சென்றழைத்து மார்புறத்தழுவினான். உருக்குமிணி கவரிவீச இருக்கையில் குசேலனை இருக்கச் செய்து 'மிகவும் இளைத்தனை' எனக்கூறிக் கண்ணன் குசேலனுக்கு வெற்றிலையளித்தான். 'நம் ஆசான் சாந்தீப முனிவனின் மனைவியின் கட்டளையால் காட்டிற்கு விறகு கொணரச் சென்று மழைக்கஞ்சிப் பொதும்பரிடை இரவுப் போது இருந்ததை மறந்தாய் போலும்' எனக்கூறிக் கண்ணன் விசாரித்தான். கண்ணன் முறுவல்பூத்து 'அன்ப, எனக்கு என்ன கொண்டு வந்தாய்' எனக்கேட்டுத்தன் தளிர்க் கையால் குசேலனிடமிருந்து துகிலை வாங்கினான்.

'பொருள்விழைந்து இவன் நம்மைப் போற்றலன், இவன் மனையாள் திருவிழைந்து செல்க எனக்கூற இங்கு வர விரும்பினன்; இவனுக்குப் பெருஞ் செல்வம் அளிப்போம்' எனக் கருதிய கண்ணன் குசேலன் அளித்த பாசவலை மிசைந்தான். பூதனை உயிருண்ட கண்ணன் மீட்டும் உண்ண ஒரு பிடி எடுக்க விரும்பினான். கண்ணன் குசேலனளித்த அவலை 'ஒருமுறை அருந்தியதால் குசேலன் இந்திரன் அளவு செல்வம் பெற்றான். இனிமேலும் அருந்தற்க' என உருக்குமிணி கண்ணனின் கரம்பற்றித் தடுத்தாள். தேவியின் குறிப்பறிந்து நகைசெய்த கண்ணன் குசேலனுக்கு விடையளித்தான். 'பிழைத்தேன், பெரும்பொருள் ஈந்தால் நம்மை மயக்கம் காரணமாய் மறந்திடுவன் என எண்ணிக் கண்ணன் எனக்குப்

பொருள் கொடுத்திலன்' என்று எண்ணி மகிழ்ந்தவனாகக் குசேலன் சென்றான்.

சோலையும் வாவியும் செறிந்து பளிக்குமண்டபம் நிறைந்த தன் மனையகத்தைக் குசேலனடைந்தான். குபேரனின், நிதியறை போன்று செல்வம் நிறைந்த தன் மனை நோக்கிக் குலேசன் மயங்கினான். தோழியர் சூழ வந்த தன் மனையாள் நோக்கிக் குசேலன் ஐயம் கொண்டான். வீட்டையும் அங்கு நிறைந்திருந்த செல்வத்தையும் புதிய பொலிவுடன் வரும் மனையாள் முகமும் கண்ட குசேலன்' இது மாலின் செயலே' எனத் துணிந்தான்.

பெறற்கரிய பெருஞ்செல்வம் பெற்ற குசேலன் கண்ணனைச் சிறிதும் மறக்காதவனாய் இன்பந்துய்த்து அறம்புரிந்து மாலின் பதமடைந்தான்.

## 46) சமந்தபஞ்சகத்திற் சென்றது.

பருதி அரவால் தீண்டப்படுவதோர் காலம் நெருங்கிய சமயத்துப், பரசுராமன் சமைத்த அரசர்தம் குருதிநீரால் தடமதாக்கிய சமந்த பஞ்சகத்தில் (ஐந்து குருதி மடுக்கள் உள்ள இடம்) அரசர் பலர் கூடினர். கண்ணனும் சமந்தபஞ்சகம் சென்றான். அசோதையும் கோவியர் குழாமும் செல்ல நந்தகோனும் நடந்தான். தேவியரோடும் கண்ணன் சமந்தபஞ்சக நீரில் ஆடினான்.

நந்தகோனை வசுதேவன் கண்டு மகிழ்ச்சியால் தழுவினான். யசோதையைத் தேவகி புல்லினாள். நந்தகோன் யசோதை இருவரையும் பலராமனும் கண்ணனும் தொழுது வணங்கினர். கண்ணன், பலராமனைக் கண்டு நந்தனும் யசோதையும் உள்ளம் உருகினர். சோலை நிழலிற் கண்ணன் பின் ஆய்ச்சியரைத் தழுவினான்.

'கஞ்சனைக் கொன்ற பின்னும் சினந்த வேந்தருடன் போரிட்டிருந்தமையால் வஞ்சிநல்லீர்!என்னை மறந்து விட்டீர் கொல்? நாம் எங்கும் இருப்போம். உங்களிடத்தும் இருக்கின்றோம். சொல்லப்போயின் உங்களைப் பிரிந்து உறைந்ததில்லை' எனக் கண்ணன் தன்னிலை தெரிவித்தான்.

கண்ணன் கூறியது கேட்டுத் தெளிந்த கோவியர் 'நின்தாள் நினைவதையே அருள்க' என்றனர், அப்போது பாஞ்சாலி கோவியருடன் அளவளாவி' 'கண்ணன் உங்களை எப்படி வேட்டான்?' எனக் கேட்டாள்.

சமந்த பஞ்சகத்திற் பாண்டவர் ஒரு தடாகம் அமைத்தார், கண்ணனை அரசர் யாவரும் வந்து அடி தொழுதார். கண்ணனைக் காண அகத்தியன் உள்ளிட்ட தவத்தோர் பலர் வந்திருந்தனர். கண்ணன் அழகு கண்டு உருகிநின்றார். 'ஊனக் கண்ணால் கண்ணனைக் காண எத்தவம் செய்திட்டோமோ?' என வியந்தார். தன்னை வணங்கிய முனிவரைப் பணிந்தான் கண்ணன், வசுதேவன் முனிவரை நோக்கி 'நல் வினையால் இருவினை போக்கும் தன்மை கூறுக' என வினவ முனிவர் புன்சிரிப்புச் செய்தனர். 'கண்ணனை நாடி வினைப்பயன் போக்குதல் விடுத்துக் கண்ணனைச் சிறுபிள்ளை என நினைத்து. இருவினையொழிக்க நினைத்திடல் கங்கை விடுத்து வேறோராறு சென்றடைதல் போன்றதாம்; மன்னவா! வினைப் பயன் கருதாமல் வினையாற்றின் மெய்யுணர்வு தோன்றும்; உயர்வற உயர்ந்த உண்மையுணர்வு வந்துற்ற போது இரு வினையீட்டம் நீங்கும்' என்றனர் முனிவர். வசுதேவன் தேவர் அவியுண்ணைச் சமந்தபஞ்சக முனிவருடன் மகமாற்றினான். கோவியருடன் புனலாடிக் கண்ணன் மூன்று திங்கள் அங்கிருந்தான்.

கண்ணனை வணங்கி விதுரன், துரியோதனன் முதலான நூற்றுவர், தருமன் முதலான பாண்டவர் சென்றார். கண்ணன் நந்தகோனுக்கும் யசோதைக்கும் சிறப்புச் செய்தான்.

வசுதேவன் நந்தனை நோக்கி, 'கண்ணனை இமைபோல் காத்தீர் நாங்கள் உங்களுக்கு ஒர் உதவியும் செய்யவில்லை; முன்னர்க் கஞ்சனால் துன்புற்று உதவி செய்யவியலாமற் போயினம், பின்னர்ச் செல்வச் செருக்கினாற் செய்வதொன்றும் தெரியாமல் இருந்தோம்' என வருந்திப் பலப்பல கூறினான்.

உக்கிரசேனன் நந்தகோனுக்குத் தூசும், அணிகலனும் ஆரமும் உவந்தளித்தான். பரிசுகளைக் கைக்கொண்டு நந்தன் கண்ணனை நெஞ்சில் இருத்தினான்,

பின் கார்காலத் தொடக்கத்தே கண்ணன் மாதரொடு துவாரகை மீண்டான்.

47) இறந்த குழவிகளைக் கொணர்தல்:

கண்ணனை ஒருமுறை நோக்கிய வசுதேவன், முன்னர் முனிவர் 'கண்ணன் வேதத்தின் கொழுந்து போல்வான்' என்ப துன்னிக் கண்ணனை நோக்கி விண்ணிடை ஒலியும் காற்றின் ஊறும், கனலின் ஒளியும், நீரின் சுவையும், மண்ணின் மணமும் நீயே! மற்று, என் மகன் என்று எண்ணாமல், மெய்ப் பொருள் என்றெண்ணும் அறிவு தந்தருள வேண்டும். அண்டமும், உயிர்த்தொகையும், அமரரும், இறைவர் மூவர் யாவரும் நின் உடைமை, அடியேமாகிய எமக்கு மெய்யறிவு உதவிடுக, யாவுமாய் நின்ற நின்னை இறைவனென்று அறிந்தலான்றி வினைகள் அழிக்கவியலா' என்றான்,

தேவகி கண்ணனைக் 'காயாம்பு நிறத்தாய்' என விளித்து 'நின் ஆசானாகிய சாந்தீப முனிவனுக்குத் துஞ்சிய புதல்வனை மீட்டுத்தந்தாய். முன்னர்க் கஞ்சன் கொன்ற என் பிள்ளைகளை மீட்டுத் தந்தருள்வாய்' எனக் குழைந்து கேட்டாள்.

'இப்பொழுதே அவர்களைக் கொணர்வேன் நீ காண்க' எனக் கூறிக் கண்ணன் பலராமனுடன் சுதல லோகம் சென்றான்.

மாவலியாகிய அரசன் கண்ணனை எதிர் கொண்டழைத்து 'வந்த காரணம் என்ன?' என வினவினான். மரீசி மைந்தர் 'மலரோன் தான் பெற்ற தோகையின் கொங்கை நயந்தானெ'ன்று நகைத்தனர். மரீசி மைந்தர் அறுவரும் பிரமனின் வசவுரையால் அவுணராகி இரணியனுக்குப் பிறந்தார். பிறகு மீட்டும் தேவகி வயிற்றில் பிறந்தனர். பிறந்த அவ்விடத்திலேயே கஞ்சனாற் கொல்லப்பட்டு இறந்தனர். இறந்தோர் வந்து நின்பாலுளர்; அவர்களைத் தருக' என்றான் கண்ணன். அறுவரையும் அழைத்துக்கொண்டு சென்ற கண்ணன் அன்னை தேவகியிடத்து உய்த்தான். இறந்த பிள்ளைகள் கண்டு தேவகி பாலூட்டி மகிழ்ந்தாள். உள்ளம் உவந்தாள்.

தேவகி மைந்தர் அறுவரும் கண்ணன் உண்ட தேவகியின் மார்பில் தாமும் பாலுண்டதால் சாபம் நீங்கித் தேவராகிப் பொன்னுலகடைந்தனர்.

## 48) சுபத்திரை மணமுரைத்தல்:-

'கண்ணனின் தங்கை சுபத்திரையைப் பார்த்தன் மண முடித்தமையையும் கூறியருள்க' எனப் பரீட்சித்து கோரச் சுக முனிவன் தொடர்ந்தான். தீர்த்தமாடப் புறப்பட்ட தனஞ்சயன் குமரியாறு, பொன்னி, கங்கை முதலானவற்றிற் படிந்து கண்ணன் பொருந்திய மலையாகிய ரைவத மலையிடத்துச் சென்றான். அவ்விடத்து முனிவர் பார்த்தனிடம் 'பலராமன் சுபத்திரையைத் துரியோதனனுக்குத் திருமணஞ்செய்து கொடுக்கும் விருப்பமுள்ளவனாயுள்ளான், கண்ணன் நினக்கு அவளைத் தரக்கருதியுள்ளான்'என்றனர் அதுகேட்ட விசயன் சுபத்திரையை மணப்பதெவ்வாறென எண்ணினன். துறவியின் வேடம் பூண்டு பார்த்தன் துவரை நகர்ப் புகுந்தான்.

பார்த்தனின் வேடம் அறிந்தவனாயிருந்தும் கண்ணன் சுற்றமொடு எதிர்சென்று துறவியை வழிபட்டான். கண்ணனின் வஞ்சனை சிறிதுமறியாத பலராமனும் துறவியை விரும்பி வழிபட்டான். 'இங்கு நான்கு திங்கள் தங்கிடுக துறந்தோய்' என வசுதேவன் வேண்டிச் சிறப்புச் செய்யப் பார்த்தனும் அங்கு வசித்தான்.

துறவி வேடம் பூண்ட பார்த்தன் சுபத்திரையைக் கண்டான். அருச்சுனன் முகம் பார்த்துச் சுபத்திரையும் களித்தாள். வில்லாளி விசயன் கன்னியின் அழகு கண்டு உரனழிந்தான். விரகநோயாற் பார்த்தன் சாம்பினான். காலத்தில் சுபத்திரையைக் கவர்ந்து செல்லக் காத்திருந்தான் விசயன். பலராமன் முதலானோர் விழாக் காணச் சென்ற சமயத்திற் பார்த்தன், கண்ணன் குறிப்பறிந்திருந்தானாகையால் சுபத்திரையைத் தேரிலேற்றிப் போயினான். வாயிற்காப்பாளர் எதிர்க்க அவர்களை வென்று அருச்சுனன், சுபத்திரை தேரை ஓட்டிச் செல்ல விரைந்து நகர் சென்றான்.

வஞ்சமாகப் பார்த்தன் சுபத்திரையைக் கவர்ந்து சென்றது கேட்ட பலராமன் சினம் மிகக்கொண்டான். அப்போது கண்ணன் 'பார்த்தன், தீண்டிய கன்னியை வேறு யார் மணக்கவியலும்', எனப் பலராமனிடம் கூறிச் சினம் தணித்தான்,

பின் பலராமனும் கண்ணனும் தந்த வரிசை பெற்றுப் பார்த்தன் சுபத்திரையை மணந்தான்.

49. மிதிலைக்குச் செல்லல் :-

மிதிலைநகரில் சுருதிதேவன் எனும் அந்தணனும் சனகனும் கண்ணனிடம் அன்புடையராய் இருந்தனர். கசிந்துருகுவாரைக் கண்டு அருள்புரிவான் வேண்டிக் கண்ணன் மிதிலையடைந்தான். சுருதி தேவனும் சனகனும் கண்ணனை எதிர் கொண்டழைத்தனர். 'இறைவ! என் மனைக்கு எழுந்தருள்க' என இருவருமே கண்ணனைப் பணிந்து வேண்டினர். ஈருருவம் கொண்டு கண்ணன் இருவருடைய மாளிகைக்கும் சென்றான்; தங்கள் மனைக்கு எழுந்தருளிய கண்ணனைப் போற்றி வணங்கிச் சுருதி தேவனும் சனகனும் பெருமகிழ்வுற்றனர்.

இலையும் மலரும் கனியும் நீரும் கொண்டு சுருதிதேவன் கண்ணன்தனை வழிபடச், சனகனோ பூம்புகையும் மலரும் சாந்தும் அமுதும் கொண்டு வழிபட்டான். இருவருக்கும் அருள் வழங்கிக் கண்ணன் தன் நகரடைந்தான் எனச் சுக முனிவன் கூறினான்.

50. சுருதி கீதையுரைத்தல் :-

'கண்ணனை அறியுமாறு மறைகள் அறையும் விதம் விளம்புக' எனப் பரீட்சித்துகேட்க முனிவன் கூறலானான். 'சனந்தனர் சனகனாதி, முனிவர்க்குக் கூறிய சுருதி கீதையைக் கூறு மினி'யெனச் சுக முனிவன் இயம்பலானான்.

திருமாலை மறைகள் துயில் எழுப்பி வாழ்த்தின. 'எல்லாராலும் விரும்பப்படும் செல்வ! இலக்குமி கேள்வனே! உலகைப் படைக்கும் நான்முகன் உதித்த உந்தியுடைய பரம! மன்னுயிர்களை மயக்கும் மாயையை மாற்றிட வேண்டும். பஞ்ச பூதமாய்த் திகழ்பவனே! நின் கதைத்தெள்ளமுதம் பருகுதல் விடுத்துச் சான்றோர் சருகினை அருந்துவரோ! நின்னைப் பகைத்தாரும் பரவியோரும் நின்னடி உற்றனர். நின் கமலபாதம் எய்தியார் காலனுக்கு அஞ்சார். பிரமனும் உன் நிலைமை இத் தன்மைத்து என அறிந்திலன் எனில், அவனாற் படைக்கப்

பட்டார் நின்னிலை தெரிந்துரைப்பரோ! நீயே பரம்பொருள்', என வேதங்கள் மொழிந்தன.

'அம்முறையை நாரதன் நவிலக் கேட்டான் வியாதன், வியாதன் எனக்குச் சொன்னான், அரசே!' என்று சுகமுனிவன் சாற்றினான்.

## 51. விருகாசுரனைக் கொலைபுரிதல் !

சிவனைப் பணிந்தார் இருநிதி எய்துவர், திருமாலைப் பணிந்தார் செம்பொருள் இழப்பர், அவ்வகை விரித்துரைக்குமாறு பரீட்சித்து வேண்டச் சுக முனிவன் கூறலுற்றான்.

தருமன் இவ்வாறு கேட்கக் கண்ணன் 'தரும, யாவர்க்கும் வீட்டின்பம் நல்க விழைந்த யாம் அவர்தம் பொருள் எல்லாம் கவர்வம்' என்றான். 'ஆகவே மாயனை விழைந்தோர் செல்வம் யாவற்றையும் மாயன் அகற்றுவான்; திருமால் வீட்டின்பம் ஈவான். மாதொருபாகன் மாநிதி வழங்கிடுவான். கட்டுப்பாடில்லாமல் கேட்பார் விழைந்தனவெல்லாம் திருமால் கொடுக்க மாட்டான். ஆயின், சிவன், பக்தர் விரும்பின விரைவில் அளிப்பான். அதற்கொரு கதைகூறுவன் கேள் அரசே!' எனச் சுகமுனிவன் தொடர்ந்தான்.

சகுனி எனும் அசுரனின் மகன் விருகாசுரன் என்பான் தன் உடலைப்பலகூறாக வெட்டி ஆறு நாள்கள் எரியும் நெருப்பிற் தவமியற்றித் தன் தலையையும் அறுக்க, அது விலக்கிய சிவன் 'வேண்டியதென்ன விளம்புக தருவல்' என்றான் 'என் கையை வைத்தால் அவர் சாகும்படி வரம் தருக' என வேண்டினான் விருகாசுரன். சிவன் 'அவ்வாறே தந்தோம்' எனக் கூற, அவ் வரத்தைச் சோதிக்க விரும்பிய அசுரன் சிவன் தலைமீது கை வைக்க முயன்றான், சிவன் அஞ்சி ஓடினான். ஓடிய சிவன் வைகுந்தம் சேர்ந்தான்.

சிவன் திருமாலைச் சரண் புகுந்ததும், கண்ணன், அந்தண குமரனாகி அவுணன் முன் சென்றான். விருகாசுரனைக் கூப்பிட்டுக் கண்ணன் 'ஓடக் காரணம் என்ன?' என்றான். விருகாசுரன் காரணம் கூறிடக் கண்ணன் கைகொட்டிச் சிரித்து, 'எருக்க மாலை சூடிய பித்தன் உரை மெய்யோ? அசுரனே! உன் தலையில் அவ்வரத்தின் தன்மை ஆராய்தல் நன்று' எனக்

கூறிட்டான். விருகாசுரன் தன் தலையில் கைவைத்திட மாண்டான். அமரர் மகிழ்ந்தார். சிவனும் வியந்து நடந்தான், மாயனும் அகன்றான்' என எடுத்தியம்பினான் சுக முனிவன்.

## 52 பிருகுமுனி சென்றது

'பிரமன், திருமால், சிவன் ஆகிய மூவருள் உயர்நலம் உடையவன் யாவன்' எனப்பிருகு மூனிவனிடம் முனிவரும் தேவரும் வினவினர். பிருகு 'மூவருள் சத்துவகுணமுடையார் யாரென ஆராய்வன், அவர்கள் வசவுரைப்பின் யானும் அவ் வாறே செய்வேன்' எனக் கூறிப் புறப்பட்டான்.

பிரமன் உலகடைந்து அவனை வணங்காமல் பிருகு முனி வன் நின்றானாகத்'தந்தையை வணங்காமல் நிற்றல் தக்கதோ' எனப் பிரமன் கூறிடப் பிருகு முனிவன் சினந்து கண்கள் சிவப் புறச் சிவன் வதியும் கைலாயம் சென்றான். அப்போது சிவனும் உமையும் இன்பந்துய்த்துக் கிடந்தது கண்ட முனிவன் 'இரு குறியும் பேர்ந்து வீழ' என வசவுரை வழங்கியகன்றான்' அஃதறிந்து சிவன் அழைப்பப் பிருகு முனிவன் மீட்டும் சிவனி டம் சென்றான். 'இம் மறையோன் நம் உடன்பிறப்பு' எனக் கூறிச் சிவன் மீட்டும் உமையைத் தழுவச் சென்றான், அப் போது பிருகு முனிவன் 'தீண்டாதே, நெறியில் நின்றாயல்லை' எனக் கூற, அதுகேட்ட சிவன் நெற்றிக்கண் போலச் சிவந்த சூலம் கைக் கொண்டான். 'மறையோன் மீது எய்ய எவ்வாறு படைக்கலம் எடுத்தனை இறைவ' என உமை விலக்க உயிர் பிழைத்த பிருகு வைகுந்தம் சென்றான்.

நெற்றிக் கண்ணைச் சிவன் காட்டியதும் அஞ்சாதபிருகு தன் காற் பெருவிரலிலுள்ள தீயால் நெற்றிக் கண் தீயை அழித்துப் 'பிராமணர் வழிபடும் தெய்வமாதல் ஒழிக' என வசவுரை வழங்கிச் சென்றான்.

வைகுந்தம் சென்ற பிருகு முனிவன், பாற்கடலுள் திரு மகளின் துடைமீது தலைவைத்துத் துயில் கொண்டிருந்த மாயனைக் காலால் உதைத்தான். அப்போது உலகமுண்ட தனிமுதலாம் திருமால் எழுந்து சென்று முனிவன் பாதங்களைத் தடவிய படி 'நீ வந்தமையறிந்திலன், அந்தண, யான் படுத் திருந்ததைப் பொறுத்தருள்க' என நட்புடன் கூறினன். மேலும்

திருமால் முனிவனிடம் 'முனிவ' உன் பாதம் பட்டதால் என் மார்பில் திருநிலைபெற்றது' என்றான்.

கங்கைக் கரையடைந்த பிருகு முனிவன் முனிவர்களிடம் நிகழ்ந்தன வெல்லாம் கூறினன். தவசியர் கேட்டுத் திருமாலே உயர்நல முடையவன் எனக் கொண்டு மகிழ்ந்து புகழ்ந்தனர்.

## 53 இறந்த மக்களைத் தருதல்

'கண்ணனின் மற்றொரு விளையாட்டினைக் கூறுவேன் கேள் மன்னவ!' எனச் சுகமுனிவன் செப்பலானான்.

துவாரகை நகரில் வாழ்ந்த அந்தணன் ஒருவனுடைய மகவு பிறந்தபோதே இறக்க அக்குழவியை எடுத்துக்கொண்டு மன்னனிடம் சென்று 'என் குழந்தை இறத்தல் அறமோ?' எனக்கூறி அரற்றினான். எட்டுக்குழவிகளை இழந்த அவ்வந்தணன், ஒன்பதாம் குழந்தையும் இறக்கவே அதைக் கொற்ற வாயிற் கொண்டு சென்று புலம்பிநின்றான். 'மறையவன் குழந்தை மாயாவாறு காக்கும் வில்லாளி இந்நகரில் இல்லையோ' எனப் பார்த்தன் கூறினான். அது கேட்ட மறையவன், 'பலராமன் கண்ணனைக் காட்டிலும் நீ வில்வித்தையில் சிறந்தவனோ' என்றான்.

'பலராமனுமல்லன்; கண்ணனுமல்லன்; என் பெயர் விசயன். என் வில்லாற்றல் காண்பாயாக. நினக்கு இனிக் குழந்தை பிறக்குமாயின் அதனுயிர் காப்பேன். அவ்வாறு காக்கத்தவறின் அழல் மூழ்கி மாய்வேன்' என வஞ்சினமுரைத்தான். அந்தணன் அழுதபடியே மனை திரும்பினான்.

அம்மறையவன் மனைவி கருவுற்றாள். பத்தாம் திங்களில் மறையவன் பார்த்தனிடம் சென்று செய்தி கூறிக்குழவியினுயிர் காக்கவேண்டினான். அந்தணமாதின் ஈற்றறை மருங்கு முற்றும் சரக்கூடமாக்கிக் கூற்றுவனுமஞ்சும்படி வில்லை வளைத்தபடி நின்றான் விசயன். பேதை பெற்ற குழந்தை மறைந்தது. 'நீ காவல் காத்ததால் இப்போது குழந்தையின் உடலும் தோன்றாது மறைந்தது; நின் வில்லாற்றல் நன்றெ'னப் பார்த்தனை நோக்கிக் கூறிய அந்தணன் வருத்த முற்றான். 'ஈரேழ் உலகெங்கும் குழந்தையைத் தேடுவன்

காணவில்லையாயின் அழற்புகுவன்' எனக்கூறி விசயன் அழலை வளர்த்தான். அழல் புகவிருந்த அருச்சுனனைத் தடுத்த கண்ணன் 'குழவி இருக்குமிடம் காட்டுவேன்' எனக்கூறி விசயனைத் தேரேற்றிச் சென்றான்.

சக்கரவாள மலைக்கப்பால் செல்லாமற் தேர்ப்புரவி நிற்கவே, கண்ணன் சக்கரத்தை விடுத்தான். இருள்விலகி ஒளி ஏற்படவே குதிரை மீட்டும் விரைந்து சென்று விரிகடலிற் தங்கிற்று. கடல் முகட்டில் ஆதிசேடன் புயத்தின்மேற் கிடந்த மால் கண்டு தொழுதார், செஞ்சுடர் மகுடமும், தொடியும், வார்குழையும், மார்புசேர் கவுத்துவமணியும், விளங்கிய திருமால் 'மாணெழிற் தோளையுடையீர்; எம் அம்சமாகிய உம்மைக்காண விரும்பியே நிலத்தில் உதித்த குழவிகளை இங்குக் கொணர்ந்தேம். நிலப்பொறை தவிர்த்து நீவிர் வருக' என இன்னுரை பகன்று மறையவன் குழவிகள் பத்தையும் அவரிடம் ஈந்தான். திருமாலின் திருவடி வணங்கிய கண்ணனும், விசயனும் மீண்டுக்குழந்தைகள் பத்தையும் மறையவனுக்குக் கொடுத்தனர்.

குழந்தைகள் மீளப்பெற்ற பெற்றோரின் மகிழ்ச்சியை யாரே அளவிட வல்லார்; மாயவன் வேதியர்க்குப் பல பொருள் தந்து மகம் பல இயற்றினன். பூமியின்பொறைதீர அரசருடன் போர் விளையாடும் கண்ணன் கோவியருடன் கலந்து நீர்விளையாட்டயரக் கருதினான்.

## 54. புனல் விளையாட்டு.

'அரசே! கேட்பாயாக, கண்ணனின் நீர்விளையாட்டினைக் கூறுவேன்' எனச் சுகமுனிவன் கூறலானான்.

பதினாறாயிரம் கோவியர் கணவனாகக் கண்ணன் திகழ்ந்தான். கண்ணன் மகளிருடன் நீராடத்தடாகம் அடைந்தான். நீலமேகம் கடலில் ஆடல் போல் கண்ணன் தேவியருடன் வாவியிற் குடைந்தனன். மாதரின் சிலம்பொலி கேட்ட அன்னங்கள் தம் இனமென நெருங்கி அம்மகளிர்தம் நடை கண்டு நாணி அகன்றன.

பகாசுரன் எனும் புள்ளினைக் கொன்ற கண்ணன் வரவு கண்டு போலும் மலர் உறையும் பறவைகள் வாவிவிட்டுத்

தாவி மறைந்தன. பலர் பல்லியத்தையும், பலர் யாழையும், பலர் குழலையும் முழக்கி மாயனை வழுத்தினர். கண்ணன் நீர்வீசுகருவியில் நீரெடுத்துத் தோகையர்தம் தனமாகிய மலையில் வீசினான். மாயன் மாதர் தன மலையில் நீரைத் தருமாற்றால், வண்ணத்தால் அன்றித் தொழிலாலும் மேகத் திற்கு உவமையானான்.

கண்ணன் சிவிறி நீர் கொண்டு மங்கையர் ஆடையிற் புகும்படி வீசுதலால், அவர்தம் அல்குல் தோற்றலால் நாணி வாவியில் மூழ்கினர். நேயமகளிர் குளித்தெழும் கூந்தலில் மேவிய நீர்த்தாரை கண்ணன் கோவர்த்தனம் எடுத்தபோது ஏழுநாள் பொழிந்த மழை நீர் ஒத்தது. மாதர் கூந்தலிற் சூடிய மலர் சிதற ஆடலால், சுனைநீர் பூக்கள் பூத்தது போன்றிருந் தது. கண்ணனின் தோளழகு நோக்கும் மங்கையர்தம் முகம் நம்பியைப் பார்க்குமாசையால் மீன் கூட்டங்களும் அலர் சேர்தல் போலும் திகழ்ந்தன. மேகம் தழுவிய மின்னலைப் போன்று கோவியர் கூடிக் குழகனைத் தழுவினர். மாதர் குங்கும நீரைக் கண்ணன் புயத்திற் தூவுதல், வரை மீது கதிர்க் குழாம் பாய்தல் போன்று விளங்கிற்று.

கன்னியர்தம் பூங்குழல் நீர்த்துளி சிதறுதல், முகிற்கணம் முத்தினத்தை உகுத்தல்போல் இருந்தது. இவ்வண்ணம் மாதரும் கண்ணனும் புனல் விளையாடிப் பின்னர் நுண்துகி லணிந்து மலர் மாலை, சாந்து, பொன்னணி புனைந்து வைகினர். கோவியர் கண்ணனையே நினைந்து முத்தி நெறி யடைந்தனர். கண்ணனைக் காதலித்த மகளிர் விரக வெள்ளத் துள் அழுந்தி மெலிந்தனர். அம்மகளிர் விரகதாபத்தால், 'கண்ணனைக் காதலித்தோ அன்றிற் பறவைக்கூட்டம் உறங் காமல் ஆர்ப்பரித்தன! கண்ணனை உள் நினைந்தோ கடலே! நீ கரைகின்றாய்! கண்ணனை நினைத்தோ கடலே! எங்களைப் போல் மாலை, வளை நீக்கிச் சந்திரனை வெறுத்து உறங்காமல் விழித்துள்ளாய்! மலையே! நீயும் திருமகள் கேள்வனின் மீது ஆசை வைத்தோ ஓயாமல் அருவிநீருகுத்து அசையாமல் உள்ளாய்! கண்ணனைக் காணாமல் வாடும் எங்களைப் போல் நதிகளே! நீர்க்கடலாம் தலைமகனைக் காணாமல் மெலிந்தீர்! தேமாவின் தளிரருந்தும் கோகிலமே! நசையுற்றோர் சிலர் உன்னை வெறுப்பினும், கண்ணனின் வேய்ங்குழல் போன்று காதல் பெறக் கூவுகின்ற நினக்கு நாங்கள் என்ன

க்கைம்மாறு செய்வோம்! தென்றலே! கண்ணனுடன் கூடியதால் நீயும் வருந்துகின்றாயோ? எமக்குக் காமநோய் கொடுத்த கண்ணனை உள் நினைந்தோ மதியே! கலையிழந்து வாடுகின் றாய்! அன்னமே! கண்ணனை நாங்கள் சேரத்தூ துரைக்கவோ அல்லது இங்கு உம்மைக் கண்ணன் தோயான் எனும் தீதுரைக்கவோ அல்லது யாதுரைக்க வந்தனை?' என இவ்வா றெல்லாம் பலபடக்கூறித் தவமிருந்தனர். கண்ணனுக்காக அவர்தம் தவத்தின் பெற்றியை என் சொல்வேன்! அவ்வாறு மொழிந்த மாதர் முத்தி எய்தினர். மாலின் பெயரினைச் சொல் லின் முத்தி நண்ணும். கண்ணனைக் கண்டும் கலந்தும் கழறி யும் நினைத்தும் வீடுற்றது அரியதோ?

இல்லறத்திறனர்க்கு அறம் பொருள் வாழ்வுடன் முக்தியின் பமும் உண்டெனச் சொல்லல் உற்றனன் போன்று கண்ணன் துலங்கினான். கண்ணனை மணந்த மங்கையர் பதினாறா யிரத்து நூற்றெட்டுப்பேராவர். ஒவ்வொருத்தியும் பத்துப் புதல்வரைப் பெற்றெடுத்தாள். அவருள் பட்டத்தேவியர் உருக்குமிணி, திருமகள் போன்ற எண்மர் ஆவர், கண்ணன் நல்கிய மைந்தர் பிரத்துமனன், அநிருத்தன் முதலான பதினெட்டுப் பேர்களாவர், அவர்கள் பெயர்கள் வருமாறு; பிரத்துமனன், அநிருத்தன், பானு, மித்திரன், காந்திமான் சாம்பன், விருபன், பிரகபானு, புட்கரன், அருணன், கவி, வேத பாகு, விருகன், சித்திரபானு, மித்திரவிந்தன், சுனந்தனன், சுர வேதன், நியக்குரோதன். பிரத்துமனன் உருக்குமியின் மகளை மணந்து அநிருத்தன் என்பானைத் தந்தான். அநிருத்தன் மகன் வச்சிரன் ஆவன், இவன் வசவுரைக்குத் தப்பியவன். வச்சிரன் மகன் பிரதிவாகு, பிரதிவாகு என்பானின் பிள்ளை சுவாகு. சுவாகுவின் மகன் உக்கிரசேனன். உக்கிரசேனன் மதலை சதசேனன். இவ்வாறு அறத்தவராய்ப் புகழுடையோராய்க் கண்ணன் மரபுதித்தோர் யாதவர் யாவரும் ஆராயின் தேவர் களே யாவர்.

ஏதுகுல அரசர்தம் பெயரை வேறு வேறு எடுத்தியம்ப ஆறு கோடி ஆண்டாயினும் அறைதற்கரிது ஏது குலத்தை நுவலின் நூற்றொரு கோத்திரமாகியதாகும். யாதவர்க்கு அறிவு புகட்டிய சூரவோர் மூன்று கோடியே ஆயிரத்து நூற்று எண்பத்தெட்டுப்

போர்களாவர். அயனும், அரனும் நோற்றும் நுவல எட்டாத் கண்ணன், தவசியர், தேவர் போற்றத் துவரையில் வீற்றிருந் தான்.

தன்கதை கேட்பார் அழியா இன்பம் எய்தும் பொருட்டுக் கண்ணன் எதுகுலத்துத்தோன்றினன். இக்கதை கேட்பார், இசைப்பார் வேண்டியன யாவையும் எய்தி இவ்வுலகில் இன் புற்றிருந்து மாலின் பதமடைவர்.



# பதினோராம் கந்தம்

## இருப்புலக்கை பெறல் :-

நிலப்பொறை தவிர்க்கத் தோன்றிய கண்ணன் உயர்ந்த யாதவர் குலமும் தம்முள் போரிட்டு மடியச் செய்து வைகுந்தம் செல்லத் திருவுள்ளம் கொண்டான். கண்ணன் குறிப்பறிந்த விசுவாமித்திரர் முதலிய முனிவர் பூங்கா வந்தெய்தினர். கண்ணன் புதல்வர் மாதவரிடம் சென்று 'பெண்ணுருவம் கொண்ட சாம்பன் பெறுவது யாதென எண்ணிக் கூறிடுக' என வேண்டினர். முனிவர் சிரித்துப் 'பாரில் யாதவர் உயிர்பருகும் இருப்புலக்கை ஒன்றைப் பெறுவாள்' என்று பதிலிறுத்தனர்.

வசவுரையால் சாம்பன் வயிற்றுதித்த இருப்புலக்கை கண்டு கலங்கிய காதலர், கண்ணனுக்கு அச்செய்தியுணர்த்தியபின் அவ்விருப்புலக்கையை அராவிக் கடலில் இட்டனர்.

கடலில் வீழ்ந்த நுண்ணிய துகளனைத்தும் வாட்கோரையாக விளைந்தன அரத்தால் அராவ இயலாதாகிய இரும்பை மீன் விழுங்கிற்று. வேட்டுவன் வலையகப்பட்ட அம்மீனை அவன் அறுத்தவுடன் அதன் வயிற்றிலிருந்த இரும்பைக் கண்டு மகிழ்ந்து, பாம்பெனத் திகழ்ந்த அதனை அம்பின் நுனியில் அமைத்தான்.

## 2. வசுதேவற்கு நாரதர் தத்துவமுரைத்தல் :-

நாரதன் வரக்கண்ட வசுதேவன் எதிர்கொண்டு மலர்தூவி பணிந்தான். 'மானிடப் பிறவி எய்தல் அரிது, பெற்ற உடல் அழிந்திடாமுன்னர்த்திருமாலின் அடியாரைக் காணலரிது; திருமால் எனக்குக் காட்சிதந்த வேளை நீ எனக்கு மதலையாய் வருதி என்றேனேயன்றி வீடு வேண்டிலன்; ஆகவே வீட்டின்பம் அடையும் வழியை அருள்க'' என வசுதேவன் வேண்ட நாரதன் கூறலானான்.

மனுகுலத்துதித்தோன் இடபன் என்பான், இடபன் தனயர் நூற்றுவருள் கவி முதலான ஒன்பது முனிவர் இருந்தனர்.

ஒன்பது முனிவரும் நிமி என்பான் மகம் இயற்றிய போது வந்து சேர்ந்தனர். முனிவரை வணங்கிய நிமி 'பிறப்பறுக்கும் பாகவதர்க்குரிய தவநெறியைச் சொல்லிடுவீர்' என வேண்ட, ஒன்பது முனிவரும் நல்லறன் ஓதினர்.

திருமால் கதை கேட்டு, வினைப்பயன் விட்டொழிந்து திருமாலின் பதம் பணிவார் பாகவதர்; சராசரம் யாவும் இறைவனே என்று அறிகின்ற இலங்கும் உள்ளத்துடன் உறைபவர் உத்தம பாகவதர். திருமால் பாகவதர் குற்றமுடைய புத்தியர், பேதையர் பக்கல் நட்பு இகல் என்பதன்றி ஒரே தன்மைத்தான அருள் செய்குவர்.

விதித்தபடிப் பாகவதர்க்கு நன்மை செய்வார் திருமால் கூறும் மத்திமராவர். திருமால் இயற்றப் பட்டுள்ள உருக்களில் மட்டும் அன்பு செலுத்துபவர் பிராகிருதர் ஆவர். யான், எனது எனும் பற்றின்றி வாழும் இல்லறத்தார்களும் உத்தம பாகவதரே.

மயக்கம் ஒழித்தவர் திருமாலை வணங்குபவராய் வினை ஆற்றின் விளைவது கேட்பாயாக. வினை இயற்றுவார் உள்ளத்து அருள் நிறைந்திடக் குற்றம் கெடும், குற்றம் நீங்கியவுடன் வலிமை வந்துறும்; அறிவும் வந்தடையும், அறிவு எய்தியவுடன் பரம்பொருளுடன் வேறுபாடு கொள்ளாமற் பொருந்துவர். பிழையுற்ற மனத்தோடு பேதைமையால் தீயன செய்வார் யமபடர்களால் நரகத்துள் தள்ளப்பட்டு வருந்துவர். சிவனையும் நான்முகனையும் வழிபடுவார்களாயினும், அவருள்ளத்தே உறையும் மாயனைத் துதித்தவராய் வீட்டின்பப் பயன் எய்துவர்.

மறை முறைப்படி செய்யப்படுவதே கருமம் மறைமுறை சாராதன தீச்செயலாம். கருமம் ஒன்றும் ஆற்றிடாமலிருத்தல் அகன்மம் ஆகும், செயல் ஆற்றுகையிற் கண்ணன் மேல் அன்பிலதேல் குற்றப்படும். வசுதேவா! கண்ணனையே வணங்கித் தூய தொழில் புரிவார் யாதொரு குறைவுமின்றிப் பயனெய்துவர். இவ்வாறு முனிவர்கள் கூறியவுடன் நிமி என்பான் 'மக்களுய்யுமாறு மாயன் கொண்ட தோற்றரவு ஒன்றைக் கூறுக' எனக் கேட்கச் சுக்கிரன் முதலியோர் கூறலாயினர்.

அளவில்லாப் பரம்பொருளாகிய திருமால் உலகெலாம் உடலாக வந்துஉறைந்து முத்தொழில் இயற்றும் விராட்டென்ற மும்மை உருவமும் கொண்டான். பூசுரரும் மறை நவில் நாவினாருமாகிய நர நாரணர் என்பார் குற்றமற்ற தவம் புரிந்தனர், முன்னர். அப்போது அத்தவத்திற்குக் கேடு சூழக் கருதி இந்திரன் அரம்பையரோடும் அங்கு வந்துற்றான். உருப்பசி முதலானோர் அழகு கண்டு அவர் அறிவு மயங்கினர். அரம்பையர் அகன்றபின் இந்திரன் நர நாரணரைப் பணிந்தான். இந்திரன் அவர்தமை நோக்கி 'தவமியற்றும் எவரும் உம்மை நினைக்கின் பிறவி எய்தார், ஐம்புலப் பகை நீக்குவர் எனில், உலகில் யாரே உமக்குத் தீங்கு செய்வார்!' என்று கூறினான். பின் முனிவர் ஏவலால் இந்திரன் ஊர்வசி முதலானோருடன் நகரடைந்தான்.

திருமால் நான்முகனுக்கு அன்னமாய் இருந்து மறையோதினான். மீனமாகியும் ஏனமாதி உரு இயைந்தும் மால் உலகையளித்திடும் வகையைக் கோடியாண்டு அறையினும் அடக்குவதரிது; திருமால் ஊழிதோறும் அடைவின் வெண்மை, செம்மை, பசுமை, கருமையாகிய நான்கு வண்ணமும் எய்தி உலகு காணத் தோன்றும்.

மாயன் கிருதயுகத்தில் வெண்மை நிறத்தில் பிரமச்சாரி உருவமெய்திக்குலவுவன்; திரேதாயுகத்தில் வேள்வி செய்வார் உருவமெய்தி உறைவன்; அப்போது மாந்தர் மகமியற்றி மாலை வழுத்துவர்.

துவாபரயுகத்தில் கண்ணன் மன்னர்க்குரிய சின்னமொடு திகழ்வன். கலியுகத்தில் கருதரும் திருமாலின் நாமகீர்த்தனம் செய்குநர் ஒப்பற்ற வீடெய்துவர் எனில் கலியைக் காட்டிலும் சிறந்த யுகமில்லையென்றபடி. இவ்வாறு நிமிகேட்க முனிவர் 'புரவல!' என்றுகூறி வாசுதேவனிடம் நாரதன் தொடர்ந்து சொல்லலுற்றான்.

நூறாண்டுகள் மழை பொய்த்திட எங்கும் குப்பைபாய்ந்து நிலம் பிளக்கும். மற்றொரு நூறாண்டு தீக்காற்றுவீச நிலம் சிந்தும். பிறகு பெருமழை பெய்யும் பூதம் ஐந்தும் நீர்பரந்து ஒன்றுசேர இறந்திடும். இறவாது நின்ற தலைவனாம் திருமாலை நீ மகவாகப் பெற்றனை. இனி என் பேறு பெறுவது!

பூதனை உயிரும்,கோவியர் முறுவலும் மாந்தும் திருமாலை மகன் என்று கருதற்க; ஆதியும் அந்தமும் இல்லா இறையென்று தெளிக; கண்ணனைப் போரிற் சந்தித்து வெல்லக் கருதியோர் சிசுபாலன் முதலியோர் எவ்வளவு பேர் என்று யான் சொல்ல! கண்ணனை மகனாகப் பெற்றுக் கண்ணாற் கண்டும்,புல்லியும் மோந்தும் அன்புகொண்டு களித்தனை; நினக்கு வீடுபேறு கிட்டுமெனக் கூறவேண்டுமோ!

இவ்வாறு நாரதன் கூறிச்சென்றவுடன் இந்திரன், சிவன் நான்முகன் வானில் தோன்றிக் கார்வண்ணனைப் போற்றினர். 'நூற்றிருபத்தைந்து ஆண்டுகள் உலகாண்டபின் உனது இட மான வைகுந்தம் எய்திடுக' எனக் கூறித் திருமால் அருள் பெற்று இந்திரன்,உருத்திரன், பிரமன் ஆகியோர் அகன்றனர்.

### 3 உத்தவர் தத்துவம் வினவல்

வானவர் கண்ணனை வணங்கிப்போன பின்னர் விளைந்த தைப் பரீட்சித்திற்குச் சுகமுனிவன் எடுத்தோதினான். கண்ணன் ஏவலால் யாதவர் அழிவிற்குரிய பூகம்பம் முதலான பல தீநிமித்தம் துவாரகையில் ஏற்பட்டன.

தீநிமித்தம் கண்ட கண்ணன் 'கடற்துறையில் நீராடலாம்' எனக் கூற, யாதவர் நீராடப் புறப்பட்டனர். வைகுந்தம் செல்லக் கண்ணன் கருதியுள்ளமையறிந்த உத்தவன் 'நின்னைப் பிரிந்து ஒருசிறிதும் என்னால் இருக்க வியலாது. என்னையும் உடன்கொண்டு செல்க' என வேண்டினான், உத்தவன் மனங்கொள்ளுமாறு கண்ணன் தத்துவம் உரைக் கலுற்றான்.

களிறு ஊற்றினிற் துஞ்சும்; விட்டிற்பூச்சி ஒளியினில் மாயும்; நாற்றத்தினால் வண்டு வீயும்; மீன் சுவையால் நாச மெய்தும்; அசுணம் இசையினால் இறக்கும், ஆகலின், கல்வி வன்மையால் புலன்கள் ஐந்தையும் அடக்கிடல் வேண்டும். 'உலகமெல்லாம் கானல் நீர் போல மூலப் ப்ரகிருதியினின்று வந்தன' என்று எண்ணல் வேண்டும். காட்சியறிவாலும் அநு மான அறிவாலும் எண்ணித் தெளிவுபெற்றுத் துன்பங்கள் இவை என்றும்,நற்குணங்கள் இவை என்றும் அறிதல் ஒழித்து யாவும் சமம் எனக் காணல் வேண்டும் இனிவரும் ஏழாம்

நாளில் யாதவர் தம்முள் பொருதுமாய்வர், கடல் துவாரகையை மறைக்கும்; உலகில் கலியால் போர் ஏற்படும்' என உத்தவன் மயங்கிட உரைத்தான் கண்ணன்.

'நின் பிரிவிற்கஞ்சினன், குருவை நீங்கிக் காட்சியாலும் அனுமானத்தாலும் நன்மையை உள்ளம் தெளிதல் எவ்வாறு கூறியருள்க' என உத்தவன் வேண்டக் கண்ணன் உத்தவனுக்குக் கதையொன்று உரைக்கலுற்றான்.

4) ஆசிரியுரை உரைத்தல்

யயாதியின் மகன் யது என்பான், தீதிலனாகி மகிழும், நிர்வாண வேடம் பூண்ட தாத்தாத்திரேயன் எனும் முனிவனை யணுகி 'அறம் பொன், காமம் சிறிதும் நினைந்திலை, எதனால் நீ இன்பம் அடைகின்றாய்?' என்று வினவத்தத்தாத்திரேயன் இசைக்கலுற்றான்.

நிலம், நீர், தீ, காற்று, வானம், கதிரவன், திங்கள், கடல், மலைப்பாம்பு, மான். யானை, விட்டிற்பூச்சி, மீன், வண்டு, கணை செய்வான், கன்னி, தேனீ, புறா, வேசி, அன்றில், நாகம், சிலந்தி, குளவியால் எடுக்கப்பட்ட புழு, சிறுவன் ஆகிய இருபத்துநான்கினையும் மனத்தில் ஆசிரியர் எனக் கொண்டு தீது நன்று என்று அறிந்தனன் இன்பமுற்றேன் அரசே! அவ்வகை கேட்பாயாக' எனத் தொடர்ந்தான் தாத்தாத்திரேயன்.

வெட்டினாலும் தோண்டினாலும் பொறுத்துக்கொண்டு எதிர்பொருதிடாது மலைவீழ் அருவி, காடுதரும் கனி முதலியன அளித்தல் ஆகிய இருதிறத்தையும் தரை எனக்கு அறிவித்தது. புனிதம் பெற ஆக்கலும், தெளிவும் நீரினிடத்து அறிந்து கொண்டேன் தன்னை அடைந்தவற்றை உண்பதும், எவரும் அணுகாவகை வீற்றிருப்பதும் ஒளிறும் தீ எனக்குக் கற்பித்தது யோகியர்க்குக் காதலும் வெறுப்பும் இல்லை; அது போன்றே காற்றும் வைகும். துர்நாற்றமும் நறுமணமும் கலந்து வீசியும் காற்று அக்குணம் பெறாது என்றறிந்தேன்.

பிரமம் ஒன்றென வானம் எனக்கு அறிவித்தது உருவமற்ற பிரமம் சரீரம் யாவற்றிலும் உறைகுவன் என்பதைப் பல

குடத்து நீரிலெல்லாம் பருதி ஒருவனே நிழல் பலவாயுறல் கொண்டு அறிந்தேன்.

வளர்தல், தேய்தல் நிலவுக்கில்லை, கிரணங்களுக்கே உண்டு. அது போன்று ஆதல், இருத்தல், மாறுதலடைதல், குறைதல், வளர்தல், அழிதல் என்பன உடலுக்கல்லால் உயிர்க்கில்லை என்பது உணர்ந்தேன். நிலவிற் களங்கமின்று, அது பூமியின் நிழலே-அதுபோன்று உடல் மேவும் மெய்ப் பொருள், குணங்கள் உடலுக்கேயன்றி மெய்ப்பொருளுக் கில்லை. வேற்றுநீர் வரவால் தன் குணம் மாறாதிருக்கும் கடலின் கம்பீரத்தை யானும் உவந்தேற்றேன்.

முயன்று வருந்தாமல் தன் பக்கல் அடைந்ததை உண்ணும் மலைப்பாம்பு போல நானும் முயற்சியற்றுப் பெற்றன அருந்தினன்.

கலைக்கோட்டு முனிவன் முன்னம் மடந்தையர் கானம் கேட்டு மன்னன் மகளை மணந்தயர்ந்தான். இதையறியாத மான்கள் வேட்டுவனது பண் செவிமடுத்து அவன் வலை வீழ்ந்து மடிந்தன. அது கண்ட நான் மாலின் நாமகீர்த்தனம் தவிர ஏனைய வெவ்விசை கேளேன்.

குழியில் பிடியை வைத்துக் களிற்றைப் பிடிப்பர் வேடுவர். மாதர் இன்பத்தை அது கண்டு விடுத்தேன். உணவுப் பொருளோ எனக்கருதித் தீயைச் சுற்றிய விட்டிற்பூச்சி அத்தீயில் இறக்கும். முனிவராயினும் அவர்தமையும் கவர்ந்து வருத்தும் மடந்தையர் உருவை நான் காண்பதிலன்.

வஞ்சத்துடன் தூண்டிலிற் கட்டிய உணவைச் சுவை கருதி உண்ணக் கருதிய மீன் இறப்பதைக் கண்டு நான், உடற் கூட்டில் உயிர் தங்கவும் பசி போக்கவும் அருந்தலின்றிச் சுவைக்காக உணவருந்தலை நீங்கினேன்.

சிறு சிறு மலர்தொறும் சென்று தேன் பருகி மகிழும் வண்டைப் பார்த்து நானும் கலத்தால் ஐயம் ஏற்றுண்ணாமல் கரத்தால் ஐயமேற்று உண்டனன். ஒரு தாமரைப் பூவிலேயே தேனுண்டு அம்மலரிலுறைய, இதழ் குவிய உள் அகப்பட்டு மடியும் வண்டினைக் கண்டநான், அன்று முதல் ஒரே வீட்டிற்

தங்கிச் சுவையுணவை விரும்பி அருந்தலேன். சப்தம் முதலிய ஐந்து குணங்களும் ஒருங்கே அடைந்தார் உய்ந்திலர் பொறி வழி நில்லாது அம்பின் கோணலைத்திருத்தி ஆளும் ஒருவனைப் போலப் புலன்வழி மனம் விரும்புதலை விடுத்துக் கருத்தால் அசைவில்லாத அறிவாம் பொருள் அறிந்தேன்.

தன் திருமணம் பொருட்டுத் தாயும் தந்தையும் வேற்றூர் சென்ற நாளில், உறவோர்க்கு உணவருத்தல் வேண்டி ஒரு பெண் நெல்லைக்குற்றத்துணிந்தாள். வளையின் ஒலியை அவ்வுறவினர் கேட்கின் வறுமையுற்றவள் என்றுதன்னை அவர் கருதக் கடும் என உணர்ந்து அவள் கைவளை கழற்றினாள், அதனால் வெவ்வுரை கருதி நான் குழுவைக் கடிந்தேன்,

உண்ணாமற் சேர்த்து வைத்த தேனைத் தேன்எடுப்பார் ஒருசெயலும் செய்யாமற் கவர்ந்தனர்.தேனீக்களும் இறந்தன, அது கண்ட நான், ஆசை நீக்கியவர்க்கு நாளைக்கென்று சேர்த்து வைப்பது மிகையெனத் தெளிந்தேன்.

வேட்டுவன் வலைப்பட்ட பெடையும் குஞ்சுகளும் அடைந்த துயர் கண்ட ஆண்புறா தானும் சென்றுவலையை அடைந்து இறந்தொழிந்தது, அதனால் தமர் நட்பு தீங்கு பயக்குமென அறிந்து தமரொடு சேர்தலை ஒழிந்தேன்.

மீதிலா நகரத்துவேசி பிங்களை என்பவள் வேட்கை நீங்குதல் நன்றெனக் கூறித் தனக்குக் குருவானமை கூறலுற்றான். பிங்களை புணர்ச்சி இன்பம்விற்கும் விரகினாள், பொருள்நல்கும் ஆடவரைப் புணர்வாள் இவ்வாறு அவள் பொருள் ஈட்டும் நாளில், சொன்னவண்ணம் பொருள்தந்து தோய்பவர் ஒருவரும் வாராமையால் அரைவராகன் எடையுள்ள பொன்னும் கிடைத்திலது. பிங்களை வருந்தினாள். யாரும்வந்து பொருள்கொடுத்து இன்பந்துய்த்துப் போகமாட்டார்களா என வீதி பார்த்துத் தேம்பினாள். வாசலில்நின்று மயங்குவாள், நள்ளிரவு ஆயிற்றே என்று உள்ளே செல்வாள்; பொருள் நினைந்தழுவாள்,பாயல் மீது படுப்பாள்,பதைப்பாள்; பொருள்மீது கொண்ட ஆசை பொல்லாதது என்று அவள் கருதி அதை வெறுத்தவளாய்க் கூறுவாள். 'துயரம் நீங்காது ஆசை வளராவாறு வைராக்கியம் எனும் வாள்கொண்டு வெட்டிடாது உயர்ந்தவர்களுக்கு உவகை உண்டாகாது,

கடவுள் என்னுள் வதியவும் வீதி தேடிவந்து என் ஆசையில் வீழ்பவர் எவர்உண்டு? சலத்தையும் தசை எலும்பொடு சார்றும் மும்மலத்தையும் மயிர்த்தோலின் மறைத்த உடலை அழகுடைத்து எனநயந்து நலிந்தஅறிவை என்னென்று சொல்ல!' எனக்கூறிய பிங்களை முடிவில்லாஆசையை விட்டொழித்து மகிழ்ந்தாள். அன்றுமுதல் யானும் அவ்வகை தெளிந்து ஆசையை வேரொடும் விடுத்தேன்.

ஒருநாள் ஓர் அன்றிற்பறவை ஊன்கவர்ந்து ஆகாயத்திற் சென்றபோது, மற்றொருபறவைதுரத்தி அவ்வூனைப் பறித்ததும், அன்றிற் பறவை ஊன்ஒழிந்து உவப்புற்றது. அதனால் நான் என்றும் ஒரு பொருள்எய்தி அதனாற்துயர் அடைந்திலன்.

கறையான் முயன்று கட்டியபுற்றில் பாம்புசென்று வதியும், அதுகண்டு உணர்ந்த யான் ஒன்றும் உஞற்றேன், மற்றவர் புத்தியாகிய குகையில் வைகுவேன்.

தான் உண்டாக்கிய நூலைத்தானே உண்ணும் சிலந்திப் பூச்சியைக்கண்ட நான், உயிர்களைப் படைக்கும் அப் பரம்பொருளே அவ்வுயிர்களை உண்ணும் என்பதறிந்தேன்.

மானம், அவமானம் அடைந்திடாது ஊனம் நீக்கி உவந்த சிறுவனைக்கண்டு நான் அறிந்துகொண்டதால், சிறுவன் தன்மைகளை எய்தி யானும் மகிழ்ச்சியுற்றேன்.

அன்பாலும், ஆசையாலும், பயத்தாலும், பகையாலும் நாதனை நினைந்து இன்பமெய்தும் என்பதை ஈங்கறிந்தேன் வண்டை நினைந்த பசும்புழு வண்டுருவாயது கண்டு.

சொல்லுக்கடங்காது எங்கும் நிறைந்துள்ள இறைவனாம் திருமாலை அறிதற்குஇடமாக இவ்வுடல் இருத்தலின் உடலும் எனக்குக் குருவாகியது அரசே! சடப்பொருள் அனைத்தும் படைத்து உவக்காத நான்முகன் மனிதனைப் படைத்து மகிழ் வெய்தினான். மானிடப்பேறு மிகஅரிதானது, ஆயினும் சினந்த யமனது கைப்பட்டிருக்குமென ஆராய்ந்து ஒழுக்கத் துடன் விளங்குதல் நன்றாம், உறக்கம் விழிப்பு போன்று, பிறந்தஉயிர் இறத்தல் உண்மை; சிறப்பொடு இறக்கும் உடலம் மீட்டும்பிறத்தல் உண்டாகலின், உடலின் மீதுள்ள விருப்பை நீக்கல் வேண்டும்.

இவ்வாறு யது எனும் மன்னனுக்குத் தத்தாத்திரேயன் செப்பினான் என்று உத்தவனுக்கு மாயன் உரைத்தான்.

5. ஞானகன்மம் உரைத்தல் :-

'பரீட்சித்து வேந்தே! கண்ணன் உத்தவனுக்குப் பின்னர் வினைக்கட்டு நீங்க விரித்துரைத்தான்' எனச் சுக முனிவன் தொடர்ந்தான்.

'நித்திய கடன்களை அன்புடன் உத்தவன் செய்தல் நன்றாம், உடல் நிலையாதெனக் கொண்டு பலன்கருதி வினையாற்றல் தீது. தூலம், சூக்குமம், காரணமாகிய உடல் மூன்றும் பொய்யானவை என அறிவால் உணர்ந்து, அறிவொன்றே உண்மையானது எனக் கருதுவோர் பிறவிக்கடல் பொருந்தார். அத்தகையோர் விளங்கும் திறம் உரைப்பேன் உத்தவ! கேட்பாயாக' என்றான் மாயன்.

மரத்தின் உருவமெங்கும் தழல் நிறைந்திருப்பினும்கடைந்தால் உருவாகும் தீ வேறாகி வனத்தையே எரிக்கும். ஆத்ம ஞானம் உணரின் உருவம் வேறாக உள்ள பிறவி நீங்கும். தருக்கள் பலவாயினும் அவற்றுள்ள தழல் ஒன்றே ஆதல் போல உருக்கள் பலவாயினும் அவற்றிலுள்ள அறிவு ஒன்றே. குரவன் கீழரணிபோல்வான். மாணாக்கன் மேலரணி போல்வான். உபதேசச் சொல் சந்தி போன்றது; தோற்றும் அங்கி போல் அறிவு தோன்றும்.

பலனைக் கருதானாய் வினையாற்றல் வேண்டும். பலன் வேண்டி மகங்கள் முதலிய இயற்றுவோன் சுவர்க்கத்தில் போகம் துய்த்து வீட்டின்பம் நீங்கித் துன்புறுதல் உறுதி. அழியும் இன்பம் விழைந்து செயற்கரிய காரியம் செய்து வானுலகுசென்று தேவமாதர் தரும்இன்பம் நுகர்தல், அரசரால் வாளேற்றச் செல்லும் கள்வர் பக்கத்துள்ள நகரில் உணவை யாசித்து அருந்துதல் போலாகும்.

போகம் வேண்டி வினைசெய்வார் ஆன்மா பல என்றும் ஈசனில்லை என்றும் உரைப்பர்; அவர் இந்திரன் உள்ளிட்ட வானோரும் என் ஏவலால் இயங்குவர் என்பது ஓர்ந்திலர்,

அது கேட்ட உத்தவன் கண்ணனை நோக்கி 'யாவும் ஒன்றே என்றாய். ஆனால் உன் ஏவலால் தேவர் செயற்படுவர் என்றாய்; இதை உள்ளம் தெளிய உரைத்திடுக' என்றான், கண்ணன் விளக்கம் உரைக்கலுற்றான்,

மாயையாலே பேதமாகித் தோற்றும் ஓர் ஆபரணத்துள்ள அணிகளில் விளங்கும் பொன் போன்று பரம்பொருள் ஒன்றே, உடலே தாம் என்பார் அச்சம் கொண்டு கலங்குவர்.

ஒப்பில்லா ஈசன் முத்தன்; சீவன் மாயையாற் கட்டப்பட்ட பெத்தனாவன். ஒவ்வோர் உடலிலும் சீவனும் ஈசனும் பொருந்துவர்; சீவன் எய்தும் இன்பதுன்பம் ஈசனுக்கில்லை; எப்படியெனில் ஆவிநீருள் ஆதவன் அசைதல் ஒப்ப!

மாயைமருவிய உடல் வித்தை அவித்தை என இருவகை யுண்டு. வித்தை உடலுற்றோர் வீட்டின்பம் எய்துவர். அவித்தை உடலுற்றோர், வருந்துவர். கண்ணனிடம் அன்பு செய்யாது யாமே வினைசெய்துமென்பார் கறவையற்ற பசுவைக் காத்தவரைப் போலவும், நன்னயக் காமமில்லாத பெண்டிரைப் புணர்ந்தோரைப் போலவும் பயன்பெறாமல் வருந்துவர்.

புலன்களையடக்கி மனத்தைக் கண்ணனிடத்துச்செலுத்தி எதையும் செய்தல் வேண்டும். வினைப்பயனைக் கண்ணனுக்கே விட்டுவிடுதல் வேண்டும்.

சமமான உள்ளத்துடன் பெரியோரைச் சார்ந்தால் நல்லறிவு தோன்றும். கண்ணனிடத்தில் அன்புசெய்தல் எவ்வாறெனில் கண்ணன் சரிதம் கேட்டல், கூறல், நாமம்போற்றல், கண்ணன் கோயிற்பணிவிடை செய்தல், கண்ணனைத் தொழுதல், பருதி, தீ, வான், பூமி, ஆ, அதிதி, பக்தர், நீர், காற்று, தன்னுடல், பல்லுயிர் இப்பதினொன்றின்பால், உவப்பொடு பூசை செய்யின் இருவினை நீங்கி இன்பவீடெய்துவர்.

தினகர பூசை மந்திரத்தால் துதித்தல், நெருப்பிடைச் செய்யும் பூசை ஆகுதி பெய்தல், வானிற் பூசை நெஞ்சில் தியானித்தல், தரையிற் பூசை உருவத்தை வரைந்து துதித்தல், ஆ பூசை ஆவிற்குப்புல் உதவல், அதிதிபூசை அதிதிக்கு உணவளித்தல், அன்பர் பூசை அன்பரைத் தமர் போலக் கருதுதல், புனற்பூசை

திருப்பணம் புரிதல், வாய் பூசை உயிரைக்காத்தல், உடலிற் பூசை கலன் துகில் புனைதல், பல்லுயிர்பூசை தம் உயிரைப் போல உயிர்க்கூட்டமனைத்தும் காத்தல்.

சங்கு, சக்கரம், வில், வாள் தரித்த எம் வடிவு பெற்ற ஆடியைப் பூசித்தலும் நன்றாம். வேந்தே! சோலை, வாவி, குளங்கள் உண்டாக்கலும் எம் பூசையே. நண்ணிய அன்பால் எமை அடைதல் எளிது; சாங்கியம், எண்வகை யோகம், தவம் விரதம் முதலியவற்றால் எமையடைதல் எளிதன்று.

நல்தவத்தோரைச்சேரின் அன்பு வந்து சேரும் என்று கூறியதன்றித் தம் அறிவால் அன்புசெய்து எமையடைந்து துன்பம் ஒழிந்து நின்றார் பலர், அவர்களைக் கூறுகின்றேன் கேட்பாயாக.

மாவலி முதலிய அசுரரும், வீடணன் முதலான அரக்கரும், மகம்செய் தவத்தோரும், சபரி, கோவியர் முதலான மடந்தையர் குழுவும், கசேந்திரன், சாம்பவான், அனுமான், சுக்கிரீவன் முதலான விலங்குகளும், அருச்சுனன் முதலான நம்வரும், அமரரும், காளிங்கன் முதலான பாம்பினமும், சடாயுவும் வணிகர், சூத்திரர், வேடர், சண்டாளர் முதலிய மனிதர்களும் ஆவர், கோவியர் தமைமறந்து எமை நினைந்து எம்மை வந்தடைந்தனர். 'இனி வேறொன்றுமில்லை, எம்மையே நினைந்து வினையொழிதி'. மாயையாம் வித்திற்பிறந்து மருவும் முக்குணம் ஆகிய பராரையின் மேல் பதினைந்து இந்தியமாம் கிளை விடுத்து, ஆசையாம் வேர் உடையதாக விண்ணளவு உயர்ந்து இருவினைப் பயன் பழுத்துச் சீவனோடு ஈசன் எனப்படும் இரு பறவை உடலிருக்க ஆக்கை எனும் தரு விளங்கும்.

சீவன் எனும் பறவை வினைப்பயன்எனும் பழமருந்தும், ஈசனாம் பறவை உண்ணாது உணர்ந்து கொண்டிருக்கும். குருவினால் ஞானமாகியவாளைத் தீட்டி உடலாகிய தருவை வெட்டினால் உத்தவ! இரண்டற ஒன்றாகும் இன்பம் வரும்.

6. குணவிகாரம் உயிர்க்கில்லை.

கண்ணன் தொடர்ந்து கூறினான். 'உத்தவனே! அறிவால் மனத்தையும் குணத்தையும் பிரித்தறியின் சத்துவ, ராஜஸ,

தாமதம் எனும் முக்குணங்களும் மனத்தைத் தொடர்ந்திருக்கும்; மனமும் குணத்தொடு இருக்கும். சத்துவத்து உத்தம வினை உண்டாகும். இராசதத்து மத்திமவினை வயங்கும், தாமதத்து அதமவினை விளையும். உத்தம, மத்திம, அதம வினைகள் மூன்றும், ராசத, தாமசகுணம் இரண்டும் சத்துவ குணம் நீங்கியபின் நீக்கும்--சுரத்தில் எரி மரக்கிளைகளை எரிப்பதுபோல்!

இவ்வாறு கண்ணன் கூறலும் உத்தவன், 'முக்குணத்தொடும் மனத்தொடும் நீங்காது உறையும் உயிர்தனைப் பிரித்து உடலை ஒழிப்பது எவ்வாறு, விளக்கமாகக்கூறுக' என்று வினவக் கண்ணன் சொல்லலானான்,

சனகாதிமுனிவர் பிரமனிடம் நீ வினவியது போன்று வினவ, பிரமன் என்னை நினைத்தான். அன்னவடிவெடுத்து நான் அங்குச் சென்றேன். 'பொன் அன்ன உருவமெய்திய நீ யார்?' என வினவினர் என்னை. 'ஞானஉருவமாகிய பொருள் யாமே அழகிய இவ்வுருவம் எடுத்தேம்' என்றேன்! 'தோற்றும் உருவமெல்லாம் பஞ்சபூதமல்லால் வேறில்லை. அன்ன உருவாமெய்திய நீயார்!' எனச் சொல்லிய அம்மொழிக்குப் பயன் ஏற்பட்டிலது' எனச் சனகாதியர் பிரமனோடும் பணிந்து என்னை வேண்டினர். 'மீட்டும், அன்ன உருவம் எடுத்தயாம் இவை கூறினம்.

குருவானும் அநுபோகத்தானும் பேதைமையைத் தள்ளி ஒரு பொருளாகப் பார்க்காமல் பழிச்செயல்புரிவார் விழித்திருந்தும் கனவு காண்பவர் ஆவர். மனமும், மனத்துதித்த முக்குணமும் உயிர்க்காவதால், சத்துவகுணத்தால் சாக்கிராவத்தை உண்டாகும், இராசதத்தால் கனவுண்டாகும், தாமதத்தால் சுழுப்தி எனும் அவத்தை உண்டாகும். உயிர் இம்மூன்று அவத்தையையும் அடையாதிருக்கும். குணம், உடல், மனம் இவை மூன்றும் தான் இல்லைஎன ஆன்மா உணரின், உடல், உடன் இருப்பதும் போவதும் அறியாராகித் தோளில் இருந்து நீங்கும் துகில், இருப்பதும் நீங்குவதும் அறியாது ஒழுகும் கள்ளுண்டார் போல் இருப்பர்.

யான் எனது என்னும் செருக்கு அற நீங்கியோன் யாக்கையோடு இருப்பினும், யாக்கை முன் யான் எனது எனச் செய்த

வெவ்வினை தீரும்வரை உணவருந்தி அழிந்தபின் உடலைப் பொருந்தான், உறக்கமற்றார் கனவு அடைவது உண்டோ?

'அறியின் புத்தியில், தோன்றிய உயிர்க்கு அல்லல் செய் குணமில்லை' எனக்கூறி முனிவர் மனம் தெளிவித்தோம். எங்குமாகிய எம்பால் அடைதல் வேண்டி முனிவர் எண்வகை யோகம் செய்தனர், அவ்வகை நினக்கு இனிக் கூறுவேன்.

7. **யோகசித்தி உரைத்தல்.**

'அரசே' நியமம், இயமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்றும் அட்டாங்க யோகம் சிறக்கும்.

யோகநூலிற் கூறியபடி ஆசனத்துச் செவ்வையாக அசைவற்றிருந்து மூக்கின் நுனியைக்கண்ணால் நோக்கி ஐம்புலனை மாய்த்து வாயுவை உள்ளே இழுத்தலாகிய பூரகத்தை முதலில் நிகழ்ப் பிராணாயாமம் புரிதல் வேண்டும்.

வாயுவை உள்ளிழுத்தல்,வாயுவை உள்ளடக்குதல்,வாயுவை வெளியே விடுதல் ஆகிய பூரகம், கும்பகம், இரேசகம் என்று விபரீதமாக ஓர் திங்கள் எழுச்சியுடன் பிராணாயாமம் இயற்றியோனின் வசமாகும், வாயு.

வாயு வசமானபின் இடை எனும் நாடியைப் பிங்களை எனும் வலப்பக்க நாடியுடன் சேர்த்து அசைவற நடுவில் உற்றுச் சுழுமுனை மேல் வாயு சென்றால், வாயு இதயமாகிய கமலத்தைக் கதலிப்பூப்போல் மலர்விக்கும். அவ்விதய கமலத்தின் மேல் எம்முருவம் நாடித் தோன்றும்.

வேறு பொருள் எண்ணாதிருப்பரேல் ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற தாபங்களிற் பொருந்தார்; இன்பம் எய்துவர். யோகசித்தி பதினெட்டும் கேட்பாயாக.

அணிமா, மகிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா என்று சொல்லப்பட்ட சித்திகள் எட்டும் முதன்மையானவையாகும். யோக சித்தி இன்னும் பத்துண்டு. எம் உருவை நாடிக் காமக் குரோதாதிகள் பொருந்தாத உடலைச் சேர்தல், குற்றமற்ற யோகத்தால் செவியினை

வானிற் சேர்த்துத் தூரத்திலுள்ள மொழிகள் தேர்தல், கதிரவ னிடத்தில் கண்ணை வைத்துத் தூரத்து உள்ள உருவங்களைக் காணல், சோர்வில்லா மனத்தால் வேகமாகத் திசையிற் செல்லுதல், ஆக்கும் உடலெடுத்து ஆகாயத்திற் புகுதல், அரம்பையரோடு உவந்தாடல், சிந்தையால் முக்காலமும் தெளிதல், துயரடையாது இன்பம் எய்தல், மற்றவர் மனத்தை ஆராய்தல், நெருப்பில் நிற்றல் ஆகிய பத்தும் சித்திகளாம்.

அணிமா என்றால் யோகியர் எம்மை அணுவென நினைத்து அணுவாதல்; மகிமா எனில் மிகப்பெரியதாகச் சொல்லப்படும் எம்மை மகத்து என மருவுதல்; லகிமா என்றால் எளிதாய் மனத்து எமை நினைத்து அதுவாதல், பிராத்தி எனில் எமைப் புலன் என விரவுதல்; பிராகாமியம் என்றால் மகத் தத்துவத் தொடு வீறுயர் சூத்திரமாகி எங்கும் இருப்பன் என்று எம்மைப் புத்தியில் நினைத்து விளங்குதல்; ஏழு பிறப்பிலும் எம்மை உள்ளத்தில் நினைத்தார் ஈசத்துவம் எனும் சித்தி எய்துவர்; மூன்றவத்தையும் இல்லாதவன் துரியன் என எம்மை நினைந் தோர் வசித்துவ சித்தி அடைவர்; காமமாகிய சித்தி யாதெனில் அறிவாய், அருவமாய், ஆனந்தமயமாய் ஆகுவன் என எம்மை நினைந்து விழைந்தோர் அவ்வாறே ஆனந்த மயமாய்ப் பொருந்தி வீற்றிருப்பர்.

எவ்வகை எவையே பொருந்தி, எம்மை இடைவிடாது மனத்தில் அன்பொடும் நினைந்தார், அவ்வகை, அவையே அடைந்து உவப்பினை அடைவார்' என உத்தவனுக்குக் கண்ணன் உரைத்தான் எனப் பரீட்சித்துவுக்குக் கூறிய சுக முனிவன் மீட்டும் உரைக்கலுற்றான்.

## 8. விபூதி உரைத்தல்:-

'வெளியும் உள்ளும் விமலன் நீ ஆயினும் தெளிதல் இல்லா தவராய் யோகமும் செய்யாதவராகிய எளியர் உன்னைச் சேர் வது எங்ஙனம்' என உத்தவன் வினவக் கண்ணன், 'போருக்கு உடன்படாதவனாகி, நீ வினவியவாறே விசயனும் வினவ யாம் முன்னம் செப்பினம்' என்றான்.

'முத்தொழிலும், அவை செய்தலும், பூதமும், பூதத்துள்ள உயிரும் யாமாதலின் எம்முருவம் உரைக்கு அடங்காதன. எம்

உருவம் யாவரும் அறியுமாறு யாமான விபூதிகள் சில கூறுவன் கேள். யாம்மகத்துக்கு மகத்தாகவும், நுண்மைப் பொருளின் உயிராகவும் உற்றனம். எழுத்தில் யாம் அகரம்; மந்திரத்தில் யாம் பிரணவம்; சந்தசில் யாம் காயத்திரி; தேவரில் யாம் இந்திரன்; பதினோர் உருத்திரருள் யாம் நீலலோகிதன்; எட்டு வசுக்களில் யாம் அக்கினி;பன்னிரு ஆதித்தருள் யாம் விட்டுணு; முனிவருள் வசிட்டன்; தேவர் குருவாகிய பிரகஸ்பதியும் யாமே என நீ அறிதி! முனிவரின் மாமனு; தேவமுனிவரில் நாரதன்; பிரம முனிவருள் நர, நாரணர் யாமே; சித்தரில் யாம் கபிலன்; பத்துப் படைக்கும் பிரமருள் யாம் முக்கண்ணன்; நால் வருணத்தில் நாம் வேதியர்; நான்கு ஆச்சிரமத்தில் நாம் சந்நியாசம்; அந்தணருள் யாம் பிருகு; சேனைத் தலைவருள் யாம் காங்கேயன்; மங்கையருள் யாம் சதரூபை; புருடருள் யாம் சுவாயம்பு; நதிகளில் யாம் கங்கை; நீர்நிலைகளுள் யாம் கடல்; மலைகளுள் யாம் மேரு;வேதியரிடத்தில் மனைவியொடும் அன்புசெய்வோருள் யாம்மாவலி;ஒளி மிகுந்தோருள் யாம் கதிரவன், கவிஞரில் யாம் சுக்கிரன்; பகவான் எனும் தேவரில் வசுதேவன்;பக்தருள் யாம்உத்தவன்,படைக்கலத்தில் யாம் வில்; கடக்கரும் வஞ்சனையில் யாம் கலி; ஹவிசுகளுள் யாம் ஆவின் நெய்; தருப்பையில் யாம் குசை; யாகத்தில் துணிவுடன் அல்லற்றுமனத்தை அடக்கல் யாம்; விரதங்களுள் யாம் கொல்லாமை; தவத்தில் யாம் நியமம்,தாதுக்களில் பொன், யாகங்களிற் பிரமயாகம் நாம்,

அசுரர்களில் பிரகலாதன் யாம்; இயக்கர்களில் குபேரன் யாம்; பிரமசாரியரில் சனற்குமாரன் யாம்; பிதிர்கள்தம்மில் யாம் அரியமா; பறவைகளில் யாம் கருடன்: விலங்குகளில் யாம் சிங்கம்; பசுக்களில் யாம் காமதேனு; பரிகளில் யாம் உச்சைச்சிரவம், யானைகளில் யாம் அயிராவதம்.

அரவுகளில் நாம் வாசுகி;நாகராசாக்களில்யாம் ஆதிசேடன்; தருக்களில் யாம் அரசமரம்; முதன்மையாகச் சொல்லப்படுபவரில் யாம் பிரமன்.

மாகாலத்து யாம் ஆண்டு; காலங்களில் யாம் வசந்தம்; மாதங்களில் யாம் மார்கழி; நாள்களில் நாம் அபிசித்; யுகங்களில் நாம் கிருதயுகம்; வியாதன் நாம்; வீரருள் யாம் விசயன், சுசிகளில் நாம் சுசி, பெலவானிற் பெலவான் யாம்.

கந்திருவருள் யாம் விசுவாவசு; வானத்து ஒலியும், வாயுவில் பரிசமும், அக்கினியில் எழில் உருவமும், பிருதிவியில் மணமும், நீரிற் சுவையும் யாமே.

நவமணியில் பதுமராகம் நாம்; செலற்கரிய வழிகளில்யாம் இமயமால் வரை;கிம்புருடரில் யாம் இயமான்;நீர்வாழ் உயிருள் யாம் மகரம்; விடாது முயல்வோருள் யாம் திருமகள்.

எவையும் நாமாயினும் அரச! தருமம் முதல் மெய் ஈறாக உள்ளன எங்கும் அங்கு எல்லாம் எம் கலைப்பிரிவென அறிவாயாக. எல்லாம் எமது வடிவே. எம் பூதியைச் சுருக்கி உரைத்தேன்; முழுதும் உரைக்க எம்மாலும் அரிது' எனக் கண்ணன் உரைத்தான் எனப் பரீட்சித்திடம் கூறிய சுகன் தொடர்ந்து சில தெரிவித்தான்.

## 9 வருணாச்சிரமம் உரைத்தல்

உத்தவன் கண்ணனைத் தொழுது 'நான்கு வருணத்தாரும் தத்தம் வினையாற்றல் நன்றென முன்னர் உரைத்தாய்.வருணத்தையும் ஆச்சிரமத்தையும் விளக்கமாகக் கூறுக'எனவேண்டக் கண்ணன் கூறலானான்.

கிருதயுகத்தில் யாம் அறமான விடையுருவம் எடுத்து மேவுவம். நால்வேதம் கூறிய பிரணவமாகிச் சேர்வோம்; திரேதாயுகத்தில் 'விராட் என்னும் பெயருடன் தோன்றினம். எம் மூச்சுக்காற்றில் நால்மறை உதித்தன;முகத்திலிருந்து வேதியரும், தோள்களிலிருந்து சத்திரியரும், தொடையிலிருந்து வைசியரும், பாதத்திலிருந்து சூத்திரரும் தோன்றினர். திரேதாயுகத் தொடக்கத்தில் விராட்டின் முகத்தில் தத்துவஞானமும் தோன்றிற்று. இதயத்தில் பிரம்மசாரியமும், கடிதடத்தில் கிருகஸ்த தருமமும் தோன்றின; மனைவியுடன் காட்டிற்குத் தவம் செய்யச் செல்லுதலும், அவ்வாறு செல்லுபவர் செய்தற்குரியஅறங்களும் மார்பிலும்,துறவறம் தலையிலும் தோன்றின.

அக, புறக்கருவிகளை அடக்கல்,உவப்பு,தவம்,வஞ்சனை களைதல், எம்மிடத்து அன்புசெய்தல், மெய், பொறுமை, கொடை, அருள் ஆகிய அறங்கள் அந்தணருக்குரியன.

குறைவற்றிடும் நிதி, வலிமை, கொடை பெற்றிருத்தல், வேதியரிடத்து அன்புடையராகுதல், முறைசெய்து உயிர் காத்தல் முதலியன சத்திரியர் அறங்களென நூல்கள் கூறும்.

பெருஞ்செல்வம் படைத்தும், ஆசையுடன் பொருள் சேர்த்தல், அந்தணர்ப்பணிதல் முதலியன வைசியருக்குரியன.

வேதியர், சத்திரியர், வணிகர் ஆகிய மூவர்க்கும் ஏவல் செய்தலும், கிடைத்த பொருள் கொண்டு மகிழ்தலும், தேவரை வாழ்த்தலும், சூத்திரர்க்கு அறங்களாகும்; இழிகுலமாகிய சூத்திரர்க்குத் தூய்மையின்மை, காமம், களவு, பொய், கலகம் முதலியன இயற்கையான தருமங்கள்.

வஞ்சனை பொய்நீக்கல், கொல்லாமை, அன்புடன் வைகல் முதலியன எவர்க்கும் நல்லன. மறையவர் தம் தொழிலால் நற்பொருள் எய்தாவிடில், சத்திரியர் வணிகர் தொழில் இயற்றி வைகுவர். சத்திரியர் வறியாரகிவிடின் வணிகர் அந்தணர் தொழிலியற்றி உண்பர்; வணிகர் வறுமையுறின் சூத்திரர்க்குரிய வேளாண்மை செய்து உடலைப்பேணுவர்; சூத்திரர் வறுமையுறின் ஆடைநெய்தல் முதலிய தொழில் செய்து பிழைப்பர்.

தமக்குரிய தொழில்களால் உணவு கிடைக்குமாயின், பிறர் தொழில் செய்தல் பிழையாகும்.

பிரமச்சரிய ஆசிரமத்தார் உபகுருவாணர், நயிட்டிகர் என இருவகையினர் ஆவர்; நயிட்டிகர் என்பார் ஆசானைத் தொழுது மறையுணர்ந்து மணஞ்செய்யாது மற்ற ஆச்சிரமங்களுக்குரிய தொழில்களையுடையராய் இருப்பர்; உபகுருவாணர் மறை முழுதும் தெளிந்து, ஆசானுக்கு நிதி கொடுத்து, பிரமச்சரியத்தில் விரதங்கள் பல செய்து கன்னியரை மணம் புரிகுவர்.

அந்தணர் நால்வருணப் பெண்டிரை மணப்பர்; சத்திரியர் அந்தணர் குலம்தவிர்த்த ஏனைய முக்குல மாதரை மணப்பர்; வணிகர் வைசிய சூத்திர குலப்பெண்டிரை மணப்பர்; சூத்திரர் தம் குலப் பெண்டிரைமட்டும் மணப்பர்.

நயிட்டிகர், சந்நியாச ஆசிரமத்தார், கானில் வாழ்கின்ற வாணப்பிரத்த ஆச்சிரமத்தார் ஆகியோர் பெண்களைக்

கீாண்பதும் தீது என உரைப்பர்: விடுத்த ஆச்சிரமத்தில் மீண்டும் இலங்குதல் ஆகா.

ஆசிரியரைப் பணிந்து மறைஓதல், மகம்ஆற்றுதல், ஈதல், வேள்விசெய்வித்தல், மறைஓதுவித்தல், பொருள் ஏற்றல் ஆகியன அந்தணர்க்குரியன; இத்தொழில்களை மற்ற குலத்தார் செய்யின் குற்றம் எய்துவர்.

தேவர், முனிவர், அதிதியர், பூதம், தென்புலத்தார் பூசையைத் தினமும் புரியும் இல்லறத்தாரும் நற்கதி பெறுவர்; காமத்தை விடுத்து இல்லிருந்து அதிதிபோல் உறைவார் வீட்டின்பம் பெறுவர்.

ஆயுளின் மூன்றாம் பகுதியில் வனம்போய் அடைதல் அறம் அடைதலுற்றார். வேனிற்காலத்து ஐந்து அக்கினியின் (நாற்புறம் தீ, மேல் சூரியன்) நடுவில் இருந்தும், கார்காலத்து நீரிடை இருந்தும் தவம் இயற்றி மெய்ப்பொருள்தேர் உபாயத்தில் வைகுதல் துணிபு.

மனதில் ஓமத்தழல் அடுக்கி, மெய்ப்பொருள் அறிந்து, துறந்த துறவோர் வயிராக்கியத்துடன் தவமியற்றுவார் மற்ற ஆச்சிரமிகளை விட வினையொழியப் பதமடைவர், தேவர். துறவோர் நற்பதம் பெற்றிடுவர் என்ற பொறாமையுணர்வால் பெண்ணுருவம் கொண்டு தடுப்பர்; துறவியானோர் அவ்வகை யறிந்து குற்றமற்ற துறவறமியற்றல் கடனாகும்.

வருணாச்சிரமம் கடந்த முனிவன் அலிங்கி என்பானின் திறம் கூறின், விருப்பு வெறுப்பற்றவன், பாவியர் இருக்குமிடம் அணுகான், பாலனைப்போல் மகிழ்வான்; எதிரடைந்து எவை அளித்தாரோ அவை ஏற்று உண்பான்; இன்ன ஆச்சிரமத்தான் என இனங்காட்டவல்ல சின்னமில்லான்; எற்றினாறும், வெட்டினாலும், ஈனன் என ஏசினாலும் சினம் கொள்ளான். உணவேற்கச் சினமின்றி முயல்வன், பயம்புரியான், பயமடையான், ஒருவரையும் பழியான், நன்று தீது ஓரான், உடலுடையனாக அவன் இருந்தாலும்' உடல் இறந்தவுடன் அவன் என்னைச் சேர்ந்தவனாவன்.

துறந்தோர்க்குரியன, உயிர்க்கு இதம் செய்தல், மறந்தி விடயங்களில் மனம் செலுத்தாது உறைதல், தவமியற்றல், பரம்பொருள் பற்றிய ஆராய்ச்சி ஆகியன.

எவ்வுயிர்க்கும் நல்வழிபுரிதல், நாயகர் பூசை இல்லறத் தார்க்குரியன; பிரமசாரிகட்குக் குருபணியும் பிரமசரியமும் உரிய. முனிவர் மோகாதி அணுகாமல் இறக்குமளவும் பிரம விசாரத்திருப்பர் என உரைத்தான் கண்ணன்.

10) **இயமநியமாதி உரைத்தல் :-**

பத்தி ஞானம் பற்றிக் கூறுமாறு உத்தவன் வேண்டக் கண்ணன் தொடர்ந்தான்.

ஞானவடிவாகிய எம்மிடம் நீங்கா அன்பு கொண்டு செய்யப்படும் எவ்வினையும் அறமாகும் எனக் கூறுவர் மேலோர்.

ஞான யாகத்தால் மகபதியாகிய யாம் மனத்தில் மேவ நீ அழிவற்றவன் ஆகின்றாய். மாயையால் மாலையைப் பாம்பாய்க் கண்டு மயங்கல் போல, வருத்தும் துன்பமின்றிக் கருதுவார்க்கு முக்காலத்தும் பிரமம் ஒன்றென விளங்கும்.

தருமன், முன்னர்க்காங்கேயனைப் (பீஷ்மன்) பணிந்து இயமம், நியமம், சமம், தமம், வேள்வி, தக்கிணை, மெய், விடுத்தல், சூரத்தன்மை, வித்தை ஊதியம், பண்டிதன், மூர்க்கன், நல்வழி, தீவழி, தனவான், வறியவன், ஈசுரன், அநீசன், குணம், அகுணம் ஆகியன பற்றிக் கூறுமாறு வேண்டக் காங்கேயன் வகுத்துரைத்தான். 'பீஷ்மன் உரைத்தவாறு நான் நினக்கும் கூறுவன் கேட்பாயாக' எனக் கூறிக் கண்ணன் இயம்பலானான்.

இயம நியமம் என்பன உயிர்க்கு இதம் செயல் முதலியன; உள் மனம் அடக்கல் சமம்; இந்தியம் அடக்கல் தமம்; புத்தியில் காமம் விடுத்தல் தவம்; எமக்கு அகம் மகிழ்ந்து பயனளித்து ஆற்றல் மகம்; தக்கிணையாவது பூவுலகோர்க்குப் பொன்னளிப்பு தன்று, அறிவை உதவுதல்; தருமம் தனம்; கருமமொடு காமம் விடுத்தல் தியாகம், சூரத்தன்மை எனப்படும் சவுரியமாவது ஆற்றலுடைய மனத்தை அடக்கல்; உண்மை என்பது சினம் நீங்கி வேதமுடிபொருள் தெளிதல்; வித்தையாவது பேதம் விடுத்து ஒரு புத்தியாகப் பொருந்தல்; ஊதியமாவது எம்மிடத் துப்பத்தி; பிறவிக்கட்டினின்று வீடு பகுத்தறிவான் பண்டிதன்; விலங்குடல் உடையான் மூர்க்கன்; கீதையறிதல் நல்ல நெறி;

பொய்ந்நூல் அறிதல் தீநெறி; நல்ல குணம் பொருந்தியவன் தனவான்; கிடைத்ததில் மகிழ்ச்சியடையாதவன் வறியவன்; இந்திரிய விடயங்களில்ஆசையில்லாதவன் ஈசன்; ஆசையுடையோன் அநீசுரன்' குணம் ஈது அகுணம் ஈது என மனத்தில் மதித்திடாமை குணம்; குணம் ஈது அகுணம் ஈது எனக் குறிப்பதே அகுணம்.

**11 மனத்தொருமைப்பாடு உரைத்தல்**

'அகுணம், குணம் பற்றி வேதமும் நினது வாக்கும் எடுத்துக்கூறும்; செறிந்த குணம் அகுணம் நாடாதிருப்பது எவ்வாறு? அடியேன் உள்ளம் ஐயுறும்; உற்ற ஐயம் போக்கிடுக; ஆசையாம் அறிவின்மையில் என் உள்ளம் மூழ்கப்பெற்றது; உன் உரையாம் அமுதால் அக்குற்றம் கெட நினைப்பாயாக' என உத்தவன் கூறக் கண்ணன் சொல்லலுற்றான்.

ஞானயோகம், பத்தியோகம், கருமயோகம் ஆகிய மூன்றையும் மாந்தர் உய்வுக்காக வகுத்தனம்; இவையன்றி நன்மை காட்ட வேறொன்றுமில்லை.

முனிவோர்க்கு ஞானயோகமும், தவத்தினோர்க்குப் பத்தியோகமும் நன்றாம். கருமயோகம் செய்வார் பயன் கருதாது கடன் ஆற்றின் தீமையும் நலனுமில்லை. ஐம்புல ஆசை நண்ணாதவராய் அறிவு எய்துவர்.

அபேத ஞானம் வருமளவும் எய்சீர் சொல்வதைக் கேட்குங்காறும் நிமித்தம் பற்றிச் செய்வனவோடு நாடோறும் செய்ய வேண்டிய செயல்களையும் செய்தல் வேண்டும்.

தேவரும் மாந்தராகிப் பிறவியெடுக்க விரும்புவர்; மனிதர் வினை வரும் என்றஞ்சிப் பிறவி வேண்டிலர்; யமன் வருமுன், வீடு பெற நினைப்பார் கடனாற்ற வேண்டும்.

வெட்டப்படும் மரத்தில் வாழும் பறவை அம்மரத்தை விடுத்து அப்பாற் செல்லாவிடிற் நன்மையில்லை. நாடோறும் ஆயுள் குறையும் உடலிற் தங்கும் உயிர் வீடுபேற்றுக்குரிய நெறியிற் செல்லாவிடில் நன்மை விளையாது.

மானிட உடல் எனும் அரியபடகைப் பெற்றும் குரவன் எனும் ஒடம் உய்ப்பவனோடு எம்சீர் ஆகிய அனுகூலக்

காற்று அணுகவும் ஒருவன் பிறவிக் கடலை நீந்த இயலாதவன் தன்னையே நாசம் செய்து கொள்பவனாவான்.

தேவர் உலகடைய விரும்பாதீர்,வீட்டுலகு அடைய விரும்புங்கள் தருகிறோம் என்று சொன்னபோதும் விருப்பம்கொள்ள மாட்டார்; ஒரு முடிவையே கருதியிருப்பவர்க்கு வேறு அஞ்ச வரும் தீமை, குணம் ஏது?

## 12 தேச காலம் உரைத்தல்

அறம் பொருள் இன்பம் அடைய வேதத்தில் விதித்தபடி வருணாச்சிரமர் அன்பால் வினையாற்றின் குணத்தின் வன்மை மருவுவர்;குற்றமுடைய வினையாற்றின்அகுணம் பொருந்துவர், வருணாச்சிரமர் தத்தம் அருவினை புரியும்போது தேசம், காலம், பொருள், கருத்தர், கருமம், மந்திரம் என்ற ஆறின் பாலும் புனிதமும் அசுத்தமும் உண்டென்பது அறியத்தக்கது.

அந்தணர்க்கு அன்புசெய்யாத அரசன், நாட்டிற்கு வந்துற்ற பகைநீக்கிக்காவல்புரியாத அரசன்,எமதுதொண்டை நிந்தை புரியும் கொடியர் மூன்றும் நாட்டின் அசுத்தமாம். நதியின் இருபக்கங்களால் புனல் தெளிக்கப்படாத நிலமும், உவர் மண்ணால் வெண்மை எய்திய நாடும் தீயன;மாலடியார் சேருமிடம் நன்றாம். இவ்வினைக்கு இன்ன காலம் என்று விதித்தபடியல்லாமல், இயல்பென விதிக்கப்படாத கொடிய காலம் தீட்டு முதலியன பொருந்திய காலம், கலகக்காலம் ஆகியன தூயனவல்ல.

தேசத்தாலும் காலத்தாலும் பொருள்கள் எல்லாம் தூய்மையுடன் அசுத்தம் பொருந்தும்; அந்தணர்வசனம், சூரியன் முதலியவற்றால் அப்பொருட்கு விதியின் சுத்தி உண்டு.

குளிர்ந்தநீரிற் குளித்தலாலும்,கொடையாலும்.நற்காரியம் செய்வதாலும், எம்மிடத்து அன்புற்று வாழ்தலாலும் வினை புரிவார் புனிதமடைவர். வேதவழிப்படிப் பயன்கருதாமல் வினைபுரிதல் பூமியில் முறைப்படி செய்தலாகும்; வழங்கிய வாறு மந்திரம்ஓதினால் மந்திரத்தின் அரும்பொருள் அறியலாம்.

வருணாச்சிரம் குணம் அகுணம் சொன்னால், ஒரு சமயம் குணமெனக் கூறப்படுதல் அகுணமாகும்; ஒரு சமயம்,

அகுணம் எனக் கூறப்படுவது, நன்றாம்; ஏற்றல் அந்தணர்க் குரிய தொழில் என்றாலும் கூட நிதிபடைத்த அந்தணர் ஏற்றல் அகுணமாகும். வேள்விபுரிவித்தல் அந்தணர்க்குக் குணம்; வேந்தர்க்கு அகுணமாம்.

துறவுபூண்டோர் பெண்களைச் சேரின் அல்லல் தரும் அகுணமாயினும், விதிக்கப்பட்ட நாள்களில் மனைவிமாரை மருவுதல், வேதம் கூறியபடி நற்குணமாகும்.

மன்னவ, குணமும் அகுணமும் கொடுநெறி அடைந்தார்க் கல்லாமல் தூநெறி அடைந்தார்க்கு வருவன இல்லை.

**வேள்விக்கு அரும்பயன் அமரர்தம்உலகு என்று கூறும் வேதம்; வேள்வி செய்ய நெஞ்சம் இசையவேண்டி 'புதல்வ! இம்மருந்து அருந்தின் பழம் தருதும்' எனும் பெற்றோர் போலன்றித் தரும்பயன் குற்றமற்ற வீடாகும். வேள்வி செய்தால் அடையும் பயன் சுவர்க்கம் என்று கூறுவார், நிலத்தையே பலன் என்று கருதும் அரசரைப்போல்வார்;பயன் கருதாது வேள்வி செய்தால் வரும்பயன் வீடே.**

இருள் நிறைந்த காட்டிற்சிக்கிய குருடர் நகரம் சேரும் வழி அறியமாட்டார்; அதுபோலமயக்கம் பொருந்திய காமத்தொடு வினை செய்வார், வீடு புகும் வழியறிய மாட்டார்.

புகையால் மூடப்பட்ட கண்ணார் ஓமத்தீயின் அருகிருந் தும், சமித்து முதலிய பொருள்களால் ஓமத்தீயைத் தெரிய மாட்டார்; காமத்தால் வசப்பட்டு வினையாற்றுவார் மாயை யால் வீட்டுலகு அறியமாட்டார்.

வெவ்வேறு எழுத்துக்களாய நான்கு வேதங்களே முதன் மையானவை. அவையும் ஆராயின் ஒன்றே யாகும். ஞான காண்டம், மந்திர காண்டம், கருமநற்காண்டம் என வேதம் மூன்றாக உரைப்பவனும் யாமே; செய்யப்படுவனவும் யாமே, நல்லறிவால் அறிபவனும் யாமே.

**13) தத்துவம் உரைத்தல்;-**

உத்தவன் 'தத்துவம் எத்தனை சாற்றுவாயாக' என்று கூறக் கண்ணன் உணர்த்தினன்,

இருபத்திநான்கு தத்துவங்களுடன் உயிர், இறைவன் இரண்டும் சேர்த்துத் தத்துவம் இருபத்தாறு எனச் சிலர் கூறுவர்; சிலர் உயிர் ஈசன் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து இருபத்தைந்து என்பர். சிலர் இன்னும் சுருக்கி மொழிவர்! அவையாவும் சொல்லிய முறைப்படி அடங்கியிருக்கும்.

தத்துவக் கூட்டத்தின் சேர்க்கையாகிய உடம்பிற்குரிய பிறப்பும் இறப்பும் நோக்கின் நினைத்தலும் மறத்தலும் போன்றன. நெஞ்சம் மறத்தல் மரணம்; நெஞ்சம் நினைத்தல் பிறப்பு; ஆயின் பரம்பொருளுக்கு என்றும் பிறப்பும் இறப்பும் இல்லை.

வினைகளுக்கு ஈடாகப்பிறவி எடுத்தியங்கும் உடலையும் மறந்து விழித்த நிலையில் மறைதல் போல் முன்னும் அறிவும் தெரிதல் இன்றி யாதனை உடலம் சேர்ந்து எனது எனது எனத் தெரிந்து துன்பத்திற்கிடமளித்து விளங்கும் மனம் இத்தன்மை யால் பிறந்தும் இறந்தும் துன்புறும்.

இவ்வாறு சூக்கும உடலத்தில் எய்தலும் நீங்கலும் அன்றிப் பரம்பொருளுக்கு அவை இல்லை. அவன் சுயம் பிரகாசன். நெருங்கிடும் ஜடப்பொருளாகிச் சொல்லப்பட்ட பிரகிருதியின் தன்மைகளே தத்துவங்களாம்.

நதிபோல், தழல்போல், பழம்போல்கணத்திற்குக் கணம் உடல் நிலத்தில் நாசமடைந்திருக்கும். உடல்சேர் பரம் பொருள் வினைபொருந்துதல் எவ்வாறெனில் ஆற்றுநீருள் தெரிந்தலையும் மரத்தின் நிழல் போன்றது.

உடல் எடுத்துத் துய்க்கும் வினைப்பயன் புருடனைச் சாராது. புத்தியோடு அறிந்தார்க்கு அல்லாமல், துயர்தரும் போகத்தில் விருப்பத்தை ஒழிக்காமல் மூடர் 'உடலே தாங்கள்' எனக் கருதி நாளும் பிறந்து இறந்து உழல்வர்.

**14) நிந்தை பொறுத்தல்:-**

'கொடியவர் கொன்றாலும் சினந்து நிந்தை பல செய்யி னும், அவை கனவுபோல் பொய்யென மனதுள் நினைந்து துன்பம் பொறுத்தால் ஆசை அறும்' என்று கண்ணன் கூற, உத்தவன் 'பிறர் தண்டிப்பதையும் பகைவர் படை புகுந்து

உடலிற் துன்புறுத்தும்போதும் பொறுத்தாலும் நின் அன்பர் நிந்தை பொறுக்கும் வகை எவ்வாறு? கூறியருள்க' என வேண்டக், கண்ணன் 'அவந்திபுரியில் வாழ்ந்த ஓர் அந்தணன் முன்னம் சினவாது இடர்பொறுத்த கதை ஒன்று உள்ளது; இருவினை யழிய நினக்கது புகல்வேன்' எனத் தொடர்ந்தான்,

அவந்திபுரியில் வாழ்ந்த ஓர் அந்தணன் குபேரன் போன்று பெருஞ்செல்வம் சம்பாதித்துச் சேர்த்தான்; ஆனால், தன்னை அடைந்த வறியோர்க்கும் சுற்றத்தார்க்கும் துன்பம் நீங்கும்படி ஒரு சிறிதளவுபொருளும் உதவமாட்டான்; இனிய வார்த்தையும் பேசமாட்டான். மனைவி, பெற்ற மக்களுக்கும் ஈயான்; சினத்தொடு திரிந்து குற்றமொடு மிக்கநிதி சேர்த்து இருந்தான்.

கள்ளர், அரசன், உறவினர், நள்ளிரவில் வீட்டில் பற்றிய தீ இவற்றால் உள்ள பொருள் அழிந்திட அவ்வந்தணன் மயங்கினான். பொருள் அடைந்திடுமிடத்தும் அவை காத்துறையும் போதும் பொருள் போய வழியும் துன்பமுண்டு என ஞானியர் உரைக்கத் தெளிந்தான்.

செல்வம் நிலையற்றதென மெய்யுணர்ந்த அந்தணன் துறந்த முனி வேடத்தொடு கண்டார் நிந்தைசெய்ய நகரிற் திரிந்தான்; சிலர் அந்தண முனிவனது கமண்டலம் ஆடைகள் பறித்தார், சிலர் தண்டைப் பறித்து முறித்தார்; 'இவன் உள்ளத்து வஞ்சமுண்டு' எனச் சிலர் வசைமொழிந்தார்; சிலர் அடித்தார்; 'ஏன் மௌனம் காத்தாய், கூறு?' என்பர் சிலர்; ஈனன் இவன் என்று எச்சில் இறைத்தார்; 'சேர்த்த பொருள் போயிற்று என்பதை மறைக்க இவன் இவ்வேடம் இட்டான்' என்றார் சிலர்; கொடியோர் அந்தணனது இயற்கை யறியாமல் பொறாமை யுணர்வுடன் பொல்லாங்கு செய்தனர்; அவை கண்ட முனிவனாகிய அந்தணன்:

'நிந்தை முதலாயின நிகழ்த்தும் எண்ணங்களை மனம் கற்பனை செய்யுமோ? வலிமையான மனம் அடங்காவிடில் புலன்கள் அடங்கா. ஞானம் கைவரப்பெற்றார் மனத்தை வெல்வதே வெற்றியாகும். ஞானவழக்கு தவம், தானம், அருள், நற்கருமம் ஆகியன சத்துவ குணத்தின் வினை என்பர். போகத்தைச் செய்த நல்வினை இராசதகுணச் செயல் என்பர். வீணான வினைகள் தாமதகுணத்தால் நிகழ்வன,

முக்குண வினையாவும் மனத்தால் விளைவன; உயிர்க்கவை இல்லை. மனம் நிலையுற்றுத் தங்குமோ எனச் சாற்றிடின் பீஷ்மன் முன்னம் உலகமே வியக்க மனத்தை அடக்கினான்.

பகைவர் இவர், நண்பர் இவர்; கொடியவர் வருத்தினர்; பற்றுடையார் அன்புசெய்தார் என உண்மையறிவில்லார் கூறுவர்,

உயிருக்குத் துதியும் நிந்தையும் இல்லை. திண்மையான் உடற்களை சேரினும் எளிமையாகக்கூறின் அவை ஒன்றாகை யால் இல்லை என்றபடி.

நிந்தை செய்தாரை என் செய்ய! கண்ணிற் கைபட்டால் என் செய்வது? நாவானதுபல்லாற் கடிக்கப்பட்டால் என் செய்ய? இவ்வாறு கூறி அவ்வந்தணன் நிந்தை பலவும் பொறுத்து, உண்மையறிந்து அதனொடு ஒன்றினான்.

இவ்வாறு கண்ணன் கூறியதும் உத்தவன் 'பொருந்தும் நிந்தை இனிப் பொறுத்துக்கொள்வேன்!' எனக் கூறிக் கண்ணன் தாள்பணிந்தான்.

நம் கதையறிந்தார் நிந்தை பொறுத்து முத்தியடைவர்.

## 15 குணங்கலத்தல் உரைத்தல்

'பிறவித்துன்பந்தரும் முக்குணப்பயன் ஓர்ந்து அவை துன்பந்தருவன என அறிந்ததனால் அன்றி வல்வினைத் தோற்றம் விடாது' எனக் கண்ணன் கூறினான்.

சத்துவம் ஞானம் முதலான நல்வினை தரும்; ஆசையுடன் வைகுவான் இராசத குணத்தான்; தூங்குதல், சினம், சோம்பல் கொலை முதலான வஞ்ச வினைகள்-இவை தமோ குணத்தால் விளைவன.

சத்துவ குணத்தோடு இராசதகுணம் ஒத்திருப்பின் உள்ளத்தில் உறுதிப்பொருள் நான்கையும் நினைப்பர். தாதமத்தொடு சத்துவ குணம் சார்ந்தவர், தீமை செய்யும் பகைவரை அழித்தால் திருமால் நல்லறம் பாதுகாப்புடன் இயற்றுதும் என்பர்;

இராசதத்தொடு தாமதகுணமுற்றவர் தீயசெயலால்சேர்த்த பொருளால் உலகில் தருமம் நீங்காத வினைபல செய்வர்.

இறக்கும் காலத்து இராசதகுணமுற்றவர் மறுபிறப்பில் மானிடராவர்; இறக்கும்போது சத்துவராகில் மறுபிறப்பில் தேவராகித் திகழ்வர். சாகும்போது தமோகுணம் சார்ந்தவர் நரகமடைவர்; சாகும்போது முக்குணமும் பொருந்தாதவர் என்னொடு கலப்பர். உத்தவ! தத்துவங்கள் உற்றவர் பயனில் விருப்பமின்றிக் கடமையாற்றுவர்; இராசத குணத்தார் பலன் கருதி நல்வினை புரிவர். தாமதகுணம் பொருந்தியவர் நன்மை தீமை எனக்கருதாமல் குற்றமற நாடோறும் பணிபுரிவர்.

முக்குணமும் எமது ஏவலாற்செயற்படும்; ஆகவே, குணம் கடந்தவரே முக்தியடைவர்.

## 16 பூசனை உரைத்தல்

'இன்னவாறு அறியாதவர் எவரும் ஆற்று நீர், மலர்,முதலியவற்றால் மிக்க விருப்புடன் பூசை செய்து எம்மைத் தொழுதால் விரும்பி இன்பம் துய்த்தபின் எம்மை அடைவர்' என்றான் கண்ணன்.

'வருணத்தார்,ஆச்சிரமத்தார்,மகளிர் ஆகியோர் நின்னைத் துதித்த வகை முன்னம் சிவனும் நாரதனும் குறித்தனர்; அவ்வகை கூறுக' என உத்தமன் வேண்ட அரிந்தமன் தொடர்ந்தான்.

வைதிகம், தாந்திரிகம், மிச்சிரம் எனப்பூசனை மூவகைத்து என்பர். வேதமந்திரகளாற் பூசை செய்தல் வைதிகம்.

பூசனை தந்திர முறைப்படி செய்தல் தாந்திரிக பூசை. மறை, ஆகமம் இரண்டின்படி பூசை செய்ய முயலல் மிச்சிரமாம்.

சந்தனம்,மணல்,பாம்பின் படம் பொருந்திய நாகரெத்தினம், மரம், உலோகம், ஓவியம், அழகிய கல், மனம் ஆகிய எட்டிடத்தும் கடவுள் பொருந்தும்.

பூசனை சரம், திரம் என இருவகைப்படும். தெய்வத்தைப் பிம்பத்தால் கொணர்ந்து பூசை முடிந்தபின் வரித்த கடவுளை மந்திரங்களால் நீக்குதல் சரமெனக் கூறுவர்,

நித்தமும் உண்டான ஆசையால் மந்திரத்தால் முறைப்படி செய்யும் பூசை திரமெனப்படும்.

புனிதரானார் பதினாறு வித உபசாரங்களால் பாவமற்ற பூசையைப் பயனில் விருப்பமின்றி ஆற்றுவாராயின் அவர் வினையிற் பொருந்தார்; நாம் அவர்க்கு வீடளிப்போம்.

பலனில் ஆசையுற்றுப்பூசை புரிந்தால் அவர் விரும்பியன நாம் நல்குவம்; அங்ஙனம் அனுபவித்தாரும் முத்தி பெறுவர்; புச்சிலை கொண்டு பரசியார்க்கும் யாம் பலனளிப்போம்.

ஆரியம், தமிழ் முதலிய அவரவர் மொழிப் பாடல்களால் எம்மை 'விமல' எனக் கூறின் நாம் மகிழ்ந்து அவர்க்கு அருள் செய்வோம். எமக்கு நிலவுலகில் திருவிழா நடத்தியோர் தேவரும் புகழ இம்மை மறுமை இன்பங்கள் எய்துவர்.

17. நைமிசம் அடைதல் :-

உடல், ஐம்புலன், மனம், ஆணவம், புத்தி ஆகிய இவை யெல்லாம் பொருளற்றன என நீக்கி, மெய்ஞ்ஞானம் ஒன்றே நிலையானது என்பர். வெள்ளிபோல விளங்கும் சிப்பிபோலப் பரம்பொருள் ஒன்றே உலகுபோல் தோற்றிடும் என உள்ளுணர்வாற் தேர்ந்தால் ஞானயோகத் தலைவராய்க் கருதப் படுவர்.

பூமி முதலான வேறு வேறாக அறிவிலர் சாற்ற ஞான வாரிதியின் உலகங்கள் அனைத்தும் எழும். நீரிற் தோன்றும் அலை, குமிழி போன்றவை நீரேயன்றி வேறல்ல, அது போல் உலகமனைத்தும் பரம்பொருளன்றி வேறல்ல.

பேதமில் பிரமம் முன்னும் நடுவும் பின்னுமாகப் பிறங்கும் பல அணிகளின் உருவொடு திகழும் பொன்போல. உலகம் பெயர் முதலிய மனக்கற்பனையே: பிரமத்துக்கு ஆதி நடு அந்தம் ஏதுமிலை.

'உன்னில் யாமன்றி வேறிலை தன்னையறிக' எனக் கண்ணன் கூறலும் உத்தவன் மெய்ம்மயிர் சிலிர்க்க, மகிழ் வெய்தி இன்னதெனக் கூறவியலாத இன்பக்கடலுள் ஆழ்ந் தான், கண்ணன் மலர்ப்பாதம் பணிந்து உத்தவன்

இறைஞ்சினான். 'நைமிச வனத்துள்ள முனிவர் குழாத்தொடும் சேர்க' எனக் கண்ணன் பணிக்க உத்தவன் போயினான்.

'முன்னம் நைமிச வனத்தில் உத்தவன், அடைந்த தன்மை உரைத்தனம் மன்னவ!' எனச் சுக முனிவன் பரீட்சித்திடம் கூறினான்.

18. தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளல் :-

பரீட்சித்து. 'சுக்கிரன் முதலியோர்தம் வசவுரை ஒன்றிய யாதவர் தன்மை வழங்கிடுக' என வேண்ட யாதவர் அழிந்த வரலாற்றைச் சுகமுனிவன் விரிக்கலுற்றான்.

'மண்ணிலும் விண்ணிலும் எண்ணற்ற தீய சகுனங்கள் துவாரகையிற் கண்டனம், இங்கு இனியும் நாழிகைகூடத் தங்குதல் நல்லதன்று' என்று கண்ணன் உத்தவனிடம் கூறினான்.

பெண்டிர், இளைஞர், முதியோர் யாவரும் நகரின் ஓரிடத்தில் கூடக், கண்ணன் அந்தணர்க்கு அரும்பொருள் பல நல்கினான். பின் தமரொடும் விரைந்து சென்று 'சரசுவதி நதி கடலிடைக் கலக்கும்துறையில் நீராடினால் தீமைவிலகிடும்' எனக் கண்ணன்கூறினான். சரசுவதி கடலிடைக்கலக்குமிடமாகிய, நிலவு முன்தவம் செய்து தன் வெண்குட்டநோய் நீங்கப்பெற்ற, பிரபாதம் எனுமிடத்திற்சென்று யாதவர் அந்தணர்க்கு மேகம் போல் நிதிபல வழங்கி வழிபட்டனர்.

யானை, தேர், குதிரை, சிவிகை முதலானவற்றில் ஊர்ந்து யாதவர் கடல் அலையெனத் திரண்டு சென்றனர்; இளைஞர் கூட்டத்துடன் கண்ணனும் சென்றான். யாதவர் யாவரும் சரசுவதி நதி கடலிற்பெயரும் துறையிற் படிந்தாடினர். அப்போது கண்ணன் தன் மாயையால் பலவித மதுக்களை மாந்தினர். மது மயக்கத்தால் மாலை சூடி ஆடினர், ஆர்த்தனர்; படைக்கலங்கள் கொண்டு அமர் விளைத்தனர்.

பிரத்தியும்னன் சாம்பனை எதிர்த்தான்; அக்குரூரன் போசனுடன் பொருதான்; கண்ணன் கருத்தறியா அநிருத்தன் சாத்தகியுடன் அமர்செய்தான்; இவ்விதம் இளையர், மைத்துனர், மருமகர். மாதுலர், புத்திரர், தாதையர் யாவரும் தங்களுக்குள்

போரிட்டனர். 'அமர் ஒழிமின்' என்று கண்ணன் கூறிப் போரை விலக்கியும் கேளாமல் தீயிற்பட்ட விட்டில் போல் கண்ணன் மாயை அறியாமற் கண்ணனைத் தள்ளிவிட்டுத் தொடர்ந்து போரிட்டனர்.

வாள்கொண்டு போரிட்ட களத்தில் மர்யாதயர் தவர் கோரைக்ளாற் பொருது மாய்ந்தார். கண்ணன் மாயையால் யாதவர் அனைவரும் மாண்டனர். அது கண்ட பலராமன் வைகுண்டம் சேரக், கண்ணன் அர சமரத்தின் நிழலிற் சென்று தங்கினான்.

கண்ணனின் தெய்வத் தோற்றத்தைச் சூடுவார் பலபடச் சித்திரிக்கின்றார்.

பொன்னாடையுற்ற ஒரு துடையின்மேல் ஒருதாள் பொருந்த வைத்தபோது, அப்பாகத்தை நித்திய சூரிகள் அடைந்து வாழ்த்தத் தன் உருவம் தான் கண்டு கண்ணன் தயங்கினான்.

முன்னர் தந்த சாபம் மயக்குதலால் காட்டில் வேட்டை யாடிய சரன் எனும் வேடன், கண்ணன் துடைமீது வைத்திருந்த பாதத்தை மானென்று மயங்கி அம்பெய்தான்.

தான் விடுத்த அம்பு சென்று தைத்த இடம் வந்து பார்த்த சரன் கண்ணனைக் கண்டு அவன் அடி பணிந்து 'கண்ணா அருட்கடலே' நீல வண்ணா, பிரமன், சிவன் மற்றும் தேவரும் அறியா நின்னை வேடனாகி அறியாது பழிசெய்த நான் எவ் வாறு நின்னைப் போற்றுவேன்!' என்றான்.

அப்போது கண்ணன் சரனிடம் 'வருந்தாதே; நான் உலகத்து உயிரனைத்துள்ளும் உள்ளேன். உன்னால் இச்செயல் நிகழும் படி யானே செய்தேன்; நீ பரமபதம் அடைவாயாக' என்றான். கண்ணன் பாதம் போற்றிச் சரன் எனும் வேடன் தன் உட லோடும் வானவரும் வியந்தேத்த வீடு அடைந்தான்.

கண்ணனைக் காணாத தேர்ப்பாகன் தாருகன் துளவின் மணத்தைக்கொண்டு கண்ணன் இருக்குமிடம் தேர்ந்து கண்ணன் அடி தொழுதான். 'நின்னைக்காணாது வருந்தித் தேடினேன். திகைத்தேன். நின் அடியைக் கூடியதும் இருள் விலகிற்று; வழி தெரிந்தேன்' எனத் தாருகன் கூறினான். அப் போது புட் கொடியுடன் கண்ணன் தேர் வான்வழி

எழுந்தது. கைநடுங்கத் தாருகன் கண்ணனை வலங்கொண்டு வணங்கினான். கண்ணன் தாருகனை நோக்கி,'வசுதேவனிடம் சென்று யாதவர் போரிட்டு அழிந்ததையும் நாம் பரந்தாமம் அடைந்ததையும், கூறுக. மேலும் துவாரகை நகர் இன்னும் ஏழு நாளில் கடலாற் கொள்ளப்படும். ஆகவே அதற்குள் நகரிலுள்ளவரை இந்திரப்பிரத்த, நகருக்குச் சேர்த்திட விசயனிடம் கூறுக'என்றான். அது கேட்ட தாருகன் ஏங்கினான்; கண்ணீர் சொரிந்தான். அப்போது கண்ணன் தாருகனிடம் 'நீ நம்மை வந்து அடைவாயாக' என்று கூறிப் பின்னுற்ற பார் வையனாய்ப் பெயர்ந்தான்.

கண்ணன் போதல் கண்டு நான்முகன், இந்திரன், சிவன் ஆகியோர் தேவரோடு விண்ணிற்கூடிக்கண்ணனை ஏத்தினர். நான்முகன் கண்ணனை நோக்கி'உயிர்க்குழாம் இயங்க நன்கு உதவினை; மக்களுள் ஒருவனாய் வந்து தோன்றினாய்;மயக்க மின்றி நின் செயல் யாரே அறிய வல்லார்! அச்சுதன் அநந்தன் என அருமறை நின்னைப் போற்றும், மக்கள் உருவத்துள் பல கொள்ளும் நின்மெய்ச்செயல் இத்தன்மைத்து எனக் கூற இயலுமோ! தீமைதனை அழித்து அறத்தை நிலைநாட்டுதலில் நின்னைக்காட்டிலும் யாருளர்!' இவ்வாறு சிவனொடும் பிரமன் பணிந்தேத்தினான்.

பனிமலர் சொரிந்தும், பல்லியம் இசைத்தும் தேவர் வணங்கிடத் தனிமுதலாம் கண்ணன் தன் தாமம் எய்தினான். மாயன் ஏகுதலைச் சிலர் கண்டார்; சிலர் கண்டிலர்;பின்தேவர் தம் பதிக்குத் திரும்பினர்.

தாருகன் கூறிய செய்தி கேட்டவசுதேவன் தேவகி, உக்கிர சேனன் முதலியோர் மிக்கதுயர் அடைந்து, பின்னர் எரியில் மூழ்கினர். கண்ணன் மனைவியரும் எரி மூழ்கினர். உருக்கு மிணியும் மற்ற கோவியரும் தழல் மூழ்கினர். துவாரகையில் கோவியர் மற்றும் வசுதேவன் தேவகி முதலானோர் இறந்த செய்தி தாருகன் கூறக் கேட்ட விசயன் அறிவு கலங்கிப் புலம் பினான்.

முன் கண்ணன் இசைத்த கீதை கேட்ட விசயன் ஒருவாறு மனம் தேறி இறந்தோர்க்கு ஈமக்கடன் இயற்றினான். பின் துவாரகையிலிருந்த மக்கள் பார்த்தனால் இந்திரப்பிரத்தம் சென்றடைந்தனர்.

எஞ்சிய யாதவர்க்கு அரசனாய்க் கண்ணன் புதல்வருள் ஒருவனாகிய வச்சிரன் என்பானுக்குப் பார்த்தன் முடிசூட்டினான். பின் விசயன் நிகழ்ந்தன தருமனிடம் கூறினான். பிறகு தருமன் இங்கு நினக்கு மணிமுடி சூட்டினன் எனப் பரீட்சித்திடம் சுக முனி கூறினான். தருமன் முதலானோர் கண்ணன் பதமடைந்தனர்.

கடல் நீர் சூழ்ந்து துவாரகை நகரை மறைத்தது. ஆயினும் ஆங்குள்ள கண்ணன் கோயிலை மறைத்திடவில்லை. சிறந்தின்றும் விளங்கும் அக்கோயில் கண்டார் பிறவிப்பிணி நீங்குவர்.

கண்ணனைத் தொடர்ந்து இசை, மெய்ம்மை, அறம், பொறுமை, தவம், தானம் முதலியன சென்றுவிட; அதர்மம் இயற்றும்கலி மருவிற்று. திருமாலின் செயலை யாரே அளக்க வியலும்!

'அரச! இக்கதை கேட்பார் பதமடைவர்' எனச் சுக முனிவன் பரீட்சித்திடம் கூறினான்.



# பன்னிரண்டாம் கந்தம்

## 1) கலிதன்மம் உரைத்தல்:-

'பகைவர் புகழும் பரீட்சித்தே! சந்திரகுலத்துத் தோன்றிய மகத மன்னன் சராசந்தன் மகன் சகதேவன் மரபிலுதித்த புரஞ்சயன் என்பான் கலியுகத்தில் அரசோச்சி வரும் நாளில் சுனகன் என்பான் புரஞ்சயனுக்கு அமைச்சனாய் இருப்பான். சுனகன் என்பான் தன் அரசன் புரஞ்சயனைக் கொன்று தன் மகன் பிரத்தியோதன் என்பானை அரசனாக்குவான். பிரத்தியோதன் தொடங்கிப் பாலகன், விசாகயூகன், சனகன், நந்திவர்த்தனன் ஆகியோர் நூற்றுமுப்பதெட்டாண்டு உலகாள்வர்; பின் மாநந்தி எனக் கூறப்படுவோருட் சிலர் உலகு புரப்பர்.

மாநந்தி புல்லுதற்கு வாய்ந்த வேளாண் மரபினள் ஒருத்தி பெற்ற பத்மபதி எனும் நந்தன் பகையரசரை வென்று நிலமாள்வான். பத்மபதி என்பான் பரசுராமன் போன்று அரசர் கூட்டத்தை அமரில் வென்றழிப்பான், அவனுக்குப் பின்னர்ப் பின்னவராகிய வேளாளர் வேந்தராவர். அவருக்குப் பின் சேனைகாப்பார், அடைப்பைக்காரர் மாநிலம் காப்பர். கோவேறு கழுதையின் கூட்டத்துடன் நிதிகளீட்டும் யவனர், மறவர், மாதர் ஆங்காங்குத் தோன்றி மயக்கம் பொருந்த ஆட்சி எய்தி வாழ்வர்.

அரசரானோர் பெரும்பழி இயற்றக் கூசார்; பிணியாலும் திருடராலும் மக்கள் வருந்துவர்; மன்னரால் வறுமை எய்தி மயங்குவர்; பொருத்தமின்றி அற்பக் காரியங்களுக்காகப் புழுங்கிச் சோர்வர்.

கலிகாலத்தில் ஆசை அடக்க முடியாததாகி உண்மை, அருள், பொறை, புனிதம், ஆயுள், உடல்வலி, எண்ணம், அறம் யாவும் நாளுக்குநாள் குறையும்.

நூலிற் கூறிய முறைப்படிப் போரிடார்; குருகுல முறைப்படி மறை பயிலார்; பிரமசாரிய அறம் தப்பி வாழ்வர். இல்லறத்

தீர் மகமியற்றார். அரசர் சிலர் மகம் செய்யினும், வஞ்ச ஒழுக்கத்துடன் ஆற்றுவர்.

கலிகாலத்தில் அந்தணர் மறை ஓதார். தம் தொழில் செய்யார். தரிக்கும் பூணுலைக் கொண்டே அவர் அந்தணர் என அறியக்கூடும்.

இல்லறந்துறந்து காட்டிடைச் சென்றாரும் காட்டிடைக் கிடைக்கும் உணவை உண்ணாமல் நாட்டுணவை நல்லதென நயப்பர்.

துறவோர் துறவறம் இயற்றார்; காவியாடை, திரிதண்டம், கமண்டலம் இவற்றாலேயே அவர் துறவி எனக்காணவியலும். திருமால் பூசை செய்திடார்; மதத்துடன் மாக்கள் எனத்திரிவர்.

உயர்குலத்துப்பிறந்தார் பின்னவர் அறம்தழுவி வாழ்வர், பின்னவர் தம் அறம் பிழைத்து இறைவனைத் தொழுது வாழ்வர். உயர்குலத்தார் இழிகுலத்தவர்பால் ஏவல் புரிவர். பழிச்செயல் புரிந்தாயினும் பொருள் பெற விழைவர்.

தீநெறியாளர் செல்வரைச் சேர்ந்து தம்மை அறிவுடையார் எனக் கூறிக்கொள்வர். அன்னவர் மொழியையும் அச்செல்வர் குணமுடையதெனப் பாராட்டுவர். நாயகன் இருக்க நங்கைமார் பிற ஆடவர் அழகு கண்டு ஏங்கி அவரைக் கூடநினைப்பர்; மாந்தரும் பிறமனை நயப்பர்.

மைந்தர் பெற்றோர்சொல் கேளாமல் நிந்தனை செய்வதுடன், மாமியர் மாமனார் சொல் தீங்காயிருப்பக் கண்டும், அது மகிழ்ந்து செய்வர்.

செல்வர் எத்தகு நிந்தை கூறினும் அதைப் பிறர் போற்றுவார்; வறியவர் கூறும் அறமொழி கேட்டு எள்ளுவர்.

வயிற்றுக்குச் சோறிடலேபெரிதென்பர். மயிரை மிக வளர்ப்பதே வனப்பென்பர்; மழைவளம் குறைந்து பயிர் வாடப் பாரில் உள்ளோர் பசியால் வாடுவர்.

கலிகாலம் முற்றியாங்கு மாந்தர் இருபது ஆண்டுக்கு மேல் இரார்; மாதர் ஏழாண்டில் மகவைப் பெறுகுவர்; விளைச்சல்

குன்றும்; அறியாமை மிகும்; மக்கள் காய், கொழுந்து, இலை, பூ இவற்றைக் கொய்துண்பர்.

கொடும் பசி அடைவர். இரவிற் சென்று பொருள் திருடக் கருதுவர். துறவிகளும் வீடுபேறு கருதாது, இல்லறம் சுகமெனத் திரிவர்.

சிறப்புக்கள்மிக்க கணவனாயிருப்பினும் வீட்டில் மனைவி கணவனுக்கு வேண்டிய பணிகள் செய்யமாட்டாள்; உலகம் பழிக்குமே என்றஞ்சிச் சிறிது செய்குவள்; வறியோன், அறிவிலான் எனில் வெறுப்பள்.

பொருந்திய புனிதநீரில் வைகுதலை ஒழித்து ஓடை முதலாயின நன்னதிகள் பழுதற்றன எனக் கொண்டு அவரவர் தமக்குத் தோன்றிய உண்மை வார்த்தைகள் செப்பித் திரிவர்.

சோலைகள் அருகும்; நாவிற்குச் சுவை பயக்கும் கனிகள் முதலியனவும் சுவை குன்றும்;மக்களும் தம் உருவம் குறுகுவர்; பசுக்களும் ஆடு போன்று குறுகிய உருவம் பெறும்'.

**2. கற்கியவதாரம் உரைத்தல் :-**

'நான்மறையும் ஆச்சிரமமும் ஒழிந்தன; அறம் கெடும்படி செய்திடும் கலிகாலமுடிவில் அரனையும் அயனையும் காத்தளித்த மாயன் பரி உருவமெடுத்து அறம் நிலைநிறுத்துவன்.

சம்பளக்கிராமம் எனும் சோலைகள் சூழ்ந்த ஊரில் விண்டுவின் பெயரால் வதியும் அந்தணன்பால் திருமால் பரியவதாரம் செய்திடுவான்.

பரியவதாரம் எடுத்த மாயன் குதிரைமீதேறி வாளேந்திக் கயவர், பொறாமையுள்ளத்தொடு காவல் செய்யும் அரசர்கள் ஆகியோரைக் கொன்று அறம் நிலைநாட்டுவான்.

கற்கியவதாரக் கடவுளின் மார்பில் அணிந்த துளவமாலையின் காற்று மேனியிற் பட்டார் அந்நாள் பிறவார்; அவர் கிருதயுகத்திற்பிறக்கும் குணமுடையராவர்.

கடக ராசியில் பூசநாளில் கதிரவன், மதி, குரு மூவரும் ஒன்று சேருங்காலத்துக் கிருதயுகம் தொடங்கும்,

மூத்லாம் ஊழியில் அந்தணர் நீங்காமல் அருந்தவம் இயற்றிடும் இயல்பினராவர்; இரண்டாம் யுகமாகிய திரோதா யுக்த்தில் மகிழ்ச்சியால் மன்னரும் மாதவம் புரிவர்; துவாபர யுகத்தில் வணிகரும் நற்றவம் புரிவர்; கலியுகத்தில் வேளாளரும் அரிய தவம் இயற்றுவர்.

அரசே! அறமாம் வெள்ளேறு கிருதயுகத்தில் தரைமிசை நான்கு பாதமும் ஊன்றிடும்; இரண்டாம் ஊழியில் மூன்று பாதங்களும், மூன்றாம் ஊழியில் இரண்டு பாதங்களும் கலியுகத்தில் ஒரு பாதமும் ஊன்றும். கலியுகத்தில் கொலை, கோபம், பொய், சோகம் ஆகிய பாவங்கள் மலியும்.

நாள்தோறும் கலியுகத்தில் கொடுமை மிகவே தருமம் தனது அருள், உண்மை, புனிதம், தவம் ஆகிய நான்கும் நிலத்தில் நிறுத்தாது ஒளித்திடும். 'அரசாளும் மன்னர் பலர் என்னிடத்துள்ள ஆசையால் என்னது என்னது என்று சமரில் தொலைவர்' என நிலப்பெண் நகைப்பாள். உடலாகிய பிண்டம் நிலையாதென மயங்குவர்.

நகுடன், கயன், சகரன், சையாதி, இரணியாக்கள், இராவணன் முதலானோரின் உடலங்கள் வினையாலழிந்தன. யாரும் இசையினால் நிலைத்த புகழ் அடைவர்; தசையுடலாலன்று. வைராக்கியம் பொருந்திடும் என்றே கண்ணன் கதை நினக்குக் கூறினன்.

இக்கலிகாலத்தில் மாயனின் கீர்த்தனத்தால் முத்தி எய்தலாம். அரசன், பூமி மற்றவற்றாலும் சேர்ந்த பழி திருமாலின் நாம கீர்த்தனத்தால் தீரும். நாவினால் நாம கீர்த்தனம் உரையார் நரகமடைவர்.

தானம், தவம், போனம் ஆகியவற்றால் தீராப்பழியும் திருமால் நாமம் கூறிடத் தீரும்.

**3) பிரளயம் உரைத்தல் :-**

'அரசே' பிரளயம் நித்தியம், நைமித்திகம், பாகதம், ஆத்தியந்திகம், என நால்வகைப்படும்.

நித்தியப்பிரளயம் என்றால் மாந்தர் முதல் சராசரங்கள் எல்லாம் வடவாமுகாக்நியால் அழியநின்று வேறாதலாகும்,

ஆயிரம் முறை நான்கு ஊழிகள் வந்தால் அயனுக்கு ஓர் பகலாம். அப்பகற் காலத்துள் பதினான்கு மனுக்களும் இறப்பர். பகற்போதின் ஈற்றில் மூன்றுலகும் நீர்ப் பெருக்குள் சிக்கி யழியும்; அம்மனுக்கள் பின் மகலோகத்தும் சனலோகத்தும் உறைவர். அப்பிரளயப்பேர் நைமித்திகம் எனக் கூறுவர். கூறிய அப்பகலளவு இரவு உண்டாகி அந்நாளால் நூறாண்டு கழியின் பிரமன் இறப்பான்; அப் பிரளயப்பேர் பாகதமாம்.

நூறாண்டு மழை பொய்த்திடக் கதிரவனால் நீரின் பசை யறப் பூமி பிளக்கும். பொருள் யாவும் நீறாகும். ஆதிசேடனின் விடமாகிய தீயால் சாணி மூட்டம் போன்று அண்டம் நீறாகும். நீறாகிய அண்டம் நூறாண்டில் காற்றாலுடைந்து அணுக்களாய் உற்றிடும். அக்காற்றால் நான்கு வண்ண மேகத்தால் மழை பெய்ய எங்கும் நீர் பரவ, மணம் நீங்கி, உலகு நீருள் மாயும். பிறகு உலகு தீயுள் புகுந்தடங்கும்.

தீயின் உருவம் போகக் காற்றில் அடங்கும். அக்காற்றில் ஸ்பரிசம் போக வானுறும்; வானில் ஒலி போக, குணங்கள் மூன்றும் அகங்காரம் மூன்றும் மகானில் ஒன்றும்; மகான் பிரகிருதியுள் மறையும்; பிரகிருதி பரமாத்மாவின் அறிவாய் அநாதியாகி ஒளியாகி வைகும் பரம்பொருளில் அடங்கும். இப்பிரளயத்தின் பெயர் பிராகிருதமாகும். பிரமம் ஒன்றே நித்தியப் பிரளயமாகும்.

ஆடையுள் உற்ற நூல்போல் பிரமம் முதன்மையாகும். அதுவே ஞாலமாகி உயிர்களாகிக் காலமாகிக் கருவியாகிக் காரணமாகி ஒன்றாய் அழிவற்ற மூலமாய்த் திகழும்.

பருதிதன்னால் விளைந்த மழை வெய்யோனை மறைத்தல் போல, அகங்காரம் கருதரும் பொருளால் நற்பொருளை மறைக்கும். மேகம் விலகிய பின் சூரியன் ஒளியுடன் திகழ்தல் போல அகந்தை அகன்றபின் உயிர் நற்பொருள் பெற்றுத் திகழும்.

அறிவாகிய வாளால் அகந்தையை நீக்கியார் நிறைந்திடும் பிரமமாகி நித்தியமாவர்; ஏகமாய் இருப்பர்.

வழியிலுற்ற மாலை பாம்பாய் விளைந்தது போல், மாயை தனை விலக்கி ஆய்ந்தார் தற்பரமாவார். ஞானத்தால் அடைதரும் பிரளயம் ஆத்தியந்திகம் எனப்படும்.

இத்தன்மையவான பாகவதத்தை நர நாரணர் என்ற முனிவருள் ஒருவன் கூற நாரதன் அறிந்து என் தந்தை வியாதன் அறியச்செய்தான்,

வியாதன் என்னையடைந்து எனக்கு ஓதினன். அவ்வண்ணம் யான் நினக்குரைத்தேன். அக்கதையைச் சவுனகாதி முனிவர் கேட்கச் சூதன் என்பான் நைமிசவனத்திற் கூறுவான்,'

4) பரிட்சித்து வீடுபெறல்:-

'அறத்துறை அரச! பிறத்தலும் இறத்தலும் உடல்கள் உறத்தரும் உண்மையாய் உற்ற நல்லுயிர்க்கு அக்குணங்கள் இல்லை; அக்குணங்கள் இன்மையால் இறத்தல் நினக்கில்லை! என்றும் நீ வைகுவாய்!

மைந்தர்களாயும் தங்கினாய்; இப்பூமியில் துலங்கு தாதையர் புதல்வராய் உதிப்பர் என்று வேதங்கள் கூறும். தாதையர் மைந்தர்களாகிப் பிறத்தல் 'பீசாங்குர நியாயம்' எனப்படும்; அஃதென்ன வெனில், பல்வேறு மரந்தோறும் விளங்கும் தீபோல உடல்தோறும் சீவன் பொருந்துதலாம்.

உறங்கும்போது ஒருவன் தன் கனவில் தன் தலையைச் சுழல்பவர் கையினாற் கொய்து எழ மரணம் காண்கையால், நீ என்றும் இறந்திடும் யாக்கை யல்ல.

குடத்துறை வானும், குடத்தை உடைத்தால் வானின் இடத்தொடும் ஒன்றுபட்டிருக்குமாறுபோல, உடம்புறை உயிரும், உடம்பை நீக்கின், பரம்பொருளொடு ஒன்றாகி வைகும்.

மாயையால் மனத்தினால் உடல் அடைதரும். ஆக்கையால் சீவனுக்கு வினைக்கட்டு உண்டு; இவ்வாறு நூலோர் பகர்வர்.

எண்ணெயும் திரியும் தொலையும் மட்டும் விளக்கு எனும் பெயர் விளங்கும்; முக்குணம் பிறங்குமளவும் ஆக்கை என்றுபேர் பெற்றிடும். விளைத்திறம் பொருந்திய உடலை மெய்யென்று நினையற்க; நீ மனத்தைச் சொல்லப்படும் பரம்பொருளாம் ஒன்றெனவைத்து வாழ்வாயாக,

எடுத்த உடலமே சாவது; நின்னை அளித்த மாதவனுடைய சேவடி அடைவாய் நீ. தட்சகன் எனும் பாம்பு நின் உடம்பில் பற்றும்; அவ்விதம் அப்பாம்பு நின்னுடலிற் கடித்தலை நினையாதே. எப்போதும் தனி முதலாம் திருமாலைச் சிந்தித்த வண்ணம் இருந்திடுக.

தக்ககன் தீண்டிய நஞ்சு நின் ஆக்கைசேர்ந்தாலும் என்? திருமால்தனை உள்ளத்தில் உணர்ந்து விண்ணவரும் பெற ஏங்கும் இன்பக்கடல் நீ பெறுவாய். கண்ணன் குணங்கள் யாவற்றையும் சுகமுனிவன் கூறக் கேட்ட பரீட்சித்து பிறவிக் கடல் கடந்து திருமாலின் பேரின்பக் கடலிடைக் குளித்தான்.

'அருள் திறத்தான் பிறவியாகிய மாசை நீக்கினாய்; நின்னை ஈங்குக் காட்டிய தவம் என்னோ!' எனக் கூறித் திருமால் பாதம் ஏத்திச் சுகமுனிவன் அகன்றான். இவ்வாறு சூதன் நைமிசவனத்து முனிவர்களுக்குக் கூறிப் பின்னும் தொடர்ந்தான்.

சுகமுனிவன் சென்றபின்னர் பரீட்சித்து மனத்தைத் திருமாலின் பாதத்தில் இருத்திக் கங்கைக் கரையில் கட்டை போல் இருந்தான்.

கலிமுற்றியதாலும் அண்ணலின் அருளினாலும் பரீட்சித்து அரசனைத் தீண்டிடத் தக்ககன் எனும் பாம்பு எய்திற்று.

'பரீட்சித்து மன்னனைத் தீண்டினால் இப்பொழுதே அதை மாற்றுவேன்' என ஒரு மறையோன் சொல்ல, வழியிடை அம்மறையோனைக் கண்ட பாம்பு 'அங்கு வந்திடுக' எனக் கூற அந்தணன் தன்நிலை கூறினன். அது கேட்ட பாம்பு 'நஞ்சினை மாற்றவல்லனையாயின் இவ்விடத்தை மீட்டி' எனக்கூறி ஒரு மரத்தைத் தீண்டி அம்மரம் சாயும் படிச் செய்தது. அவ்விடத்தை மறையோன் மீட்டு, அம்மரம் முன்புபோல் நிற்கும்படி செய்தான். அது கண்ட தக்ககன் எனும் பாம்பு, 'கொடிய நஞ்சு மாற்றவல்ல மறையோய் நீ பரீட்சித்து வேந்தனிடம் போவதற்குக் காரணம் என்ன? பொருள் பெறத்தானே' எனக் கூறி நாகம் விலைமதிப்பற்ற மணிகளை மறையோனுக்களித்து அவனைத் திரும்பும்படி செய்தது. காசியன் எனும் அம்மறையோன் மாணிக்கம்

பெற்று மீண்டு போக, தக்ககன் எனும் பாம்பு மறைவல்லோர் உருவம் கொண்டு, பரீட்சித்து வைகும் கங்கைக்கரை எய்திற்று,

தக்ககன் எனும் பாம்பு துரியோதனனும் அஞ்சச் சிலை வளைத்த பார்த்தனின் பெயரனாம் பரீட்சித்தைத் தீண்டப் பற்றியது, தக்ககனின் விடமாகிய தீயால் உடலம் எரிய பாகவதமாகிய இனிய அமுதம் கேட்டு நின்ற பரீட்சித்து உலகமே வியக்கத் திருமால் பதமுடைந்தான்,

'தேவர் பூமாரி பெய்ய வீடுற்ற பரீட்சித்து மைந்தன் சனமேசயன் எனும் கொடைவல்லாளனின் ஆட்சித்திறம் அடுத்தபடிக் கூறுவோம்' என்றான் சூதன்,

## 5) சர்ப்ப வேள்வி உரைத்தல்:-

விடம் மீட்க வந்த மறையோனை மீளச் செய்து பரீட்சித்து அரசனைத் தக்ககன் பாம்பு தீண்டியது அறிந்து மிக்க சினமுற்ற பரீட்சித்து மகன் சனமேசயன் மாலைக் காலத்தே அப்பாம்பினைத் தீ உண்ணும்படிச் சத்திரவேள்வி செய்தான். அவ்வேள்விச்சாலைத் தீயிடத்துப் பலபாம்புகள் வந்து வீழ்ந்து எரிந்தன. 'இன்னும் தக்ககன் என்ற பாம்புமட்டும் ஏன் வந்திலது' எனச் சனமேசயன் கவலையுற்று வேள்வி செய்த அந்தணரை வினவ, அவர் 'பரீட்சித்தைத் கடித்த தக்ககன் பாம்பு இந்திரனைச் சரணடைந்துள்ளது' என்றார்;

'ஏனோ இன்னும் இந்திரனொடு தக்ககனும் வேள்வித் தீயில் விழுந்திலர்' என்றுரைத்தான் சனமேசயன். உடன் அந்தணர் 'இப்போதே இந்திரனும் தக்ககனும் தீயில் வீழ்க' எனக் கூறி நெய்யைத் தீயிடத்துப் பெய்தார். விண்ணகத்திருந்து இருவரும் கவிழ்ந்து வீழ்வுற்றபோது பிருகஸ்பதி விரைந்து விலக்கினான்.

சனமேசயனிடம் பிருகஸ்பதி; 'தக்ககன் முன்னம் அமுதம் உண்டது; அதனைத் தீயில் வீழ்த்தி மாய்த்தல் எவ்வாறியலும்? வினைப்பயன் இன்பதுன்பம் நல்கும் பிறப்பிற்குக் காரணமாம். அவரவர் வினைகளே அவரவர்க்கு அழிவு செய்யும். இவ்வாறு பாம்புக்கூட்டத்தைக் கொல்லல் அறமாகுமோ?' என்று கூறினான்,

அதுகேட்ட சனமேசயன் தான் செய்த சத்திரவேள்வியை விலக்கிப் பிருகஸ்பதிக்குப்பூசனை செய்து போற்றினான்; விண்ணவர் குருவும் பெரிதும் மகிழ்ந்து சென்றான். பின் சனமேசயன் சிறப்புற அரசு புரிந்தான். திருமாலின் அடியார் யாம் எமது என்று பாரார்; உலகம் யாவற்றையும் ஒன்றாய் நோக்கி மாலின்பதம் எய்துவர்' எனச் சூதன் கூறலும், நைமிசவனத்து முனிவர், 'வியாதன் வேதம் நான்காக முனிவர்க்கு ஓதினான் எனச் சுருங்க உரைத்தாய்; வேத புராணம்பற்றி விரித்துரைக்க' என வேண்டினர். சூதன் தொடர்ந்தான்,

## 6 வேதம் நான்காக வகுத்தல்

பிரமன் இதயத்தில் எழும் பிரணவம் எனும் ஒலி துறவிகள் பரமானந்தமடையக் காரணமாம் மந்திர மறைகளுக்கெல்லாம் முதன்மையாம் 'ஓம்' எனும் மூன்றெழுத்து (அ, உ, ம்) அப் பிரணவத்தினின்றும் உயிர், மெய், ஆகிய எழுத்துக்கள் தோன்றின. பிரமன் வேதம் நான்கையும் தந்தான். பிரமன் நால் வேதங்களையும் தன் புதல்வருக்கு ஓதினான். அப்புதல்வர் தத்தம் புதல்வர்க்கு அவற்றை ஓதினர். இவ்வாறே வேதம் உலகில் வயங்கின.

கலியுகத்தில் ஆயுள் குறையுமெனக் கொண்டு சான்றோர் வேதங்களைச் சுருக்கி உரைத்தனர். சுவாயம்புமனு காலத்தில் துவாபரயுகத்தில் வசிட்டமுனி மகன் பராசரன் முழு மறையை வகுத்தல் செய்தான். வைவச்சுதன் எனும் மனுவுறைந்த காலத்து இருபத்தெட்டாம் ஊழி நடந்தது.

பராசரனின் மகன் வியாதன் திருமாலின் அம்சமாவான். அவ்வியாதன் பழைமையான வேதப்பொருப்பில் ஒவ்வொரு கை மொண்டு நிலவுலகத்தாருக்கு உரைத்தான். முனிவர்களே! இனிவரும் மூன்றாம் ஊழியில் பொருந்தவேதநூலை அசுவத் தாமன் குற்றமறப்பிரிப்பான்.

முதல் வேதமாகிய இருக்கு வேதத்தை வியாதன் பயிலன் எனும் முனிவர்க்கு ஓதினான்; அதைப் பயிலன் தன்னைச் சார்ந்தோர்க்கு உரைக்க அது கற்ற மாணாக்கரால் அது விளங்கிற்று.

வியாதன் இரண்டாம் வேதத்தை (யஜுர்) வைசம் பாயனுக்கு உரைப்ப, அவன் கற்று அன்பால் தன் மாணாக் கருக்கு ஓதி உறையும் நாளில், வைசம்பாயனுக்கு பிரம்ம கத்தி எனும் வினைக்கட்டு ஏற்பட அதை விலக்குமாறு குரவன் யாஞ்ஞவற்கியன் முதலான மாணர்க்கரை நோக்கி,'தவமியற்றி என்னுடைய இப்பாவம் தொலைப்பீர்' என்றான். அப்போது யாஞ்ஞவற்கியன் குருவிடம்' செய்தார் தவமியற்றினால் அன்றிப் பாவம் தீராது' என்றான். 'இப்பாவம் ஏனையோராற் போக்கும் வல்லமையில்லை என்று நிந்தித்தாய்;யான் கற்பித்த வேதம் தந்து ஒழிதி' என வைசம்பாயன் கூற, யாஞ்ஞவற் கியனும் அவ்வாறே அதை உமிழ்ந்தான்;

யாஞ்ஞவற்கியன் உமிழ்ந்த அவ்வேதத்தை தித்திரி எனும் பறவை உருவமெய்திச் சில முனிவர் பருகினர்; அதனால் அவ் வேதம் தயித்திரியம் எனப்பேர் பெற்றது.

யாஞ்ஞவற்கியன் விண்ணுலகு போந்து கதிரவனை வணங்கி மறை கற்பிக்க வேண்டக் கதிரோன் குதிரை வடி வெடுத்து அவனுக்கு வேதம் ஓதினான். சூரியனாற் கூறப் பட்ட வேதம் கற்ற கண்ணுவ முனிவர்முதலியோர் குதிரை யின் நேயராய்த் திகழ்ந்தனர்.

மூன்றாம் வேதத்தைச் (சாமவேதம்) சயமுனிவனுக்கும், நான்காம் வேதத்தைச் (அதர்வண வேதம்) சுமந்து எனும் முனிவனுக்கும், புராணத்தை என் தந்தையாகிய ரோமஹர் ஷணர் என்ற சூதனுக்கும் வியாதன் கூறினான்.

வேதம் நான்காகக் கூறிய வியாதன் முன் நிலவுலகிற் பகர்ந்த பதினெட்டுப் புராணங்களும் படைப்பு உரைத்திடல் முதலான பத்துத் தத்துவம் கொண்டன. அத்தத்துவம் இனி உரைப்பாம்.

பூதம் இந்தியங்கள் முதலியனவற்றைப் படைத்தல் கூறல், சராசரம் பிறப்பனபேசல் ஓதும் சீவனுக்குப் பிறப்பு இல்லென உரைத்தல், மாலின் அவதாரம் உரைத்தல், மனு முதலாம் தேவரைக் கூறல், முக்காலத்துஅரசரைக் கூறல், அம்மன்னர்

சரித்திரம் உரைத்தல், நால்வகைப் பிரளயம் கூறல், மாயையால் வரும் உயிர்த்திறன் வழங்குதல், பரம்பொருள் திறம் விளங்கச் சொல்லுதல் ஆகியன அவை. பதினெட்டுப் புராணங்களும் இப்பத்து வகை இலக்கணத்தாற் கூறும்.

பதினெட்டாய் மன்னும் மாபுராணப் பெயர் இனி வகுத்துரைப்பாம்.

பிரம்மபுராணம், பத்மபுராணம், விண்டு புராணம், சிவமகா புராணம், இலிங்கபுராணம், கருட புராணம், பிருகந்நாரதீய புராணம், பாகவதம், அக்கினிபுராணம், காந்தபுராணம், பவுடிக புராணம், பிரமகைவர்த்த புராணம், மார்க்கண்டேய புராணம், வாமன புராணம், வராக புராணம், மச்ச புராணம், கூர்ம புராணம், பிரமாண்டபுராணம் ஆகியன பதினெட்டுப்புராணம்.

பதினெட்டுப் புராணத்துள் பாகவதம், பத்ம புராணம், வராகபுராணம், விண்டு புராணம், கருட புராணம், பிருகந் நாரதீய புராணம் ஆகிய ஆறும் சாத்திக நூல்களாம். மார்க் கண்டேய புராணம், பவுடிகம், பிரம்ம புராணம் மூன்றும் மயக்கம் கெடுகின்ற தன்மையன.

பிரம்ம புராணம், பிரமகைவர்த்த புராணம், பிரமாண்ட புராணம், வாமன புராணம் என்ற இவை இராசத நூல்களாம். காந்தபுராணம், அக்கினி புராணம், சிவமகாபுராணம், மச்ச புராணம், இலிங்கபுராணம், கூர்மபுராணம், இவை தாமத நூல்களாம்.

இவ்வாறு கூறக்கேட்ட நைமிச மீனவர் சூதனிடம் 'மார்க்கண்டேயன் தவம் புரிந்தவாற்றை விளங்க உரைப்பாயாக' என வேண்டிடச் சூதன் சொல்லலுற்றான்.

**7. மார்க்கண்டேயர் தவம் உரைத்தல் :-**

கூற்றுவனையுந் திருமால் அருளாற்கடந்து மார்க்கண்டேயன் இருபதினாயிரமாண்டு தவமியற்றினான். அவன் எழில் கண்டு சிவன், அயன், பிதிருக்கள், தேவர் யாவரும் வியந்தனர்.

ஏழாம் மனுவின் காலத்து மார்க்கண்டேயன் பூம்பத்திரை எனும் நதிக்கரை சேர்ந்து வைகினான், திருமாலின் சேவடி

கிருதி மாதவம் புரிந்தான். 'மார்க்கண்டேயன் தவத்தை விலக்கிடுவாயாக' என இந்திரன் மன்மதனுக்குக் கூற, மன்மதன் அரம்பையர் சூழச் சென்றான். இமயமலையில் வடபாலிருந்து ஒழுகும் பூம்பத்திரைசென்று தவமியற்றும் மார்க்கண்டேயனை மன்மதன் கண்டான். மன்மதன் வருகையால் வேனிற்காலமும் வந்துற்றது. சோலைக்கருகில் பல அழகிய மங்கையர் சேர்ந்தார். மார்க்கண்டேயன் முன் மங்கையர் தோன்றினர் மார்க்கண்டேயன் அருகிற் சென்று குயிலின் குரலுக்கு எதிர் கூவிக் குலவினர் சிலர், சிலர் ஆடினர். அவர்தம் ஆடலையோ பாடலையோ மார்க்கண்டேயன் நயந்திலன். வேனிலான் தூயோன்மீது பூவாளி விடுத்தான் மார்க்கண்டேயன் பழுமரம் போல் தோன்றினான். 'இவன் தவத்தினின்று அசைவிலன்!' என்று கூறிய மன்மதன் வானுலகு சென்று விளைந்தன இந்திரனிடம் தெரிவித்தான். இந்திரன் அது கேட்டு வியப்பால் முடியசைத்தான்.

மார்க்கண்டேயன் செய்த அரியதவம் கருதி நரநாராயணர் அவன் முன் தோன்றினர். 'விழைந்தது என்னை' என அவர் வினவ மார்க்கண்டேயன் 'நும் அருள்பெற்ற எனக்கு வேறு பேறு என்' எனக் கூறி அவர்தம் தாள் இறைஞ்சினான். 'ஊழியின் முடிவில் தோன்றும் பிரளயம் காண அருள்வீர்' என மார்க்கண்டேயன் பணிந்து வேண்ட அவரும் அவ்வாறே அருள் செய்தார்.

பூமகள் கிளிபோலத் தோன்றித் திருமாலை வணங்கிய போது காற்று வீசி ஏழு மேகங்களும் மழையைப் பொழிந்தன. கதிரும் மதியும் வலம் திரிய, பூமி சுழல, மலையின் வேர் பறிதர, உயிரெலாம் இறக்க, ஏழு கடலும் கூடின. மார்க்கண்டேயன் கடலுள் மூழ்கிக் கடலலையால் மொத்துண்டு அவன் எய்திய மனச் சுழற்சிதனை யாரே கூற வல்லார்!

மார்க்கண்டேயன் அப்போது திருமால் ஆலிலையில் பசுங் குழவியாகக் கண்வளரும் கோலத்தையும், பின் அக்குழந்தை தன் தாளாகிய மலரை இதழ்வைத்து அமுதுண்ணும் அழகும் கண்டான்.

அக்குழவியின் வயிற்றுள் யாவும் புகுந்தன. திருமாலின் வயிற்றுட் புகுந்த மார்க்கண்டேயன் பல்லுயிர்ப்பகுதியும்

கடல் சூழ் உலகமும், மதிதவழ் குன்றமும், கட்லுள் கண்டான். தேவரும், அயன், அரன், அரி, யாவரும் அங்குச் செறிந்திருந் தனர். பூம்பத்திரையாற்றுக் கரையில் கண்ணனைக் கண்டான்.

இம்மாயைதனை-மார்க்கண்டேயன் காண விரும்பிய பிரளயத்தைத் திருமால் விரைவில் மாற்றினான். மாற்றிய திறம் காணவியலா மார்க்கண்டேயன் வியந்தான் திருமாலின் மாயைதனை யாரே கடக்க வல்லார்!

மார்க்கண்டேயன் தவம் கண்டு அவனுக்கு வரமளிக்கும்படி உமையவள்சிவனைவேண்டினாள்.சிவனும் மார்க்கண்டேயன் முன் தோன்றினான். அவன் உள்ளத்திற் பொருந்தினான். மாயனைச் சிந்தித்திருந்த மார்க்கண்டேயன் 'இஃது என்' என விழித்துப் பார்க்கச் சிவனைத்தன் முன்னர்க் கண்டு இறைஞ்சி னான்.

'மாயனும் நானும் வேறலம்; நீ வேட்டது விளம்புக' என்று சிவன் கூற, மார்க்கண்டேயன் 'நின் அருட் பேறலால் நான் பெறுவது என்' என்றான்.

'முக்காலமும் அறியும் அறிவுடைவாய்: நின்புகழ் என்றும் நின்று நிலவ இவ்வுலகிற் திகழ்வாயாக; சொல்நலம்மிகு புராணம் சொல்வாய்' என்று சிவன் அருள் செய்ய, மார்க் கண்டேயன் சிவனைத் தொழுதான். சிவன் அகன்றான்.

மார்க்கண்டேயன் தவம் தொடர்ந்தான்.

### 8 சூரியன் கதி உரைத்தல்

நைமிச முனிவர் சூதனிடம் 'சூரியனின் விளையாடல் விரித்துரை செய்க' என வேண்டச்சூதமுனிவன் கூறலானான்.

குற்றமற்ற ஆன்மா, கதிரோன் அருள் பெற்ற முனிவர், தேவமங்கையர், கந்திருவர், நாகர், இராக்கதர். இயக்கர் இவர் கள் ஏழ்வகையரும் மதிதோறும் அழகுடன் வகைக்கொருவ ராய் வைகுவர். சூரியன் ஒருவனே பன்னிருவரென யாரும் சொல்லும்வகை எவ்வாறெனில், ஒருவனே மதிதோறும் வெவ் வேறு பெயருடன் நயந்துலவுவான்,

சித்திரை மாதத்துச் சூரியன் பெயர் தாதா. வைகாசி மாதத்தில் கதிரவன் அரியமா எனும் பெயரடைந்தியங்குவான். ஆனித்திங்களில் பானுவின் பெயர் மித்திரன் என்பதாகும்.

ஆடித்திங்களில் கதிரவன் பெயர் வருணன். ஆவணி மாதத்தில் சூரியன் இந்திரன் எனும் பெயர் அடைவான். புரட்டாசி மாதத்துச் சூரியன் விச்சுவா எனும் பெயர் எய்துவான்,

ஐப்பசி மாதத்தில் சூரியன் துவட்டா எனும் பெயர் பெறுவன். கார்த்திகைத் திங்களில் கதிரோன் பெயர் விண்டு என்பதாம். மார்கழி மாதம் வெய்யோன் அஞ்சுவா எனப்பெயர் பெறுவன்.

தை மாதம் சூரியன் பெயர் பகன் என்பது. மாசித்திங்களில் கதிரவன் பூடா எனும் பெயர் பெறுவன். பங்குனித் திங்களில் பிரசன்னியன் எனும் பெயரைச் சூரியன் அடைவான்.

இவ்வாறு எழுவகைக்குழுவாம் உருவெடுத்துப்பரமன் உலகு புரப்பன். இனி முனிவர் முதலான அறுவர்தம் தொழில் உரைப்போம்.

மாயவனாகிய சூரியன்முன் முனிவர் வேதம் சொல்லித் துதிப்பர்; தேவமாதர் நடமிடுவர்; விஞ்சையர் இன்னிசை நிறைப்பர்; நாகர் அத்தேரினைத் தாங்குவர்; இராக்கதர் திருமால் துதி புகல்வர்; இயக்கர் தேரின் தாம்பு பற்றுவர்; வாலகில்லியர் பதினாயிரவர் பானுவுக்கெதிர் நின்று வழுத்துவர்.

சூரியன் முதலான எழுவரை உந்தியிடைக் கொண்ட சூரிய நாராயணனைக் காலையிலும் மாலையிலும் நாடோறும் சிந்தை செய்திடக் குற்றம் தீரும்.

**9) பாயிரம் உரைத்தல்:-**

நிலமகள், திருமகள் கேள்வனான திருமாலின் அம்சங்களாலே விராட் எனும் புருட வடிவமாகி அருள் புரிந்ததும், நாரதன் தன் தோற்றமுரைத்ததும், பஞ்ச பாண்டவர் பார்புரந்ததும், மாரதர் களத்தில்மாயப் போர் முடித்துக் கண்ணன் துவாரகை அடைந்ததும், மாயன் கருவிற்காக்க விண்டுராதன் உதித்ததும், பாண்டவர் வனமேகிப் பின் வானுலகு அடைந்த

தும், விண்டுராதன் கலிதனை வருத்தியதும், பின் விண்டு ராதன் வசவுரை எய்திக் கங்கைக்கரையடைந்து முனிவர் சூழ்ந்திருக்கமாயனை எண்ணியிருந்ததும், சுகமுனி கூற மாயன் நிலைமை பரீட்சித்து கேட்டிருந்ததும், கண்ணன் பாதம் விரும்பி விண்டுராதன் அன்பியற்றியதும், தத்துவங்கள் உதித்ததும், மாயன் உந்தியில் அயன் உதித்ததும், அணு முதலான கால அளவை கூறியதும், சனகாதி முனிவர் தோன்றியதும், மாயன் பன்றி யவதாரம் எடுத்ததும், வானோர் உதித்ததும், கருத்தமன் கபிலனை அளித்ததும், கபிலன் அன்னையுள்ளம் தெருட்டியதும், மரீசி முதலிய முனிவர் மரபு இசைத்ததும், சிவன் தக்கன் வேள்வி அழித்ததும், துருவன் பதமடைந்ததும், பிருது மன்னன் சரித்திரம் கூறியதும், பிராசினபரிகி ஆவிர்த்தானனின் கதை அறிவித்ததும், ஆவிர்த்தானனின் புதல்வரான பதின்மர் தக்கனைத் தந்ததும்,

சுவாயம்புமனுவின் மகன் பிரியவிரதன் ஆட்சி தனையும், பரதன் கானகம் போய்ப்பழவினை அழித்ததும், நாவலந் தீவின் வளமை நவின்றதும், காவலர் காத்த தீவு ஏழு, கடல் ஏழு இவற்றின் அளவுரைத்ததும், சூரியன் தன்மை இசைத் தும், மேலேழ் உலகு இசைத்ததும், கீழேழ் உலகு இசைத்த தும், நரகுலகின் தன்மை கூறியதும், அசாமிளன் கதையும்' இந்திரன் அகிலரூபனை ஆசிரியனாகக் கொண்டதும், மாயன் கவசம் உரைத்ததும், இந்திரன் அகிலரூபன் விருத்திராசுரன் முதலியோரை அழித்து ஒளித்ததும், மறையோர் இந்திரனது வல்வினை அகற்றியதும், சித்திரகேதுவின் செய்திறன் உரைத் ததும், மருத்துவராதியர் பிறந்ததும், புஞ்சவனம் எனப்படும் விரதம் இயற்றியதும், சிசுபாலன் வீடுற்றதும், மாயன் இரணியனுடைய உரம் ஆளரியாகிக் கிழித்ததும், வருணம் நான்கு உரைத்ததும், இல்லறத்தார் கதி நவின்றதும், மனுக் களையும், மனுக்கள் காலத்து மாயன் உதிப்பதை உரைத்த தும், மாயன் கசேந்திரனைக் காத்ததும், மாயனாம் திருமால் கடல் கடைந்து அமிழ்தம் தேவர் உண்ண அளித்ததும், போரில் அவுணரைத் தேவர் வென்றதும், முகுந்தன் மோகினி உருவெடுத்ததும், வைவச்சுதன் முதலிய மனுக்களின் வரலாறு தெரிவித்ததும், வாமன உருவெடுத்து மாயன் வளர்ந்ததும், மால் மச்சாவதாரம் எடுத்ததும், இளன் கதை உரைத்ததும், சய்யாதியின் சரித்திரம் கூறியதும், அம்பரீடனை மாயன்

காத்ததும், இக்குவாகுமரபில் மாந்தாதா பிறந்ததும், அரிச் சந்திரன் புருடமேதம் புரிந்ததும், சகரன் புரவி வேள்வி செய்ததும், பகீரதன் கங்கை கொணர்ந்ததும், மித்திரசகன் கன்மாடபாதன் எனும் பெயரடைந்ததும், திருமால் தயர தனுக்கு மகனாய்த் தோன்றியதும், இராமன் சரிதம் உரைத்த தும், நிமிமரபு உரைத்ததும், சந்திரன் மரபு உரைத்ததும், கோசிகன் பிறந்ததும், பரசுராமன் அவதரித்ததும், யயாதி நிலம்புரந்ததும், யயாதிமரபில் பரதன் உதித்ததும், பரதன் மரபில் பாண்டவர் உதித்ததும், எது மரபினை உரைத்ததும், மாயன் வசுதேவனுக்கும் தேவகிக்கும் மகனாய்ப் பிறந்ததும், மாதவர் வசவுரையால் சாம்பன் இருப்புலக்கையைக் கடலில் இட்டதும், வசுதேவனுக்குத் திருமாலின் அன்பை நாரதன் நவிற்றியதும், உத்தவன் கேட்கக் கண்ணன் தத்துவம் உரைத்ததும், கண்ணன் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளி யதும், கலியின் செயலும், காலமும் உரைத்ததும், பிரளயம் கூறியதும், பரீட்சித்து வீடெய்தியதும், சனமேசயன் சர்ப்ப வேள்வி இயற்றியதும், வியாதன் வேதபுராணம் சுருக்கிக் கூறியதும், மார்க்கண்டேயன் பிரளயம் கண்டதும், வெய்யோன் விபூதியும் யான் உணர்ந்தவாறு உங்களுக்கு உணர்த்தினேன். இக்கதையினை ஏகாதசியன்று கேட்போர் யமனைக் கடந்து வீடு பெறுகுவர்.

10. புராணவளவை உரைத்தல்:-

பதினெண் புராண அளவு கூறிடின், பிரமபுராணம் பதினா யிரம் கிரந்தமுடையது; பத்ம புராணம் ஐம்பத்தையாயிரம் கிரந்தமுடையது; விண்டுபுராணம் மூவாயிரத்து அறுபது கிரந்த முடையது; சிவமகா புராணம் இருபத்துநாலாயிரம் கிரந்த முடையது; பாகவதம் பதினெட்டாயிரம் கிரந்தமுடையது; நாரதீயம் இருபத்தையாயிரம் கிரந்தமுடையது: அக்கினி புராணம் பதினையாயிரத்து நானூறு கிரந்தமுடையது.

மார்க்கண்டேய புராணம் ஒன்பதினாயிரம் கிரந்தமுடையது; பௌடிக புராணம் பதினாலாயிரத்து ஐந்நூறு கிரந்தமுடையது பிரமகைவர்த்த புராணம் பதினெட்டாயிரம் கிரந்தமுடையது, இலிங்க புராணம் பதினொன்றாயிரம் கிரந்தமுடையது,

வராகபுராணம் இருபத்து நாலாயிரம் கிரந்தமுடையது; ஸ்காந்த புராணம் ஒன்பதாயிரத்து நூறு கிரந்தமுடையது; வாமன புராணம் ஐம்பதினாயிரம் கிரந்தமுடையது; கூர்ம புராணம் பதினேழாயிரம் கிரந்த முடையது; மச்ச புராணம் பதினான்காயிரம் கிரந்தமுடையது.

கருட புராணம் பத்தொன்பதாயிரம் கிரந்தமுடையது; பிரமாண்ட புராணம் பன்னிரண்டாயிரம் கிரந்தமுடையது.

பதினெண் புராணங்களும் மொத்தம் நானூறு ஆயிரம் கிரந்தமுடையன. பதினெட்டாயிரம் கிரந்தமுடைய இப் பாகவதத்தைத் திருமால் பிரமனுக்கு உரைத்தான். நான்முக னுக்குத்திருமால் பாகவதத்தைக் கூறக்காரணம் என்னவெனில் ஆதி, அந்தம், இடை ஆகிய மூன்றிலும் அறிவை உடையது இந்நூல் ஆதலால்,

இப்பாகவதக் கதை கேட்பார், எழுதுவார், இசைப்பார் பார்புகழப்பெருஞ் செல்வராயும் வினையொழித்தவராயும் திகழ்ந்து இறுதியில் மால் பதம் எய்துவர்.

இக்கதை கேட்பார் அந்தணராயின் தெளிந்த அறிவடைவர் அரசராயின் பகைவென்று சிறந்த ஆட்சிபுரிவர்; வணிகராயின் குபேரன் போன்று பெருஞ்செல்வம் பெற்று வாழ்வர்;வேளாள ராயின் பாம்பு தான்கொண்ட தோலை விடுதல் போல பாவந் தொலைந்து உலகில் அழகுடன் விளங்குவர்.

இப்பாகவத புராணத்தின் ஒரு பதம் எழுதியவர், கதை இசைத்தார், கேட்டார் இலக்குமியின் அருள்பெற்று முத்தி யடைவர்.

இத்தகு நூல் கேட்பார் யாது வேண்டினும் மனுக்களும் தேவரும், பிதிருக்களும், முனிவரும் விஞ்சையர் முதலியோரும் மனமுவந்து அளிப்பர்.

கண்ணன் கதை கூறுவார், மகிழ்ந்து கேட்பார் வினை யொழித்து, மெய்ம்மை ஆதியாகக் கருதுவன பெற்று இவ் வுலகில் நீடு வாழ்க!

———❀———

# பிழைதிருத்தம்

| பக், வரி | | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 14 | சொல்லானார் | சொல்லலானார் |
| 8 | 13 | அசமேதயாகம் | அசுவமேதயாகம் |
| 12 | 32 | விழுந்தெழுந்த | விழித்தெழுந்த |
| 13 | 28 | பரிசித்து | பரீட்சித்து |
| 15 | 5 | ஓதுவர் | ஓதுவார் |
| 18 | 9 | இந்தியங்களையும் | இந்திரியங்களையும் |
| 25 | 11 | சொல்லுதற்குரிய | சொல்லுதற்கரிய |
| 25 | 24 | இந்தியத்தேவர் | இந்திரியத்தேவர் |
| 25 | 30 | சளகனாதியர் | சனகனாதியர் |
| 29 | 21 | அந்த | வந்த |
| 33 | 28 | கூறுயன | கூறியன |
| 34 | 33 | வகிட்டனுக்கு | வசிட்டனுக்கும் |
| 35 | 5 | ஒருருவம் | ஒருருவம் |
| 39 | 8 | ஈன்றான் | ஈன்றாள் |
| 39 | 11 | பிறந்தேன் | பிறந்ததேன் |
| 39 | 28 | மறைந்த | மணந்த |
| 39 | 29 | ஈன்றான் | ஈன்றாள் |
| 41 | 3 | கண்ணானகவும் | கண்ணனாகவும் |
| 44 | 30 | கானில் | காணில் |
| 46 | 6 | தத்தேன் | தந்தேன் |
| 46 | 32 | அகன்றாள் | அகன்றான் |
| 47 | 4 | உண்ணி | உன்னி |
| 47 | 5 | சுதத்த | சுநந்த |
| 47 | 22 | என்பர்ருக்கு | என்பாலுக்கு |
| 47 | 36 | மெற்றான் | பெற்றான் |
| 48 | 9 | வேளன் | வேனன் |
| 51 | 13 | குருகலத்துதித்த | குருகுலத்துதித்த |
| 51 | 28 | அருவருள் | அறுவருள் |
| 52 | 16 | மடந்தையும் | மடத்தையின் |
| 53 | 9 | புரட்சினன் | புரஞ்சனன் |
| 53 | 19 | பயந்தாள் | பயந்தான் |

| பக் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 57 | 23,26,27 | பிரியவரதன் | பிரியவிரதன் |
| 62 | 30 | புரிட்சித்து | பரிட்சித்து |
| 63 | 2 | சம்புந்தீவை | சம்புத்தீவை |
| 64 | 2 | தெளிநீர் அழல் | தெளிநீரை அழல் |
| 65 | 16 | விரலவுள்ள | விரலளவுள்ள |
| 67 | 17 | வீதலம், தலாதம் | வீதலம், சுதலம், தலாதலம் |
| 68 | 31 | இறற்றியோர் | இயற்றியோர் |
| 69 | 31 | ஏனும் | எனும் |
| 72 | 30 | திரிவாயாயாக | திரிவாயாக |
| 74 | 8 | பல்விழுந்த | பல்லிழந்த |
| 78 | 33 | சபாத்தாற் | சாபத்தாற் |
| 95 | 2 | ஒன்றிருந்து | ஒன்றிருந்தது |
| 116 | 26 | குவலாயிச்சுவன் | குவலயாச்சுவன் |
| 116 | 35 | மகம் | மகவு |
| 120 | 16 | தீயுற்புக | தீயுட்புக |
| 128 | 2 | மாசீசன் | மாரீசன் |
| 132 | 17 | போருக்கனுக்பினான் | போருக்கனுப்பினான் |
| 132 | 27 | எவிய | ஏவிய |
| 136 | 11 | என்பனைப் | என்பானைப் |
| 136 | 24 | முடிவுதும் | முடிவுறும் |
| 137 | 27 | உழுசாவிற் | உழுசாலிற் |
| 139 | 12 | கொண்டான் | கொண்டாள் |
| 142 | 19 | கந்தவருன் | கந்தருவன் |
| 182 | 32 | பலராமணிடம் | பலராமனிடம் |
| 199 | 27 | போற்றியவாளய் | போற்றியவளாய்க் |
| 200 | 10 | மகளைப் | மகவைப் |
| 229 | 22 | வினையாட்டயரக் | விளையாட்டயரக் |
| 233 | 12 | துகளைளைத்தும் | துகளனைத்தும் |
| 240 | 23 | ஈங்கறிந்னே் | ஈங்கறிந்தேன் |
| 243 | 25 | உடலிருக்க | உடனிருக்க |
| 267 | 4 | வணிக்ரும் | வணிகரும் |
| 267 | 17 | இரணியாக்கள் | இரணியாக்கன் |

